OSHO

# அஷ்டாவக்ர மகாகீதை

விழி! வழி அறி!

Ashtavakra Mahagita - Vol.7



ஓஷோ

7

# அஷ்டாவக்ர மகாகீதை

## ஏழாம் பாகம்

### விழி! வழி அறி!

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து
197 முதல் 226 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன்
வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு

## ஓஷோ

தமிழாக்கம்:
**டாக்டர் என். ஸ்ரீதரன்**



Since 1976


## கவிதா பப்ளிகேஷன்

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

**அஷ்டாவக்ர மகாகீதை (ஏழாம் பாகம்) - விழி! வழி அறி!**

முதற் பதிப்பு : 2018

**விலை** : ₹ 350/-

**Ashtaavakra Mahageethai - Part-7**

Originally published in Hindi under the title:
**ASHTAVAKRA MAHAGITA, VOL. 7**



Reprint: (Actual year of reprint)



| | | |
|---|---|---|
| Translated by | : | **Dr. N. Sreedharan** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | 2018 |
| Pages | : | 344 |
| **Price** | : | **₹ 350/-** |
| ISBN | : | 978-81-8345-687-6 |
| DTP | : | S. Asokkumar |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |



Published by :
**KAVITHA PUBLICATION**
# 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 42161657, 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

நிர்வாஸனோ நிராலம்ப: ஸ்வச்சந்தோ முக்தபந்தன: |
க்ஷிப்த: ஸம்ஸார வாதேந சேஷ்டதே ஶுஷ்க பர்ணவத் || 197

அஸம்ஸாரஸ்ய து க்வாபி ந ஹர்ஷோ ந விஷாததா |
ஸ ஷீதலமனா நித்யம் விதேஹ இவ ராஜதே || 198

குத்ராபி ந ஜிஹாஸா அஸ்தி நாசோ வாபி ந குத்ரசித் |
ஆத்மா ராமஸ்ய தீரஸ்ய ஷீதல ஆச்சதர் ஆத்மன: || 199

ப்ரக்ருத்யா சூன்ய சித்தஸ்ய குர்வதோ அஸ்ய யத்ருச்சயா |
ப்ராக்ருதஸ்யேவ தீரஸ்ய ந மானோ நாவமானதா || 200

க்ருதம் தேஹேன கர்மேதம் ந மயா சுத்தரூபிணா |
இதி சிந்தா அனுரோதி ய: குர்வன்நபி கரோதி ந || 201

அதத்வாதீவ குருதே ந பவேதபி பாலிஷ: |
ஜீவன் முக்த: ஸுகீ ஸ்ரீமான் ஸம்ஸரன்னபி ஷோபதே ||202

நானா விசார ஸுஸ்ராந்தோ தீரோ விஸ்ராந்திம் ஆகத: |
ந கல்பதே ந ஜானாதி ந ஸ்ருணோதி ந பஷ்யதி || 203

முதல் சுலோகத்தை எடுத்துக் கொள்வோம். இதில் ஞானத்தின் உயர்ந்த விளக்கம் உள்ளது. இதன் பொருளை அறிந்து அதன்படி வாழ்ந்தாலே போதும். பிறகு எல்லாமே கிடைத்துவிட்டதுபோல்தான். மேற்கொண்டு செய்வதற்கு எதுவும் மிஞ்சியிருக்காது.

அஷ்டாவக்ரரின் சிறப்பு அவரது ஒவ்வொரு சுலோகத்திலும் வெளிப்படுகிறது. அவருடைய அனைத்து (298)

சுலோகங்களையும் படித்தால்தான் அவரது கோட்பாடு புரியும் என்னும் நிலையில்லை. ஒவ்வொரு சுலோகமுமே ஒரு முழுமை யான சாஸ்திரமாக விளங்குகிறது.

'விருப்பு-வெறுப்புகளிலிருந்து விலகி, சுதந்திரமானவனாக, எதையும் சாராதவனாக, சுயலயிப்பு உள்ளவன், முற்பிறவி-இப்பிறவி வினைகளால் கட்டப்படாதவனாக உலர்ந்து வற்றிய இலைபோல் வாழ்க்கை நடத்துகிறான். **(சுலோகம் 197)**

ஞானி லாவோத்ஸு பல்லாண்டுகளாக ஞானத்தைத் தேடுவதிலேயே மூழ்கியிருந்தார். ஆனால் சத்தியத்தின் காட்சி ஒரு நொடி கூட கிடைக்கவில்லை. அவர் மேற்கொண்ட எல்லா முயற்சிகளும், எல்ா உபாயங்களும் வீணாயின. தோல்விக் களைப்புடன் அவர் மரத்தின் கீழ் வந்து உட்கார்ந்தார். இலையுதிர் காலம். இனி அவர் எங்கும் போவதாக இல்லை. அப்படி முழுமையான தோல்வியை உணர்ந்தார். சிறிதளவும் நம்பிக்கை மிஞ்சியிருக்கவில்லை. இவ்வாறு எதிர்காலமோ இல்லை. கடந்த காலமும் வீணில் கழிந்தது. மோட்சம், சத்தியம், கடவுள் எல்லாமே பொருளற்றுப் போனதாக அவர் கசப்புடன் இருந்தார்.

செய்வதற்கு ஒன்றுமில்லாமல் லாவோத்ஸு அமைதியாக உட்கார்ந்திருந்தார். அப்போது வற்றிய இலை ஒன்று மரத்திலிருந்து விழுந்தது. அவர் இலை விழுவதையே சற்றுநோக்கினார். மெதுவாக, சுழன்று-சுழன்று, வட்டமிட்டு ஆடியபடி மரத்தின் இலை கீழே விழுந்தது. காற்று சற்று வேகமாக வீசியபோது இலை சற்று மேலே பறந்தது. காற்றின் திசைக்கு ஏற்ப, கிழக்கிலும் மேற்கிலும் அலைக்கழிக்கப்பட்டுப் பிறகு மீண்டும் பூமியை நோக்கி விரைந்தது.

அந்த உலர்ந்த இலையின் பயணம் லாவோத்ஸுவை மெய்ம்மறக்கச் செய்து சமாதிநிலையில் ஆழ்த்திவிட்டது. வற்றிய இலை வற்றாத ஞானத்தை வழங்கியது. லாவோத்ஸு தனக்குள் முடிவெடுத்தார்: 'ஆம், நானும் இப்படித்தான் ஆக வேண்டும். வாழ்க்கைக் காற்று இட்டும் செல்லும் திசையில் நானும் செல்ல வேண்டும். இயற்கை சக்தி என் மூலம் என்ன செய்விக்கிறதோ அதையே செய்ய வேண்டும். என் விருப்பம் என்று நான்

தனியாக ஒன்று வைத்திருக்கக் கூடாது. என் எதிர்பார்ப்பென்று எதையும் என் வாழ்வின் மீது நான் சுமத்தக்கூடாது. இந்த பிரபஞ்சத்தின் இயக்கம் இடையறாத விளையாட்டுபோல் நிகழ்கிறது. அதில் நான் ஓர் அலைபோல் கலந்துவிட வேண்டும். கடவுளமைத்த பிரபஞ்சத் திட்டத்தின்படியே என் வாழ்க்கை நடைபெறட்டும். கடவுளின் விருப்பமே எனது கடமையாகட்டும்: அவர் உலகக் கடலில் என்னை மூழ்கடித்தால் மூழ்குவேன். அவர் சம்சார சாகரத்திலிருந்து என்னை வெளியே கொணர்ந்தால் அவ்வாறே நான் வெளிப்படுவேன்'. இவ்வாறு லாவோத்ஸு நினைத்ததுமே அவர் பரமஞானத்தை அடைந்துவிட்டார் என்பர்.

இந்த சுலோகத்தின் முதல்சொல்லாகிய 'நிர்வாஸனோ' என்பது நுணுக்கமானது. இதன் பொருள் 'ஆசைகள் இல்லாத' என்பதாகும். 'ஆசைகளிலிருந்து விடுபட்ட' என்று அர்த்தம் கொள்ளலாகாது. 'விடுபட்ட' என்னும் சொல் முயற்சியைக் காட்டுகிறது. புலனடக்கத்தைச் சுட்டுகிறது. கட்டுப்பாட்டை வலியுறுத்துகிறது. சிறையிலிருந்து விடுதலையாவதுபோல் யோகம் மூலம், சடங்குகள் மூலம், கட்டுப்பாடுகளிலிருந்து விடுவிக்கப் பட்டோம் என்று அர்த்தம் கிடைக்கிறது.

ஆசைகளை ஆழ்ந்து நோக்கி அவை அடிப்படையில் இல்லை என்பதை உணர்வது நிர்வாசனை. இது நுணுக்கமான அனுபவம் ஆகும்.

சாதாரண சந்நியாசிக்கும் சித்த புருஷருக்கும் இடையே நிரப்ப முடியாத இடைவெளி உள்ளது. சந்நியாசி சொல்கிறார்: 'யோக சாதனை செய்வோம். முயற்சி எடுப்போம். கட்டிப்போடும் பற்றுகளை வீழ்த்துவோம், வெட்டுவோம், அவற்றுடன் போராடு வோம். சடங்குகள், தியானம் முதலியவற்றைப் பின்பற்றுவோம். தளைகளை உடைத்தெறிவோம்.'

சித்தர் சொல்வார்: 'கட்டுப்பாடு என்று எதுவும் இல்லை. ஆகவே அவற்றை நீக்குவதற்கான உபாயம் தேட வேண்டிய தில்லை. கண்ணை விரித்துப் பார்த்தால் போதும். இல்லாத ஒன்றை எப்படி வெட்டுவாய், உடைப்பாய்?'

உலகில் மூன்று விதமான மனிதர்களைப் பார்க்கலாம். முதல் வகையினர் உலகில் நம்மைக் கட்டிப்போடுபவை ஏராளமாக உள்ளன என்று வருந்துகிறார்கள். இரண்டாம் வகையினர் உலகிலுள்ள கட்டுப்பாடுகளைப் போராடி உடைத்தெறிய வேண்டுமென்கிறார்கள். மூன்றாம் வகையினர் உண்மையில் கட்டிப்போடுபவை என்று எதுவும் கிடையாது என்பார்கள்.

வேறுவிதமாகக் கூறலாம். முதல் வகையினர் இருட்டில் பாதையில் கிடந்த கயிற்றைப் பாம்பென நினைத்து, வியர்த்துக்கொட்டி, பாய்ந்து ஓட்டம் பிடிக்கிறார்கள். இரண்டாம் வகையினர் 'பயப்பட வேண்டாம். விறகுக் கட்டை எடுத்து வா. பாம்பை அடித்துவிடலாம்' என்பர். முதல் வகையினர் பாம்பென ஓடுகிறார்கள். இரண்டாம் வகையினர் பாம்பென அடிக்கிறார்கள். இரண்டு பேரும் பிரமை வசப்பட்டவர்களாவர். மூன்றாம் வகையினர் முதலில் விளக்கெடுத்து வந்து பார்க்கச் சொல்வார்கள்.

அஷ்டாவக்ரர் இந்த மூன்றாம் வகையினர் விளக்கில் பார்க்கும் நடவடிக்கையை ஆதரிப்பவர். கண்ணை நன்கு திறந்துபார். அமைதியாக உட்கார்ந்து சுற்றுமுற்றிலும் பார். சலனமற்ற மனத்துடன் சூழ்நிலையைக் கவனி, கட்டுப்படுத்தும் அம்சம் எதுவும் இல்லை. பற்றுகள் என்பவையும் இல்லை. அவை வெறும் தோற்றமே.

தோற்றத்தை உண்மையென நம்பினால், ஒன்று, சம்சாரியாகி விடு அல்லது யோகியாகிவிடு. போகியானால் கயிற்றைப் பாம்பென நினைத்து ஓடிவிடு. யோகியானால் பாம்பென நினைத்துப் போராடு.

இந்த இரண்டிலும் சேராத இன்னொரு வழியை அஷ்டாவக்ரர் காட்டுகிறார். அது அற்புதமான வழி. அது போக வழியோ, யோக வழியோ அன்று. பார்த்தபடி இருக்கும் வழி; பார்வையாளனின் வழி; சாட்சி மார்க்கம். அதைப் பெற நீ செய்ய வேண்டியது விழித்துப் பார்த்தல்.

விழித்துப் பார்த்தால், கட்டுத்தளை கிடையாது; பற்றென்பது பிரமை; சிறை எதுவும் இல்லை உன்னைப் பூட்ட என்று தெரியவரும். சிறை இருக்கவும் முடியாது. நம் கைகளில் விலங்கு

போடப்பட்டு நாம் சிறையிலிருப்பதாகக் கனவில் வரலாம். காலையில் விழித்ததும் எல்லாம் பொய்யெனத் தெரிகிறது. நாம்தான் கனவில் சிறையை ஏற்படுத்தினோம். இல்லாவிடில், கனவிலும் சிறை கிடையாது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருநாள் கடுமையான வெயிலில் ஒரு மரத்தின் நிழலில் தன் நண்பருடன் உட்கார்ந்திருந்தார். திடீரென முல்லா பிரார்த்தனை செய்வதுபோல் 'எனக்கு நல்ல காலம் பிறக்க கடவுள் அருளட்டும். எனக்கு ஒரு மாளிகை அமையட்டும். சுற்றிலும் நிழல் தரும் மரங்களும், அருகில் ஏரியும் ஏற்படட்டும். மரங்களின் கீழ் ஓய்வெடுப்பேன். ஏரியில் நீந்துவேன். குவியல் குவியலாக ஐஸ்கிரீமும் கிடைக்கட்டும்," என்று கூறிக் கைகளை உயர்த்தினார்.

அருகிலிருந்த நண்பர் நிமிர்ந்து பார்த்தார். "அண்ணே, நீங்க சொல்ற மாளிகைக்கு நான் வந்தா எனக்கும் அந்த ஐஸ்கிரீமில பங்கு குடுப்பீங்களா?" என்று நண்பர் அப்பாவிபோல் கேட்டார்.

இதென்ன வம்பு என்று நினைத்த முல்லா, "உடனடியாக நான் உறுதிமொழி தர முடியாது. இப்போதைக்கு அவ்வளவுதான் சொல்ல முடியும்," என்று பேச்சை முடிக்கப் பார்த்தார்.

நண்பரோ விடவில்லை. "ஐஸ்கிரீம் விஷயம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். உங்கள் மாளிகைக்கு நான் வந்தால், தோப்பு மரங்களின் கீழே படுத்து நான் ஓய்வெடுக்க அனுமதிப்பீர்கள் அல்லவா? ஏரியில் நீந்தவிடுவீர்கள் அல்லவா?" என்று சீண்டினார். முல்லா முன்பு போலவே, "உடனடியாக நான் உறுதிமொழி தர முடியாது," என்று அவர் கூறினார்.

மேலும் அவர், "நீ மோசமான ஆளா இருக்கியே உன் சோம்பேறித்தனத்துக்கு எல்லை கிடையாதா? உன் கற்பனைக் குதிரை தூங்கி வழிகிறதா? உன் கற்பனையைக் கொஞ்சம் தட்டிவிடு. என் குதிரையின் மீது நீ ஏன் சவாரி செய்ய முயலு கிறாய்? உன் கற்பனைக் குதிரையின் உதவியால் நீ உனக்கென்று மாளிகை, தோப்பு, ஏரி அமைத்துக் கொள்ளேன். என்னிடம் ஏன் கெஞ்சுகிறாய்?" என்று கேட்டார்.

மனிதன்மீது சொந்தக் கற்பனை ஏற்கெனவே ஏறி அமர்ந் துள்ளது. மற்றவர்களின் கற்பனையும் அவன் மீது ஏறிவிடுகிறது. மனிதன் சொந்த விருப்பங்களைத் தவிர, மற்றவர்களிடம் கேள்விப்படும் விருப்பங்களையும் தனதாக்கிக்கொள்ள ஆசைப்படுகிறான். நாம் யார் அருகில் அதிகமாக உட்காரு கிறோமோ அவரது பாதிப்பும் தொற்றுநோய்போல் நம் மீது ஏற்படுகிறது.

நிர்வாசனை நிலையில் கற்பனையின் பாதிப்பு இருக்காது. ஆசைகளின் தாக்கம் இருக்காது. ஆசைகள் என்பவையே கிடையாது. நாம்தான் அவற்றைக் கற்பனையில் உருவாக்கு கிறோம். அதன் விளைவாக சுகமோ, துக்கமோ அனுபவிக் கிறோம். நிர்வாசனை நிலையில் உள்ளம் சுத்தமாகிவிடுகிறது, சூனியமாகிவிடுகிறது.

ஆதாரம் இருக்கும்வரை நீ தடுமாறுவாய் என்று அஷ்டாவக்ரர் விசித்திரமாகச் சொல்கிறார். இந்த அடிப்படையில், அஸ்திவாரம் இருக்கும் வரையிலும் வீடு இடிந்துவிழும் ஆபத்துண்டு. அஸ்திவாரம் வலுவாக இருந்தால் வீடு நீண்ட காலம் நிலைத்து நிற்கும். அஸ்திவாரம் பலகீனமாக இருந்தால் வீடு சீக்கிரம் விழுந்துவிடும். இவ்வளவுதான் வேறுபாடு. ஆனால் ஆதாரம் இல்லாத வீடு விழாது! அது எப்படி விழ முடியும்? உறவுகள், உடைமைகளை வாழ்வின் ஆதாரமாகக் கருதுகிறோம். அவை இல்லாமல் போனால்தான் மனிதன் சுதந்திர நிலைக்கு வருகிறான்.

ஆண்டவனைக்கூட ஆதாரமாகக் கொள்ளாதே. இது அஷ்டாவக்ரரின் கருத்து. கடவுளை ஆதாரமாக நினைப்பதேகூட உன் கற்பனையின் லீலையே தவிர வேறென்ன? என்ன கடவுள்? எந்தக் கடவுள்? யார் பார்த்திருக்கிறார்கள்? யார் அறிந்திருக் கிறார்கள்? நீதான் இப்படிக் கற்பனையை விரித்தாய். நீ முதலில் உலகம் என்னும் வலையைப் பின்னினாய். மனிதன் கற்பனையின் சிகரம் என்பதால் நீ கடவுளின் உருவச்சிலையை ஸ்தாபிக்கிறாய். கடவுளை உலகில் தேடினாய். அவர் கிடைக்கவில்லை. உலகமே மாயவலை என்னும்போது கடவுள் அதில் எப்படிச் சிக்குவார்?

அடுத்து, கடவுள் பற்றிய கற்பனை வலையை விரிக்கிறாய். கிருஷ்ண விக்கிரகம் செதுக்கச் செய்து அதைப் பலவிதமாக அலங்கரிக்கிறாய். அவரது உதட்டில் புல்லாங்குழல் செருகுகிறாய். துதிப்பாட்டுப் பாடுகிறாய். பாட்டு உனது. இந்த கிருஷ்ணனும் உன்னுடையவர். புல்லாங்குழலும் நீ தயாரித்தது. நீ செதுக்கச்செய்த சிலையின் முன் நீயே மண்டியிட்டு வணங்குகிறாய். சாஸ்திரங்கள் எல்லாம் நீ எழுதியவைதாம். பிறகு இந்த சாஸ்திரங்களை தெய்வ வாக்கெனத் தலைமேல் வைத்துக்கொண்டாடுகிறாய். மண்ணில் வாழ்ந்துகொண்டு, விண்ணுலகொன்றைக் கற்பனை செய்து, அங்கே சுவர்க்கம், நரகம் என்னும் பிரிவுகளை உண்டாக்கி அவற்றை உன் அளவற்ற கற்பனையால் நிரப்பினாய். நீ அங்கே போனதில்லையே! அப்படி அவை இருந்து, நீ அங்கு சென்றாலும், திரும்பிவந்து சொல்ல முடியுமா? எல்லாம் மனிதனின் கற்பனை-யின் எல்லையற்ற லீலை. கடவுளால்கூட மனிதனைப்போல் கற்பனை செய்ய இயலாது!

உலக வாழ்க்கையில் களைத்துப் போனாய். ஆனால் ஆசைகள் நரைக்கவில்லை. ஆகவே இங்கிருந்த கூடாரத்தைப் பிடுங்கி மோட்ச உலகில் ஸ்தாபித்துவிட்டாய். உலகப் பெண்களின் அழகு சலித்துப் போனதால் தேவகன்னியரைக் கற்பனை செய்தாய்.* அல்லது ராமன், கிருஷ்ணன் சிலைகளை அலங்காரம் செய்கிறாய். விளையாட்டு தொடர்கிறது. பொம்மைகள்தாம் மாறுகின்றன.

பற்றுகளை விட்டவனுக்கு வாழ்க்கையில் ஆதாரம் தேவையில்லை. அவனுக்கு நிற்பதற்குக்கூட இடம் தேவை யில்லை. ஏனெனில் அவன் தன்னை சூனியமாக உணர்கிறான்.

ஆதாரம் வேண்டுமென்பவன் தான் சார்ந்திருக்க வசதியைத் தேடுகிறான். ஞானியோ 'நான் என்பவனே இல்லாத போது நான் எதனைச் சார்ந்திருக்க முடியும்?' என்று வினவுகிறான். 'எனது என்று எதுவும் இருந்தால்தான் அதைத் தாங்க ஆதாரம்

---

* உதாரணமாக, திலோத்தமை. தில்=எள். உலக அழகிகள் அத்தனை பேரின் உடலிலிருந்தும் எள்ளளவு எடுத்து உருவாக்கப்பட்ட எல்லையற்ற பேரழகி.

*அடிக்குறிப்புகள் மொழிபெயர்ப்பாளருடையவை*

தேவை' என்பான். அவனுக்கு ஊன்றுகோல் தேவைப்படாது. அவன் போக வேண்டிய இடமென்று ஒன்றில்லை. சென்றடைய வேண்டிய முகாம் எதுவுமில்லை. வண்டி தேவையில்லை. ஏன், கால்கூடத் தேவையில்லை! கடவுள் அவன் மூழ்க வேண்டுமென நினைத்தால் அதற்கும் அவன் தயார். அப்போதும் அவன் 'காப்பாற்றுங்கள்' என்று கூக்குரலிடமாட்டான்.

நீ கடவுளின் ஆதரவை எதற்காகக் கோருகிறாய்? இதை நீ ஆராய்ந்ததுண்டா? உன் ஆசைகளின் காரணமாகத் தான் உனக்குக் கடவுள் நினைவு வருகிறது. உன் கனவுகள் சில அரைகுறையாக நிற்கின்றன. சில வேலைகளை உன்னால் பூர்த்திசெய்யு முடியவில்லை. கடவுளும் கைகோத்தால் அவை நிறைவேறலாமென நினைக்கிறாய். நீ துப்பாக்கி ஏந்தி வேட்டைக்குச் செல்வதுபோல் நினைத்தால், அவரும் ஒரு துப்பாக்கியுடன் உன்னுடன் வந்தால் நன்றாக இருக்குமென எண்ணுவாய். நீ களைத்துவிட்டாய், விழத் தொடங்கிவிட்டாய். ஆகவே 'கடவுளே, காப்பாற்று' என்று அலறுகிறாய். 'நீதான் தீனதயாளன், ஏழைப் பங்காளன், பாவிகளை ரட்சிப்பவன்' என்று அவருக்கு நினைவூட்டுகிறாய்.

இதை வேறு கண்ணோட்டத்தில் பார்த்தால், நீ கடவுளை உன் சேவகனாக நினைத்து வேலை செய்ய அழைப்பது போலிருக்கிறது. இதை பிரார்த்தனை வகையில் சேர்க்க முடியாது. இது கடவுளைச் சுரண்டுவது போன்றதாகும். ஆசை உன்னுடையது. அது திருப்தியாக வேண்டுமென்ற ஏக்கம் உன்னுடையது. அதற்கு நீ கடவுளை சேவகன்போல் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறாய். 'என்னுடன் ரதத்தில் ஏறு. என்னுடன் சேர்ந்து அம்பு வீசு' என்று அவரை அழைக்கிறாய்.

உன் பிரார்த்தனை என்பது உன் ஆசைகளின் புதிய முறையிலான வெளிப்பாடுதான். உன் பிரார்த்தனையை ஆராய்ந்தால் 'அதன் மையமாகக் கடவுள் இல்லை, நீதான் இருக்கிறாய்! உன் பிரார்த்தனை கடவுளை முகத்துதி செய்வது போன்று உள்ளது. அதில் அவர் மயங்கி உன்னுடன் சேர்ந்து கொண்டு உன்னால் தனியாகச் செய்ய முடியாமல் போனதை அவர் செய்து தருவார் என்னும் எதிர்பார்ப்பு அடங்கியுள்ளது.

என்னிடம் சிலர் வந்து அவர்களுக்கு சந்நியாசம் தருமாறு வேண்டுகிறார்கள். எதற்காக என்று நான் கேட்டால், "எங்களால் தனிப்பட்ட முறையில் சில முயற்சிகளில் வெற்றிபெற முடியவில்லை. வாழ்க்கை இப்படியே ஓடிவிடும் போலிருக்கிறது. உங்கள் மூலம் சந்நியாசம் பெற்று இதுவரை பெற முடியாததை இனி பெற்றுவிடலாம் என நம்புகிறோம்," என்று காரணம் கூறுகிறார்கள்.

அப்படியானால் 'பெறவேண்டும்' என்னும் உள்மன ஓட்டப் பந்தயம் தொடர்கிறது என்றுதான் அர்த்தம். குறிப்பிட்ட வழியில் பெற முடியவில்லையானால், இவர்கள் வழியை மாற்றிக் கொள்வார்கள். இல்லறத்தானாக இருந்து பெற முடியாததை துறவியாகிப் பெற முயலுவார்கள். கொள்கையை, சாஸ்திரங்களை மாற்றிக்கொள்வார்கள். தேவையென்றால், சட்டையை மாற்றிக் கொள்வதுபோல் மதம் மாறவும் தயங்கமாட்டார்கள்.

ஆனால் ஞானியோ இங்கு முயன்று பெறுவதற்கு எதுவுமில்லை என்பான். காரணம், அவன் விழிப்புப் பெற்று விட்டான். நாம் எதைப் பெறச் சென்றோமோ அதை ஏற்கெனவே பெற்றிருக்கிறோம். பிறகு ஆதாரம் தேவைப்படாது. இந்த ஆதாரம் (ஆதரவு) தேவைப்படாத நிலையே சந்நியாசம் என்பது.

இந்த சுலோகத்தில் வரும் 'ஸ்வச்சந்த' (சச்சந்தன்) என்னும் சொல்லின் பொருள் தற்காலத்தில் அடங்காப்பிடாரி என்று எடுத்துக் கொள்ளப்படுகிறது. அகராதிகளும் அப்படித்தான் கூறுகின்றன. இதன் பொருள் சுயமான சந்தத்தை அடைந்தவன் என்பதாகும். நமக்குள் ஒரு லயம், ஒழுங்குமுறை, யாப்பு போன்ற கட்டுப்பாடு, ஒத்திசைவு உள்ளது. இந்தப் பண்ணில், யாப்பில் (சந்தம்) நமது ஆத்மாவின் கீதம் அமைந்துள்ளது. அந்த உள் லயத்திற்கு ஏற்ப ஞானி சில சமயம் எழுந்து நடனமாடுகிறான்.

நம்மில் பலர் வாயால் பாடுகிறோம். அது விசேஷ இன்பம் தருவதில்லை. ஏனெனில் அது நாம் இயற்றிய பாட்டில்லை. நம் உள்ளேயிருந்து சுயமாக எழுந்த பாட்டில்லை. நாம் உடல் சந்தோஷத்துக்காகப் பாடுகிறோம். உடல் சந்தோஷத்துக்காகப் பாட்டு கேட்கிறோம். இப்படி உடல் சார்ந்த ஆசைகள் ஒருபோதும்

பூர்த்தியாவதில்லை. இன்று இப்போது பசி. வயிறு நிறையச் சாப்பிடு. சில மணி கழித்து அல்லது நாளைக்கு மீண்டும் பசி. ஒரே நாளிலேயே நம் பலமுறை தண்ணீர் அருந்த வேண்டியுள்ளது. காம ஆசையும் இப்படித்தான் அடிக்கடி தலைதூக்குகிறது.

உடலின் சுபாவம் விரைவில் அழிவதுதான். உடல் மூலம் பெறும் திருப்தி என்றும் நிலைத்து நிற்பதில்லை. உடல் மூலம் திருப்தி பெற முயல்வது நெருப்பைக் குளிர்விக்க முயல்வது போன்றது; மண்ணிலிருந்து எண்ணெய் எடுக்க முயல்வது போன்றது. நெருப்பு குளிர்ச்சியாகுமா? அதன் இயற்கையே சூடாக இருப்பதுதான். மண்ணிலிருந்து எண்ணெய் பிரிக்க முடியுமா? மண்ணில் எண்ணெய் கிடையாதே. அவ்வாறெல்லாம் முயல்வது கிறுக்குத்தனமாகும்.

உடல் வழியாகத் திருப்தியை எதிர்பார்ப்பவன் அறிவில்லாதவன். அவன் உடலின் சுபாவத்தை ஆழ்ந்து கவனித்ததில்லை. உடல் ஒரு நிமிடத்தில் அழியக்கூடியது. அதுதான் அதன் இயற்கை. எவற்றால் உடல் உருவாகியுள்ளதோ அவை சிதறுவதற்குத் தயாராக உள்ளன. நிரந்தரமான ஒன்றிலிருந்துதான் திருப்தி கிடைக்க முடியும்.

உடலின் சந்தத்தை (யாப்பு அமைப்பை) தனது பண்ணாக நினைப்பவன் அலைந்தபடி இருப்பதான், அழுவான், துடிப்பான். அப்போது தனக்குள் இருக்கும் சுயமான சந்தத்தின் அடிப்படையிலான ஆத்ம கீதம் அவனுக்குக் கேட்காது. உடல் வாழ்க்கை எழுப்பும் டமார ஒலிகளில், ஆரவாரத்தில் உள்ளே ஒலிக்கும் வீணை ஒலி கேட்க வாய்ப்பில்லை.

அது மிகவும் சன்னமான ஒலி. அதில் சத்தம் கிடையாது. அதைக் கேட்க அமைதியான மனநிலை தேவை; சலனமற்ற மனநிலை தேவை. மௌனமாய் இருத்தல் தேவை. ஆசைப்பசை இல்லாமை தேவை. அங்குமிங்கும் போவது-வருவது இல்லை; ஓடுதல்-குதித்தல் இல்லை. உட்கார்ந்துவிட்டாய். செய்வதற்கு ஒன்றுமில்லை. செயலற்ற இந்த நிலையில், அமைதியான சூழலில், உள்ளேயிருக்கும் ஒளிக்கீற்று (கிரணம்) தோன்றுகிறது. தெய்வீக மணம் பரவுகிறது. உனது ஒவ்வொரு ரோமமும் சிலிர்க்கிறது.

இப்படி உள்ளேயிருக்கும் கீதம் வெளிப்படுவதே ஸ்வச் சந்தம் (சுய சந்தம்). மாநில வாழ்த்து, தேசிய கீதம், மத சம்பந்தமான பாசுரம், கோயிலின் தலப்பாட்டு, புரோகிதர்களின் மந்திர கீதம் ஆகியவை நமது ஆத்ம கீதத்தின் முன்னால் நிமிர்ந்து நிற்க முடியாது.

அவ்வளவு தூரம்கூட போக வேண்டாம். உடலிடம் சொல், 'நீ உன் வேலையைச் செய். பசித்தால் சாப்பிடு. தாகமெடுத்தால் தண்ணீர் பருகு. ஆனால் உன்னுடன் எனக்கு நிரந்தரமான சம்பந்தம் கிடையாது என்பதை நான் அறிந்தே உள்ளேன்.'

மனத்தில் கேட்கும் பாட்டையும் நம்பாதே. மனம் நொடிக்கு நொடி மாறுபடக் கூடியது. ஒரு நொடிகூட எங்கும் தங்குவ தில்லை. தங்காத ஒன்று சுகம் எப்படித் தரும்? எப்பொழுதும் ஓடியபடி இருக்கும் ஒன்றிலிருந்து அமைதி எப்படிக் கிடைக்கும்? நிற்காமல் இயங்குவது மனத்தின் குணம். மனம் நின்றுவிட்டால் செத்துப்போகும். அது ஓடும்வரைதான் வாழும். மனம் சைக்கிள் வண்டி போன்றது பெடலை மிதித்திருக்கும் வரையிலும் அது ஓடும். பெடல் போடுவதை நிறுத்தினால் வண்டி விழுந்துவிடும். மனமும் ஓடினால்தான் இயங்கும். நின்றால் விழுந்துவிடும். அத்தகைய ஒன்று நிரந்தர அமைதியை எப்படி நல்க முடியும்?

இப்படி சுய லயத்தை, ஆத்ம கீதத்தைக் கேட்க முடிந்தவன் உலக பந்தங்களிலிருந்து விடுதலை பெறுகிறான். இந்த விடுதலை, சங்கிலிகளை உடைத்து வெளியேறுவது போன்றதல்ல. தானாக, சிரமமின்றி, கிரமமாக இந்த விடுதலை நிகழ்கிறது. ஒருவனைச் சிறையிலிருந்து வலுக்கட்டாயமாக இழுத்து வெளியேற்றுவது போன்றதுமல்ல. ஏனெனில் பெரும்பான்மையோர் உலகத் தளைகளிலிருந்து விடுபடுவதை விரும்புவதில்லை. ஆகவே அவர்கள் ஆத்ம கீதத்தைக் கேட்க நுணுக்கமான முயற்சிகளில் இறங்குவதில்லை.

வேறு சிலரோ சுய லயத்தைக் கேட்கப் பிடிவாதமாக (ஹடயோகம்) முயலுகிறார்கள். இதற்காக அவர்கள் கடுமையாக உண்ணாவிரதம் இருக்கிறார்கள். பசியை சிரமப்பட்டு அடக்கிக் கொள்வதை ஆத்மஞானப் பயணத்தின் அங்கமாகக்

கருதுகிறார்கள். இதற்காகச் சிலர் ஆணிப்படுக்கை மீது படுக்கிறார்கள். சிலர் தங்களைச் சாட்டையால் அடித்துக் கொள்கிறார்கள். சிலர் இரவும் பகலும் தூங்காமலிருக்கிறார்கள். சிலர் கடும் வெயிலில் நாற்புறமும் எரியும் நெருப்பின் நடுவில் நிற்கிறார்கள் (பஞ்சாக்னி தவம்). தன்னைத் துன்புறுத்துகிறார்கள். தனக்கே கொடுமை இழைக்கிறார்கள். வலிக்கு உள்ளாகிறார்கள். இப்படியெல்லாம் செய்தால் முக்தி கிடைத்துவிடும் என்று நம்புகிறார்கள்.

ஆனால் இது முக்திக்கான உபாயமன்று என்கிறார் அஷ்டாவக்ரர். இப்படித் தன்னை வதைத்துக்கொள்வது உலகத்தளைகளால் கட்டப்பட்டுள்ளதைவிட மோசமானது. வலுக்கட்டாயமாக எவரும் மோட்சம் பெற முடியாது. அது பெறுவதல்ல. நிகழ்வது.

முக்தி என்பது எதிர்மறையானதன்று. முக்தி என்பது தளைகள் அறுந்துபோவதால் நிகழ்வதன்று. சுயத்தை உணர்ந்தால் அந்தத் தளைகள் உண்மையில் கிடையாதுபோல் சட்டென நீங்கிவிடும்.

நாம் தளைகளால் கட்டுப்பட்டுள்ளோம். ஏனெனில் நாம் நமக்கு உள்ளே நிலவுகின்ற, உள்முகமான சுதந்திரத்தை உணரவில்லை. ஆகவே வெளியில் போராடி நாம் சுதந்திரம் பெற வேண்டியதில்லை. நாம்தான் நம்மைக் கட்டிப் போட்டுள்ளோம். நம்மை விடுவித்துக்கொள்வது நம் கையில்தான் உள்ளது.

மனோவசியம் (ஹிப்னாடிசம்) சமயம் என்ன நடக்கிறது? அக்கலை நிபுணர் கூறுவதை மனோவசியத்திற்கு உள்ளாகுபவர் அப்படியே ஏற்கிறார். அந்த நிபுணர் ஓர் ஆணை வசியம் செய்து 'நீ பெண்' என்று சொன்னால், அந்த ஆண் இதற்குமுன் எந்தப் பயிற்சியும் இன்றியே பெண்போல் நடந்துகாட்டுகிறார்! அவருக்கு என்ன ஆனது? கருத்தேற்பு அவரைப் பாதித்துவிட்டது.

தற்கால உளவியல் வல்லுநர்கள் வசிய சக்தி பற்றிக் கண்டுபிடிப்புகள் செய்திருக்கின்றனர். உதாரணமாக, வசியம் செய்யப்பட்டவனின் கையில் சாதாரணக் கல்லை வைத்து,

அதைத் தணல் என்று நிபுணர் சொன்னால், அந்த ஆளின் கையில் கொப்புளம் தோன்றுமாம்!

இந்த உதாரணத்தின் அடிப்படையில் இலங்கையில் பௌத்த பிட்சுக்கள் தணல்மீது நடக்கிறார்கள். (தீ மிதித்தல்). தணல் கட்டிகளை குளிர்ந்த கல்லென்று சம்மோகனம் மூலம் கருத்தேற்பு. செய்யவைத்தால் அதை பிட்சு குளிர்ச்சியாகவே உணர்வார்.

**சூ**ஃபி கதை ஒன்று. பக்தாது நாட்டரசர் கலீஃபா உமர் வேட்டைக்குப் போயிருந்தார். கறுப்பான ஓர் உருவம் புயல்போல் எதிரில் வருவதைக் கண்டு அதை அரசர் தடுத்தார். "நில். நான் கலீஃபா உமர். பக்தாதுக்குள் நுழைவதற்கு முன் என் அனுமதியைப் பெறவேண்டும்," என்றார். அந்த உருவம், "மன்னிக்கவும். நான்தான் மரண தேவதை. பக்தாதில் 5000 பேர் என் மூலமாக இறக்க வேண்டியுள்ளது. மரணம் எங்கும் நுழைய எவரது அனுமதிக்காகவும் காத்திருப்பதில்லை," என்று தெரிவித்தது.

நாட்டில் பிளேக் நோய் பரவியது. ஐம்பதாயிரம் பேர் மாண்டனர். கலீஃபாவுக்குக் கோபம் பொங்கியது. நோய் நின்றுபோனதும் அவர் நகரப் பாதையை அடைந்தார். கரிய உருவம் தன் வேலை முடிந்து திரும்புகையில் அதைத் தடுத்தார். "நீ மரண தேவதையாக இருந்தும் பொய் பேசலாமா? ஏமாற்றுவேலை செய்யலாமா? நீ 5000 பேரைக் கொல்வதாகக் கூறி 50000 பேரைச் சாகடிக்கலாமா?" என்று வெடித்தார்.

அதற்கு அவ்வுருவம், "அரசே! உங்களிடம் சொன்னபடி நான் சாகடித்தது 5000 பேர்தான். மீதி 45000 பேர் நோய் அச்சத்தினால் செத்தவர்கள். நான் அவர்களைத் தொடக்கூட இல்லை," என்றது.

உலகில் நிலவும் நோய்களில் மனிதன் உண்டாக்கிய நோய்களே அதிகமானவை. நோயாளி மனப்பான்மை (hypochondria) தனக்கு இல்லாத சில நோய்களையும் மனிதனிடம் தூண்டிவிடுகிறது. முன்னேற்றத்தை ஏற்படுத்துவதுபோல் உட்தூண்டுதல் (auto-suggestion) நோய்களையும் தோற்றுவிக்கக் கூடியது.

**பௌ**த்த பிட்சு நாகார்ஜுனரை ஓர் இளைஞன் அணுகி, தானும் முக்தியின் ருசியைச் சிறிதாவது அறிய உதவுமாறு கேட்டுக்கொண்டான். அதற்கு அவர், "நீ முக்தியின் ருசியை அறிந்துகொள்வதற்கு முன், கட்டுத்தளைகளை நீயேதான் உண்டாக்கினாய் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்," என்றார்.

அதற்கு அவன், "நானா என்னையே கட்டிப்போட்டுக் கொள்வேன்? எவனும் தன்னைக் கட்டுப்போடும் தளைகளை அமைத்துக்கொள்வானா? இது தர்க்கப்படி சரியன்று. எல்லாரும் மோட்ச விடுதலைக்கு ஆசைப்படும் நிலையில் யார் தன்னைக் கட்டிப்போட்டுக் கொள்வார்கள்?" என்று கேட்டான்.

நாகார்ஜுனர் சொன்னார்: "சரி, இந்த விஷயத்தை மறந்துவிடு. நான் அறிந்தவரையிலும், மோட்சத்தை விரும்புகிறவர்கள் மிகவும் குறைவு. மக்கள் சூழ்நிலைப்படி கட்டிப் போடப்பட்டிருப்பதையே விரும்புகின்றனர். தங்களைக் கட்டிப் போடும் விஷயங்களை அவர்கள் விரும்பவும் செய்கிறார்கள்.'

அவரது கருத்தை அந்த இளைஞன் ஏற்கவில்லை. எனவே நாகார்ஜுனர் சொன்னார்: "ஒரு காரியம் செய். அருகிலுள்ள குகைக்குள் சென்று மூன்று நாட்கள் அடைபட்டிரு. அந்நாட்களில் உணவு கிடையாது. இடைவிடாமல் நீ ஒரு விஷயத்தையே நினைத்தபடி இரு. அதாவது நீ எருமை மாடு என்றே நினைத்துக் கொள்ள வேண்டும்! அதன்பின் முக்தி பற்றிப் பேசுவோம்."

இளைஞன் பிடிவாதக்காரன். அவன் குகைக்குள் நுழைந்தான். இரவும் பகலும் தன்னை எருமை மாடென்றே வலுவாகக் கற்பனை செய்தான். வாயாலும் 'நான் ஒரு எருமை' என்று கூறியபடியே இருந்தான். முதல்நாள் இச்செயல் கிறுக்குத்தனமாகத் தோன்றியது. பிறகு கொஞ்சம்-கொஞ்சமாக உள்ளேயிருந்து ஓர் எருமை வெளிவர முயல்வதாகத் தோன்றியது! அவன் தனது உடல் பெருத்துவிட்டதுபோல் உணர்ந்தான்.

நான்காம் நாள் காலை நாகார்ஜுனர் அந்தக் குகையை அடைந்து இளைஞனை வெளியே வரச்சொன்னார். அவன் உள்ளேயிருந்தபடி, "சுவாமி, என் உடல் பெருத்துவிட்டதால்

அசைய முடியவில்லை. சற்று நகர்ந்தால் என் கொம்புகள் பக்கச் சுவர்களில் இடிக்கின்றன!'' என்று தீனமாகச் சொன்னான்.

நாகார்ஜுனர் உள்ளே சென்று அவனுக்கு ஓர் அறை விட்டார். ''கண்ணை நன்றாகத் திற. மூன்று நாளாகச் சாப்பிடாமல் நீ இளைத்தல்லவா போயிருக்கிறாய்? உன் தலை அப்படியே தானே உள்ளது. அதில் கொம்பு முளைக்க வில்லையே,'' என்று உறுமினார்.

இது சுய சம்மோகனத்திற்கு (auto-suggestion) உதாரணம். பிறரும், பிற விஷயங்களும் உன்னைக் கட்டிப்போடுவது தவிர, நீயே உன்னைப் பற்றிய ஒருதலைப்பட்சமான சிந்தனையால் உன்னைக் கட்டிப்போட்டுக் கொள்கிறாய். நீ உன்னைக் குறிப்பிட்ட விதமான சிறையில் அடைத்துக் கொள்கிறாய் கால்களில் சங்கிலி, கைகளில் விலங்கு. இவை நீயே தயாரித்துப் பூட்டிக்கொண்டவை. இவற்றில் உன் கையெழுத்துப் பதிந்துள்ளது.

சூஃபி கதை ஒன்று. புகழ்பெற்ற கொல்லர் ஒருவர். தரமான தயாரிப்புகளால் புகழ்பெற்றவர். அவர் தயாரிக்கும் பொருட்களில் தனது கையெழுத்தையும் பொறித்துவிடுவார். ஒருமுறை அவரது ஊரின் மீது பக்கத்து நாட்டு அரசரின் படையெடுப்பு நிகழ்ந்து கொல்லர் கைதானார். ஊரில் வசித்த அரசர், அமைச்சர் மற்றும் முக்கியமானவர்கள் கைது செய்யப்பட்டனர். அவர்களுக்கு விலங்கு போட்டு, மலைப் பள்ளத்தாக்கில் நிற்கவைக்கப்பட்டனர்.

எல்லோரும் அடுத்து என்ன நடக்குமோ என அஞ்சினர். சிலர் அழுதனர். கொல்லர் மட்டும் கவலைப்படவில்லை. அதைப் பற்றி அமைச்சர் அவரிடம் விசாரித்தபோது, ''நான்தான் கொல்லன் ஆயிற்றே. இரும்பின் சூட்சுமம் தெரியும் என்பதால் என்னால் விலங்குகளை உடைக்கவும் முடியும். விலங்கு என்னைத் தடுக்க முடியாது. நீங்கள் பயப்படாதீர்கள். நான் என் விலங்கை உடைத்துக் கொண்டபின் உங்கள் எல்லோருடைய விலங்கு களையும் உடைத்தெறிவேன்,'' என்று சூளுரைத்தார்.

இதைக் கேட்டு அரசரும், அமைச்சரும், மற்றவர்களும் தெம்பு பெற்றனர்.. ''சரி, நீ உன் விலங்கை உடைத்து சுதந்திரமாகு,''

என்றார் அமைச்சர். கொல்லர் முயற்சியைத் தொடங்கினார். விலங்கைப் பலவாறு புரட்டியும் நெகிழவில்லை. பிறகு விலங்கை உற்றுக் கவனித்த கொல்லரின் முகத்தில் கலவரம் பரவியது. அது கண்டு அனைவரும் திகிலடைந்தனர். "என்ன ஆச்சு? எங்களுக்கு தைரியமூட்டினாயே. நீயே இப்பொழுது அழத் தொடங்குவாய் போல் தெரிகிறதே," என்று அமைச்சர் பதறினார்.

கொல்லர் சொன்னார்: "என் விலங்கை உடைத்தெறிவது நடவாத காரியம். விலங்கு சுலபமாக நெகிழாததால் அதை ஆராய்ந்து பார்த்தேன். அதில் என் கையெழுத்து பொறிக்கப் பட்டிருக்கிறது. ஆகவே இது நான் தயாரித்த விலங்காகத்தான் இருக்கும். ஆகவே இது உடையாது. உடைப்பது முடியாத காரியம். நான் வலுக்குறைந்த பொருட்களை ஒருபொழுதும் படைத்ததில்லை. நான் மேன்மேலும் வலுவான பொருட்களையே உண்டாக்கிவந்தேன். இதனால்தான் எனக்குப் பெயரும் புகழும் உள்ளன. வேறு கொல்லர் தயாரித்த விலங்காயின் இதை நான் உடைத்திருப்பேன், என்னை மன்னியுங்கள்."

ஆகவே நீ மாட்டிக்கொண்டிருக்கும் ஒவ்வொரு விலங்கிலும் உன் கையெழுத்து உள்ளது என்றே நான் சொல்லுவேன். இதற்காக நீ வருந்தாதே. விலங்கு எத்துணை வலுவானதாயினும் அதனைத் தயாரித்தது நீதானே. படைத்தவனை விட படைப்பு உயர்ந்ததாக இருக்காது. இருக்க முடியாது.

ஓவியம் எத்துணை அழகாயினும் ஓவியன் (படைத்தவன்) அதைவிட மேலானவன். பாடலைவிட அதை இயற்றியவர் உயர்ந்தவர். நடனம் எவ்வளவு கவர்ந்தாலும் நர்த்தகி அதைவிடச் சிறப்பானவள். இதேபோல் உடலைவிட ஆத்மா பெரியது; ஆத்மாவைவிட பரமாத்மா பெரியவர்.

ஆகவே கவலைப்படாதே. நம்மைக் கட்டிப்போடும் உலக பந்தங்கள் அனைத்தும் நாமே உண்டாக்கிக் கொண்டதால் பயப்பட எதுவுமில்லை. அவற்றை நம்மால் உடைக்க முடியும். அவை நம்மைக் கட்டுகையில் வலுவாகத் தெரியும். அவற்றைவிட நாம் வலுவானவர்கள் என்பதை உணர்ந்து உடைக்கத் தொடங்கினால்

அவை வெறும் கனவு, வசிய விளைவு என்பது புரிந்துவிடும். எனவே அவை எளிதில் உடையும். 'பந்தங்களைவிட நான் பெரியவன்' என்னும் உணர்வுதான் நிபந்தனை.

இப்படி பந்தங்களிலிருந்து விலகியவன் இதுவரை கிளையில் ஒட்டியிருந்து இப்போது பிரிகின்ற காய்ந்த இலைக்கு சமமானவன். காற்றடிக்கும் திசையில் இலை பறக்கிறது. கிழக்கிலும் மேற்கிலும், மேலும் கீழுமாக இலை பறக்கிறது. உலகக் காற்றின் பாதிப்புக் குறையக் குறைய் அது நிதானமாக பூமியில் படிந்து அமைதி பெறுகிறது.

உலக பந்தங்களிலிருந்து விலகுபவன் எஞ்சியுள்ள பாதிப்பால் மேற்கொண்டு சிறிது காலம் தடுமாறத்தான் செய்கிறான். பிறகு பாதிப்புக் குறையக் குறைய அவன் ஞானம் மிகுந்து அமைதியை அடைகிறான்.

காற்றில் அலையும் வற்றிய இலை தன் விருப்பப்படி பறப்பதில்லை. அதுபோல் பக்குவம் பெற்று பந்தங்களிலிருந்து விலகியவன் தனக்கென்று தனி விருப்பம் கொண்டிருப்பதில்லை. எது நடக்கிறதோ, எப்படி நடக்கிறதோ அவ்வாறே விட்டு விடுகிறான். வியாபாரம் செய்பவனாயின் அதைத் தொடருகிறான். போர்க்களமாயின் போரிட ஆயத்தமாக உள்ளான். எங்கு எப்படி உள்ளானோ அவ்வாறே தன்னை விட்டுவிடுகிறான். இவ்வாறு தன்னை சமர்ப்பிப்பதால் அவன் அமைதி பெறுகிறான்.

தனது தனிப்பட்ட ஆசை இல்லாத இடத்தில் ஒருவனுக்கு துன்பம் எதுவும் இருப்பதில்லை. ஆகவே அவனுக்குத் தோல்வியும் அதன் விளைவான சோகமும் விளையாது. அவன் மானம்-சன்மானம்-அவமானம் என்பவற்றை உணர்வதில்லை. அங்கு ஒவ்வொரு கணமும் கடவுள் பிரசன்னமாயிருக்கிறார்.

'உலகிலிருந்து விடுதலையான மனிதனுக்கு ஒருபொழுதும் களிப்போ, சோகமோ கிடையாது. அவன் சாந்த மனமுடைய வனாக விளங்குகிறான். அவன் உடல் (உடல் நினைவு) இல்லாதவன்போல் வாழ்கிறான். **(சுலோகம் 198)**

உலகிலிருந்து விடுதலை பெற்ற மனிதன் என்பதைவிட, அவனுக்குள் உலகம் என்பது இல்லை எனலாம். அவனைப் பொறுத்தவரை உலகம் என்பது இல்லை எனலாம்.

உலகம் என்பது எது? மரங்கள், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியவையா? இவை உலகின் மிகச் சிறிய அம்சம்தான். மனித வாழ்க்கையில் உலகம் என்பது உள்ளுலகம். அவ்வுலகம் முழுதும் விதம் விதமான ஆசை வலைகளால் அடைந்துகிடக்கிறது. ஒன்றைப் பெறவேண்டும் என்னும் ஆசையே உலகம். வாழ்க்கையில் குறிப்பிட்ட விதமாக ஆகவேண்டும் என்னும் விருப்பமே உலகம், பேராசையே உலகம்.

உலகில் இருந்தபோதிலும் உலகினுடையவனாக, உலகால் பாதிக்கப்படாதவனாக உள்ள ஒருவனுக்குக் களிப்போ, கவலையோ எப்படி உண்டாகும்? ஆகவே அவன் மனத்தில் கொந்தளிப்பு இராது. காய்ச்சல் (சுரம்) போன்ற படபடப்பிராது. அவன் குளிர்ந்த மனமுடையவனாக இருப்பான்.

கவலை மட்டுமன்றி களிப்பும்தான், துயரம் மட்டுமன்றி சுகமும்தான், தோல்வி மட்டுமன்றி வெற்றியும்தான் காய்ச்சல் போன்ற படபடப்பை, ஆவேசத்தை, முடுக்கிவிடுகின்றன. இதனால் தொடர்ந்து கவலைப்பட்டால் உடல்நலம் பாதிப்பிற்குள்ளாகிறது. சுகத்தையும் மிகையாகக் கொண்டாடி நோய்வாய்ப் படுவது கண்டு, துன்ப சமயம் அமைதி இழப்பதைப்போல், இன்பமான சமயத்திலும் யாராலும் அமைதியாக இருக்க முடிவதில்லை. இன்னொரு வேடிக்கை-அளவு கடந்த துன்பத்திலும், கொடிய வறுமையிலும், மனிதன் உயிர்நீப்பது இல்லை. ஆனால் அளவு கடந்த இன்பம் இதயத்தைப் பாதித்து உயிருக்கு உலைவைத்து விடுகிறது.

ஒருவனுக்கு லாட்டரியில் பத்து லட்ச ரூபாய்க்கான பரிசு விழுந்திருந்தது. அவன் வெளியே போயிருந்ததால் மனைவிதான் நம்பரை வைத்து அதைத் தெரிந்துகொண்டாள். அவள் பயப்பட்டாள். பத்து ரூபாய் கிடைத்தாலே குதிக்கிற கணவனால் பத்து லட்ச ரூபாய்ச் செய்தியைத் தாங்க முடியுமா? செய்தி கேட்டு இதயம் நின்றுவிட்டால்?

கிறிஸ்தவளான அவள் பாதரியாரிடம் சென்றாள். கணவன் உயிருக்கு ஆபத்து நேராதபடி லாட்டரியில் ஜெயித்ததைப் பக்குவமாக எடுத்துக் கூறும்படி வேண்டிக் கொண்டாள். பாதரி அவள் வீட்டிற்கு வந்தார். அவள் கணவன் வந்ததும் சாதாரணமாக, நிதானமாக, "உனக்கு லட்ச ரூபாய் லாட்டரியில் விழுந்திருக் கிறதாமே," என்று ஆரம்பித்தார். கொஞ்சம் கொஞ்சமாகத் தொகையை உயர்த்திப் பத்து லட்சம் என்று தெரிவிக்கலாம் என்று திட்டமிட்டிருந்தார். ஆனால் அவனோ, "அப்படியா சாமி, ஒரு லட்சமா விழுந்திருக்கு? பணம் கைக்கு வரட்டும், அப்படியே சரி பாதி அம்பதினாயிரத்தை இந்த நல்ல செய்திக்காக உங்க சர்ச்சுக்கு நான் தானமா குடுத்திடறேன்," என்றான்.

அவ்வளவுதான், பாதரியார் அசந்து போனார். ஐயாயிரம்கூட சர்ச்சுக்கு யாரும் தானம் தந்ததில்லை. ஐம்பதினாயிரமா! ஒரு நொடி இதயம் திடுமென நின்றது. பாதிரியார் கீழே விழுந்தார். பிறகு எழுந்திருக்கவே இல்லை. ஹார்ட் ஃபெயிலியர்!

துன்பத்தாலும் உடல் பாதிக்கப்படுகிறது. ஆனால் துன்பத்தை நாம் சமாளித்துக் கொள்கிறோம். ஏனெனில் துன்பம் நமக்குப் பழக்கமாகிவிட்டது. சுகத்தைத்தான் சமாளிக்க முடியாது. ஏனெனில் நாம் அதற்கான பயிற்சி பெற்றதில்லை. அப்படிப் பயிற்சி பெறுவதற்கு வாழ்க்கையில் சுகம் எங்கே கிடைக்கிறது?

ஆக, மனிதனால் துன்பத்தையும் சமாளிக்க முடியவில்லை. சுகத்தையும் சமாளிக்க முடியவில்லை. இந்த இரண்டு நிலையிலும் மனித மனம் படபடப்பாக ஆகிறது. படபடப்பென்றால் சூடாகிறது எனலாம். குளிர்ச்சி காணாமல் போகிறது. ஆனால் குளிர்ச்சியில் தான் அமைதி தெரியும். உள்ளேயும் வெளிவாழ்விலும் ஆவேசம் தெரியாது. அவனது மொழியில் வெற்றி-தோல்விக்கு அர்த்தம் கிடையாது. அவனை மதித்தாலும், மிதித்தாலும் அவன் பொருட்படுத்துவதில்லை. அவன் உள்ளம் ஒரே ரசத்தில், சமரசத்தில், ஆழ்ந்துள்ளது. அவன் விதேகனாக அரியணையில் வீற்றிருப்பான்.* சுகமும் துக்கமும் உடலைத்தான் பாதிக்கின்றன.

* இங்கு விதேகர் எனப்பட்ட ஜனகர் மகாராஜா மறைமுகமாகக் குறிப்பிடப்படுகிறார். இதனால் அவர் மகள் சீதைக்கு வைதேகி என்றும் பெயர் அமைந்தது.

அவை உடலின் குண விசேஷங்கள். இதனால் உடல் இரு பக்கமும் மாற்றி-மாற்றி ஊசலாடுகிறது. உடலின் மீது பிடிப்பு குறையும் விகிதப்படி இன்ப துன்பங்கள் உடலை வருத்துவது குறைவதை நாம் உணர்வோம்.

"ஆத்மாவிலேயே களித்துத் திளைத்து, சாந்தமும் தூய்மையும் கொண்டு மனம் பெற்று வாழ்கின்ற கம்பீரமான மனிதனுக்கு தியாகம் செய்யும் உணர்வும் மேலிடாது; எதையும் பெற்றுக்கொள்ளும் ஆசையும் எழாது." **(சுலோகம் 199)**

**இ**னி பிடிப்பதற்கு எதுவுமில்லை; விடுவதற்கு எதுவு மில்லை. உண்மையில் உள்ள பொருள் அறிந்துகொள்ளப்பட்டது. 'நான் யார்?' என அறிந்தபின் எல்லாமே கிடைத்துவிட்ட மாதிரிதான். உலகமே வசப்பட்டுவிட்டது போன்ற இந்த நிலையில், யார் கற்களை உடைக்கும் கூலிவேலை செய்வான்? நாட்டின் பிரதமர் பதவியில் அமர்ந்துள்ளவன் நகராட்சி உறுப்பினருக்கான தேர்தலில் போட்டியிடுவானா?

உள்ளுலகில் அந்தஸ்து, அங்கீகாரம் கிடைத்தபின் வெளியுலக வெற்றுப் பாராட்டை யார் விரும்புவான்? மற்றவர்கள் தரும் ஏற்பு இரண்டாம் பட்சம்தான். அவர்கள் அதை எப்பொழுது வேண்டுமானாலும் ரத்துசெய்ய முடியும். மற்றவர்களின் மூலம் ஏற்கப்படுதல் ஒருவகையான அடிமைத்தனம்தான். மற்றவர்கள் அளிக்கும் கௌரவம் தானம் போன்றது. அதை எவ்வளவு நியாயப்படுத்தினாலும் கொடுப்பவர் கைதான் மேலே இருக்கும்.

உள்ளுலகத்தில் உனக்கு சமைக்கப்பட்டிருக்கும் சிம்மாசனம் தனிச்சிறப்புப் பெற்றது. அது உன் ஒருவனுக்கே சொந்தமானது. வேறு எவனும் அதைக் கைப்பற்ற முடியாது. திருடன் எவனும் அதைத் திருட முடியாது. நெருப்பு அதை எரிக்காது.

இத்தகையவன் வெளியுலகால் கவரப்படாமல் தனது ஆத்மாவிலேயே களிக்கிறான். நாமோ வேறு விஷயங்களில் திளைக்கிறோம். ஒருவன் பணத்தைக் குவிப்பதில் களிப் படைகிறான். இன்னொருவன் பதவி ஏணியில் ஏறிக்கொண்டே செல்வதில் பூரிப்படைகிறான். களிக்கும் விஷயம் வேறு வேறானாலும் நாம் களிப்பை நாடி செய்யும் முயற்சிகள் உலகப்

பொருட்களுடனேயே சம்பந்தப்பட்டிருக்கின்றன. சம்சாரியின் அடையாளம் இதுவே. ஆன்மிகவாதி ஆத்மநினைவில் மட்டுமே களிக்கிறான். அவன் தனக்குள் சுரக்கும் ஆத்மரசத்தை, ஆத்ம இன்பத்தை, சுவைக்கிறான்.

**ப**ணக்காரன் ஒருவன் தங்கக் கட்டிகளாகச் சேகரித்து பெரிய இரும்புப் பெட்டி ஒன்றில் அடுக்கிவைத்து வந்தான். தினமும் பெட்டியை ஒருமுறை திறந்து பார்ப்பான். இதை அவனது மகன் கவனித்தான். அவனும் குடும்பத்தில் மற்றவர்களும் பணக்கஷ்டத்தில் இருந்தனர். ஏனெனில் அந்தப் பணக்காரன் தங்கக்கட்டி வாங்குவதற்காகக் கருமியாக இருந்தான்.

மகன் ஒரு திட்டம் தயாரித்தான். பெட்டியின் சாவி இருக்கும் இடத்தைக் கவனித்தான். தந்தை வெளியே போயிருக்கும் சமயம் அவன் ஒரு தங்கக்கட்டியை எடுத்து விற்று, பித்தளைக் கட்டி வாங்கி வைத்து விடுவான். நாளடைவில் பெட்டியில் பித்தளைக் கட்டிகள் மட்டுமே இருந்தன. அந்தப் பணக்காரனுக்கு வித்தியாசம் தெரியவில்லை.

அவன் நோயுற்று இறக்கும் தறுவாயில் இருந்தான். அப்போதுதான் மகன் ரகசியத்தை வெளியிட்டான். இறக்கவுள்ள நிலையிலும் அவன் தந்தை அழுதான், புலம்பினான், நெஞ்சில் அடித்துக்கொண்டான்.

தங்கக்கட்டியில் இல்லை சுகம். நீ அதற்குக் கொடுத்த மதிப்பு அதை உயர்ந்த பொருளாக்கிவிட்டது. 'அது மிகவும் விலைவாய்ந்தது; அது என்னுடையது; நான் அதன் சொந்தக் காரன்' இவ்வாறெல்லாம் நினைப்பதால்தான் சுகமாக உணர்கிறாய். ஆனால் சுக உணர்வு பொருளில் இல்லை. அது உனக்குள் ஊறுகிறது.

நாய் எலும்பைக் கடிக்கும்போது அதை எளிதில் விடாது. ரத்தத்தின் சுவையில் அது சுகம் காண்கிறது. உண்மையில் சுகம் எலும்பில் இல்லை; ஏனெனில் எலும்பில் ரத்தம் கிடையாது. எலும்பு நாயின் வாயைக் கீறுவதால் ரத்தம் கசிகிறது. அதைத்தான் நாய் நக்கி சுகமாக உணருகிறது.

இதைபோல் பெரும்பான்மையோர் சுகம் வெளியில் எங்கேயோ உள்ளதாக நினைக்கின்றனர். நீ ஓர் அழகிய பெண்ணைப் பார்த்தால் மகிழ்ச்சி கொள்கிறாய். அப்போதும் நீ உணரும் சுகம் உனக்குள்ளே இருந்துதான் எழுகிறது. அவளிடமிருந்து அது தனியாகப் புறப்பட்டு உன்னை நோக்கி வருவதில்லை. உனக்குப் பலர் மலர்மாலை அணிவித்தால் அப்போதும் நீ உணரும் சுகம் மாலையினுடையது அன்று. அது உனக்குள் தோன்றி உணரப்படுகிறது. வெளிப்பொருள் ஒரு காரணம் அல்லது சாக்கு மட்டுமே ஆகும். அதைக் கண்டு அல்லது பெற்று அல்லது அனுபவிக்கும்போது நீ உணரும் சுகத்தின் ஊற்று உனக்குள்ளேதான் இருக்கிறது.

அந்த உள்ரசத்தை, ஆத்மரசத்தை அனுபவிக்க முடிந்தவனை அஷ்டாவக்ரர் ஆத்மாராம் என்கிறார். இவ்வாறு சுகம் வெளியில் இருந்து வருவதில்லை என்று புரியும்போது, அதனுடன் சேர்ந்து, துன்பமும் வெளியிலிருந்து வருவதில்லை என்பது புரிந்துபோகும். இன்பம்-துன்பம் சம்பந்தமான எல்லா பிரமைகளும், தவறான கண்ணோட்டங்களும், நீங்கிவிடும்.

சுகத்தின் ஊற்று நமக்குள்ளேதான் இருக்கிறது என்பதை வெளியில் மிகவும் அலைந்து அல்லல்பட்ட பிறகே அறிய முடிகிறது. இப்படித் தேடி அலைவதால் நிறையச் சிக்கல்கள் உதிக்கின்றன. எவற்றின் மூலம் நாம் சுகம் பெற விரும்புகிறோமோ அவையே சில சமயம் நாம் நம்முள்ளிருக்கும் ஆனந்த ஊற்றைச் சென்றடைய முடியாதபடி தடுத்துவிடுகின்றன.

'இயற்கையாகவே சூனியமான மனம் அமைந்திருந்து, சுபாவமாகவே இறுக்கமின்றிப் பணிபுரிகின்ற கம்பீரமான மனிதன் சாதாரண மக்களைப்போல் மான-அவமான நிலைகளால் பாதிப்படைவதில்லை.' **(சுலோகம் 200)**

மனத்தை சூனியமாக்கிக் கொள்ளுதல் ஒருவகையில் கடினம், இன்னொரு வகையில் எளிது. முயற்சி செய்து, பயிற்சி செய்து, உழைத்து சூனிய மனத்தைப் பெற முடியாது. இயற்கையாக, விழிப்புப் பெற்று இதை அடையலாம்.

பௌர்ணமி இரவு. நீ முழுநிலவை ரசிக்கிறாய். சுகமாக உணர்கிறாய். கண்ணை மூடியபடி சற்று யோசி. சந்திரனிலிருந்து சுகம் வருகிறதா அல்லது நீ சுகமாக உணர அது காரணமாக அமைகிறதா? ஏனெனில் சற்றுத் தள்ளி உட்கார்ந்துள்ளான் ஒருவன். நிலவைப் பார்த்து அவன் துளிக்கூட சுகமாக உணரவில்லை. அவன் மனைவி இறந்துவிட்டாள் அவன் கண்களில் நீர். நிலவைப் பார்த்து அவன் எரிச்சலடைகிறான். அவன் நிலவைப் பார்த்து, "என் மனைவி இறந்துவிட்ட சூழ்நிலையில் நீ சிரித்து ஜொலிக்கிறாயே. என்னை நீ கிண்டல் செய்வதுபோல் தோன்றுகிறதே" என்று குறைகூறுகிறான்.

காதலி அல்லது மனைவி அருகிலிருந்தால் ஒருவனுக்கு அமாவாசையும் பௌர்ணமிபோல் தோன்றுகிறது. அவள் இல்லாமல் போனால் பௌர்ணமி இரவும் அமாவாசைபோல் இருளடைந்ததாகத் தோன்றுகிறது. பசித்த மனிதனுக்கு ஆகாயத்தில் உள்ள நிலவு வட்டமான சப்பாத்திபோல் தோன்றும் என்று சொல்வது இந்த அடிப்படையில்தான்.

**ஜெ**ர்மன் நாட்டுக் கவிஞர் ஹென்ரிக் ஹென்* எழுதியுள்ளபடி அவர் ஒருமுறை வழி தெரியாமல் காட்டில் சிக்கிக்கொண்டார். உணவு கிடைக்கவில்லை. அப்போது பௌர்ணமி நிலவு. அது அவருக்கு வானத்தில் வட்ட சப்பாத்தி நீந்துவதுபோலிருந்தது. அவரே தனது கற்பனையை நினைத்துத் திகைத்தார். அவர் ஏராளமான கவிதைகள் எழுதியுள்ளார். ஆனால் சந்திரனில் அவர் சப்பாத்தியைக் கண்டதில்லை. நிலவு இதுவரை அழகியின் முகமாகவே அவருக்குத் தெரிந்து வந்திருக்கிறது. இந்த சமயமும் சப்பாத்திக்குப் பதிலாக வலிந்து அழகியைக் கற்பனை செய்ய முயன்றார். பயனில்லை. வயிற்றுப் பசி, கால்களில் முள் தைத்துக் கொப்புளங்கள், உயிருக்கு ஆபத்தான சூழ்நிலை என்றிருக்கையில் எந்த அழகியின் நினைவும் எப்படி ஏற்படும்? வயிறு நிரம்பியபின்தான் அழகியல் கற்பனைக்கு வாய்ப்புண்டு.

---

* Heinrich Heine (1797-1856). ஜெர்மானிய மொழியின் சிறந்த தனிப்பாடல் கவிஞர்களுள் ஒருவர். அவருடைய பாடல்களுக்குப் புகழ்மிக்க இசையமைப்பாளர்கள் இசையமைத்துள்ளனர்.

ஆகவே உனக்கு வெளியே என்ன கிடைக்கிறதோ அது உன் உள்ளே இருப்பதன் வெளிப்பாடுதான். வெளியுலக வாழ்க்கையின் ரசம் அல்லது சாரம் உள்ளேதான் இருக்கிறது.

ஆன்மிக அனுபவத்தைக் கட்டாயப்படுத்திப் பெற முடியாது. நீ உன்னை அடக்கி, பத்மாசனம் போட்டு, கண்களை மூடி, கற்சிலைபோல் உட்கார்ந்து பார். இதனால் எந்த அனுபவமும் கிடைக்காது. உன் உள்ளத்தினுள் நெருப்பு எரிந்து கொண்டிருந்தால், உள்ளம் கொதித்தபடி இருந்தால், வெளி வாழ்வில் ஓட்டமும் பரபரப்புமாக இருக்கும். நீ ஆசைகளின் புயலால் நீ அங்குமிங்கும் பந்தாடப்படுவாய். இதனால் ஆன்மிக முன்னேற்றம் விளையாது.

ஆன்மிக உணர்வு இயற்கையாக, சகஜமாக, படிப்படியாக வரவேண்டும். கபீர்தாசர் சமாதி நிலையும் சகஜமாக நிகழ வேண்டும் என்கிறார். உடற்பயிற்சிபோல் அதைச் செய்யக்கூடாது. வாழ்க்கையில் சுகமாக உணரும்போது சற்று யோசி. அந்த சுகம் உள்ளேயிருந்துதான் உணரப்படுகிறது என்பது புரியும். துன்பம் வரும்போதும் யோசித்துப்பார். அது உள்ளுலகத்துடன் உனது தொடர்பு அறுந்துவிட்டதைக் காட்டுகிறது.

உள்ளுலகில் உள்ள நிஜமான உன்னுடன் தொடர்பு ஏற்படுதல் சுகம். அந்த நிஜமான உன்னுடன் தொடர்பு இல்லாமல், உன் உடல்-மனத்துடன் நின்றுவிடுவது துன்பம்.

ஒருவன் திட்டுகிறான். உன் மனம் புண்படுகிறது. நீ நிஜமான உன்னை மறந்ததால்தான் உணர்கிறாய். திட்டு நிஜமான உன்னைத் தொடாது என்பது மறந்துவிடுகிறாய். இதனால் உன்னை மறந்து கொதித்தெழுகிறாய். அப்பொழுது நிஜமான உன்னிடமிருந்து மேலும் விலகிச்செல்கிறாய்.

நெடுங்காலமாக நீ பார்க்காத உன் நண்பன் சந்திக்க வருகிறான். சட்டென உன் ஆத்மாவில் சுகக் கிளர்ச்சி தோன்றுகிறது. ஆராய்ந்தால் இந்த சுகம் நண்பனிடமிருந்து வரவில்லை. உன் உடலும், உன் மனமும், சுருக்கமாக நீ, ஆத்மாவுடன் இணைந்ததால் சுகம் உண்டானது.

இவ்வாறு சுகமோ, துன்பமோ வெளியிலிருந்து பிரவேசிப்பவை அல்ல என்றுணர்ந்தால் வெளிப் பொருட்களின் பாதிப்பைக் கைவிட முடியும். அடுத்து, அமைதியான சிந்தனையில் ஈடுபடுவது சாத்தியப்படும். இதன் பெயரே தியானம் என்பது. வெளியில் தேடுவது நின்றால், 'நண்பனின் வருகை சுகம் தரும்' என்று சார்ந்திருப்பது நீங்கும். பிறகு சந்திரன் உதித்தால் சுகம்; வசந்தம் வந்தால் சுகம்; பூக்கள் மலர்ந்தால் சுகம் என்று வெளிக்காரணங்களில் சுகத்தைக் கற்பனை செய்வது நீங்கும். அடுத்து, வெளியுலக வாழ்வில் ஈடுபட்டுள்ள உன்னை நீ உனக்குள் உள்ள நிஜமான உன்னுடன் இணைத்துக்கொள். அங்குதான் உண்மையான சுகத்திற்கு வாய்ப்புள்ளது.

வெளிக்காரணமின்றி சுகமாக உணர முடியும் என்பது ஒருமுறை அனுபவபூர்வமாகத் தெரிந்தால் பிறகு நீ சுதந்திர புருஷனாகிவிடுகிறாய். சுகத்திற்காக யாரையும், எதையும் சார்ந்திருக்க வேண்டியதில்லை என்பதைப் புரிந்துகொள்கிறாய். உன் கையில் ஆன்மிகப் பூட்டைத் திறக்கும் சாவி கிடைத்து விட்டதெனலாம். நீ விரும்பும்போதெல்லாம் பூட்டு திறக்கும்; கதவு திறக்கும். கடைத்தெருவில் நீ கண்ணை மூடியபடி நின்றாலும், உன்னால் உனக்குள் அமிழ்ந்து செல்ல முடியும்.

காலப்போக்கில் கண்களை மூடிக்கொள்வதும் தேவைப் படாது. ஏனெனில் அதுவும் ஒரு சாக்கு, சடங்குதான். கண்கள் திறந்துள்ள நிலையிலும் நீ உனக்குள் இறங்குவது ஒரு கட்டத்தில் சாத்தியப்படும். கடையில், வயலில் என்று வழக்கமான வேலைகளைப் பார்த்தபடியே ஆன்மிகத்தில் திளைப்பதும் சாத்தியமாகும். பிறகு பத்மாசனம் போடுவதோ, பூஜை அறையில் உட்கார்ந்திருப்பதோ, கோயிலில் உட்கார்ந்திருப்பதோ தேவைப்படாது.

கொஞ்சம் கொஞ்சமாக ஆன்மிகம் உனது இயற்கையான சுபாவம் ஆகிவிடும். நீ உனக்குள் இறங்குவதும் வெளியே வருவதும் சுலபமாகிவிடும். உனது கடை இயங்கும். வாடிக்கை யாளர்களுடன் உரையாடல் தொடரும். வயல் உழுதல் நடைபெறும். நீ குழி தோண்டுவாய். விதைப்பாய். அறுவடை

செய்வாய். பேசுவாய், கேட்பாய். அதேசமயம் உனக்குள் மூழ்கியும் இருப்பாய்.

'ஒருவன் தன் வேலையை உடல்தான் செய்தது என்றும், சுத்த சொரூபனாகத் தனக்குள் இருக்கும் உண்மையானவன் செய்யவில்லை என்றும் நினைப்பவன் கர்மம் (பணிகள்) செய்தும் எதுவும் செய்யாதவனாகவே நினைக்கப்படுவான்' **(சுலோகம் 201)**

**உ**னக்குள் நீ ஆழ்ந்துபோய் விட்டால், உன் வாழ்வில் நடப்பவை உடலுடன் தொடர்புடையவை அல்லது மனத்துடன் தொடர்புடையவை அல்லது உடலுக்கும் மனத்துக்கும் அப்பால் பரவியுள்ள இயற்கை சூழ்நிலையுடன் தொடர்புடையவை என்பது தெரியவரும். உன் மனத்தில் 'என்னால் செய்யப்பட்டது எதுவுமில்லை. நான் கர்த்தா (செய்பவன்) இல்லை. நான் நடப்பதைப் பார்ப்பவன் (சாட்சி) மட்டுமே ஆவேன்' என்னும் எண்ணம் உதிக்கும்.

உனக்குப் பசியெடுப்பது உன் உடலில் நிகழும் ஒரு சம்பவம். நீ அந்த நிகழ்ச்சியைப் பார்ப்பவனாக மட்டும் இருக்கிறாய். 'இப்படியே வேடிக்கை பார்' என்று இதற்கு அர்த்தமன்று. நீ எழுந்திரு. உடலுக்கு உணவளிக்க ஏற்பாடு செய். தாகமெடுத்தால் உடலுக்குத் தண்ணீர் கொடு. உடல் உனது கோயில். அதில் நீ நம்பும் தேவதைகள் வசிக்கிறார்கள். நீ இப்படியெல்லாம் உடலைப் பற்றி யோசி. ஆனால் உடலுடன் ஒன்றிவிடாதே. 'எனக்குப் பசிக்கிறது' என்று சொல்லாதே. 'உடலுக்குப் பசியெடுக்கிறது' என்று சொல். வெளியுலகில் ஒருவர் பசியுடன் இருப்பதைப் பார்த்து வருந்துவதுபோல் நீ வெளியில் இருந்து (சாட்சிபோல் இருந்து) உன் வயிற்றைக் 'கவனிக்க வேண்டும். 'வயிற்றுக்குப் பசி நீங்கிவிட்டது' என்று சொல். 'உன் பசி தணிந்தது' என்று சொல்லாதே. இவ்வாறே உடலுக்குத் தாகமெடுத்தது; உடல் தண்ணீர் குடித்தது; உடலுக்குத் தூக்கம் வந்தது; உடல் ஓய்வெடுக்கிறது என்றெல்லாம் கண்ணோட்டத்தை மாற்றிக்கொள்ள வேண்டும். நிஜமான நீ இவற்றில் ஒட்டுவதில்லை; தனியாகப் பிரிந்து உள்ளாய்; உடலிலிருந்து தொலைவில் உள்ளாய்; உடலைக் கடந்து உள்ளாய்.

ஒருவன் தனது வீட்டைப் பற்றி அலட்டிக் கொள்வதுபோல் நீ உடல் குறித்துச் செயல்படுகிறாய். நீ வசிக்கும் வீட்டைத் தினமும் பெருக்கி சுத்தப்படுத்துகிறாய்; தரை மெழுகுகிறாய்; தீபாவளி சமயம் வெள்ளையடிக்கிறாய்; வர்ணம் பூசுகிறாய்; படுதாக்களைத் துவைத்து மாற்றுகிறாய்; மேசை-நாற்காலிகளால் வீட்டை நிரப்புகிறாய். ஆனால் 'நான்தான் வீடு' என்றா சொல்கிறாய். 'நான் இந்த வீட்டில் வசிக்கிறேன் நான் இதை விலைக்கு வாங்கியுள்ளேன்' என்றெல்லாம் சொல்லலாம். 'நான்தான் வீடு' என்று சொல்வாயானால், வீடு எரிந்தால் 'நான் எரிகிறேன்' என்பாயா? வீடு இடிந்துவிழுந்தால், 'நான் செத்தேன்' என்பாயா?

நீ வேறு, வீடு வேறு என்று உனக்குத் தெரியும். அப்போது நீ வீட்டை சாட்சிபோல் பார்க்கிறாய். இதேபோல் நீ ஆன்மிகத்தில் பக்குவப்பட்டு ஞானியாகும்போது, நீ (ஆத்மா) வேறு, ஆத்மா வசிக்கும் தேகம் வேறு என்னும் முடிவிற்கு வருவாய். அப்போது உன்னை சந்நியாசி எனலாம். ஆனால் பெரும்பாலோர் வீடே தாங்கள்தாம் என்பதுபோல் நடந்துகொள்கிறார்கள். வீட்டுச் சுவரில் சிறிதாக பென்சில் கீறலைக்கூட சகிக்கமாட்டார்கள். அவர்கள் வீட்டோடு ஒட்டியிருப்பதால் கிருஹஸ்தர் (கிருஹம்+ நிலைபெறுதல்) என்று அவர்களை அழைப்பது பொருத்தம்தான்.

தன்னையும் வீட்டையும் பிரித்துப் பார்ப்பதுபோல் ஆத்மாவையும் அதன் வீடான உடலையும் பிரித்துப் பார்க்கக்கூடியவன் எந்த வேலை செய்தாலும் அவன் கர்த்தா இல்லை. மனம் இடும் வேலைகளை உடல் செய்கிறது. உள்மனிதன் மனம், உடல் இரண்டிற்கும் அப்பால் நின்று வேலைகள் நடப்பதைப் பார்க்கிறான்.

'ஜீவன்முக்தனும் சராசரி மனிதனைப் போலவே கடமைகளைச் செய்கிறான். அதாவது அவனும் சொல்வது ஒன்று, செய்வது வேறொன்றாக இருக்கிறான். ஆனாலும் அவன் மூடனில்லை. அந்த ஞானி உலகில் வாழ்ந்தும் சுகமாகத் திகழ்கிறான்.' **(சுலோகம் 202)**

**இ**ந்த சுலோகம் விசித்திரமானது, ஆகவே கடினமானது. சாதாரண மனிதனின் அடையாளம் என்ன? அவன் சொல்வது

ஒன்று, செய்வது ஒன்று என்று ஏமாற்றுப் பேர்வழியாக உள்ளான். இதுவரை சரி. ஆனால் அஷ்டாவக்ரரோ ஞானியும் இந்த விஷயத்தில் சாதாரண மனிதனைப் போலத்தான் என்று கூறித் திடுக்கிடவைக்கிறார். ஆனால் ஞானிக்கும் சராசரி மனிதனுக்கும் இடையில் பெரிய வேறுபாடு. அடிப்படை அளவிலான வேறுபாடு உள்ளது.

அறிவிலி சொல்வது ஒன்று, செய்வது வேறொன்று. அவன் செய்வதைத்தான் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். அதுதான் உண்மையுமாகும். அவன் என்ன சொல்கிறான் என்பதைவிட எதைச் செய்து முடிக்கிறான் என்பதையே கவனிக்க வேண்டும்.

ஞானியின் நிலை தலைகீழாக உள்ளது. ஞானி சொல்வது முழுமையான உண்மை. அவன் செய்வது உண்மையில்லை! மேலோட்டமாகப் பார்த்தால், பசியெடுத்தால் ஞானியும் சாப்பிடுகிறான். அவன் தங்கியுள்ள இடத்தில் தீப்பிடித்தால் அவனும் வீட்டை விட்டு வெளியேறிவிடுவான்.

ஞானி சொல்வதும் செய்வதும்கூட வெவ்வேறாகத்தான் உள்ளது. அவனிடம் கேட்டால், 'நான் ஏன் எரிவேன்?' என்று கேட்பான். 'நைநம் சிந்தந்தி ஸஸ்த்ராணி நைநம் தஹதி பாவக:' என்றுரைப்பான்.* அதாவது, ஆயுதங்களோ, நெருப்போ ஒன்றும் செய்யாது என்று பொருள். அப்படியானால், வீடு தீப்பிடித்தால் அவன் தப்பித்து ஓடுவது எந்த வகையில் சேரும்? அவனை மோசடிப் பேர்வழியென்று நினைத்துவிடாதே. அவன் சொல்வதெல்லாம் உண்மைதான். அவனது செய்கையில் கவனம் செலுத்தாதே. 'என்னை யார் எரிக்க முடியும்?' என்றல்லவா அவன் சவால் விடுகிறான். அது உண்மைதான். அதாவது, அவனது நோக்கில், எரிவது அவனில்லையாம். அவன் தங்கியிருக்கும் வீடாகிய உடல்தான் எரிய முடியும். ஞானி சொல்வது உண்மை. ஆனால் அன்றாடச் செயல்களைத் தேகத்தின் பொறுப்பில் தள்ளிவிட்டு விலகிநிற்கிறான். ஆகவே அவனை ஞானத்தில்

* ஸ்ரீமத் பகவத்கீதை 2.23 ஆயுதங்கள் இவ்வான்மாவை சிதைக்கமாட்டா. தீ இதை எரிக்காது. ஜான்சிராணி லக்ஷ்மிபாய் இந்த சுலோகத்தைக் கூறியபடியே போர்க்களத்தில் உயிர்நீத்தார்.

வெல்கிறான்; கர்மத்தில் தோற்கிறான் எனலாம். அக்ஞானி கருமத்தில் வெல்கிறான்; ஞானத்தில் தோற்கிறான்.

'எந்த நிதானமான மனிதன் விதம் விதமான எண்ணங் களால் அலைக் கழிக்கப்பட்டு மனம் களைத்துப்போய் கடைசியில் சாந்தமாகிறானோ, அவன் கற்பனை செய்வதில்லை, அறிவதில்லை, கேட்பதில்லை, பார்ப்பதில்லை,' **(சுலோகம் 203)**

**அ**வசரப்படக்கூடாது. அவசரம் ஆபத்தானது. அது நஷ்டமேற்படுத்தும். பொறுமை இழக்காதே. பலவிதச் சிந்தனைகளில் மனம் பாய்கிறதெனில் அப்படியே விட்டுவிடு. ஒரு கட்டத்தில் காம எண்ணங்கள்கூட பின்வாங்கிவிடும். உலகத்தில் உனக்கு ஈடுபாடு குறையவில்லையெனில் அப்படியே விடு. கடவுள் உனக்காக, நீயாக வருவதற்காக, எத்தனை காலம் வேண்டுமானாலும் காத்திருப்பார். பயப்பட வேண்டாம். உலகத்தைத் திகட்டிப் போகும்வரை அனுபவித்துவிடு. அப்படி யில்லாமல் நீ உலகைவிட்டு ஓடி, சந்நியாசத்துக்குள் ஒளிந்தால், மனம் உலகத்தை நோக்கியே ஓடும். இதனால் அமைதி கிடைக்காது.

உலக விஷயங்களில் மனம் இன்னமும் ஈடுபட்டிருந்தால், மனம் சலன நிலையிலேயே இருக்கும். அதை மூட்டை கட்டி மூலையில் போட்டால், கட்டாயப்படுத்தப்பட்ட மனம் மீண்டும் ஓடிவரும். கனவுகள் தோன்றும். கற்பனை, வலைவிரிக்கும். மோகம் மீண்டும் பிறக்கும். முன்பிருந்த நடத்தைக் கோணல்கள் மீண்டும் திரும்பும். வாசற்கதவை நீ மூடிவிட்டுப் போனால் பின்புறவாசல் வழியாக அவை உள்ளே நுழையும். பிறகு பழைய கதைதான்.

அஷ்டாவக்ரர் வாழ்க்கையை நன்றாக அறிந்துகொள்ளச் சொல்கிறார். திகட்டிக் களைத்துப் போ. நீ உலக வாழ்க்கையில் ஆழ்ந்துபோனாலும் ஆத்மா பாதிப்படைவதில்லை. உன் உதடும், உன் வாயும், அதாவது, உன் உடல் விரும்பியதை அனுபவித்து அதெல்லாம் கசப்பில் முடிவதாக நீயே உணர்ந்து உலக வாழ்க்கையை விட்டு வெளியேறினால் நன்மை. யாரோ உபதேசிக்கிறார்கள் என்பதற்காக உலகைவிட்டு ஓடாதே.

எவராவது மகான் உலகம் சாரமற்றது என்று எச்சரிக்கக் கூடும். மகான் நிலையிலுள்ளவர் சொல்வது வலுவானதாகத்தான் இருக்கும். அவரது அறிவிப்பின் பின்னணியில் அவரது முழுசக்தி, உயிர் சக்தி, அனுபவ ஞானம் நிறைந்திருக்கும். அவர் சொல்வது கூரான அம்புபோல் உன்னை நோக்கிப் பாயலாம். ஆனாலும் எந்த மகானின் பேச்சை மட்டும் கேட்டு நீ துறவறம் மேற்கொள்ளாதே. பிறகு அலைவாய்; வருத்தப்படுவாய்; மீண்டும் உலக வாழ்க்கையை நாடுவாய். மகான் சொல்வதைக் கவனி. ஆனால் உலக வாழ்க்கை திகட்டிய பிறகுதான் உன் துறவறம் வெற்றி பெறும்.

அத்தகைய துறவறத்தில் சாந்தம் இருக்கும்; சலனம் இருக்காது. உலக நாட்டம் உள்ளவனால் அமைதியாக இருக்க முடிவதில்லை. அவன் கோயிலுக்குப் போனாலும் அவன் மனம் கடை வியாபாரத்தைப் பற்றிய நினைவில் இருக்கும். அவன் பூஜை செய்தாலும், பிரார்த்தனை செய்தாலும், மனத்தில் வேறு விஷயங்கள் பற்றிய அலைகள் வீசிய வண்ணம் இருக்கும். உதடு 'ராமன்' பெயரை உச்சரிக்கும். மனம் அதைக் 'காமன்' என்று மாற்றி எதிரொலிக்கும். புறச்செயல்கள் பைசா பெறாதவை. உள்ளத்தில் உள்ளதுதான் உண்மை.

உலகச் சிந்தனைகளில் ஓடி-ஓடி களைத்த பிறகுதான் ஓய்வும் அமைதியும் கிடைக்கிறது. வாழ்க்கையை அனுபவித்துத் திகட்டியபின் உன் சொந்த வீட்டிற்குத் திரும்பி அமைதியாகிறாய். வியாபாரத்தில், தொழிலில், பணத்தில், பதவியில் என்று எங்கெல்லாமோ மூலை முடுக்கிலும் அமைதியைத் தேடிப் பார்த்தாய். அது கிடைக்கவில்லை. எங்கும் எதிலும் தோல்வி யடைந்து திரும்பிவந்தாய். இந்தத் தோல்விக்குப் பிறகு தெய்வமே துணை என்று நீ முடிவு செய்தபின் உன் பூஜை, உன் பிரார்த்தனை உண்மையானதாகிறது.

தோல்வி அடையும் வரையிலும் பாதிப் பயணத்தில் திரும்பிவராதே. ஏனெனில் மனம் ஒத்துழைக்காமல் வேறு பாதையில் செல்லும். மனம் பாதி அளவே பக்குவப்பட்ட நிலையில் தியானம், சமாதி, ஆன்மிக நாட்டம் ஆகியவை

நன்மைக்குப் பதிலாக சங்கடமே விளைவிக்கும். கனியும்வரை காத்திராமல் காயை உண்டால் சுவை இருக்காது.

காய் பழுத்ததும் தானாகவே பழம் கீழே விழுகிறது. அதில் ஒரு சிறப்பு உள்ளது. பழம் எப்பொழுது விழுந்தது என்பது மரத்திற்குத் தெரிவதில்லை. மரத்திலிருந்து எப்போது, எப்படிப் பிரிந்தோம் என்று பழம் உணர்வதில்லை. மரத்திற்கோ, பழத்திற்கோ காயம் விளைவதில்லை. அமைதியாகப் பிரிவு உண்டாகிறது. இழு-பறியின்றிப் பிரிவு உண்டாகிறது. சகஜமாக, இயற்கையாகப் பிரிவு உண்டாகிறது.

பழு-பழுத்தபின் விழு.

ஆகவே உலகத்திலிருந்து ஓடவே ஓடாதே என்று நான் அழுத்தமாகச் சொல்கிறேன். ஓடுவதில் ஒரு கவர்ச்சி இருக்கத் தான் செய்கிறது. ஏனெனில் உலகத்தில் துன்பம் மிகுதியாக உள்ளது என்பது உண்மை. அதே சமயம் இன்பமும் ஓரளவு இருக்கிறது. துன்பம் காரணமாக நீ ஓடிப்போனால், குடிசை அமைத்துத் தனிமை வாழ்க்கை நடத்தினால், சிறிது காலத்தில் நீ விட்டுச்சென்ற இன்பங்களின் நினைவு எழும். ஏனெனில் நீ அவற்றைவிட்டு ஓடிவரவில்லை. துன்பங்களிலிருந்து தப்புவதே உனது நோக்கமாக இருந்தது.

கடவுள் முதலில் ஆணைப் படைத்தார். அவன் தனிமையில் வாடினான். தனக்கொரு துணை வேண்டும் என்று கெஞ்சினான். அவன் மீது இரக்கப்பட்டுக் கடவுள் பெண்ணைப் படைத்தார். ஆணைப் படைக்கும்போதே இயற்கையின் பெரும்பான்மை அம்சங்களை அவர் செலவழித்துவிட்டார். ஆகவே பெண்ணைப் படைக்க ஆங்காங்கிருந்து சில அம்சங்களைச் சேகரித்தார். சந்திரனிலிருந்து சிறிது ஒளி, சூரியனிலிருந்து சிறிது பிரகாசம், குயிலிலிருந்து சிறிது ஒலி, சிங்கத்திலிருந்து சிறிது வேகம் என்றெல்லாம் திரட்டி, பெண்ணை உருவாக்கி, ஆணிடம் ஒப்படைத்தார்.

சிறிது காலம் ஆண் மகிழ்ச்சியாக இருந்தான். பிறகு பெண் ஒரு பிரச்சினையாகிவிட்டாள். சில சமயம் அவள் குயில்போல் பேசினாள், பாடினாள். சில சமயம் சிங்கம்போல் உறுமினாள்,

கர்ஜித்தாள்! சில சமயம் அவள் நிலவைப் போல் குளிர்ச்சி தந்தாள். வேறு சில சமயம் சூரியன்போல் சுட்டெரித்தாள். மூன்றே நாட்கள் ஆணுக்குப் போதும்-போதும் என்றாகிவிட்டது. இதைவிட தனிமையே மேல் என்று அவன் நினைத்தான். இது மனித சுபாவம். பெண் அல்லது ஆணுடன் வாழ்ந்து பார்த்தால்தான் தனிமையே இனிமை என்று தெரியும். இல்லறத்தானுக்குத்தான் பிரம்மசரியத்தின் ஆனந்தம் புரியும். தவிர்த்ததை விரும்புவதும், விரும்பியதைத் தவிர்க்க முயல்வதும் மனிதனின் சுபாவம்.

அந்த மனிதன் கடவுளிடம் ஓடிவந்தான். "தெய்வமே, என்னை மன்னித்துவிடுங்கள். தப்பு செய்துவிட்டேன். நான் தவறான வரம் கேட்டுவிட்டேன். நீங்கள் இந்தப் பெண்ணைத் திருப்பி எடுத்துச்செல்லுங்கள். எனக்கு இவள் வேண்டாம். இவள் மிகவும் தொல்லைபிடித்தவள். இவள் இங்கு நீடித்தால் எனக்குப் பைத்தியம்தான் பிடிக்கும். இவள் நம்பத் தகுந்தவன் இல்லை. நிமிஷத்துக்கு நிமிஷம் மாறிவிடுகிறாள். ஒருமுறை குயிலாகப் பாடுகிறாள்; அடுத்த தடவை கழுதையாகக் கத்துகிறாள்," என்று புகார் செய்தான்.

"கவலைப்படாதே. எனது பெண் படைப்பை வாபஸ் வாங்கிக் கொள்கிறேன்," என்று கடவுள் ஆறுதல் கூறினார்.

பெண்ணைக் கடவுளிடம் சேர்ப்பித்துவிட்டு ஆண் வீடு திரும்பினான். 'அப்பாடா!' என்று படுக்கையில் விழுந்தான். பெண்ணின் நினைவு எழுந்தது! அவள் காதில் பாடுவதுபோல் தோன்றியது. அவள் தன் கழுத்தில் கைகோத்து ஊஞ்சாலாடியதும் அவளின் கண்களின் மின்னலும் ஞாபகத்தில் எழுந்தது.

மூன்று நாள்களுக்குமேல் அவனால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. மீண்டும் ஓடினான் கடவுளிடம், "தெய்வமே, என்னை மன்னியுங்கள். அவளை என்னிடம் திருப்பி அனுப்பி விடுங்கள். அவள் அழகி. நன்றாகப் பாடுபடுகிறாள். நான் வெளியில் உழைத்துக் களைத்து வீடு திரும்பும்போது, அவள் வாசற்படியில் நின்று வரவேற்பாள். உண்ண-பருக தயார் செய்து வைத்திருப்பாள். அவளில்லாமல் வீடு பாழடைந்ததுபோல் பயமுறுத்துகிறது," என்றான்.

"சரி, உன்னிஷ்டம். அவளை அழைத்துச் செல்," என்றார் கடவுள். அவளை அழைத்துச் சென்றவன் மூன்று நாள் கழித்து மீண்டும் கடவுளிடம் வந்தான். "அந்தப் பெண் செய்யும் சித்திரவதையை என்னால் தாங்க முடியவில்லை. அவளைத் திருப்பி அழைத்துக் கொள்ளுங்கள்," என்ற புலம்பினான்.

"வாயை மூடு. உன்னால் பெண்ணோடு வாழவும் முடிய வில்லை. அவள் இல்லாமலும் உன்னால் வாழ முடியவில்லை. இனி நான் தலையிடமாட்டேன். நீ எப்படியாவது அவளைச் சமாளித்துக்கொள், பொறுத்துக்கொள்," என்று கூறி கடவுள் கைகழுவி விட்டார்.

அன்றிலிருந்து ஆணும் பெண்ணும் எப்படியோ ஒருவரை ஒருவர் சமாளித்துக்கொண்டும், சகித்துக்கொண்டும், சண்டையும் சமாதானமுமாக வாழ்க்கை வண்டியை ஓட்டிவருகின்றனர்.

நீ கடைத்தெருவில் இருப்பவனானால் ஆசிரம வாழ்க்கை உன்னைக் கவர்ந்திருக்கும். நீ ஆசிரமத்தில் தனிமையில் வாழ்பவனாயின் கடைத்தெருவின் கலகலப்பிற்காக ஏங்குவாய். மும்பைவாசி காஷ்மீரின் குளிர்ச்சிக்கும், காஷ்மீரில் வசிப்பவன் மும்பையின் பாதுகாப்பான சூழ்நிலைக்குமாக ஏங்குவார்கள்.

உலகில் இன்பமும் துன்பமும் கலந்தே உள்ளது. இங்கு சந்திரனும் உண்டு; சூரியனும் உண்டு. மயிலின் நடனமும் உண்டு; சிங்கத்தின் கர்ஜனையும் உண்டு. நீ உலக வாழ்க்கை நடத்தும் போது அது துன்பம் நிறைந்திருப்பதையே உணர்வாய். அதை விட்டு விலகி நீ வாழும்போது, (உலகின் துன்பங்களிலிருந்து தப்பிவிட்டபடியால்), உலகில் நீ அனுபவித்த இன்பங்களின் நினைவே எழும்.

ஆகவே நான் என்னிடம் சந்நியாசம் பெறுபவனை, 'ஓடாதே. இருக்கும் இடத்திலேயே இரு. பழு. பக்குவப்படு. பழுத்து சுயமாக, சுலபமாக விழு. விழுதல் தானாக நிகழட்டும். நீ அவசரப்படாதே.

எதுவும் இயற்கையாக அமைய வேண்டும்-சமாதிநிலையும் தான்.

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! அறிவு உதயமானால் பிறகு எதுவும் செய்ய வேண்டியதில்லை என்று கூறுகிறீர்கள். நீங்கள் குறிப்பிடும் அறிவு பொதுவாக மக்கள் குறிப்பிடும் அறிவி லிருந்து வேறுபட்டதா? உண்மையான அறிவு எதுவென்பதைத் தெளிவுபடுத்துங்கள்.**

**சா**தாரண அறிவு அறிவே அன்று. அது ஏமாற்று வேலை. அது அடிப்படையில் முட்டாளானவன் பயன்படுத்தும் கருவி. உன்னைச் சுற்றியுள்ள அனைத்தையும் பற்றிய தகவல்களின் திரட்டே அது. அத்தகவல்கள் நீ ஏற்கெனவே அறிந்தவைதாம். உன் ஒருதரப்பான முடிவுகள், உன் கருத்துகள், உன் கொள்கைகள், உன் நம்பிக்கைகள், உன் சாஸ்திரங்கள், உன் சம்பிரதாயம் அல்லது மதப்பிரிவு முதலியவை கலந்து உருவாவதுதான் உன் புத்தி. இதுவே பொதுவில் மனிதர்களின் அறிவு.

அறிவு கடந்த காலத்துடன் சம்பந்தப்பட்டுள்ளது. இதுவரையிலும் கேட்டவை, அறிந்தவை, புரிந்துகொண்டவை, அனுபவித்தவை என்று கடந்த காலத் தகவல்கள் சேர்ந்து ஒருவனது அறிவு உருவாகிறது.

நேற்றுவரை உனக்குத் தெரிந்தவை சேர்ந்தது சாதாரணமான அறிவு. அறிவு என்று நான் குறிப்பிடுவது வேறு வகையானது. நான் சொல்லும் அறிவு கடந்த காலத்துடன் தொடர்புடையதன்று. அது கடந்த காலத்தை நகர்த்தித் தள்ளிவைக்கிறது. அது எதையும், கடந்த காலத்தின் மூலம் பார்ப்பதில்லை; சுற்றி

வளைத்துப் பார்ப்பதில்லை. நான் கூறும் அறிவு எதையும் நேருக்கு நேர் பார்க்கிறது. நடுவில் ஊடகம் எதுவும் இருப்பதில்லை.

நீ பிறப்பில் ஹிந்துவாக இருந்து, என் உரையை ஹிந்து உணர்வுடன் கேட்டாயானால் நீ பெறுவது சாமான்ய அறிவு, கீதையின் உபதேசம் உனக்குள் ஒலிப்பது சாமான்ய அறிவு. கீதை முடிந்து நீ ஹிந்துவிலிருந்து மனிதனாகு. முற்றிலும் காலியாகு. பரிசுத்தமான கண்ணாடியாகு. அதில் எண்ணம் என்ற பெயரில் ஒரு கீறல்கூட இருக்கக்கூடாது. அதன்மீது கடந்தகால சாம்பல் துளி படிந்திருக்கக்கூடாது. முகத்திரை ஏதும் அணியாமல் என்னை நேராகப் பார்த்து நான் சொல்வதைச் செவிகொடுத்துக் கேட்டால் நீ பெறுவது உயர் அறிவு.

இந்த உயர் அறிவின் வேறு பெயர்கள் ப்ரக்ஞா, விவேகம். இந்த அறிவு உருமாற்றத்தைக் கொண்டுவருகிறது. ஒரு விஷயத்தை சாதாரண அறிவு கொண்டு கேட்டால் நீ அதை ஏற்பாய் அல்லது மறுப்பாய். சாதாரண அறிவை அகற்றி, மூளையை வெற்றிடமாக்கி ஒரு விஷயத்தைக் கேட்டால் நீ உருமாற்றம் அடைவாய். இந்த சூழ்நிலையில் சம்மதம், மறுப்பு இரண்டிற்கும் இடமில்லை.

சத்தியத்தை ஏற்பதா, மறுப்பதா என்னும் கேள்விக்கே இடமில்லை. சத்தியத்தை ஏற்பது என்பதற்குப் பொருள் அந்த விஷயம் உனக்கு ஏற்கெனவே தெரியும் என்பதுதான். அதைக் கேள்விப்பட்டதும் சரி என்று ஒப்புக்கொள்கிறாய். ரோஜாப் பூவைப் பார்த்ததும் அதன் பெயரைச் சரியாகச் சொல்லுவாய். ஏனெனில் அது உனக்குத் தெரிந்த உண்மை.

இப்படி உண்மை தெரிந்துள்ளதால், இன்னொருவன் அதை அரளிப்பூ என்று கூறினால் நீ அதை மறுப்பாய். பார்த்தவுடன் கூறிவிடுகிறாய். ஆனால் ஆழமான விஷயங்களில் நீ அவசரப்பட்டு எது உண்மையென்று முடிவுகட்டக் கூடாது. எது சரி-எது தவறு என்று முடிவெடுப்பதில் நாம் அவசரப்படுவதால் தான் வழுக்கிவிடுகிறோம். சத்தியத்தைத் தேடும் விஷயத்தில் பொறுமை வேண்டும். படி, கேள், ஆனால் ஏற்க-மறுக்க அவசரப்

படாதே. ஆகவே நான் சொற்பொழிவில் சொல்பவற்றையும் சட்டெனத் தலையசைத்து ஏற்க வேண்டாம். ஏற்பதும் மறுப்பதும் அறிவின் வேலை. எனவே புத்தியைப் புறந்தள்ளி வைத்துவிட்டு, காதில் விழும் உபதேசங்களை அப்படியே சரியென ஏற்க வேண்டாம். படித்தபின், கேட்டபின் புத்திதான் நிதானமாக ஆராய்ந்து முடிவிற்கு வரவேண்டும்.

உலக நிகழ்ச்சிகள் பல நிரந்தரமான உண்மைகள். விடியலில் பறவைகள் எழுப்பும் ஒலி, அருவியின் ஓசை, காற்று வீசுவதன் சரசரப்பு, மேகங்களின் இடி முழக்கம் போன்றவை உண்மை அல்லது பொய் என்று நீ முடிவுசெய்ய வேண்டிய தேவை எழுவதில்லை. ஆனால் இந்த உண்மைகளைக்கூட நாம் காது கொடுத்துக் கேட்பதில்லை. நமக்கு வசதியான உண்மைகளை மட்டும் ஏற்கிறோம்.

**மு**ல்லா நஸ்ருத்தீனின் வீடு குப்பைக் கிடங்காகக் காட்சியளித்தது. ஒரு பொருள் அவரது வீட்டிற்குள் நுழைந்து விட்டால் பிறகு வெளியே வராது. பழைய செய்தித்தாள்கள், எல்லா வகையான குப்பைகள் அப்படியே கிடக்கும். ஒருவர் அவரிடம், "இவற்றையெல்லாம் ஏன் காப்பாற்றி வருகிறாய்?" என்று கேட்டார்.

"என் குருதான் இதற்கெல்லாம் காரணம்," என்றார் நஸ்ருத்தீன்.

கேள்வி கேட்டவருக்குப் புரியவில்லை. நஸ்ருத்தீன் தொடர்ந்தார்:

"நான் என் குருவை எனக்கொரு தீட்சை மந்திரம் அருளுமாறு நீண்ட காலமாகக் கேட்டு வந்தேன். சில மாதங்கள் முன்பு நாங்கள் ஆற்றங்கரையோரமாக உலாவிக் கொண்டிருந்தோம். அப்போதும் நான் தீட்சை மந்திரம் கேட்டேன். அதேசமயம் அவர் கால் வழுக்கி ஆற்றில் விழுந்துவிட்டார். உடனே அவர் 'காப்பாற்று, காப்பாற்று' என்று கத்தினார். அதுதான் தீட்சை மந்திரம் என்று எடுத்துக்கொண்டு, அவரை வணங்கி, நட்டாற்றிலேயே அவரை விட்டுவிட்டு வீடு திரும்பினேன்.

அப்போதிலிருந்து என்னிடம் எது வந்துசேர்ந்தாலும் தூக்கி எறியாமல் காப்பாற்றி வருகிறேன்."

நீ எதைக் கேட்க விரும்புகிறாயோ அதுதான் உன் காதில் விழும். கேட்டதற்கு நீ என்ன அர்த்தம் எடுத்துக்கொள்ள விரும்புகிறாயோ அப்படித்தான் அர்த்தம் கொள்வாய். பிறகு அதன்படி நடந்துகொள்வாய்.

**கவிஞருக்குக் கொட்டாவி வந்தது.**

**'ஹேமா' என்றவர் களைத்துக் கூவ,**
**அதைக் கேட்டு வெடித்தாள் மனைவி**

**'மூணு குழந்தைகளுக்கு அப்பாவாயிருந்து**
**ஹேமா என்று யாரைக் கூப்பிடுகிறீர்?'***

கவிஞர் சொன்னது 'ஏ தாயே'. மனைவிக்கு அவர் மீது சந்தேகம். அவள் இரண்டு சொற்களையும் சேர்த்து 'ஹேமா' என்று கற்பனை செய்கிறாள். நாம் காதால் கேட்பது நமது விருப்பத்துடன் சம்பந்தப்படுவதால், காதால் கேட்பது பொய் என்று பழமொழி உருவானது. நம் விருப்பப்படி சொற்களைச் சிதைத்து, விரும்பிய அர்த்தம் எடுத்துக் கொள்வதால், மூல உண்மை மறைந்து விடுகிறது.

ஒருவர் ஒன்று சொன்னால் உன் சிந்தனை நடுவில் குறுக்கிட்டு அதற்கு வேறு முலாம் பூசிவிடுகிறது. இதனால் சொல்லப்பட்ட விஷயம் நிறம் மாறிப்போகிறது. ஒருவர் சொன்னதும் உன்னை, வந்தடைவதும் வித்தியாசப்படுகிறது. மூல விஷயம் உன்னை அடைவதற்குள் சேதமாகிவிடுகிறது. இதெல்லாம் எல்லோரும் அடைந்துள்ள சாதாரண அறிவின் விளைவுகள்.

உயர் அறிவு தியானத்தின் மூலம் கிடைக்கிறது. எண்ணச் சலனங்கள் அற்ற சூழ்நிலையில் உயர் அறிவு இயங்குகிறது. அது தர்க்கத்தை ஆதாரமாகக் கொண்டிருப்பதில்லை. சாந்த மனநிலையே அதன் அடிப்படை.

---

* இதேபோல், 'இருமலா' என்றால் 'நிர்மலா' என்று கேட்பதாக அப்பெயருடைய மனைவி பிறந்தகம் சென்ற நிலையில் கவிஞர் மேத்தா கூறுவார்.

சாதாரண அறிவு வாத விவாதங்களுக்கே இட்டுச்செல்லும். 'நீ சொல்வது சரியா? நான் சொல்வது சரியா? என் சாஸ்திரம் சரியா? உன் சாஸ்திரம் சரியா? யார் சொல்வதை யார் ஏற்பது அல்லது மறுப்பது? எனது தராசு சரியா? உனது தராசு சரியா?'- என்றெல்லாம் சாதாரண புத்தி விவாதங்களைத் தூண்டும்.

ஆனால் விவாதத்தின் மூலம் பெறப்படும் முடிவு சரியாக இருக்குமென்பது நிச்சயமில்லை. ஏனெனில் இந்த முடிவு வாதம் செய்பவரின் பேச்சுத் திறமையைப் பொறுத்து அமைகிறது.

முகம் பார்க்கும் கண்ணாடி போன்ற நிலையில் இருக்க முடிந்தவனால்தான் உண்மையில் உபதேசத்தைக் கேட்க முடியும். கண்ணாடி அப்படியே உருவத்தை உள்வாங்குவதைப்போல் அவனால் உபதேசத்தை கிரகிக்க முடியும். அத்தகையவே சீடன் எனப்படுவதற்குப் பொருத்தமானவன். அவன் தான் ஏற்கெனவே பெற்றுள்ள சாமானிய அறிவின் துணைகொண்டு உபதேசம் கேட்பதில்லை. தனக்கு ஒன்றுமே தெரியாது என்றும், எழுதப்படாத வெற்றுக் காகிதமாகத் தன்னை நினைத்தும், உபதேசம் கேட்பவன் பலனடைவான். அவன் உபதேசத்தை (பிம்பத்தை) ஏற்பதிலேயே கவனமாக இருப்பான். அவன் எதிர்வாதம் செய்யமாட்டான்.

ஏற்கெனவே தன்னை அறிஞனாக நினைப்பவன் பிறர் பேச்சைக் கவனிக்கமாட்டான். அவன் போடும் சத்தமே பெரிதாக இருக்கும்போது பிறர் கருத்து அவன் காதில் எப்படி விழும்? அப்படி பிறர் பேச்சை அவன் கவனித்தாலும் அதில் அவன் குறை கண்டுபிடித்து விமர்சனம் செய்வான். அவன் எப்பொழுதாவது பிறர் கருத்தை ஏற்றாலும், அந்த ஏற்பு மனத்தளவில் இராது. அதை வெளியுலக நிர்ப்பந்தங்கள் காரணமாக அவன் ஏற்பவனாக இருப்பான்.

நான் சொல்லும் ஏதாவது கருத்து பகவத்கீதையிலும் தற்செயலாக இருந்தால் ஓர் இந்து அதை ஏற்பான். ஏனெனில் அவனுக்கு கீதை ஏற்புடைய நூல். கீதை சொல்வது சத்தியம் என அவன் நினைப்பதால் நான் கூறிய கீதைச் சாயலுடைய கருத்தும் உண்மைதான் என அவன் ஏற்பான். ஆனால் என் கருத்துகளை எதனுடனும் ஒப்பிடாமல் கேட்கின்ற சீடன் வேறுவிதமாக

நடந்துகொள்வான். என் கருத்துகள் அவன் காதில் விழும் சமயம் அவை குறித்து அவன் ஆலோசனையில் ஈடுபடமாட்டான். அவன் கருத்துகளை (முகம் பார்க்கும் கண்ணாடிபோல்) உள்வாங்கிக் கொள்வது மட்டுமே செய்கிறான். ஏற்பதா, மறுப்பதா என்று அந்த சமயம் அவன் தன்னை அலட்டிக் கொள்வதில்லை. உடனடியாக ஒரு முடிவிற்கு வருவதில்லை. ஒரு விஷயம் உண்மையென்றால், அதை நீ அமைதியாகக் கேட்டால், அது அப்படியே உன் சிந்தனையில் கலந்துவிடும். முன்கூட்டியே அபிப்பிராயம் ஏற்படுத்திக்கொள்ளாமல், பேசுபவர் யார் என்று பாரபட்சம் செய்யாமல், உபதேசம் கேட்டால், அந்தக் கருத்துகள் நம் ஆளுமையில் கலந்துவிடும்.

பிறகு உனக்குள் அந்த சத்தியம் ஒலிக்கும்போது அது எனது சத்தியமாக இராது. அது உனது சத்தியம். அது வேறு எவருடையதாகவும் ஆகாது. உணவைப் போலவே சத்தியமும் உன்னுடன் பிரிக்க முடியாமல் கலந்துவிடும். அதேசமயம் உள்ளே செல்லும் அசத்யம் அவ்வாறு உன்னுடன் கலக்க முடியாமல் வெளியேறிவிடும்.

சாதாரண அறிவு கூர்மையாக அமைவதில் சாரம் இல்லை. நீ முன்வைக்கும் வாதங்களில் கூர்மையிருக்கலாம். இதன் மூலம் உன் வாதத் திறமை வெளிப்படும். உன்னை அறிஞன் என்று காட்டிக்கொள்ள சந்தர்ப்பம் கிடைக்கும். உன் வாதத் திறமை கொண்டு பிறருடன் மோதுவாய் (சாஸ்திரார்த்தம் செய்வாய்); பிறரை அமுக்குவாய்; வாய்மூடச் செய்வாய். ஆனால் உனக்குக் கிடைக்கும் பலன் எதுவுமில்லை.

சத்தத்தில் சத்தியம் கிடையாது. சாந்தம்தான் சத்தியத்தின் பிறப்பிடம், இருப்பிடம்.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! தங்களிடம் வந்துசேர்ந்த பிறகு என் ஆளுமையில் மிகுந்த மாற்றம் ஏற்பட்டுவிட்டதாக ஒரு சமயம் தோன்று கிறது. இன்னொரு சமயம் உங்கள்**

**தொடர்பால் நான் சிறிதும் மாறவில்லை போலும் தோன்றுகிறது. ஏன் இந்த முரண்பாடு?**

**இ**து இயற்கையே. இப்படித்தான் ஆகும். இப்படித்தான் ஒவ்வொருவருக்கும் தோன்றும். நான் சீடர்களிடம் உண்டாக்க விரும்பும் மாற்றம் விசித்திரமானது. அடிப்படையில் அது மாற்றமில்லை. நீ உண்மையில் எப்படி உள்ளாயோ அதை உனக்கு நினைவூட்ட மட்டுமே நான் முயலுகிறேன். அப்படி உன் நிஜ சொரூபத்தை நீ அடைவதை மாற்றம் என்று தவறாக நினைத்துவிட்டாய். இங்கு நான் உனக்கு ஒப்பனை செய்து புதிய உருவம் எதுவும் தரவில்லை. நீ இதுவரை உனது ஆளுமை என்று நினைத்துவந்தது. தவறான கண்ணோட்டம். உன்னை நிஜமான உன் ஆளுமையிடம் மீட்டுக் கொண்டுவருவதற்கான உபாயமே இங்கு செய்யப்படுகிறது. உன்னிடம் ஏற்கெனவே உள்ளதைத்தான் நான் மீண்டும் உனக்கு எடுத்துத் தருகிறேன்.

ஆகவே சில சமயம் புரட்சிகரமான மாறுதல் உன் ஆளுமையில் நேர்ந்துவிட்டதாக உனக்குத் தோன்றும். பிறகு ஆராய்ந்தால் உனக்குக் கிடைத்தது புதிய ஒன்று அல்லவே என்று நீ நினைப்பாய். மறந்துபோன ஒன்று நினைவிற்கு வருவதுபோல் உணர்வாய். தொலைந்துபோன ஒன்று மீண்டும் கிடைத்ததாக மகிழ்வாய்.

புத்தருக்கு ஞானம் கிடைத்தது. தேவர்கள் தமது வழக்கமான தொழிலாகிய பூமழை பொழிந்தபின், "உங்களுக்கு என்ன கிடைத்தது?" என்று விசாரித்தார்கள்.

சிரித்தபடியே புத்தர், "விசேஷமாக எதுவும் பெறவில்லை. ஏற்கெனவே கிடைத்திருந்ததை இப்பொழுதுதான் கண்டு கொண்டேன். இந்த விஷயம் இதுவரை எனக்கு மறந்து போயிருந்தது," என்று பதிலளித்தார்.

சிலர் மூக்குக் கண்ணாடி அணிந்துகொண்டு அதையே தேடியபடி இருப்பார்கள்! கண்ணாடி அப்படியேதான் உள்ளது. அதன் நினைவுதான் இல்லை. இதுபோல் சத்தியமும் உன்னிடம் தான் ஏற்கெனவே உள்ளது. நீதான் மறந்து போயிருக்கிறாய்.

ஞாபகம் வந்ததும், உனக்கு ஏதோ கிடைத்ததாக, அபூர்வமான ஒன்று கிடைத்ததாக நினைப்பாய். ஏனென்றால் இதற்குமுன் அதன் நினைவு உனக்கு இல்லை. நீ அரசன்; ஆனால் உன்னைப் பிச்சைக்காரன் என நினைத்தாய். ஆகவே உன்னிடம் ஒன்றுமில்லை என முதலில் நினைத்தாய். நினைவூட்டியபின் உன்னிடம் ஏற்கெனவே எல்லாம் உள்ளதெனத் தெரியவரும்.

நீ கேள்வியில் கேட்டதுபோல் இதில் எந்த முரண்பாடும் இல்லை. முழுமையாகப் புத்தம் புதியதாக உனக்கு ஏதோ கிடைத்ததாக நினைத்தால் அது பொய்யானது என்று தெரிந்து கொள். புதியதுபோல் ஒன்று கிடைத்து அது புராதனமானதாகவும் இருந்தால், உண்மையானது கிடைத்து விட்டதெனத் தெரிந்து கொள். நிரந்தரமான ஒன்றும் இப்போதுதான் நிகழ்ந்த ஒன்றும் ஒரேசமயம் உனக்கு நேர்ந்தால், சத்தியத்தை நெருங்கி விட்டதாகவும், சத்தியம் என்னும் இல்லத்துள் நுழைய உனக்கு அனுமதி கிடைத்துவிட்டதாகவும் கருதலாம்.

உன் சுபாவப்படி நீ இருக்க வேண்டுமென எவரும் விரும்புவதில்லை. எனவே உன்னை எந்த விதத்திலாவது மாற்றுவதற்கான முயற்சி நடைபெறுகிறது. நீ கிருஷ்ணன் போலாக வேண்டும் என ஒருவர் விரும்புகிறார். இன்னொருவர் நீ இயேசுநாதர் போலாக வேண்டுமென விரும்புகிறார். இதுபோலவே நீ மகாவீரர் ஆகவேண்டும், புத்தர் ஆக வேண்டுமென விரும்புவோர் உள்ளனர். ஆனால் உலக வரலாற்றில் யாராவது மறுபடியும் புத்தராக முடிந்ததா? ஒரு சமயம் ஒரு புத்தர்தான் தோன்ற முடியும். இத்தனை நூற்றாண்டுகள் கடந்தும் கிருஷ்ணர்போல் இன்னொருவர் பிறக்கவில்லை.

இதிலிருந்து நீ ஒரு விஷயம் புரிந்துகொள்ளலாமே. நீ கிருஷ்ணர்போல் ஆக எவ்வளவுதான் முயன்றாலும் சரி, அவரைப்போல் அலங்கரித்துக்கொண்டு அவரைப்போல் நடந்துகொண்டாலும் சரி, நீ அசலில் என்றும் கிருஷ்ணர் ஆக முடியாது. ராமலீலா விழாவில் ராமனாக நடிப்பவரும் அசல் ராமன் ஆகிவிட முடியாது.

அசலில் நீ யாரைப் போலாவது ஆக வேண்டும் என நினைத்தால், நீ உன்னைப்போல்தான் ஆக முடியும்! அதேசமயம் உன்னைப்போல் வேறு எவராலும் ஆக முடியாது. நீ நீதான், நான் நான்தான். ஏனெனில் ஒவ்வொருவரின் தனித்துவம் அவரவருக்குள் விதைபோல் நடப்பட்டுள்ளது. அந்த விதைதான் மரம்போல அவரவர் ஆளுமையாக வளர்கிறது. எனவே உனது முழு ஆளுமையும்கூட உனக்குப் பிடிபடுவதில்லை.

புத்தர் ராமனைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பார்; கிருஷ்ணரைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பார். ஆனால் அவர் அவர்களைப்போல் ஆக முயலவில்லையே. நீ நீயாக ஆவாய். நீ நீயாகத்தான் ஆக முடியும். நீ வேறு ஒருவரைப்போல் ஆக முயன்றால் அது பொய்யாகிவிடும் ஆள்மாறாட்டம் செய்யும் குற்றவாளியாகக் கருதப்படுவாய்! இதனால் உனது சுபாவமான ஆளுமை சேதப்படும்.

நீ, நீயாகத்தான் ஆக முடியும் என்னும் உண்மையை உனக்கு நினைவுபடுத்தும் ஒரே நோக்கத்துடனேயே என் முயற்சிகளெல்லாம் அமைகின்றன.

நான் இங்கே உன்னை வேறு விதமாக மாற்றுவதற்கான முயற்சி அல்லது உபாயங்களில் ஈடுபடவில்லை. இன்னொரு வகையில், நீ வேறு எவரைப் போலவும் ஆகும் முயற்சியில் சிக்கிக்கொள்ளாதே என எச்சரிப்பதும் என் உபதேசத்தில் அடங்கியுள்ளது. வேறு யாரைப் போலவும் நீ ஆக முயன்றால் நீ தோல்விதான் அடைவாய். உன் நேரம் வீணாகும். உனது சக்தி விரயமாகும். உனது வாழ்க்கை சங்கடங்களிலும் துன்பங்களிலும் சிக்கிக்கொள்ளும். நீ ஆன்மிகத்தில் தரித்திரனாகவே நீடிப்பாய்.

உனக்குள் ஒரு பூ மறைந்திருக்கிறது. அது எத்தகைய பூ என்று யாருக்கும் தெரியாது. அந்த விஷயம் பூ மலர்ந்த பிறகுதான் தெரியவரும். சித்தார்த்தர் புத்தராக ஆன பிறகுதான் மக்கள் அவரை முழுமையாகப் புரிந்துகொண்டனர். அவர் எத்தகைய ஆன்மிக மலர் என்று இப்போது நமக்குத் தெரியும். ஆனால் உன்னிடம் மறைந்துள்ள மலரின் தன்மையை நீ

அறிந்திருக்கவில்லை. உன் உள்ளே எத்தகைய கமலம் மலரும்; அதில் எத்தனை இதழ்கள் இருக்கும்; அதன் நிறம் என்ன; எம்மாதிரி மணம் வீசும் என்று யாருக்கும் தெரியாது.

உனது எதிர்காலம் அடர்ந்த இருட்டில் சூழ்ந்துள்ளது. அது விதையாக இருக்கிறது. விதை வெடித்து, அதன் தூக்கம் கலைந்து, அது விழித்து, முளைத்து மலர்ந்த பிறகே உனக்கு உன்னுள் இருக்கும் பூவின் அறிமுகம் கிடைக்கும். உலகமும் அதைத் தெரிந்துகொள்ளும். அதுதான் மெய்யான அறிதலாகும். அதற்குமுன் அதைத் தெரிந்துகொள்ள வழியில்லை.

இதனால்தான் நீ என்னவாக ஆவாய் என்று என்னால் சொல்ல முடியாது. சோதிடர்போல் நான் உன் எதிர்காலத்தைக் கணிக்க முடியாது. மனிதன் ஓர் இயந்திரம்போல் இருந்தால் அவன் இயங்கப்போகும் விதம் பற்றிக் கூறலாம். ஒருவகையைச் சேர்ந்த எல்லா இயந்திரங்களும் ஒரேமாதிரியாகச் செயல்படும். ஆனால் ஒவ்வொரு மனிதனும் சுதந்திரமானவன், சுயமான லயம் (ஸ்வச்சந்தன்) உடையவன்.

ஒவ்வொரு மனிதனும் தனித்தனிப் படைப்பு. அவனுக்கு சமமாக யாரும் கிடையாது. கடந்த காலத்திலும் அவனைப்போல் எவரும் இல்லை; எதிர்காலத்திலும் தோன்றப்போவதில்லை; தோன்றவும் முடியாது. இந்தச் சிறப்பைக் கவனி. இதற்காகக் கடவுளுக்கு நன்றி கூறு. கடவுள் உன்னைப் போல் ஒருவனை உண்டாக்கியதில்லை. செய்ததே செய்தல் (repetition) என்பது கடவுளிடம் கிடையாது. நீ (ஒவ்வொருவனும்) அதிசயப் பிறவி.

உனக்குள் இருக்கும் ஆன்மிகப் பூ மலரும்போது உனது ஆளுமையில் மாற்றம் தெரியும். பெரும் புரட்சி தோன்றும். இவ்வாறு நீ புதுப்பிக்கப்படுகின்ற சமயம் நீயே 'அடடே! இப்படித்தானே நான் எப்பொழுதுமே இருந்திருக்கிறேன். இந்தப் பொக்கிஷம் ஏற்கெனவே என்னிடம் இருந்ததுதான்' என்று கூறிக்கொள்வாய். இந்த வீணை உனக்குள்தான் இருந்து வந்திருக்கிறது. நீதான் இதன் தந்திகளை மீட்டாமல் இருந்து விட்டாய். நான் உனக்குத் தந்திகளை மீட்டக் கற்றுத் தருகிறேன். அதன்பின் நீ தந்திகளை மீட்டும்போது புதிய இசை கேட்பாய்.

அந்த இசையும் உனக்குள்தான் இருந்தது. நீ மீட்ட வேண்டியது தான் பாக்கியாக இருந்தது.

திடீரென நீ புதிதாக எதுவும் ஏற்படவில்லை என்பதை உணர்வாய். எப்பொழுதும் இருந்த ஒன்று சரியாக வெளிப்படாமல் இருந்தது என்பதைப் புரிந்துகொள்வாய். முழுதும் மலராத ஆன்மிகம் கனவில் கேட்ட இசைபோல் இருக்கும். முதலில் புதிய இசை என நினைப்பாய். பிறகு அதையே ஒருவர் பாடினால் நீ ஏற்கெனவே கேட்ட இசைதான் என்றறிவாய்.

ஆகவே ஆன்மிகத்தில் புதியதற்கும் பழையதற்கும் இடையே முரண்பாடு கிடையாது.

## மூன்றாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்கள் ஆசைகளில் முழுதிருப்தி பெற முடியாது என்றும் ஒருபுறம் கூறுகிறீர்கள். வேறு சந்தர்ப்பத்தில் நீங்கள் உலகில் சுவை எதுவும் மிஞ்சியிருந்தால் அதையும் முழுமையாக அனுபவித்துவிட வேண்டும் என்கிறீர்கள். ஏன் இந்த முரண்பாடு?**

இங்கே அடிப்படையில் முரண்பாடு கிடையாது. உன் கண்கள் இன்னும் திறக்காததால் முரண்பாடு தெரிகிறது. நீ இருட்டில் தடவியபடி செல்லுகிறாய். ஆகவேதான் உனக்குத் தடுமாற்றமாக உள்ளது.

ஆம், ஆசைகள் பூர்த்தியடைவது முடியாத காரியம். புத்தரும் இதையே சொன்னார். அதாவது, ஆசை என்னும் கோப்பையை என்றும் நிரப்ப முடியாது.

உன்னிடம் பத்து ரூபாய் இருந்தால் இருபது வேண்டு மென்கிறாய். உன்னிடம் எவ்வளவு பணம் சேர்ந்தாலும் இரண்டு மடங்கு கூடுதலாக எதிர்பார்ப்பாய். பத்துக்கும் இருபதுக்கும் இடையேயான வித்தியாசம் நீ கோடீஸ்வரன் ஆனாலும் நீடிக்கும். நீ எவ்வளவு சம்பாதித்தாலும் இதே நிலைதான். ஆசை என்பது தொடுவானம் போன்றது. நீ எவ்வளவு வேகமாக அதை நோக்கி

ஓடினாலும் உனக்கும் அதற்குமுள்ள இடைவெளி ஒரே விகிதத்தில் இருக்கும்.

ஆசையை முழுமையாக பூர்த்தி செய்துகொள்ள எந்த உபாயமும் இல்லை இது உண்மை. அதே சமயம் நான் உலகச் சுவை மிஞ்சியிருக்கும்வரையே இந்த அதிருப்தி நீடிக்கும் என்கிறேன். எப்படியெனில் உலக இன்பங்களின் சுவை ஒரு கட்டத்தில் கசக்கும், திகட்டிப்போகும். அப்போது சுயமாகவே ஆசைகள் தணிந்து மறைந்துவிடும். இதுவே மறைமுகமாக ஆசைகள் பூர்த்தியடைதல் எனப்படுகிறது.

ஆசைகளை அடக்க முடியாது என்பது ஒரு வாதம், ஆசைகளை அனுபவிக்கையில் ஒரு நிலையில் அவை கசந்துபோய் அவற்றில் ஈடுபாடு நீங்கிவிடும் என்பது மறுவாதம். இரண்டும் சரியென்பதால் முரண்பாடு கிடையாது. இவ்வாறு, ஆசைப்படுதல்-அனுபவித்தல். திகட்டுதல்-ஆசை நீங்குதல் என்று நடைபெறுகிறது.

ஒருவன் இரண்டும் இரண்டும் மூன்று என்று சொல்கிறான். இதில் பிடிவாதமாக இருக்கிறான். அவனை விட்டுவிடு. ஒரு சூழ்நிலையில் அவன் சரியான விடையைக் கண்டுபிடிப்பான். அப்போது அவன் தானாகவே பழைய வாதத்தைக் கைவிடுவான்.

ஆசை பூர்த்தி அடையாதெனப் பக்காவாகத் தெரியும். ரசம் (இன்பம்) ஒரு காலத்தில் விரசமாகிவிடும் (சுவையிழக்கும்) என்பதும் பக்காவாகத் தெரியும். ஆனால் ரசத்தில் முழுமையாக அமிழ்ந்தால்தான் விரசம் என்னும் நிலையை அடைய முடியும். பாதியில் விட்டு ஓடி துறவியானால் மனத்தில் ஏக்கம் தோன்றி மனத்தூய்மை கெடும். சிலந்தி தனது வலையைப் பின்னும்போது எதனாலோ விழுந்துவிட்டாலும் பாதியில் கைவிடுவதில்லை. துறவறமும் நிரந்தரமாக இருக்க வேண்டும். நடுவில் ஆசை மிகுந்து வீட்டுக்கு ஓடிப்போய்விடக் கூடாது. ரசம் கசந்தால்தான் மீண்டும் ஆசை எழாது. தனது உடலைக் குகைக்குக் கொண்டு சென்றுவிட்டு, தன் மனத்தை வெளியில் திரும்பும்படிவிட்டால் அது துறவறம் ஆகாது.

**கு**கையில் வசித்த ஒரு சாமியாரின் கதை கூறுகிறேன். அவரை தரிசிக்க தொலைவிலிருந்தெல்லாம் மக்கள் வந்தனர். அவர் எகிப்தில் ஒரு பாலைவனம் அருகிலிருந்த குகையில் வசித்தார். அவரது மகிமையைக் கேட்டு இன்னொரு சாமியார் குகைக்கு வந்தார். அவர் குகை சாமியாரைப் பார்த்துச் சிரிக்கலானார். ஏனெனில் குகை சாமியார் தன் கைகளிலும் கால்களிலும் விலங்குகள் மாட்டியிருந்தார். மேலும் அவற்றைச் சங்கிலிமூலம் சுவருடன் இணைத்திருந்தார்.

குகை சாமியார் விளக்கம் கூறினார்: "இது நானாக ஏற்படுத்திக்கொண்ட சுயக்கட்டுப்பாடு. நான் மனத்தைக் கட்டுப்படுத்திய போதிலும் சில சமயம் மனம் பலகீனமடைகிறது; உலக இன்பங்களை நாடுகிறது. குகையைவிட்டு ஓடிவிடலாம் போல் தோன்றுகிறது. அந்த பலகீனமான வேளையில் இந்த விலங்குகள் நான் தப்பிக்க முடியாதபடி தடுத்து விடுகின்றன. அந்தச் சில நிமிடங்கள் கழிந்ததும் நான் சமாளித்துக்கொண்டு பழைய நிலைக்குத் திரும்பிவிடுகிறேன்."

இதுபோய் துறவறமா? துறவறத்திற்குச் சங்கிலியால் கட்டப்பட வேண்டுமா? இதைக்கூட ஓரளவு பாராட்டலாம். குகைத் துறவி மனம் திறந்து தனது பலகீனத்தை ஒப்புக்கொள்கிறார். ஆனால் வேறு பல துறவிகள் மனத்தளவில் உலகுடன்தான் இன்னும் ஒட்டிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் 20-30 ஆண்டுகளாக மக்கள் அவர்களை கௌரவித்து, பாதம் தொட்டு வணங்கி, பூஜை செய்து வந்துள்ளனர். இவையெல்லாம் கண்ணுக்குத் தெரியாத சங்கிலிகளாக சலன மனமுடைய சில சந்நியாசிகளைக் கட்டிப்போட்டுள்ளன. ஆகவே உலக வாழ்க்கைக்குத் திரும்ப அவர்களுக்கு தைரியமில்லை. திரும்பிவந்தால், துறவறத்தைக் கைவிட்டால், மக்கள் காறி துப்புவார்களே. முன்பு எத்துணை மரியாதை கிடைத்ததோ அதற்கு இரு மடங்கான அவமானம் அல்லவா கிடைக்கும்.

சமணத் துறவிகள்பாடு சங்கடம். சமண மதத்தினர் தங்கள் துறவிகளிடம் காட்டும் மரியாதை அளவற்றது, ஒப்பற்றது. இந்து சந்நியாசிகளின் நிலைமை பரவாயில்லை. அவர்களில்

மடாதிபதிகள் தவிர, மற்றவர்கள் துறவறத்தைக் கைவிட்டால் அதிகமாகக் கவனிக்கப்படுவதில்லை. ஏனெனில் அவர்கள் துறவறத்தில் இருந்தபோது சமூகத்தில் அதிக மதிப்புப் பெறவில்லை. என்னுடைய (ஓஷோவினுடைய) துறவிகள் இப்படியெல்லாம் சிரமப்படுவதில்லை. என் சீடரான துறவி எப்போது வேண்டுமானாலும் துறவறத்தைக் கைவிடலாம். ஏனென்றால் சமூகம் பெரிய அளவில் அவர்களை மதித்ததில்லை. எனவே துறவறத்தைக் கைவிட்டால் சமூகம் பெரிய அளவில் அவனை மிதிக்கப்போவதும் இல்லை. நான் தரும் தீட்சையை சுதந்திர சந்நியாசம் எனலாம்.

நீ தியானம், தவம், சந்நியாசம் முதலியவற்றில் ஈடுபட்டால் எந்தப் பாராட்டையும் ஏற்காதே. ஏனெனில் உன்னைப் பாராட்டுபவன் உன்னைச் சிறைக்கைதி ஆக்கிவிடுகிறான். நீ பிறகு உலக வாழ்க்கைக்குத் திரும்ப முடியாதபடி நுணுக்கமாகக் கட்டிப்போடுகிறான். நீ துறவறத்தில் நீடிப்பது சங்கிலிகளான, அவமான பயத்தாலோ, பாராட்டை எதிர்பார்த்தோ அமையக் கூடாது. ஆன்மிக ஆனந்தத்தில், ஆன்மிக ரசத்தில் உண்மையான ஈடுபாடு காரணமாக இருக்க வேண்டும்.

ஒருவர் குறிப்பிட்ட மதத்தின் துறவியாகிவிட்டால் சமூகம் அவரைத் தப்பவிடாது. அவரால் தப்ப முடியாதபடி அரச கௌரவம் தருகிறது. அவரது ஆசிரமம் சமஸ்தானமெனப் படுகிறது. அவருக்கு யானை-குதிரை-ஒட்டகம்-பேண்ட் இசையுடன் வாண வேடிக்கையுடன் ஊர்வலம் (நகர பிரவேசம் உண்டு). அவர் பக்கத்துக்கு கிராமத்திற்குப் போனாலும் விஜய யாத்திரை எனப்படுகிறது. இப்படி முத்திரை பதிக்கப்பட்டபின் அவரால் துறவறத்தைவிட்டு ஓட முடியுமா?

உலக இன்பம் திகட்டிப் போனபிறகே துறவறம் மேற்கொண்டால் அது வலுவாக இருக்கும். ஆகவே மனம் பழுக்காத நிலையில் துறவியாக முயலாதே என்று நான் அழுத்தமாகக் கூறுகிறேன். பாட்டுக் கச்சேரி நடுவில், நடன நிகழ்ச்சி நடுவில், நாடகத்தின் நடுவில் எழுந்துபோனால், பிறகு மேற்கொண்டு பார்க்காமல் அவசரப்பட்டுவிட்டோமே என்று ஏக்கமாக இருக்கும். வாழ்க்கையை முழுதும் வாழாமல் துறவறம்

மேற்கொள்வதும் இதுபோலத்தான். தொடர்கதையை முழுதும் படித்துவிட்டால் பிறகு மீண்டும் படிக்கத் தோன்றாது. அதுபோல் வாழ்க்கையை வாழ்ந்துவிட்டால் மீண்டும் உலக வாழ்க்கையில் ஆர்வம் தோன்றாது. துறவறம் மேற்கொள்வது எளிதாகிவிடும். அது நீடிக்கவும் செய்யும்.

ஆகவே வாழ்க்கையை வாழ்ந்து முடி. இது தவறோ என்று அஞ்சாதே. ஆசைகளில் முழுமையாக திருப்தி அடைவது என்பது கிடையாததால், விரைவில் நீ சந்நியாசியாகிவிடுவது திண்ணம். உலக அனுபவங்களின் திரண்ட விளைவுதான் சந்நியாசம் என்பது. உலகத்தை அனுபவித்துப் புரிந்துகொண்டவன் துறவி ஆவதைத் தவிர வேறு என்ன செய்வது? உலக அனுபவத்தின் முடிவுதான், சாரம்தான் சந்நியாசம். சந்நியாசமும் சம்சாரமும் ஒன்றிற்கொன்று எதிரிகளில்லை.

வாழ்ந்து பார்த்தோம். அதில் ஒன்றும் இல்லை. ஆசைகள் நிரம்புவதில்லை. ஆசைகளின் பசி அடங்குவதில்லை. துன்ப உணர்வே, நரக உணர்வே மேலிடுகிறது. இதைப் புரிந்துகொண்டு மனம் பக்குவப்பட்டால் அவனது ஆளுமையின் தரம் உயர்கிறது. மோட்சம் பற்றிய சிந்தனை எழுகிறது. அப்படிச் சிந்திப்பவனை முமுட்சு என்கிறோம். முழுவதுமாக வாழ்ந்தாகிவிட்டது. எல்லாம் பார்த்தாகிவிட்டது. நாடகம் முடிந்தது. கதை முற்றுப்பெற்றது. பாடம் நிறைவுற்றது. இந்த உலகில் எதுவும் மிஞ்சியிருக்காததால், அடுத்த உலகில், ஆன்மிக உலகில் பயணம் ஆரம்பிக்க வேண்டும்.

ஏதோ முத்தைப்போல் ஒன்றைப் பெற ஒருவன் நீர்நிலையில் இறங்குகிறான். நீரின் அடியில் எதுவுமில்லையெனில் அவன் எவ்வளவு ஆழத்தில் இறங்கினாலும் எதுவும் கிடைக்கப்போவதில்லை. உலக வாழ்க்கையில் எவ்வளவு மூழ்கினாலும் ஒன்றும் கிடைக்காது என்னும் தைரியத்தால்தான் நான் உன்னை வாழ்க்கையை முழுதுமாக அனுபவிக்க சொல்லித் தூண்டுகிறேன். அவசரமும் இல்லை என்கிறேன். உலக வாழ்வைப் பற்றிச் சரியாகத் தெரியாதவர்கள்தாம் ஆழத்தில் இறங்காதே என்று தடுப்பார்கள். ஆசையைச் சேறாகக் கற்பனை செய்து நீ அதில் விழுந்தால் மீளமாட்டாய் என்று பயமுறுத்துகிறார்கள்.

அவர்களது பயம் அறியாமையால் விளைந்ததாகும். நான் சொல்கிறேன்: நீ துணிந்துசெய். எங்கே போக விருப்பமோ அங்கே செல். அனுபவி. அலைந்து திரி. அலைவதில் கஞ்சத்தனமாக இராதே. இதனால் நீ திரும்பிவருகையில் முழுமையாகத் திரும்புவாய். பிறகு நீ திரும்பிப் பார்க்கக்கூட மாட்டாய். பாம்பு சட்டையை உரித்துப்போட்டுச் செல்வதுபோல் நீயும் உலகை உதறிவிடுவாய். பாம்பு தான் உரித்த தோலைத் திரும்பிப் பார்க்காது. நீயும் அப்படித்தான் உலக வாழ்க்கையைப் புறக்கணித்துவிடுவாய்.

சந்நியாசமும் அப்படித்தான் எளிதாக, சகஜமாக நிகழ வேண்டும். அம்மாதிரியான இயற்கையான சந்நியாசம்தான் மதிப்புவாய்ந்தது.

### நான்காவது கேள்வி

**ஓஷோ அவர்களே! குறிப்பிட்ட ஒருவர் முன்னிலையில் சமர்ப்பணமாவதால் நாம் நமது சொந்த ஆளுமையையும் சுதந்திரத்தையும் இழக்கிறோமா, இல்லையா? ஒருவரது ஆளுமையை வணங்காமல் தனிநபராக அவரையே வணங்குதல் எந்த அளவிற்கு உசிதமாகும்?**

**மு**தல் விஷயம்: உன்னிடம் இருக்கின்ற ஒன்றைத்தான் நீ இழக்க முடியும். உன்னிடம் இல்லாதது தொலைந்து போகாது. ஆடையில்லாதவன் குளிக்கமாட்டான் என்று சொல்வதுண்டு. ஏனெனில் துடைத்துக்கொள்ள அவனிடம் துவாலை (டவல்) கிடையாது. பிச்சைக்காரனிடம் இழப்பதற்கு ஒன்றுமில்லை. ஏதோ இருக்கின்ற தட்டும் தொலையக்கூடாது என அவன் சரியாகத் தூங்கமாட்டான்.

உன்னிடம் சுதந்திர உணர்வு இருப்பின் பிறரிடம் நீ ஏன் சமர்ப்பணமாக வேண்டும்? எனது ஆளுமையை (ஆத்மாவை) நீ உணர முடியுமானால், பிறரிடம் நீ ஏன் சமர்ப்பணமாக வேண்டும்? யாரிடம் சமர்ப்பணமாக வேண்டும்? உன்னிடம் அகங்காரம் மிகுதியாக இருந்தால் பெரியவர்கள் முன் சமர்ப்பணமாகி அதை

நீ குறைத்துக் கொள்ளலாம். தற்சமயம் நீ சுதந்திரம், ஆளுமை பற்றி சொல்லளவில்தான் அறிந்திருக்கிறாய்.

பிறரிடம் சமர்ப்பணமானால் உன் சுதந்திரம் போய்விடுமோ என நீ அஞ்சினால் அது பைசா பெறாது. அத்தகைய சுதந்திர உணர்வு பலகீனமானது. அதை ஏன் காப்பாற்ற வேண்டும்? அதற்குச் சிறிதும் மதிப்புக் கிடையாது.

சமர்ப்பணத்தால் உனது சுதந்திரமும் ஆளுமையும் பாதிப்படைவதில்லை. ஆனால் அகங்காரத்தைப் போக்கிக் கொள்ள வாய்ப்புக் கிடைக்கிறது. அதை உன்னால் சுயமாக இதுவரை நீக்க முடியாமலிருந்தது. ஆகவே அதை இறக்கிவைக்க உனக்கு ஒருவர் உதவி தேவைப்பட்டது. அகங்காரம் நீங்கி மனம் தெளிவடைந்த பிறகுதான் அதை நீயேகூட போக்கியிருக்கலாம் என்பது புரிகிறது. அதற்கு குருவின் உதவிகூட தேவைப்படுவ தில்லை.

நீ அதிகாலை 5 மணிக்கு எழுந்திருக்க வேண்டுமென வைத்துக்கொள். சரியான நேரத்தில் எழுந்திருக்க இரண்டு வழிகள் உள்ளன. ஒருவழி உன்னையே நம்பியிருத்தலாகும். இன்னொரு வழி கடிகாரத்தில் அலாரம் வைப்பதாகும். நீயாகச் சரியான நேரத்தில் எழ மனோபலம் தேவை. தூங்கப்போகும் முன் நீ மனத்திடம், 'இந்தா, நான் சரியா அஞ்சுமணிக்கு எழுந்துடணும்' என்று அழுத்தமாகக் கூறி அதை நீயே கவனமாகக் கேட்டால், அவ்வாறு மனத்தில் பதித்தால், சரியாக ஐந்து மணிக்கு எழுந்து விடுவாய். ஆனால் சில சமயம் அவ்வாறு பலிக்காமலும் போகலாம். அதற்குக் காரணம் நீ உன் கோரிக்கையை அழுத்த மாகக் கூறாததும், நம்பிக்கையுடன் உள்வாங்கிக் கொள்ளாததும் தான். ஆனால் அப்படி ஐந்து மணிக்கு எழுந்திருப்பது பற்றிச் சிறிது சந்தேகம் இருந்தாலும் உன் வேண்டுகோள் பலிக்காது.

**இ**யேசுநாதர் பைபிளில் ஓரிடத்தில் நீ முழு நம்பிக்கையுடன் மலையைப் பார்த்து 'விலகு' என்று சொன்னால் அது நகர்ந்துவிடும்' என்கிறார். இதைப் படித்த ஒரு கிறிஸ்தவ மூதாட்டி தன் வீட்டின் அருகிலிருந்த ஜன்னலைப் பார்க்கிறாள். சற்றுத் தொலைவில் ஒரு மலை தெரிந்தது. அது அகன்றால் அதன்

பின்னாலுள்ள காட்சிகளை ரசிக்கலாம் என அவள் நினைத்தாள். அவள் ஜன்னல் வழியாக அந்த மலையை ஒருமுறை பார்த்துக்கொண்டாள். பிறகு ஜன்னலை மூடிவிட்டு, 'மலையே, மலையே ஓடிப்போ. இதை நம்பிக்கையுடன் நான் சொல்கிறேன்' என்றாள். இவ்வாறு சத்தமாக மூன்று முறை கூறிவிட்டு ஜன்னலைத் திறந்து பார்த்தாள். மலை அப்படியே இருந்தது!

அவள் நகைத்தாள், 'வெறும் வாய்ச் சொல்லுக்கு மலை அசையாது என்று எனக்குத் தெரியும்தான். சும்மா ஒரு வேடிக்கையாகச் சோதனை செய்து பார்த்தேன். மலை அசைந்து கொடுக்காததில் ஆச்சரியமில்லை' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். ஐந்து மணிக்கு சுயமாக எழுந்திருக்க முடியாது என்னும் சந்தேகத்துடன் மனத்துக்கு நீ கட்டளையிட்டால் அது பலிக்காது. இயேசுவை நம்பிய போதிலும் சந்தேகத்துடன்தான் நீ மலையை விலகச் சொன்னால் அது நகராது. ஆகவே ஐந்து மணிக்கு எழ அலாரம் வைப்பதுபோல், ஞான விழிப்புப் பெற நீ குருவின் உதவியைப் பெற வேண்டும்.

இம்மானுவேல் கான்ட்* புகழ் பெற்ற ஜெர்மானியச் சிந்தனையாளர் ஆவார். அவர் திருமணம் செய்துகொள்ள வில்லை. தனக்குதவ அவர் வேலைக்காரரை நியமித்துக் கொண்டார். அவர் நேரந்தவறாமையைக் கடுமையாகக் கடைப்பிடித்தார். நிமிஷக் கணக்கிலும் கண்டிப்பாக இருந்தவர். சரியான நேரத்தில் சாப்பாடு போட வேண்டும். இரண்டு நிமிஷம் தாமதமானால்கூட வேலைக்காரரைக் கடுமையாகத் திட்டுவார். இரவு பத்து மணிக்குப் படுத்துவிடுவார். சந்திக்க வந்தவர் யாராவது பேசிக்கொண்டிருந்தாலும் அவர் பத்து மணியானதும் சட்டென்று எழுந்து படுக்கைக்குப் போய்ப் போர்த்திக்கொண்டு விடுவார். மரியாதைக்காகக்கூட அவர் "மன்னிக்கவும், நான் இப்போது தூங்கப் போக வேண்டும். பிறகு சந்திப்போம்," என்று வந்திருப் பவரிடம் சொல்ல மாட்டார். வேலைக்காரர்தான் வந்தவரிடம் பக்குவமாக நிலைமையை விளக்கி எழுந்துபோகச் சொல்ல வேண்டும்.

---

* Immanuel Kant (1724-1804)

அது மட்டுமல்ல, அவர் அதிகாலை மூன்று மணிக்கு எழுந்துவிட வேண்டும் என்றும் கண்டிப்புக் காட்டினார். ஆனால் அது மிகவும் சிரமமாக இருந்தது. சுயமாக எழுந்திருக்காவிடில் வேலைக்காரர் வந்து எழுப்பிவிட வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார். வேலைக்காரர் சற்று தாமதித்தாலும் அடி விழும். "நான் எழுப்பினாலும் எழுந்திருக்க மனமில்லாமல் என்னைத் திட்டுகிறீர்கள், அடிக்கிறீர்கள்," என்று தெரிவித்தால், அதற்கு கான்ட், "ஒவ்வொரு வேலையும் குறித்த நேரத்தில் நடக்க வேண்டும் என்பதற்காகத்தானே உன்னை நியமித்துள்ளேன். நான் மூன்று மணிக்கு எழாமல் தாமதித்தால் நீயும் என்னை நன்றாகத் திட்டு, அடி கொடு," என்று அனுமதி தெரிவித்தார்.

கடைசியில் ஒரு வேலைக்காரனால் மட்டுமே அவருக்கு ஈடுகொடுக்க முடிந்தது. அதன் விளைவாகக் காலப் போக்கில் யார் எஜமானன்-யார் வேலைக்காரன் என்று சொல்ல முடியாதபடி அந்த வேலைக்காரன் அறிஞர் கான்ட்டை அதிகாரம் செய்தான். அவர் காலை மூன்று மணிக்கு எழாவிடில் அடிக்கவும் செய்தான்.

குரு என்பவர் ஓர் உபாயம் மட்டுமே ஆவார். தேவைப் பட்டால் அவர் உன்னை அடிக்கவும் தயங்கமாட்டார்.

சமர்ப்பணம் என்பதற்கு நீ குருவிடம் (உதாரணமாக) "என்னால் மூன்று மணிக்கு எழுந்திருக்க முடியாது என்று நிச்சயமாகத் தெரியும். நீங்கள் என்னை எழுப்புவீர்கள் என்றும் தெரியும். அப்போது உங்கள் மேல் எனக்குக் கோபம் வரும் என்றும் தெரியும். ஆனால் என்மீது இரக்கம் கொண்டு என்னை எழுப்பிவிடுங்கள். அல்லது நீங்கள் என்னை எழுப்ப முயலுவதை நான் தடை செய்யாமலிருக்கலாம். உங்களுக்கு ஒத்துழைப்புத் தரலாம். அதுவும் உறுதியில்லை. நான் தடை செய்தாலும் பொருட்படுத்த வேண்டாம். என் முட்டாள்தனத்தைக் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டாம். நான் ஏசிப் பேசினாலும் மன்னித்துவிடவும். ஆனால் என்னை எழுப்பவும். நான் எழுந்தாக வேண்டும். உங்கள் உதவியின்றி என்னால் எழுந்திருக்க முடியாது," என்றெல்லாம் வேண்டிக்கொள்வதாக அர்த்தம்.

சமர்ப்பணம் என்பதற்கு நீ இன்னொருவரின் காலடியில் உன் மமதையைக் கிடத்திவிடுகிறாய் என்றும், அவர் உன்னை எழுப்பி நிற்கவைக்கிறார் என்றும் பொருள். நீ பேருறக்கத்தில் ஆழ்ந்துள்ளாய். அது பல பிறவிகளாய்த் தொடரும் தூக்கம்.

நீயே எழுந்திருக்க முடியுமானால் சுபம்தான். குருவைத் தொந்தரவு செய்யாமலிருக்கலாம். யாரையும் மூன்று மணிக்கு எழுப்புவது சாதாரண விஷயமில்லை. எழுப்பப்பட்டவர் எரிச்சல்படுவாரே தவிர நன்றிகூர்வதில்லை.

சமர்ப்பணத்திற்கும் தனிமனித வழிபாட்டிற்கும் சம்பந்தம் கிடையாது. யாரிடம் நீ சமர்ப்பணமாகிறாயோ அவருடன் நீ ஒன்றிவிடுகிறாய். பிறகு பூஜை எப்படி? வழிபடுபவர் யார்? வணங்கப்படுபவர் யார்? குருவிற்கும் சீடனுக்கும் இடையே பூஜை பாவனை இருக்கலாகாது. சீடன் தன்னை குருவின் பொறுப்பில் முழுமையாக விட்டுவிடுகிறான். அவன் குருவுடன் ஒன்றி விடுவதால் பூஜை உணர்விற்கு வாய்ப்பில்லை. பூஜை உணர்வு இருந்தால் சமர்ப்பணம் பூரணமாகவில்லை என்று பொருள்.

சமர்ப்பணம் என்றால் 'என் படகை உன் படகுடன் சேர்த்துக் கட்டிவிட்டேன். நான் என்னை விலக்கிக்கொள்கிறேன். நீங்கள் என் எஜமானர் ஆகிவிட்டீர்கள். இப்பொழுது நீங்கள் மட்டுமே இருக்கிறீர்கள். நான் என்பவன் இல்லை,'' என்று கூறுவதாக அர்த்தம்.

'ஆளுமையை வழிபடாமல் ஆளை மட்டும் வழிபடுவது எந்த அளவிற்கு உசிதம்?' என்று கேள்வியின் இன்னொரு பகுதி.

சரி, மனிதனை நேசிப்பதைவிட மனிதம் என்பதை நேசி' என்பது இதன் பொருள். மனிதம் என்பதை நீ எங்கே தேடுவாய்? நீ நேசிக்கப் புறப்பட்டால் மனிதன்தான் கிடைப்பான், மனிதம் கிடைக்காது. மனிதம் என்பது ஒரு சொல் மாத்திரமே, வெற்றுச்சொல். கைக்கு வசப்படுவது மனிதனே தவிர, மனிதம் இல்லை. 'மனிதம்' என்னும் சொல்லைப் பயன்படுத்துவோம். சிலரை நேசிப்பதும் சிலரை வெறுப்பதுமாக இருக்கிறார்களே. அது எப்படி? ஒரு மதத்தினர் இன்னொரு மதத்தினரைக்

கொல்கிறார்களே. கொல்கின்ற மதத்தினரின் தலைவர்களும் மனிதத்தை நேசியுங்கள் என்றுதானே சொல்கிறார்கள். சொல்லுக்கு மட்டும் மதிப்புக் கொடுத்து அந்தச் சொல் குறிப்பிடுவதை அழிக்கலாமா?

இதேபோல் ஆளைப் போற்றாமல் ஆளுமையைப் போற்றுவது தர்க்கத்துக்கு பொருந்தாது. ஆளுமை என்றால் என்ன? அது எங்கே கிடைக்கிறது? ஆளிலிருந்து ஆளுமையைத் தனியாக எப்படிப் பிரித்தறிவது?

உதாரணமாக, "நடனமாடுபவரைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. நான் மதிப்பது நடனத்தைத்தான்" என்று நீ கூறினால், நடனமாடுபவர் (நர்த்தகி) இல்லாமல் நடனம் எங்காவது நடைபெற முடியுமா? நர்த்தகியின் உடலசைவுகளின் தொகுப்புதானே நடனம்.

சுருக்கமாகச் சொல்வதானால், சொற்களைச் சார்ந்திராதே என்பதுதான். சொற்களின் வலையிலிருந்து தப்பித்துவிடு. யதார்த்தத்தைப் பிடித்துக்கொள். ஆளுமையிடம் அல்ல, ஆளிடம் அன்பு காட்டு. மனிதத்தை அல்ல, மனிதனை மதி.

உனக்கு புத்தர் கிடைப்பாரென்றால் 'நான் புத்தத்துவத்தை (பௌத்தத்தைத்தான்) பூஜிப்பவன்' என்று சொல்லாதே. பௌத்தம் கிடைத்தால் புத்தரும் சேர்ந்தே கிடைப்பார். பௌத்தம் என்பது புத்தரின் நிழல்தான். 'நான் நிழலைத்தான் வணங்குவேன். நிழலின் மூலத்தை வணங்க மாட்டேன்' என்று நீ சொல்வாயா? இதேபோல் இன்னொருவர் 'நான் சமணத்தைப் பின்பற்றுவேன். ஆனால் மகாவீரருடன் எனக்குக் கொடுங்கல்-வாங்கல் கிடையாது' என்று சொல்லலாமா?

ஆளுமை, மனிதம், புத்தத்துவம் முதலிய சொற்கள் மேடைப்பேச்சுக்கு நன்றாக இருக்கும். அன்றாட வாழ்க்கைக்கு அவை பொருந்தாது. ஏனெனில் அவை திடப்பொருளாக (solid) இல்லாமல் உருவமற்றவையாக (abstract) உள்ளன. சாதாரண வாழ்க்கையில் நீ ஒரு பெண்ணை நேசிக்கிறாய். அப்போது 'நான் பெண்மையை, சக்தி தத்துவத்தைத்தான் நேசிப்பவன்' என்றா

சொல்வாய்? பெண்மை என்னும் வெற்றுச் சொல்லை வெற்றொலியைக் கைவிட்டு, பெண் என்னும் திடப்பொருளை, சத்தியப் பொருளை நீ கைபிடிப்பதுதான் 'பெண்ணை நேசித்தல்' என்பதன் அர்த்தம்.

நீ உண்மையாக ஒன்றைச் செய்ய அல்லது அடைய வேண்டுமானால் நீ உண்மையிலுள்ள பொருளைக் குறிப்பிடு கிறாய். அவ்வாறின்றி நீ நழுவ விரும்பினால் வார்த்தைப் பந்தல் போடுகிறாய்.

நீ நேசிக்கும்போது சரீரம் படைத்த பெண்ணைத்தான் நேசிக்க நேரிடும். பெண்மையை நேசிக்க முடியாது. பக்தி செய்வதானால் குரு என்னும் மனிதரைத் தான் பக்திசெய்ய வேண்டும். குருத்துவம் என்னும் தன்மையை பக்தி செய்ய முடியாது. 'புத்தம் சரணம் கச்சாமி' என்று நீ புத்தரிடம்தான் சரணடைய வேண்டும். பௌத்தம் என்னும் கொள்கையைச் சரணடைவதற்கில்லை.

வளைந்துகொடு. சமர்ப்பணமாகு. நீ உன்னையே திரும்பப் பெறுவாய். அதற்கு ஊடகமாக எவர் வேண்டுமானாலும் அமையலாம். குரு என்னும் வாசல் வழியாக உனது திரும்புதல் நிகழும். வாசலை துவாரம் என்பர். குருவின் வாசல்தான் குருத்வாரா. அதன் வழியே வந்தால் நீ உன்னிடமே வந்து சேர்வதைக் காண்பாய்!

## ஐந்தாம் கேள்வி

**நான் ஒருவரை அழைக்கிறேன்**
**அவரை நான் அறிந்திருக்கவில்லை**
**நான் ஒருவரை நேசிக்கிறேன்**
**அவரது அடையாளம் நான் அறியேன்**
**ஆனால் ஏன் இப்படி**
**காத்திருத்தலுக்குப் பின் காத்திருத்தல்?**

**நாம்** சத்தியப் பொருளைத் தேடுகிறோம். அதை ஏற்கெனவே நாம் அறிந்திராததால்தான் தேடுகிறோம். நாம் கூவி அழைக்கிறோம். இதுவரை அதன் அடையாளம் தெரியாது.

இதுவரை அறிமுகமானவர்கள் மறைமுகமாயினர். அவர்களிடமிருந்து எதுவும் கிடைக்கவில்லை. ஆகவேதான் இதுவரை அறிந்திராதவரை, அடையாளம் தெரியாதவரைத் தேடுதல் தொடங்குகிறது. தெரியாத இடத்துக்குப் பயணம் ஆரம்பமாகிறது.

நீ தினமும் அறிபவற்றை உதறிவிட வேண்டும். இல்லா விடில் இந்தப் புதிய பயணம் மாசுபடும். அறிந்ததைத் திரட்டினால் புத்தியாகிறது. அறிந்ததை உதறினால் ஆன்மிகமாகிறது. அறிந்ததெல்லாம் தூசிக்கு சமம். தூசி சேர்ந்தால் மனம் என்னும் கண்ணாடி அழுக்காகிவிடும்.

கடவுளைத் தேடல் என்பதற்கு ஆரம்பம் உண்டே தவிர முடிவு கிடையாது. ஏனெனில் கடவுளும் முடிவற்றவர், எல்லை யற்றவர். ஆகவே அவரை நெருங்கிவிட்டதாகவே அவ்வப் பொழுது தோன்றும். ஆனால் அவர் தொலைவிலேயே நீடிப்பார். பயணம் முடியுமிடம் (முனையம்) இதோ வந்துவிட்டது என்று நினைக்கத் தோன்றும். ஆனால் எதிர்பார்த்தலே தொடரும். எனினும் சந்திப்பைவிட எதிர்பார்த்தல் அதிக ஆனந்தம் தருவதாகும். இந்த இடைவிடாத தேடலை, எதிர்பார்ப்பை, அழைப்பை அனுபவி. பயணம் முடிந்துவிட்டால், கடவுள் கிடைத்துவிட்டால், பிறகு என்ன செய்வாய்? அவர் உன்னைக் கூப்பிடவைக்கிறார், ஓடிவர வைக்கிறார், ஒளிந்துகொள்கிறார். இநதக் கண்ணாமூச்சி விளையாட்டு தொடரட்டும்; எதிர்பார்ப்பு நீடிக்கட்டும்.

ஆனால் கடவுள் சீக்கிரம் கிடைக்க வேண்டுமென ஆசைப்படுகிறோம். எதிர்பார்த்தபடியே இருப்பதை விரும்ப வில்லை. ஆனால் பயணம் முடிந்துவிட்டால் மரணம் தவிர வேறு என்ன மிஞ்சுகிறது? முழுமை என்பதும் மரணம் என்பதும் ஒன்றுதான். எனவே கடவுளை நோக்கிய பயணம் அதற்குரிய வேகத்தில் தொடரட்டும். அது சீக்கிரம் முடிய வேண்டுமெனத் துடிக்க வேண்டாம்.

கடவுள் என்பவர் சேருமிடமில்லை. அவரை யாத்திரையாக நினை. என்றோ ஒருநாள் கடவுளை அடைந்து ஆனந்த ரசம்

பருகப்போகிறோம் என நினைக்காதே. பயணத்தையே கடவுளாகக் கொண்டால் பறவைகளின் பாட்டில், காற்றின் வீச்சில், சந்திரன்-நட்சத்திரங்களில், பாதையில் எழும்பும் தூசியில்-இவ்வாறு எங்கும் கடவுள்தான் பரவியிருப்பது புரியும்;

பயணம்தான் பரமாத்மா. போய்ச் சேருமிடம் கிடையாது. எதிர்பார்ப்பது இனிமையானது.

**நெடுந்தொலைவில் நில்லாதே**
**நறுமணம் நெருங்கி வராது**
**சூடு தணிந்துவிடாமல்**
**வெளிச்சம் மட்டும் பரவட்டும்**
**பலப்பல பிறவிகளுக்குப் பின்பே**
**உன்னை நான் சந்தித்தேன்**
**அருகே தெரிந்தது நிழலும் வெயிலும்**
**உலகம் சுற்றுவதும் நினைவில் இல்லை**
**நேரம் என்பது காணாமல் போனது**
**ஆசைப் படகுகள் மோதி மூழ்கின**
**என்னையே தானமாய் அளித்தேனே**
**ஏதேனும் உண்டோ குறை அதில்?**
**எல்லாம் லீலையென நினைத்தாயா?**
**எனது உடலெனும் கட்டை அவிழ்த்துவிடு**
**மனம் சமாதிக் கடலில் திளைக்கட்டும்**

நாம் மிகுந்த பயத்துடன் இருக்கிறோம். நாம் விரைவாகக் கடவுளை நம் உள்ளங்கையில் பிடித்துவைக்க விரும்புகிறோம். நாம் ஏக்கத்துடனும் அமைதி இழந்தும் இருக்கிறோம். கடவுள் சீக்கிரமே கிடைத்தால் நன்றாக இருக்குமெனத் தோன்றுகிறது.

நாம் தேடிக்கொண்டே இருந்து, சந்திப்பு நிகழாமல்போய், வாழ்க்கை முடிந்துவிடுமோ என்று நடுங்குகிறோம். பயணப் பாதையில் குவிந்துள்ள மணலிலேயே மாட்டிக்கொண்டு கடவுளின் இல்லத்தை அடைய முடியாமல் போய்விடுமோ என்று சந்தேகம் எழுகிறது.

கடவுளைப் பற்றியே நமது கண்ணோட்டம் தவறானதாக உள்ளது. கடவுள் வேறு எங்கோ உள்ளாரென்றும், நாம் அங்கே போய்ச்சேர வேண்டும் என்னும் நமது நினைப்பு தவறானதாகும்.

கடவுள் இங்கே இருக்கிறார், இப்பொழுதே இருக்கிறார். வேறு ஏதோ ஓரிடத்தில் இல்லை. அவர் நமது நாலா பக்கத்திலும் இருக்கிறார். நம்மைச் சுற்றிலும் அடர்த்தியாகப் பரவியிருக்கிறார். நீ பார்க்கும் ஒளியெல்லாம் அவர். நிழலெல்லாம் அவர். மரங்களெல்லாம் அவருடையவை. நதிகள், அருவிகள், மலைகள், காடுகள் எல்லாம் அவருடையவை. உன்னுடைய கண்களின் வழியாக அவற்றைக் காண்பதும் அவர்தான். என் மூலமாகப் பேசுகிறார். உன் மூலமாகக் கேட்கிறார். அவர் தொலைவில் இல்லை. எல்லாவற்றையும் கடந்து அதற்கு அப்பால் இல்லை. அவர் இங்குதான் இருக்கிறார். இப்போதும் இருக்கிறார்.

நீ விழித்தெழு. ஆன்மிக ரசத்தில் மூழ்கு. ஆன்மிகப் பயிற்சியைத் திருவிழாவாகக் கொண்டாடு. அற்பப் பொருட்களிலும் ஆண்டவனை தரிசி. சாப்பிடும் சமயம் அன்னம் பிரம்மம் என்பதை நினைவில் வை. நீர் பருகும்போது நதி குளங்களும் அருவிகளும் அவருடையவையே என்பதை நினை. உன்னை யாரும் தழுவினால் கடவுள் தழுவுவதாகக் கற்பனை செய். எங்கோ தொலைவில் அவர் வசிப்பதாக நீ நினைத்தால் சங்கடத்துக்குள்ளாவாய், வருந்துவாய். உன்னைச் சுற்றிலும் அவர் பரவியுள்ளதை நீ கவனிக்கத் தவறிவிடுவாய்.

மீண்டும் சொல்கிறேன். கடவுள் போய்ச் சேரும் இடமில்லை. கடவுள் ஒரு பாதை. அவர் கடைசி முகாமில்லை. எல்லா முகாம்களும் அவருடையவை. கடைசி முகாம் என்று ஒன்றும் கிடையாது. எப்பொழுதும் யாத்திரைதான், முடிவில்லாத யாத்திரைதான்.

**ஒவ்வொரு ரகசியக் கதவும்**
**இன்னொரு ரகசியக் கதவைத் திறக்கிறது**
**நிகழ்காலத்தின் ஒவ்வொரு முடிவும்**
**மிஞ்சிய எதிர்காலத்தில் சேர்ப்பிக்கிறது**
**ஒவ்வொரு சிகரத்தின் முடிவினிலும்**
**அதனினும் பெரிய சிகரம் காத்திருக்கிறது**

அப்படித்தான் எப்பொழுதும் நடைபெறும். இவ்வாறு யாத்திரை நீண்டு கொண்டே செல்கிறது என்பது அதிர்ஷ்டம்தான். இந்த விளையாட்டு நிரந்தரமானது.

**புயலும் வெள்ளமும் நம்மைத்**
**தடுக்க முடியாது**
**பயணம் தொடங்கிச் சிலர்**
**பாதியில் திரும்பியிருப்பர்**
**நாமோ சபதம் செய்தவர்கள்**
**சாகத்தயாரெனில் வாழ முடியும்**
**திருப்தியான பயணம்-அதில்**
**திருப்தியான முன்னேற்றம்**
**பயணம் என்று வரும்போது**
**பயணிகள் அனைவரும் நம்மவரே**

பயணத்தையே நீ சேருமிடமாகக் கொண்டால், என்றும் முடியாத பயணம் இது என்று புரிந்துகொண்டால், பயணிகளின் ஊரும் பேரும் மறைந்து எல்லோரும் ஒருவருக்கொருவர் உறவினர்கள் என்னும் எண்ணம் மேலிடும். அப்போது உன் மேல் இறையருள் பொழியும்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! இது கேள்வியில்லை. உங்கள் பதில்களால் எங்களுக்கு உண்டான மகிழ்ச்சியைச் சொற்களால் கூற முடியாது. உங்கள் பதில்கள் எங்கள் மீது ஆசிர்வாத மாகப் பொழிகின்றன.**

**யா**ரும் கேள்வி கேட்டாலும் கேட்காவிடினும் நான் பதில் சொல்லத்தான் போகிறேன். கேள்விகள் கேட்டாக வேண்டுமென்று கட்டாயம் எதுவுமில்லை. சிலருக்குக் கேள்வி கேட்கும் நோய் உள்ளது. சிரங்கைச் சொறிவதுபோல் கேள்விகள் எழுப்பியபடி இருப்பார்கள். பதில் என்ன என்பதைக்கூட அவர்கள் காதில் போட்டுக் கொள்வதில்லை. நான் பதில் கூறிவரும்போதே அவர்கள் அடுத்த கேள்வி பற்றி யோசிக்கிறார்கள். கேள்வி கேட்பதே அவர்களின் தொழில். பதில் பற்றி அவர்களுக்கு அக்கறையில்லை. கேள்வி கேட்பதில்தான் அவர்கள் சுவை காண்கிறார்கள்.

சிலருக்குப் பதிலை அறிந்துகொள்ள வேண்டுமென்ற தாகம் உள்ளது. அவர்கள் கேள்வி கேட்காவிடிலும் நான் அதை ஊகித்துப் பதில் கூறுகிறேன். அவர்கள் கேட்காமலேயே பதில் பெறுவதற்குத் தகுதியுள்ளவர்கள்தாம். பதில் பெறுவதற்கான ஆர்வம் கொண்டிருந்தாலும் கேள்வி கேட்க வேண்டும் என்னும் குறுகுறுப்பு அவர்களுக்கில்லை. உரிய பருவத்தில் தானாக நானாக அவர்கள் மனத்திலுள்ள கேள்வியை ஊகித்துப் பதில் சொல்வேன் என்பதை அவர்கள் அறிவார்கள்.

கேள்வி கேட்காத சிலருக்குப் பதில் சொல்லாதது போலவே கேள்விகளால் துளைத்தெடுக்கின்ற பலருக்கு நான் பதில் கூறுவதுமில்லை.

கேள்வி கேட்பது முக்கியமான விஷயமன்று. நான் கூறும் பதிலை உள்வாங்கிப் புரிந்து கொள்ளும் ஆற்றல் உள்ளதா என்பதுதான் பிரச்சினை. அதை ஏற்றுக்கொள்ளும் தைரியம் உள்ளதா என்பது அதற்கடுத்த விஷயம்.

இங்கேயுள்ள சீடர்களில் ஹம்மா என்பவர் கேள்வி கேட்டதில்லை. ஆனாலும் நான் பதில் சொல்லுகிறேன். அவர் பல ஆண்டுகளாக என் சொற்பொழிவுகளைக் கேட்பதுடன் நிறுத்திக்கொள்கிறார். பிறகு அமைதியாகிவிடுகிறார். சில சமயம் அழுவார். சில சமயம் சிரிப்பார். ஆனால் நான் பேசுவதை ஆழ்ந்து கவனிப்பார்.

இப்படி ஆழ்ந்து ஒருவர் கேட்டால், அவரிடம் ஏதாவது கேள்வி இருந்தால், அதை அவர் கேட்காவிடிலும் நான் பதில் தருகிறேன். அது உடனே நிகழாமல் போகலாம். ஹம்மாவின் மனத்திலிருந்த வெளிப்படாத கேள்விக்கு நான் பதில் கூறியபோது இது எப்படி சாத்தியமாயிற்று என்று ஹம்மா திகைத்திருப்பார். நான் சொன்ன பதில்தான் அவருக்குத் தேவையான ஒன்றாக இருந்தது.

உண்மையிலேயே நான் செய்வது உபதேசமில்லை, ஆசீர்வாதம். நான் கூறுவதைக் கேள்விக்கான பதில்கள் என நினைத்தால், அது அவர்களுக்கு இழப்பாகும். இங்கே சாஸ்திரமோ,

சித்தாந்தமோ விளக்கப்படவில்லை. இங்கே புதிய மதமோ, சம்பிரதாயமோ நிர்மாணிக்கப்படவில்லை. புத்தியை அடிப்படையாகக் கொண்டும் பதில் கூறவில்லை.

நீ என் பதிலை சுவீகரித்தால், அதை உனது இதயத்துக்குள் நுழையவிட்டால், அது அம்புபோல உன் இதயத்தைத் துளைக்கவிட்டால், அப்பொழுது என் ஆசிகள் மழையாய்ப் பொழிந்ததுபோல் உணர்வாய். இந்த நிகழ்வுகள் உன்னைப் பொறுத்தே அமையும்.

மழை பெய்கிறது. பானை தலைகீழாக வைக்கப் பட்டிருக்கலாம். அதைத் திறந்தவெளி முற்றத்தில் வைத்தாலும் தண்ணீர் விழாது. அல்லது அது ஓட்டைப் பானையாக இருக்கலாம். அதை நேராக நிமிர்த்தி வைத்திருந்தாலும் அதில் தண்ணீர் நிற்காது.

நீ நேரானதும் ஓட்டையில்லாததுமான பானைபோல் என் சொற்பொழிவைக் கேட்டு ஏற்றால், அது மனத்திலுள்ள ஓட்டைகள் வழியாக வெளியேறாது. அப்பொழுது என் பேச்சு அப்படியே உன்னை வந்தடையும். நீ அன்புடனும், சமர்ப்பண உணர்வுடனும், சிரத்தையுடனும் என் பேச்சைக் கேட்டால் நீயாகிய பானை நேராக உள்ளது என்று பொருள்படும். அப்பொழுது அதில் மழைநீர் நிரம்பும், நீ ஆசீர்வதிக்கப்பட்டதுபோல் உணர்வாய்.

**பொழிக மழை, ஆசி மழை!**
**சுவை நீராய்ப் பொழியட்டும்!**
**பூமி நன்றாய் நனையட்டும்**
**மண்வாசனை எங்கும் பரவட்டும்**
**எல்லாப் பொழுதும் இனிதாகட்டும்**
**குயில்கள் தவிக்காது இருக்கட்டும்**
**காதலர் கலங்காது மகிழட்டும்**

உன்மீது ஆசிமழை பொழிகிறது. முடிந்த அளவு நனைந்துவிடு. அவ்வாறு நனையாவிடில் உன் மீதுதான் தவறு. என்னைக் குறைசொல்லக் கூடாது. ஆசிமழை பெய்யவில்லை என்று சொல்லக்கூடாது. இதேபோல் இக்காலத்தில் வாழ்வதால் நான் கிருஷ்ணரின் புல்லாங்குழல் கேட்டதில்லை என்று கூறுவதும்

தவறு. இப்பொழுதும் குழல் ஒலி கேட்டுக் கொண்டுதானிருக்கிறது. அது உனக்குக் கேட்கவில்லையெனில் அது உனது தவறு. கவனித்து அவ்வொலி கேட்டால் உன் மீதும் ஆசிமழை பொழியும். ஆசீர்வாதமே முக்தியுமாகும். அதற்கு முந்திய நிலை பிரார்த்தனை.

**பிரார்த்தனைக்கு பலமதிகம்**
**அது பயன் தராமல் போகாது**
**கண்ணுக்குத் தெரியாத உலகத்தையும்**
**இயக்கும் கடவுளின் கரங்களை**
**பிரார்த்தனை பிடித்து இயங்கவைக்கும்**

கண்ணுக்குத் தெரியும் இவ்வுலகிலும் உனது பிரார்த்தனை உன் உயிரின் ஆழத்திலிருந்து வெளிப் பட்டால் அது கடவுளை வசப்படுத்தி, உன் பிரார்த்தனைக்கேற்ப அவரை இயங்க வைக்கும். அவரிடமிருந்து ஆசிமழை பொழியும்.

பிரார்த்தனையை உரத்த குரலில் சொல்ல வேண்டிய அவசியமில்லை. உன் இதயம் பிரார்த்தனை உணர்வால் நிரம்பியிருக்க வேண்டும்; சிரத்தையால் நிரம்பியிருக்க வேண்டும். அன்பு நிரம்பி வெள்ளமாக வழிய வேண்டும். உன் இதயம் திறந்த பானைபோல் இருந்தால் அதில் கடவுளின் ஆசிகள் வந்திறங்கும்.

ஹரி ஓம் தத்ஸத்!

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

அஸமாதேர விக்ஷேபான்ன முமுக்ஷுர் ந சேதர: |
நிஸ்சித்ய கல்பிதம் பஷ்யன் ப்ரஹ்மைவ ஆஸ்தே
மஹாஷய: || 204

யஸ்யாந்த: ஸ்யாத் அஹங்காரோ ந கரோதி கரோதி ஸ: |
நிர் அஹங்கார தீரேண ந கிஞ்சித்தி க்ருதம் க்ருதம் || 205

ந உத்திக்னம் ந ச ஸந்துஷ்டம் அகர்த்ருஸ்பந்த வர்ஜிதம் |
நிராஷம் கதஸந்தேகம் சித்தம் முக்தஸ்ய ராஜதே || 206

நிர்க்யாதும் சேஷ்டிதும் வாபி யச்சிதம் ந ப்ரவர்ததே |
நிர்நிமித்தமிதம் கிந்து நிர்க்யாயதி விசேஷ்டதே || 207

தத்வம் யதார்த்தம் ஆகர்ண்ய மந்த: ப்ராப்னோதி மூடதாம்|
அதவா அஅயாதி ஸங்கோச மூட: கோஅபி மூடவத் || 208

ஏகாக்ரதா நிரோதோ வா மூடைர் அப்யஸ்யதே ப்ருஷம் |
தீரா: க்ருத்யம் ந பஸ்யந்தி ஸுப்தவத் ஸ்வபதே ஸ்திதா: ||
209

'மஹாஷய் எனப்படுபவர் விருப்பு வெறுப்பற்றவராகவும், சமாதிநிலை தேவைப்படாதவராகவும் உள்ள காரணத்தால் முமுட்சு அல்லர், முமுட்சு அல்லாதவராகவும் இல்லை. அவர் உலகைக் கற்பனையென்று கண்டு, பிரம்மநிலையில் இருக்கிறார்.' **(சுலோகம் 204)**

மஹாஷய் என்பதை மஹா-ஆஷய என்று பிரிக்கலாம். அதாவது பெரிய அளவிலான எண்ணம் உடையவர். உலகளாவிய அல்லது வானளாவிய கண்ணோட்டம் கொண்டவர்.

சாதாரணமாக இச்சொல் ஒருவரை அழைப்பதற்கான ஐயா என்பதுபோல் பயன்படுகிறது. கடிதத் துவக்கத்தில் அன்புள்ள ஐயா அல்லது அன்புடையீர் என்பதற்கு இச்சொல்லை உபயோகிக் கிறோம். இப்படி நாம் யாரை வேண்டுமானாலும் அழைக்கலாம்.

உண்மையில் இந்தச் சொல் மாமனிதர்களைத்தான் குறிக்கும். புத்தர், அஷ்டாவக்ரர், இயேசு கிறிஸ்து, கிருஷ்ணர், லாவோத்சூ ஆகியோருக்குப் பொருந்தும். காலப்போக்கில் அதன் அர்த்தம் சுருங்கி ஐயா என்று ஆகிவிட்டது; வெறும் உபசாரச் சொல்லாகிவிட்டது.

ஆன்மிகத்தில் மாமனிதர்கள் விருப்பு-வெறுப்பு அற்றவர் களாயிருப்பர். நாம் வாழ்க்கையில் எதை எதிர்பார்க்கிறோமோ அதில் நாம் சிக்கிக்கொள்கிறோம். எதிர்பார்ப்புகள் இல்லாவிடில் நமக்கு எந்த எல்லையும் இருக்காது. நாம் எதை எதிர்பார்க் கிறோமோ அதுவே நம்முடைய இன்ப துன்பங்களுக்கு காரணமாகிவிடுகிறது. எதிர்பார்த்தது கிடைத்தால் மகிழ்ச்சி. அது கிடைக்காவிடில் ஏமாற்றம், எரிச்சல். இந்த நிலையிலிருந்து விடுதலை பெறுவதே மோட்சம் என்பது. மோட்ச நிலையில் நாம் எதையும் சார்ந்திருக்க, எதற்கும் அடிமைப்பட்டிருக்க வேண்டிய தில்லை. நாம் நமக்குள் முழுமையாகிவிட்டதாகத் தோன்றும்.

நமக்கு விருப்பம் இருக்கும்வரை எதிர்ப்பும் உள்ளது. ஏனெனில் அதே விருப்பம் வேறு சிலருக்கும் இருக்கும். இதனால் பரஸ்பரம் மோதல்கள் ஏற்படுகிறது. போட்டியும் பகைமையும் உருவாகிறது. இந்நிலையில் நமது விருப்பம் நிறைவேறும் என்று முடிவாகச் சொல்ல முடியாது..

மோட்சம் பெற விரும்பினாலும் தடைகள் நிறைய உள்ளன. உடம்பு பலவிதமாகத் தடுக்கிறது. மனம் பலவிதமாகத் தடுக்கிறது. ஆசை அலைகள் உயரமாக எழும்புகின்றன. எதிர்பார்ப்புகள் துரத்துகின்றன. ஒரு திசையில் உடலையும் மனத்தையும் அடக்கினால் இன்னொரு திசையில் சுதந்திரமாகி விடுகின்றன.

கடவுளைப் பற்றிப் பேச்செழுந்தால் அது சாதாரண மக்களின் மேலோட்டமான ஆர்வம் காரணமாகவே இருக்கும்.

குழந்தைகள் ஒவ்வொன்றையும் பார்த்து இது என்ன, அது என்ன என்று கேட்பதுபோல்தான் கடவுளைப் பற்றி சராசரி மக்களின் விசாரணையும் இருக்கும். குழந்தைகள் சரியான பதில் கிடைத்தாலும், பதில் தவறாக இருந்தாலும் பொருட்படுத்துவதில்லை. மேலும், அவர்கள் தாங்கள் கேள்வி கேட்டதையும் சில நிமிடங்களில் மறந்துவிடுகின்றனர். பதில் கிடைத்தால் அதையும் மனத்தில் பதிவுசெய்வதில்லை. பதில் கிடைத்தாக வேண்டுமென அவர்கள் ஆழமாக எதிர்பார்ப்பதில்லை. மனத்தின் சுபாவம் பதிலை எதிர்பார்க்காத கேள்விகளும் கேட்பதாகும்.

திடீரென எழும்பும் ஆர்வத்தின் துணைகொண்டு யாரும் ஒருபொழுதும் சத்தியத்தை அடைந்ததில்லை.

ஆர்வத்தைவிட கூடுதலாகத் தாகம் தேவை. வாழ்க்கைத் தாகம் நம்மைத் தேடலில் கொண்டு போய்விடும். கேள்வி முக்கியமானது என்பதால் பதில் கண்டுபிடித்தாக வேண்டும் என்று பிடிவாதம் எழும். பதில் கிடைக்காத வரையிலும் வாழ்க்கை அர்த்தமற்றதாகத் தோன்றும்.

'ஆராய்ந்து பார்க்காத வாழ்க்கை வாழத் தகுதியற்றது' என்று சாக்ரடீஸ் கூறுகிறார். ஆராய்ந்து பார்த்தால்தான் வாழ்க்கையின் அர்த்தம் புரியும். எந்தச் சிந்தனையும் இல்லாமல் எப்படியோ வாழ்க்கையை ஓட்டினால் மனிதனுக்கும் மிருகத்திற்கும் இடையே என்ன வேறுபாடு? சரியான ஆராய்ச்சி, சரியாக அர்த்தம் கொள்ளுதல்,. சரியான உபயோகம் தெரியவந்தால், வாழ்க்கையில் சாரம் உள்ளது என்பதையும், உலகில் நமது இருத்தலுக்கான காரணமும் புரியும்.

இந்த சுலோகத்தில் வரும் முமுட்சா என்னும் சொல் கவனிக்கத்தக்கது. இதன்படி, கேள்விக்கான பதில் வாழ்க்கையை விட முக்கியமானது என்பதாகும். முன்பு கூறிய வாழ்க்கை தாகம் என்பது வாழ்க்கையை வாழ்வதற்கு, வாழ்க்கை பற்றிய கேள்விகளுக்கான பதில் அவசியம் தேவை என்பதைக் குறிக்கிறது. ஆனால் அந்தப் பதில் வாழ்க்கையைவிட முக்கியமானதல்ல என்றும் கருதுகிறது. வாழ்க்கையை விலையாகக் கொடுத்துப் பதிலைப் பெறலாம் என்று எவராவது கூறினால் அதில் என்ன

சாரம் இருக்கிறது? வாழத்தான் பதில் வேண்டுகிறோம். வாழ்க்கையை இழந்து பதில் பெறுவதானால், அந்தப் பதிலை வைத்துக்கொண்டு என்ன செய்வது?

முமுட்சை மோட்ச விருப்பத்தைக் குறிக்கிறது; முழு சுதந்திரத்திற்குத் தீவிரமாக ஆசைப்படுவதைக் குறிக்கிறது. ஆகவே உயிரையே பணயமாக வைத்தாலும் பரவாயில்லை. இந்நிலை குறித்த பதிலைப் பெற உயிரையே இழக்கலாம்.

முமுட்சை உணர்வு ஆழமாகச் செல்கிறது. ஆனால் இதற்கப்பாலும் ஒரு நிலை உள்ளது. அங்கே சென்றடைய முமுட்சை நிலையையும் கைவிட நேரிடும்.

முமுட்சு என்பது சுதந்திரமான நிலையைக் குறிக்கிறது. மோட்ச விருப்பம் என்பதும் இதுவே. மோட்சத்தின் இயற்கை என்னவென்றால், எந்த ஆசைமிஞ்சி இருந்தாலும் மோட்சம் கிடைக்காது என்பதுதான். மோட்சத்திற்கு ஆசைப்படுவதேகூட மோட்சம் பெறுவதற்குத் தடையாக அமையும்! ஆசை என்பது விலங்குபூட்டுவதற்கு சமம். பணம், பாசம், காதல்-முதலியவையும் விலங்குகளே. மோட்ச ஆசை, அதாவது, கடவுளை அடைய விரும்பும் ஆசை கடைசி விலங்காகும். அது பொன்விலங்கு. ரத்தினங்கள் பதிக்கப்பட்டது. இந்தப் பொன்விலங்கை மாட்டிக்கொள்ள முடிந்தவர்கள் பாக்கியவான்கள். ஆனால் அதுவும் அடிப்படையில் விலங்குதான். 'நான் மோட்சம் பெறவேண்டும்' என நினைத்தாலே சங்கடம் தோன்றுகிறது. இந்த எண்ணம் நம்மை நிகழ்காலத்திலிருந்து பிடித்திழுத்து எதிர்காலத்திற்கு இட்டுச் செல்கிறது. மோட்ச விருப்பம் என்பது தலைசிறந்த விருப்பம்தான். ஆனால் அதுவும் அடிப்படையில் ஆசைதானே.

அதிகபட்சச் செலவை ஏற்படுத்தும் நோயை நாம் உயர்த்திப் பிடித்துக் கொண்டாடுவோமா? டாக்டர் நம்மிடம், "உங்களுக்கு வந்திருப்பது ராஜரோகம் (அரச வியாதி); இது ராஜா-மகாராஜாக் களுக்கே வருவது வழக்கம் என்று கூறினால் கர்வப்படுவோமா? நோய் என்பதே அடிப்படையில் விரும்பத்தகாத ஒன்றுதானே.

மோட்ச விருப்பமும் நம்மை மற்ற ஆசைகளைப் போலவே விலங்காகக் கட்டிப்போடுகிறது. ஆசை இருப்பது எதைக் காட்டுகிறது? நாம் தற்சமயம் எப்படி உள்ளோமோ அதில் நமக்கு சம்மதமில்லை, திருப்தியில்லை. நாம் வேறு ஏதோ ஆக வேண்டும். நாம் எங்கு எந்நிலையில் உள்ளோமோ அதை மகிழ்ச்சியாகக் கொண்டாடவில்லை. ஆடிப்பாடவில்லை. நம் ஆசை நாளை நிறைவேறினால் ஆடல்-பாடலை அப்பொழுது வைத்துக் கொள்ளலாமென நினைக்கிறேன்.

நமது வாழ்க்கைக் கண்ணோட்டம் எதிர்காலத்தை நோக்கியதாக உள்ளது. எதிர்காலத்தில் மோட்சத்தில், சுவர்க்கத்தில் நமக்காக சந்தோஷம் காத்திருப்பதாக நினைக்கிறோம். இந்தக் கற்பனை தற்சமயம் நமக்குள்ள துன்பத்தை மிகைப்படுத்திக் காட்டுகிறது. கனவில் அனுபவிக்கும் இன்பம் யதார்த்த வாழ்க்கையின் துன்பத்தைப் பெரிதுபடுத்திக் காட்டுகிறது. நாம் சந்தோஷம் அனுபவிக்க விரும்பினால் இன்றே சுகமாக இருக்க முயல வேண்டும். நாளைய தினம் பற்றி எப்படியிருக்குமென யாருக்கும் தெரியாது. சுவர்க்க வாழ்க்கை அனுபவமும் யாருக்கும் கிடையாது. இன்று உனது புல்லாங்குழல் ஒலிக்காவிட்டால் நாளை அது ஒலிக்கும் என்று கூற முடியாது.

இன்றில்லாவிடில் என்றும் இல்லை. இப்பொழுது இல்லாவிடில் எப்பொழுதும் இல்லை.

நாம் எதிர்காலத்துடன் கட்டப்பட்டுள்ளோம். எதிர்கால ஆசை என்னும் கயிறு நம்மை இழுத்துக் கொண்டே செல்கிறது. நிகழ்காலத்தை அனுபவித்து வாழ்வதே மோட்ச வாழ்க்கை. இந்த நிமிடத்து வாழ்க்கையில் லயித்துப்போனால், நீ முக்தி (விடுதலை) அடைந்துவிட்டதாகப் பொருள். நீ கையிலுள்ள களாக்காயுடன் திருப்தியடையாமல் நாளைய பலாக்காய்க்காக ஆசைப்பட்டால், 'நாளை' என்னும் அந்த நாள் என்று வரும் என்றோ, வருமோ-வராதோ என்றோ யாருக்கும் தெரியாது. நாளை என்பது நமனது (யமனது) நாள் என்பதால் நாளை நாம் இருப்போமா என்றும் தெரியாது.

முமுட்சாசையும் (மோட்ச ஆசையும்) நம்மைக் கட்டிப் போடும் என்கிறார் அஷ்டாவக்ரர். மோட்ச ஆசையும் நம்மை எதிர்காலத்திற்குக் கொண்டு செல்கிறது. மோட்சம் நாம் இறந்தபின் கிடைக்கும் தன்மையுடையது. வாழும்போதே மோட்சம் கிடைக்கலாம் என வைத்துக்கொண்டாலும் அது இன்றே கிடைக்காது. அதற்குக் கடும் முயற்சி தேவை. மலையில் ஏறுவதுபோல் சிரமப்பட வேண்டும். தீவிரமான பயிற்சி, தவம், ஜபம், தியானம் என்றெல்லாம் பாடுபட்டால் வாழும்போதே மோட்சம் (ஜீவன் முக்தி) கிடைக்கலாம்.

மோட்சம் என்பது ஆசைப்பட்டுப் பலனாகக் கிடைக்கும் ஒன்றில்லை. அது உன் சுபாவத்திலேயே ஊறியிருக்கிறது. மனம் இருந்தால் மோட்சம் உண்டு. ஆகவே மோட்சம் இங்கேயே உள்ளது; இப்பொழுதே உள்ளது. மோட்ச ஆசையைக் கடந்து ஒரு நிலை உள்ளது. அந்த நிலையிலுள்ள மனத்தில் மோட்ச ஆசையும் எழாது, சுதந்திர ஆசையும் எழாது. அந்த பூமியில் எல்லா ஆசைகளும் வேரோடு விழுந்துவிடுகின்றன. கடவுளை அடைய வேண்டும் என்னும் ஆசையும் இல்லாது போகிறது!

அந்த நேரத்தில் உனக்குள் என்ன நிகழ்கிறதோ அதுவே மோட்சம். அந்த சமயம் எவரை உன் உள்ளுணர்வு அடையாளம் காண்கிறதோ அவரே கடவுள். அப்பொழுது உனக்குள் பரவும் ஒளிதான், பெருமிதம்தான் உனது ஆளுமை. இவ்வாறு முதலில் மேலோட்டமான ஆர்வம், பிறகு தேடல் தாகம், முமுட்சை ஆகிய நிலைகளைக் கடந்து தொடர்ந்து சென்று, ஆசைகளே இல்லாத, ஈசனோடு ஆயினும் ஆசை இல்லாத அபூர்வமான மனநிலையை அடைதல் ஆன்மிக வாழ்க்கையின் இறுதிலட்சியமாகும்.

ஆன்மிகத் தலைவர்களும் ஆசையைக் கைவிடுமாறு உபதேசித்திருக்கிறார்கள். கடவுள் மீது ஆசை கொள்ளுமாறு அவர்கள் கூறுகிறார்கள். பெயர்தான் மாறுகிறதே தவிர ஆசை என்னும் உணர்வு அப்படியேதானே உள்ளது. பண ஆசை, பொருளாசை, பதவி ஆசை என்று பெயர்தானே மாறுகிறது. 'லேபில்'தான் வெவ்வேறு. மூலப்பொருள் ஆசை உணர்வுதானே. முன்பு உலகில் பதவி கேட்டாய். இப்போது முதன்மையான

பதவியாகிய பரமபதம் கேட்கிறாய் அதாவது, நீ எப்பொழுதும் பிச்சைக்காரனாகவே உள்ளாய்.

அஷ்டாவக்ரர் உலகம், மோட்சம் என்று பிரிக்காமல் எல்லாவற்றையும் விடச் சொல்கிறார். ஆசை, ஆசைதான். எதன்மீது ஆசை என்பது முக்கியமில்லை. பணமா, பதவியா, தியானத்தில் முழுமையா என்று எதைக் கேட்கிறாய் என்பது முக்கியமில்லை. பிச்சைக்காரன்தான் யாசிப்பான். நீ எதையும் யாசிக்காதே.

யாசிப்பதை நிறுத்தியதும் அபூர்வம் ஒன்று நிகழ்கிறது. இதுவரை உனது சக்தி நூற்றுக்கணக்கான வேண்டுகோள்களில் சிக்கியிருந்தது. அது விடுதலை பெறுகிறது.

சக்தியில் ஒவ்வொரு பங்கு பணம் பெறுவதில், பதவி பெறுவதில், கோயிலுக்குப் போவதில், கடையில் உட்காருவதில் (வியாபாரத்தில்) என்றெல்லாம் இதுவரை செலவானது. மிஞ்சியதில் பூஜை-பிரார்த்தனை, கீதை முதலியவை ஓதுதல், தியானம் செய்தல் முதலியவற்றில் கழிந்தது. ஆசை என்னென்ன உருவமெல்லாம் எடுத்து உன் ஆற்றலை அழிக்கிறது என்று அஷ்டாவக்ரர் எச்சரிக்கிறார்.

சிறிது நேரம் ஓரிடத்தில் அமைதியாக உட்காரு. எதற்கும் ஆசைப்படாமலிரு. இப்போது உன் மனத்தில் அலை எழுகிறதா? கோரிக்கை எதுவுமில்லையெனில் மனத்திலும் சலனமிருக்காது. தியானம் செய்யும்பொழுதும் மனத்தில் எண்ணங்கள் கொந்தளிப்பதாக நீ சங்கடப்படுகிறாய் அல்லவா? என்ன காரணம்? நீ தியானத்தை அதன் மூலம் கிடைக்கக்கூடிய பலன்களுக்காக ஆசைப்பட்டு மேற்கொள்ளுவதுதான்.

என்னிடம் தியானம் பற்றி விசாரிப்பவர்கள் அதன் மூலம் சுகமும் செல்வமும் கிடைக்குமா; நோய் தீருமா; வெற்றி ஏற்படுமா என்று அறிய விரும்புகின்றனர். இத்தகையோர் தியானம் செய்கையில் மனம் அமைதியுறாமல், எண்ணங்கள் கொந்தளிக்கின்றன. இவர்களின் தியானம் முழுமை பெறாமல் சங்கடப்படுகிறார்கள்.

நீ எதற்கு ஆசைப்படுகிறாயோ அதுவாகவே ஆவாய். நீ ஏராளமான பொருட்களைச் சேகரிப்பவனாயின் நீயும் ஒரு குப்பைப் பொருளைப் போலவே தூக்கி எறியத்தான் என்னும் நிலையை அடைவாய். நீ பணப் பிசாசாகத் தேடி அலைந்து சேகரித்தால், நீ உன் ஆளுமையை இழந்து காசு-பணம்-துட்டு என்னும் நிலைக்குத் தாழ்ந்து விடுவாய். உன் விருப்பங்கள்தான் உனது ஆளுமையின் எல்லையை நிச்சயிக்கின்றன.

அது மட்டுமல்ல, உனது விருப்பத்தின் தீவிரம் உனது முகச்சாயலைக்கூட மாற்றிவிடும். இதனால்தான் நாம் சிலரைப் பார்த்ததும். இவன் கருமி, இவன் காமுகன் என்று உடனே முடிவுகட்டி விடுகிறோம். வாய்ச் சொற்கள் தேவையில்லை; முகமே பேசிவிடுகிறது. மனத்திலுள்ளது முகத்தில் பிரதிபலிப் பாகிறது. அகத்தின் அழகு முகமென்னும் கண்ணாடியில் தெரிகிறது.

**சூ**ஃபி கதை ஒன்று ஓர் அரசர் மூஸா* (Moses) வின் பக்தர். அவர் தனது நாட்டின் தலைசிறந்த ஓவியரை அழைத்து மூஸாவின் ஓவியம் தயாரித்து அரச சபையில் மாட்டுவதற்கு ஏற்பாடு செய்தார். மூஸா உயிருடன் இருந்ததால் ஓவியர் அவருடனேயே பல மாதங்கள் தங்கி ஓவியத்தை பூர்த்தி செய்தார். அந்த ஓவியத்தைப் பார்த்து அரசர் அதிர்ச்சியடைந்தார்.

“ஓவியரே, இந்த ஓவியத்திலிருப்பவர் மூஸா மாதிரியே தெரியவில்லையே. முகத்தில் கொலைகாரனின் சாயல் அல்லவா தெரிகிறது! கண்களிலும் தீவிரமான காமம் காணப்படுகிறது. ஒரு புனிதருக்குரிய சாந்தம், தூய்மை, கருணை போன்றவை முகத்தில் பிரதிபலிப்பாகவில்லையே” என்று சினமடைந்தார்.

ஓவியர், “அரசே! நான் தவறேதும் செய்துவிடவில்லை. அவரது முகம் எப்படியிருந்ததோ அப்படியே சித்திரித்துள்ளேன்,” என்றார்.

மூஸாவிற்குத் தனது படம் வரையப்படுவது தெரியும். அவர் அதைக் காண்பிக்குமாறு அரசருக்குக் கட்டளையிட்டார். அரசர்

* யூத மதத்தை நிறுவியவர்.

படத்தைக் காண்பித்து நடுக்கத்துடன் சொன்னார்: "என் பேரில் தப்பில்லை. தலைசிறந்த ஓவியரைத்தான் தேர்ந்தெடுத்தேன். அவர் இந்த மாதிரிக் குழப்பிவிட்டார் என்னை மன்னிக்கவும். இது உங்கள் படம் போலவே தோன்றவில்லை. முகம் யாரோ கொலைகாரனுடையது போலவும், கண்கள் காமுகனுடையதைப் போலவும் அவர் வரைந்துவிட்டார். இதோ என் கண்ணெதிரே உள்ள உங்கள் முகத்தில் தெரிகின்ற தெய்விக ஒளி ஓவியத்தில் பிரதிபலிப்பாகவில்லை."

மூஸா சிரித்தார். "அரசே! கவலை வேண்டாம். ஓவியர் சரியாகத்தான் தனது பணியைச் செய்துள்ளார். இதில் எனது கடந்த கால வாழ்க்கை பதிவாகியுள்ளது. அதன் சின்னங்கள் என் முகத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டன. அவை அழியவில்லை. பிறகு எனது வாழ்க்கைப் பாதை மாறிவிட்டது. ஆனால் அந்தச் சின்னங்கள் மாறவில்லை. அது எனது வாழ்க்கையின் முதல் பாதியின் கதை. நான் இப்பொழுதெல்லாம் தியானத்தில் லயிக்கிறேன். சாந்தமாகிவிட்டேன். சிற்றின்ப ஆசைகளும் மிஞ்சியிருக்கவில்லை. போராட்டம், வன்முறை, குரோதம் முதலியவை இப்போது இல்லை. அவை முன்பிருந்தன. உன் ஓவியர் தோலுக்குக் கீழே உள்ளதையும் காணும் அபூர்வ ஆற்றல் பெற்றவராயிருக்கிறார். இதை நானும் அறிவேன். முகம் பார்க்கும் கண்ணாடியில் நான் என் முகத்தைக் கூர்ந்து ஆராய்கையில் எனது கடந்த காலத்தின் மோசமான பதிவுகள் என்னாலும் காண முடிகிறது. பாம்பு போய்விட்டது. ஆனால் மணலில் அதன் தடம் படிந்திருக்கிறது. கயிறு எரிந்து முடிந்துவிட்டது. அதன் கரி வடிவம் நீடிக்கிறது." என்று கூறி அரசரை சமாதானப்படுத்தினார்.*

உன் ஆசைகளின் மொத்த உருவம்தான் உனது வெளிப்புற முக அமைப்பும் உட்புற ஆளுமையின் அமைப்பும் ஆகும்.

மாமனிதர் (மஹாஷய்) என்பவர் கடைசி ஆசையாகிய மோட்ச ஆசையும் இல்லாதவராக இருப்பார். அவருக்கு சமாதிநிலை பயிலும் தேவை இருக்காது. சமாதி ஒரு மருந்து

---

* **Oscar Wilde, 'The Picture of Dorian Gray'** நாவலில் கத்நாயகனின், ஒழுக்கம் குறையக் குறைய அவனது பழைய ஓவியம் விகாரமாக மாறுகிறது.

போன்றது. சித்தத்தை அடக்குவதற்கு பதஞ்சலி முனிவர் யோகத்தைப் பரிந்துரைக்கிறார். சித்தத்தில் ஆசை மிஞ்சியிருந்தால்தானே அதை அடக்குவதற்கு சமாதி நிலை தேவை. ஆசை நோய் இல்லாதபோது சமாதி என்னும் ஔடதமும் தேவைப்படாது. சமாதி என்பது சமாதானம் என்னும் அர்த்தம் தருகிறது. சமாதானம் என்பது சமரச நிலையாகும். ஆசை என்னும் பிரச்சினை இல்லாத சூழ்நிலையில் சமாதானம் (சமாதி) என்பதற்கு இடமில்லை.

இத்தகைய மாமனிதன் உலகத்தைப் பெருங்கனவு என்று பார்க்கிறான். ஞானிகள் உலகமே இல்லை என்று சொல்வதாகப் பெரும்பான்மையோர் நினைப்பது தவறான முடிவு. ஞானி உலகம் உண்டு என்பான். அதேசமயம் அது ஒரு தோற்றம் மட்டுமே என்று சுட்டிக்காட்டுகிறான்.

ஒரு நேரான குச்சியைத் தண்ணீர் நிரப்பிய கண்ணாடிப் பாத்திரத்தில் போட்டுப்பார். அது கோணலாகத் தெரியும். அது தண்ணீரில் வைக்கப்பட்ட பிறகுதான் கோணலாக வளைந்தது என்று நீ சொல்லமாட்டாய். அது அவ்வாறு வெறும் காட்சி மட்டுமே தருகிறது. தண்ணீரில் கையைவிட்டுக் குச்சியைத் தடவினால் அது நேராகத்தான் உள்ளது என்பதை உணர்வாய். குச்சி உண்டு. அது கோணலாகத் தெரிவது தோற்றம். ஒரு பொருள் காற்றெனும் ஊடகத்தில் (வெளியுலகில்) ஒருவிதமாகவும் நீர் என்னும் ஊடகத்தில் வேறு விதமாகவும் தோற்றம் தருகிறது. ஒளிச்சிதறல் கோட்பாடு (Theory of Refraction) காரணமாக இப்படி நிகழ்கிறது.

உலகம் ஒரு தோற்றம் மட்டுமே என்றால் நிஜமானது எது என்னும் கேள்வி எழும். இதற்கான விடை கடவுள் என்பதாகும். இதை அறிந்துள்ளதால் ஞானி உலகத்தில் வாழ்ந்தாலும் கடவுளில் லயிக்கிறான்.

ராமாயணத்தில் ராமன் பொன்மானைப் பின்பற்றி ஓடுகிறார். அடிமுட்டாளுக்கும் தங்கமான் என்பது கிடையாதெனத் தெரியும். அப்படி உண்டென்று நினைத்தால் அது கற்பனை. கனவு அல்லது பிரமையாகத்தான் இருக்கும். ஆனால் ராமன் பொன்மானைத்

துரத்துவதை விதி என்று சொல்வதா? இல்லாத ஒன்றைத் தேடினால், இருப்பதையும் இழக்க நேரிடும். இல்லாத பொன்மானைத் தேடியதால், இருக்கின்ற பெண்மான் போன்ற சீதையை ராமன் இழந்தார்.

ராமாயணத்தில் வரும் இந்நிகழ்ச்சி பொருள் பொதிந்தது. நமக்குள்ளே இருக்கும் ராமனும் இப்படித்தான் போலிகளின் பின்னே ஓடுகிறார். இதனால் நமக்கு நிறைய இழப்பு ஏற்படுகிறது. கம்பீரமான ராமனின் ஆளுமை இந்நிகழ்ச்சியால் சேதப்பட்டதைப் போல் நாமும் போலிகளின் பின்னால் ஓடி நமது ஆளுமை சிதையச் செய்கிறோம். உலகப் பொருட்கள் பொன்மானைப் போலவே மேல்மினுமினுப்பு மட்டுமுடைய போலிகள், உலக உறவுகள் போலியானவை என்று உணர்ந்ததும் நீ உன்னிடம் திரும்பிவருவாய்; நிஜமான உனது ஆத்மாவில் லயிப்பாய். பிறகு நீ எந்த மானையும் துரத்தி எங்கும் போகமாட்டாய்.

பிறகு பொன்மான்கள் கண்ணில் படா என்று அர்த்தமில்லை. அவை தொடர்ந்து தெரியும். வெயிலில் அவை ஜொலிப்புடன் மயக்கும். அவை உன்னை அழைக்கும். ஆனால் பொன்மான்கள் நிறைந்த இவ்வுலகம் கற்பனை என்று இப்போது உனக்குத் தெரியும். இனி நீ ஏமாறமாட்டாய்.

இந்த நிலைக்கு வந்துவிட்டால் இனி சமாதி பயில வேண்டியதில்லை. மனத்தில் எழும் அலைகளை அடக்க விசேஷ முயற்சி தேவைப்படாது. பதஞ்சலி முனிவரோ 'யம-நியம-ஆசனம்-தாரணை-தியானம்-சமாதி' என்னும் வரிசைப்படி முயன்று மனத்தை அடக்கச் சொல்கிறார். மனத்துடன் போராடுவது அவர் கூறும் யோக மார்க்கம் ஆகும்.

பதஞ்சலி முனிவர் கூறும் வழி சமாதியில் வந்து முடிகிறது. அதற்குப் பிறகுதான் அஷ்டாவக்ரர் கூறும் வழி ஆரம்பம். அவர் சமாதி நிலையை விடுவதிலிருந்து தொடங்குகிறார். பதஞ்சலி முடிக்கின்ற இடம் அஷ்டாவக்ரர் ஆரம்பிக்கின்ற இடமாக உள்ளது. அஷ்டாவக்ரர் கூறியது இறுதியானது. அதைக் கடந்த உபதேசம் எதுவும் கிடையாது. அவர் கூறியது கடைசிப் பாடம். அஷ்டாவக்ரரைப் புரிந்துகொண்டால் ஆன்மிகத்தில் வேறு

எதுவும் தெரிந்துகொள்ள வேண்டியது மிஞ்சியிராது. அவரைப் புரிந்துகொண்டவன் ஆன்மிகத்தில் எல்லாவற்றையும் அறிந்து கொண்டவன் ஆவான். அவர் கூறியதை அனுபவத்திலும் செயல் படுத்துபவன் அதிர்ஷ்டசாலி. அவன் கடவுளில் லயித்து விடுகிறான்.

உன்னை எல்லைகளுக்குள் கட்டிப்போடாதே. லட்சுமண ரேகா (கோடு) என்று கூறிக்கொண்டு உன்னைச் சுருக்கிக் கொள்ளாதே. உதாரணமாக, நீ இந்துமதத்தைச் சேர்ந்தவன் என்கிறாய். அப்படியானால் நீ குறிப்பிட்ட விதமாகவே வாழும் கட்டாயத்துக்கு உள்ளாகிறாய். உன்னைச் சுற்றிலும் இந்துமதக் கோட்பாடுகளும் நம்பிக்கைகளும் ஒரு சுவரை எழுப்பி விடுகின்றன. இம்மாதிரியான எல்லைகள் நீ விசுவரூபம் எடுப்பதைத் தடுத்துவிடுகின்றன. மற்றவர்கள் நீ யார் என்று சொல்கிறார்களோ அவ்வாறே நீ ஆகிவிடுகிறாய். அதாவது, பலர் உன்னைக் கழுதை என்று சொன்னால், அதை நீ நம்பத் தொடங்கினால் ஆச்சரியமில்லை! வசியக்கலை (ஹிப்னாடிசம்) வல்லுநர்கள் இது சாத்தியம்தான் என்று ஒப்புக்கொள்கின்றனர்.

உன்மீது உன்னைச் சுற்றிலும் உள்ளவர்கள் தங்கள் கண்ணோட்டத்தைச் சுமத்தி பல லட்சுமணக் கோடுகள் போட்டுவிடுகிறார்கள். பெற்றோர், ஆசிரியர்கள், சமூகம் பெரியவர்கள், மதத் தலைவர்கள் என்றெல்லாம் ஆளுக்கொரு கோடு வரைந்து விடுகிறார்கள். இப்படி எல்லோரைச் சுற்றியும் எத்தனையோ கோடுகள். இதனால்தான் அந்த எல்லைகளுக்குள் வாழ்க்கை நடத்திப் பெரும்பாலோர் சராசரி மனிதர்கள் என்ற அளவிலேயே முடிந்து மடிந்து போகிறார்கள். அவர்கள் வாழ்க்கையில் எந்தப் புரட்சியும் நிகழ்வதில்லை.

**கிளையில் ஒட்டியிருந்த**
**மலர் வீழ்ந்து முடிந்தது**
**அதன் நறுமணமோ**
**அகிலம் எங்கும் பரவியது**
**சந்திரனுக்கு வானத்தில் சிறை**
**நிலவொளி பரவுது உலகெங்கும்**
**மூங்கில் நிற்பது ஒரேயிடத்தில்**

**அதில் பிறந்த ஒலி தழுவுது உலகை**
**அகல்விளக்கின் ஒளி சிறிது**
**அது விரட்டும் இருட்டின் பரப்பதிகம்**
**கடலும் எல்லைக்குட்பட்டதுதான்**
**அதன் நீர் மேகம் ஆகி விண்ணைத் தொடுது**

உனது வாழ்க்கை உன் கையில், உன்னைப் பொறுத்தே எல்லாம் உள்ளது. நீ பூவாக இருந்து, வாடி வதங்கி, கீழே விழுந்து மண்ணில் கலக்க விரும்புகிறாயா அல்லது நறுமணமாகக் காற்றில் கலந்து உலகெங்கும் சுற்றிவர விரும்புகிறாயா?

பூவாக முடிந்து போவது இல்லற வாழ்க்கை. நறுமணமாக இடத்தையும் காலத்தையும் கடப்பது சந்நியாசம். மலர் என்பது ஓர் எல்லை. அதை வீடு அல்லது கட்டுப்பாடான இடம் எனலாம். அது ஒரு சுவர். சந்நியாசம் என்பது நறுமணம்போல் சுதந்திர மானது. எந்த திசையிலும் பயணிக்கலாம். எல்லாக் காற்றும் சாதகமானவை. வானம் முழுதும் துறவிக்குச் சொந்தம்.

'உள்ளத்தில் அஹங்காரம் நிறைந்தவர் செயல்கள் (கர்மம்) புரியாவிடிலும் செயல்கள் செய்பவராவார். அஹங்காரம் இல்லாத மனிதர்கள் செயல்கள் புரிந்தாலும் எதையும் செய்பவராகக் கருதப்படமாட்டார்.' **(சுலோகம் 205)**

**அ**ஹங்காரம் உள்ளவனாக இருந்தால் நீ ஒன்றும் செய்யாவிடிலும் கர்மம் புரிபவனாகிறாய். அஹங்காரம் (மிகையான தன்னுணர்வு) நீங்கிவிட்டால், உன் உழைப்பு கருமம் என்று எடுத்துக்கொள்ளப்பட மாட்டாது. ஏனென்றால், அஹங்காரம் நீங்கினால், 'எல்லாம் செய்பவன் (கர்த்தா) கடவுள்தான், நானல்லன்' என்னும் உணர்வு மேலோங்குகிறது.

கர்த்தா உணர்வு இருக்கும்வரையிலும் வீட்டைவிட்டு வெளியேறித் துறவியாக ஆவதில் பலனில்லை.

**நா**ன் ஒருமுறை ஓர் ஊருக்குச் சென்றிருந்தேன். அதேசமயம் அங்கு ஒரு சாமியார் வந்து தங்கியிருந்தார். மக்கள் என்னிடம், "அவர் எந்த வேலையும் செய்வதில்லை. நாள் முழுதும் சும்மா உட்கார்ந்தபடியே இருக்கிறார்," என்று வியந்து கூறினார்கள்.

நானும் சிலருடன் சென்று அவரைப் பார்த்தேன். உடலின் பெரும்பகுதியில் விபூதி பூசியிருந்தார். நெற்றியில் பெரிய அளவில் குங்குமப்பொட்டு நான் மக்களிடம், "அவர் எதுவும் செய்வதில்லை என்கிறீர்களே. உடல் முழுதும் விபூதி பூசுவதும், நெற்றியில் பொட்டு வைத்துக்கொள்வதும்கூட வேலைகள்தானே. சம்மணம் போட்டு உட்காருவதும் வேலைதானே. காட்டுக்கு ஓடிப் போனாலும் அந்த ஓடுதலும் வேலைதான். உடலளவில் சிறிய அசைவும் வேலைதான். உயிர் வாழ்தல் என்பதே வேலைதான். உயிருள்ள வரையிலும் ஒவ்வொருவனும் ஏதாவது செய்தபடிதான் உள்ளான்," என்று சுட்டிக்காட்டினேன்.

நான் தொடர்ந்து பேசினேன்: "இந்தச் சாமியார் எதற்காக இந்த அளவிற்கு உடல் முழுதும் விபூதியும், நெற்றியில் பெரிய பொட்டுமாக உள்ளார்? ஒன்றும் செய்யாதவராயின் எதற்கு இந்த வெளி வேஷம்? உங்களை பயமுறுத்தத்தானே? அப்போதுதான் அவர் பெரிய மகான் என்று நினைத்துக் காணிக்கை வரிசையோடு வருவீர்கள் என்று அவருக்குத் தெரியும். காலில் விழுந்து வணங்குவீர்களென்று அவர் அறிவார்."

கர்மத்திலிருந்து தப்பித்து ஓட எந்த உபாயமும் இல்லை. நீ எது செய்தாலும் அது கர்மம்தான். ஆகவே உன் கையிலிருப்பது கர்த்தா உணர்வைக் கைவிடுவது மட்டுமேயாகும். செய், ஆனால் செய்பவன் என்று உன்னை நினைக்காதே. அவ்வாறு கர்வப்படாதே. பிறகு உன் வாழ்வில் நடப்பதை எல்லாம் கடவுள் உன் மூலம் செய்விக்கிறார் என்று எடுத்துக்கொள்.

இதைத்தான் அஷ்டாவக்ரர் உலர்ந்த இலைபோல் இரு என்கிறார். காற்று அடிக்கும் திசையில் அது பறக்கிறது. கிழக்கோ, மேற்கோ எங்கு அடித்துச் செல்லப்பட்டாலும் அதற்கு எல்லாம் ஒன்றுதான். காற்று நின்று கீழே விழுந்துவிட்டாலும் பரவாயில்லை. ஞானியின் மனப்பான்மையும் இதுவே. அவன் இயங்குவதாக நினைப்பதில்லை. கடவுளால் தான் இயக்கப்படுவதாக நினைக்கிறான்.

'உலகம் பணத்தைத் துரத்தி ஓடுகிறது. எல்லோரும் எப்போதும் ஓட்டமாக இருக்கிறார்கள். நான் சாந்தமாக அமர்ந்து

தியானத்தில் ஈடுபட்டுள்ளேன்' என்று கர்வப்படாதே. இதுவும் கர்த்தா மனப்பான்மையின் கீழ்தான் அடங்கும். கர்த்தா உணர்வு என்பது அஹங்காரத்தின் இன்னொரு பெயர்தான். அஹங் காரத்தை வெளிப்படுத்துவது கர்மத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கிறது.

அஹங்காரம் ஒழிந்தால் கர்த்தா உணர்வும் நீங்குகிறது. இந்நிலையில் கர்மம் மட்டுமே மிஞ்சுகிறது. அப்படியானால் அதைச் செய்பவர், உன் மூலமாகச் செய்யவைப்பவர், கடவுளாகத் தான் இருக்க முடியும்.

ஆகவே கர்மம் என்பது, செயல்கள் நடைபெறுவது தவிர்க்க முடியாதது. ஆனால் நம் நாட்டில் பெரும்பான்மையான சந்நியாசிகள் ஆசி கூறுவதற்காகக் கையை உயர்த்துவதைத் தவிர எந்த வேலையும் செய்வதில்லை. இதனால்தான் நம் நாடு தீனமான நிலையில் உள்ளது; வறுமையில் வாடுகிறது.

நீ ஏழை, பசியால் வாடுபவன், நோயாளி என்பது போன்ற அவல நிலையிலிருந்தால் நீதான் அதற்குப் பொறுப்பு. உன்னை அந்த நிலைக்குத் தள்ளிய சாஸ்திர பண்டிதர்களும், புரோகிதர்களும் பொறுப்பு. சும்மா இருப்பதே சந்நியாசம் என்று அவர்கள் முடிவு கட்டிவிட்டார்கள். சும்மா இருத்தல் சுகமென்று அஷ்டாவக்ரர் ஒத்துக்கொள்ளவில்லை. 'தொழில்புரி. ஆனால் அஹங்காரம் கொள்ளாதே. 'நான்' என்னும் உணர்வுடன் செயல்புரியாதே' என்கிறார். ஆம், பரமாத்மா உன் மூலம் எதுவும் செய்யட்டும்.

நீ புல்லாங்குழல் ஆகிவிடு. அதுவே பாட்டை ஒலிக்கட்டும்.

வாழ்க்கை என்பது செயல்களின் திரட்டு. வாழ்க்கை என்பது சக்திமயமானது. ஆகவே சோம்பேறித்தனம் சரியன்று. சும்மா இருத்தல் தற்கொலைக்கு சமம். கர்மம் இன்மை தவறு. கர்த்தாவாக இன்மை (அகர்த்தா) சரியானது. அகர்த்தாவாக இருந்து செயல்பட்டால் கடவுள் உன் மூலம் இயங்குவார். 'செய்பவன் நானல்லன்; கடவுள் என் மூலம் செய்விக்கிறார். நான் கடவுளின் கருவி' என்பதை நினைவில் வைத்துக்கொண்டால், நாம் செய்யும்

வேலையின் தரம் உயர்ந்துவிடும். ஏனெனில் நம் மேலதிகாரி நம் மூலம் ஒரு வேலையைச் செய்விக்கும்போது நாம் சிறப்பாகச் செய்கிறோமல்லவா? அதே வேலையை நாம் நமக்காகச் செய்யும்போது சற்று அலட்சியமாக இருக்கிறோம். ஒரு வேலைக்காரி தன் வீட்டைப் பெருக்குவதற்கும் எஜமானரின் வீட்டைப் பெருக்குவதற்குமிடையே வித்தியாசம் உண்டல்லவா?

பிறகு எங்கும் ஓட வேண்டியதில்லை. எதையும் தியாகம் செய்ய வேண்டியதில்லை. ஆனால் எதை விடவேண்டுமோ அதை நாம் விடுவதில்லை. வீடு, பதவி, மனைவி, குழந்தைகள் முதலியவற்றை தியாகம் செய்ய நாம் தயாராக உள்ளோம். ஒன்றை மட்டும் விட தயாராக இல்லை. 'நான்' என்னும் உணர்வுதான் அது. இப்படி சந்நியாசி ஆகின்றவர்களில் ஒரு பிரிவினர் ஆடைகளையும் துறந்து நிர்வாணமாகி விடுகின்றனர். ஆனால் அஹங்காரத்தைத் துறப்பதில்லை.

சராசரி மனிதர்களே பரவாயில்லை. அவர்களுக்கு அஹங்காரம் பற்றி சரியான புரிதல் இல்லை. மேலும் அவர்கள் பல சூழ்நிலைகளில், பல இடங்களில் அஹங்காரமின்றி அடக்கமாக நடந்துகொள்கின்றனர். ஆனால் அஹங்காரத்தை விட்டதாகக் கூறி, 'நான்' என்று கூறுவதைத் தவிர்க்க 'அடியேன், இது, இந்தக் கட்டை' என்றெல்லாம் கூறுகின்ற சந்நியாசிகள், மடாதிபதிகள், ஆன்மிகத் தலைவர்கள்தாம் தலைக்கனம் உள்ளவர்களாக, அதிகபட்சம் அஹங்காரம் பிடித்தவர்களாக உள்ளனர். ஆகவே 'நான்' என்பதற்குப் பதிலாக 'நாம், யாம்' என்கின்றனர்! சராசரி மனிதர்கள் கலப்படமான அஹங்காரிகள் என்றால், கோயில்களில், மடங்களில், ஆசிரமங்களில் நாம் காணும் சந்நியாசிகள் சுத்தமான அஹங்காரிகள் ஆவர்!

நாம் விடவேண்டியது தன்முனைப்பை. ஆனால் நாம் விடுவது தொழில் (கர்மம்) புரிவதையே. சும்மா இருப்பது சுலபம். வேலை பார்ப்பதை, உழைப்பதை யார்தான் விரும்புகிறார்கள்? வேலை என்றாலே எல்லோரும் ஓடிப்போகவே விரும்புகிறார்கள். ஏற்கெனவே வேலையிலிருந்தால் அதிலிருந்து விடுதலை பெறவே துடிக்கிறார்கள். ஆனால் கர்த்தா மனப்பான்மையை

யாரும் கைவிடுவதில்லை. எதை எவரும் புறந்தள்ள தயாரில்லையோ அதைக் கைவிடுவதுதானே சிறப்பு. சந்நியாசம் என்பதும் அதுதான்.

முல்லா நஸ்ருத்தீனுக்கு லாட்டரியில் பெரிய தொகை பரிசாகக் கிடைத்தது. அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. அத்தகையோருக்குத் தங்கள் குழந்தைகளை அதிகபட்ச அளவு படிக்கவைக்க வேண்டும் என்ற தீவிரம் இருக்கும். நஸ்ருத்தீனும் தன் மகனை நன்கு படிக்கவைக்க விரும்பினார். வெளிநாட்டு மொழிகளைக் கற்பதுதான் தலைசிறந்த கல்வி என்று எவரோ சொன்னதை அவர் நம்பினார். அப்படி வெளிநாட்டு மொழிகள் கற்பிக்கும் கல்லூரிக்குச் சென்றார். கல்லூரி முதல்வரைச் சந்தித்தார். "என் மகனுக்கு வெளிநாட்டு மொழி கற்பிக்க வேண்டும். கட்டணம் எவ்வளவாயினும் தருகிறேன்," என்றார்.

முதல்வர் அவரிடம், "நீங்கள் பிரெஞ்சு, ஜெர்மன், ஸ்பானிஷ், இத்தாலியன் முதலிய வெளிநாட்டு மொழிகளில் எதைத் தேர்ந்தெடுக்க விரும்புகிறீர்கள்?" என்று விசாரித்தார்.

அதற்கு நஸ்ருத்தீன், "இப்படியெல்லாம் வரிசையாகச் சொல்லி என்னைக் குழப்பாதீர்கள். இங்கே கற்பிற்கும் வெளிநாட்டு மொழிகளில் எது அதிகபட்சம் வெளிநாட்டு மொழியோ அதையே கற்பியுங்கள்," என்றார். இதில் நுணுக்கமான அஹங்காரம் உள்ளது. எதிலும் முதலிடம் பிடிக்க முயலுவது அஹங்காரத்தின் தூண்டுதலால்தான்.

சிலர் தங்களை அடக்கமானவர்கள் என்று சொல்லிக் கொள்வது உண்டு. அடிக்கடி அவர்கள் தங்களை 'அடியேன்' அல்லது 'தாசன்' என்று கூறிக் கொள்வார்கள். ஆனால் அவ்வாறு கூறிக்கொள்வதிலும் அஹங்காரம் ஒளிந்திருக்கிறது. தனது அடக்கத்தைப் பிறர் பாராட்ட வேண்டுமென்ற எதிர்பார்ப்பு அதில் அடங்கியிருக்கிறது.

'நான்' என்னும் நினைப்பைக் கைவிடு நீ சந்நியாசி ஆகிவிட்டதாக நினைத்துக்கொள்ளலாம். 'நான்' உணர்வைக் கைவிடுவதால் இழப்பு ஒன்றும் கிடையாது. வரவுதான் நிறைய

உண்டு. இதைப் பிடித்துக்கொண்டிருப்பதால்தான் உனக்கு எதுவும் வசமாகவில்லை.

'முக்தனின் (பற்றுகளிலிருந்து விடுபட்டவனின்) மனம் கொந்தளிப்பு, திருப்தியின்மை, அஹங்காரம், சலனம், எதிர்பார்ப்பு, சந்தேகம் முதலியவற்றால் பாதிப்படையாமல் அழகாகத் திகழும்.' **(சுலோகம் 206)**

**மு**க்தனின் மனத்தில் கொந்தளிப்பு இராது என்பது புரிகிறது. சாஸ்திரங்களும் முக்தனின் மனத்தில் பூரண அமைதி குடியிருக்கும் என்கின்றன. கொந்தளிப்பிருந்தால் திருப்தி ஏற்படாது. இதையே மாற்றி, திருப்தி இல்லாவிடில், கொந்தளிப்பு உண்டாகும் எனலாம். திருப்தி என்பது தனித்தன்மை வாய்ந்த, ஆக்கபூர்வமான (பாசிடிவ்) குணம். ஒன்று கிடைக்காது என்று தெரிந்து அமைதியாக இருந்துவிடுவதை திருப்தி என்று கூற முடியாது. பண விஷயத்தில் திருப்தி அடைந்துவிட்டதாகக் கூறுபவர் இனிமேல் பாதையில் பணம் கிடப்பதைப் பார்த்தால் எடுக்கமாட்டாரா? கிடைத்த பதவிகளில் திருப்தி அடைந்து விட்டதாகக் கூறுபவர் மறுபடியும் ஒரு பதவி அவரைத் தேடிவந்தால் ஏற்கமாட்டாரா? முக்தன் அடைவது நிரந்தர திருப்தி. அவனை எந்தப் புதிய வாய்ப்புகளும் மயக்க முடியாது.

நம் நாட்டிலுள்ள சாது-சந்நியாசிகளில் பெரும்பான்மையோர் வாழ்க்கையில் தோற்றவர்களாகவே இருப்பர். அவர்களிடம் வெற்றி பெறும் திறமையும் கிடையாது. அதை மறைத்துக்கொண்டு அவர்கள் உலக வாழ்க்கையை 'இந்த திராட்சைப் பழங்கள் புளிப்பு' என்ற முறையில் பழிக்கிறார்கள். மற்றவர்களையும் உலகப் பற்றுகளில் சிக்கிக்கொள்ளாதீர்கள் என்று பயமுறுத்து கிறார்கள்.

உலக வாழ்வைக் கடுமையாக ஒருவர் நிந்தித்தால் எதிர்மறையான (நெகடிவ்) முறையில் அவருக்கு உலகத்தின்மீது பற்று இருக்கும். ஒன்றைப் பிடிக்கவில்லை என்றால் அதை அப்படியே விட்டுவிட் வேண்டியதுதானே. அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதைப்போல் ஏன் ஏச வேண்டும்?

எனது அணுகுமுறை வேறு விதமானது. நான் சொல்வது! 'உலகினுள் தைரியமாகச் செல். அனுபவி. போராடு. உலக நடவடிக்கைகளில் திறந்த மனத்துடன் ஈடுபடு. பார்ப்பதற்கு என்னென்ன உண்டொ அவற்றைப் பார்த்துவிடு. பெறுவதற்கு என்னென்ன உண்டோ பெற்றுக்கொள். பாதியில் திரும்பாதே. காமனையும் முழுதாக விடவில்லை. ராமனையும் சரியாகப் பிடித்துகொள்ளவில்லை என்ற நிலை தோன்றும். உலகைப் பாதியில் துறந்து அரை வேக்காட்டு சந்நியாசியானவர்கள் தாம் உலகைப் பழிப்பர்.

முக்தன் திருப்தி என்ற தேவையையும் கடந்திருப்பான். திருப்தி இல்லாதவனுக்குத்தானே திருப்தி வேண்டும்? நோயாளிக்குத்தானே மருந்து தேவை? முக்தன் ஏற்கெனவே திருப்தியின்மை என்ற நிலையைக் கடந்தவனாக இருப்பான். மேலும் அவள் சாந்தி-அசாந்தி, இன்பம்-துன்பம், வெற்றி-தோல்வி, தர்மம்-அதர்மம், உலகம்-மோட்சம் மற்றும் இவை போன்ற இரட்டைகளால் பாதிப்படையவில்லை. அவன் எதிரெதிரான இந்த அம்சங்களைக் கடந்து பரமானந்தத்தில் லயித்திருப்பான்.

பிறகு அவன் தான் செய்கின்றவற்றை 'எனது' கடமை என்று சொல்லிக் கொண்டிருக்க மாட்டான். 'நான் செய்ய வேண்டும்; நான்தான் செய்ய வேண்டும்; நான் செய்யாவிடில் வேறு யார் செய்வர்? நான் செய்யாவிடில் நாடு என்ன கதி ஆகும்?' இம்மாதிரியெல்லாம் அவன் பேசமாட்டான். முக்தன் வேறுவிதமாகச் சொல்லுவான். 'நான் இல்லாவிட்டால் உலகம் நின்றுவிடாது. நான் ஒன்றைச் செய்யாவிட்டால் இன்னொருவன் செய்வான். "சரிதான், போடா" என்று கடவுள் வேறு ஒருவன் மூலமாக அந்த வேலையைச் செய்வித்துக்கொள்வார்' என்பான்.

**கி**ருஷ்ணர் அர்ஜுனனுக்குச் சொன்னதை விரித்துப் பார்ப்போம். 'அர்ஜுனா! அமர்க்களத்திலிருந்து ஓடாதே. நீ எவரையெல்லாம் கொல்ல அஞ்சுகிறாயோ அவர்கள் ஏற்கெனவே இறந்துவிட்டனர். நீ ஒரு கருவி மாத்திரமே. நீ கொல்லாவிடில் வேறு யாரோ அவர்களைக் கொல்வார்கள். உனது காண்டீவம் (வில்) வேறொருவன் தோளில் ஏறும். நீ ஓடுவதால் எதுவும்

தடைப்படாது. நடக்க வேண்டியது நடந்தே தீரும். நீ ஓடிப்போனாலும் ஓடாவிட்டாலும் நிலைமையில் மாறுதல் இல்லை. நீ ஓடிப்போவதில் உன் அகங்காரம் உருவாகத் தொடங்குகிறது. இதற்கு நீ உன்னைக் கடவுளிடம் சமர்ப்பித்துக் கொள்ளவில்லை என்று அர்த்தமாகிறது. 'என்மூலம் எதைச் செய்விக்க நினைக்கிறாயோ அதைச் செய்வித்துக்கொள்' என்று உன்னால் சொல்ல இயலாது போகிறது. நீதான் செய்பவன் (கர்த்தா) என்றும், நீ இல்லாவிடில் போர் நடக்காது என்றும் நினைக்காதே' என்றும் கிருஷ்ணர் சொல்லாமல் சொல்கிறார்.

முக்தன் புதுப்புதுத் தூண்டுதல்களுக்கு உள்ளாகமாட்டான். சராசரி மனிதனுக்கு தினமும் புதுப்புது ஆசை. அந்த ஆசைக்குத் தீனி (fodder) தேவை. இப்படி ஓடிக்கொண்டே இராவிடில் அவன் தன்னைப் பிணம்போல் உணர்வான். ஒரு துறையில் முன்னேறிவிட்டால், இன்னொரு துறையிலும் ஈடுபடுகிறான். பணம் நிறையச் சம்பாதித்தபின் அவனுக்கு பதவி ஆசை உண்டாகி அவன் அரசியலில் பிரவேசிக்கிறான். சில ஆண்டுகளுக்குப் பின் அவன் சந்நியாசிகள் சிலர் ஆட்சியாளர்களை ஆட்டிவைப்பதைப் பார்க்கிறான். அப்போது அவனுக்குத் தானும் சந்நியாசியாகி, குடியரசுத் தலைவர் உள்பட எல்லோரும் தனக்குக் கீழ் வரிசையில் அமர்ந்து, தன்னை வணங்க வேண்டுமென எதிர்பார்க்கிறான்.

மகாமனிதனோ (முக்தனோ) அமைதியாக, பரபரப்பின்றி இருக்கிறான். அவன் ஆன்மிகத்தின் உச்சத்தைத் தொட்டு விட்டதால், அவன் இனி பெற வேண்டியது எதுவுமில்லை; போய்ச்சேர வேண்டிய இடம் பாக்கியில்லை. அவன் போய்ச் சேர்ந்து விட்டான். அவன் எங்கு உள்ளானோ அதுதான் அவன் போய்ச்சேர வேண்டிய இடமுமாகும்.

நீ எங்கே உள்ளாயோ அங்கேயே பூரணமாக உள்ளாய். எல்லாத் தூண்டுதல்களும் மனத்தின் மோசடி நடவடிக்கை களாகும். உனக்குள் இறங்கிச் சிந்தித்துப் பார். எல்லாவற்றையும் நடத்திவைப்பவர் கடவுள் எனில் உனக்கு ஏற்றதையும் அவரே செய்கிறார். உனது அளவுகோல் வேறாக இருக்கலாம். ஆனால்

அவரது அளவுகோல்தான் சரியானது. ஆகவே குறையொன்று மில்லை என நினைத்துக்கொள்.

முக்தன் நிலையை அடைந்துவிட்டவன் ஆசைகளற்று இருப்பான். அவன் சந்தேகப் பேர்வழியாகவும் இருக்கமாட்டான். எது உண்மை-எது போலி என்று அவனுக்கு இப்போது சந்தேகமில்லை. காண்பவன் உண்மை; காண்பது (காட்சி) போலி. சாஸ்திரங்களின் சாரமும் இதுவே. கண்ணில் தெரிவது தோற்றம் மட்டுமே.

தற்சமயம் நமது அணுகுமுறை தலைகீழாக உள்ளது. கண்ணால் காண்பதை மெய் என நினைக்கிறோம். ஆனால் காண்பவனைப் பற்றி (நம்மைப் பற்றி) நமக்கு ஒன்றும் தெரிந்திருப்பதில்லை. ஆத்மா எங்கே இருக்கிறது என்று மக்கள் கேட்கிறார்கள். அப்படி யார் கேட்கிறானோ அவன்தான் (அதுதான்) ஆத்மா. வாய் ஓர் ஒலிபெருக்கி மட்டுமே. அதன் வழியே பேசுபவன் ஆத்மா.

அடுத்து, மக்கள் ஆத்மாவை எப்படி தரிசிப்பது என்று கேட்கிறார்கள். ஆத்மா எங்காவது தரிசனம் தருமா? பார்ப்பவன்தான் ஆத்மா. தன்னையே தான் பார்க்க முடியாது. ஆத்மா ஒருகாலத்திலும் கண்ணில் படாது. உலகக் காட்சிகளை நம்புகிறார்கள். தமது ஆத்ம சொரூபத்தை நம்புவதில்லை. கண்ணில் தெரிகின்றவற்றின் பின்னால் ஓடுகிறார்கள். ஆனால் அவற்றைக் காண்பவனை ஸ்பரிசித்ததில்லை. தன்னுள் இருப்பவனுடன் கைகோத்து இரண்டு நிமிடங்களாவது அமைதியாக இருந்ததில்லை.

கண்ணில் தெரிபவை கற்பனை. காண்பவன் மட்டுமே சத்தியம்.

தூங்கும்போது நீ கனவு காண்கிறாய். அந்தக் கனவு உண்மைபோல் உனக்குத் தோன்றுகிறது. கண்ணில் தெரிவது உண்மை என நீ அடிப்படையில் நினைப்பதால்தான் நீ கனவை நிஜமென நம்புகிறாய்.

கனவு காண்பது இதுதான் முதல் தடவையென்றால் உனது பிரமையை மன்னித்துவிடலாம். முதல் தடவை என்பதால் ஏமாறினாய் என்று விட்டுவிடலாம். ஆனால் ஒவ்வோர் இரவுமே கனவு வருகிறது. அப்போது அதை உண்மை என்று நினைக்கிறாய். விழித்தபின் அது சிறிதுகூட நினைவில் இருப்பதில்லை.

**ஞா**னி குர்ஜியேஃப் தன் சீடர்களுக்குக் கனவு சம்பந்தமான ஓர் ஆலோசனை வழங்கினார். “நீங்கள் கனவை கனவாகவே பார்க்க விரும்பினால், கனவுடன் நமக்கு சம்பந்தமில்லை என்று உணர விரும்பினால், விழித்திருக்கும் சமயம் ஒரு பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். அது மிகவும் மதிப்பு வாய்ந்த பயிற்சி. அடுத்த மூன்று மாதங்களுக்குப் பகற்பொழுதில் கண்ணில் படுவதையெல்லாம் பொய்யானவை என்று முழுநினைவுடன் கருத வேண்டும்,” என்றார்.

இது கடினமான பயிற்சி. இதோ நான் பேசுகிறேன். அதைக் காணும் நீ எவரும் பேசவில்லை என்று கருத வேண்டும். உன் கண் முன் மரங்கள் தெரிகின்றன. அவ்வாறு நிஜத்தில் இல்லை என்றும், அவை தோற்றம் மட்டுமே என்று நீ கருத வேண்டும். சுருக்கமாக, உண்மை என்று தெரிபவற்றைப் பொய்யென நினைக்க வேண்டும். இது சாத்தியமா என நினைக்கலாம். இது ஒரு பயிற்சிதான், மூன்று மாதத்திற்கு மட்டும்தான்.

ஒரு மூன்று மாத காலம் நீ பகலில் பார்க்கின்றவற்றைப் பொய்யெனக் கருது. பிறகு திடீரென ஒருநாள் நீ கனவு காணும்போது அதே நேரத்திலேயே அது பொய்யென அறிவாய். பயிற்சி வெற்றிகரமாக முடிந்துவிட்டது. நீ புதியதாக ஒன்றைக் கண்டுகொண்டாய்.

இதுதான் இந்துமதம் கூறும் மாயாவாதத்தின் சாரமும் ஆகும். நீ பகலில் காண்பவை வெறும் தோற்றங்களே என்பது புரிந்துபோனால், கனவு காண்கையில் அது பொய் என்று அதேசமயம் தெரிந்துபோகும். பகலிலும் இரவிலும், விழிப்பிலும் தூக்கத்திலும் நீ காண்பவை தோற்றங்களே என்று தெளிந்ததும், அவைமீது உன் கவனம் நீங்கிவிடும். பார்ப்பவன் யார் என்பதை

நோக்கி உன் கவனம் திரும்பும். அப்படிப் பார்க்கின்றவன்தான் சத்தியம். அந்தக் கண்ணோட்டம்தான் உனது ஆன்மிகச் சொத்து.

நம்முடைய ஆசைகள் கடந்த காலத்துடன் சம்பந்தப் பட்டவை. கடந்த காலத்தில் (அது நேற்றாகக்கூட இருக்கலாம்) பெற்ற இனிய அனுபவத்தை மீண்டும் பெற விரும்புவதே ஆசை என்பது. அந்த அனுபவமே நமது மூலதனம். ஆனால் அது கடந்த காலத்துடன் சம்பந்தப்பட்டது.

ஒரு கட்டத்தில் நாம் கடந்த காலத்தையும் கைவிட வேண்டும். இப்போது இல்லாத ஒன்று, அது எப்போதும் இல்லாமல் போகட்டும். கடந்த காலம் மீண்டும் வரவேண்டும் என்றும் ஆசைப்படாதே. கடந்த காலமும் எதிர்காலமும் இல்லாமல் போகும் சூழ்நிலையில் நீ நிகழ்காலத்தில் கண்விழிப்பாய். அந்த விழிப்புதான் தியானத்தின் முதல் படியாக அமையும். அந்த விழிப்பு சமயம்தான் நீ சமாதிநிலையின் முதல் நறுமணத்தை முகர்வாய். மனம் என்பது கடந்த காலத்துடனும் எதிர்காலத் துடனும் சேர்ந்தது. சமாதிநிலை என்பது நிகழ்காலம்.

மனம் நிகழ்காலத்தில் இருப்பதே இல்லை. முற்கால நினைவுகளும் இல்லை; எதிர்காலக் கற்பனைகளின் வலையும் இல்லை. கடந்தகாலச் சுமையும் எதிர்கால ஏக்கமும் இல்லை. இத்தகைய நிகழ்காலத்தில் நீ உறுதியாக நின்றால், திடீரென சத்தியத்துடன் நீ இணைவாய்.

'முக்தனாகிய மனிதனின் மனம் கர்மத்தில் மட்டுமின்றி தியானத்திலும் ஈடுபடாது. அவன் தியானம் செய்தாலும், கர்மம் புரிந்தாலும், அதற்காக ஏதேனும் காரணமிருக்காது.' **(சுலோகம் 207)**

**மு**க்தன் கர்மம் புரியவும் ஆசைப்படுவதில்லை; தியானம் செய்வதற்கும் துடிப்பதில்லை. அவன் அமைதியாகயிருப்பதையும் விரும்புவதில்லை; சாந்தமாக இருக்கவும் முயலுவதில்லை. அவன் எதுவுமாகவே ஆக விரும்பவில்லை! அவன் எப்படி உள்ளானோ அந்த நிலையுடன் அவன் முழுவதுமாக ஒத்துப்போகிறான். அவனுக்குத் தனிப்பட்ட ஆசை கிடையாது. கடவுள் தன் மூலம்

எதையும் செய்விப்பதாக நினைக்கிறான். ஆகவே கடவுள் அவன் மூலம் தியானமோ, கர்மமோ எப்பொழுது எதைச் செய்விக் கிறாரோ அதைச் செய்கிறான்.

நீயும் இந்த அனுபவத்தை முயன்றுபாரேன். அடுத்த மூன்று மாதத்திற்கு நீ எது செய்தாலும் அதை நீ செய்வதாக நினைக்காதே. கடவுளே உன் மூலம் எதையும் செய்விப்பதாக நினை. அவர் உன்னை மௌனமாக இருக்கவைப்பதாக, உன்னைப் பேசவைப்பதாக, பாடவைப்பதாக இப்படி எதையும் செய்விப்பதாக நினை. இதனால் நீ ஞானியாகாவிட்டாலும், உன்னால் தப்பாகப் பேச முடியாது; தப்புக் காரியம் செய்ய முடியாது. உனது சிந்தனை-பேச்சு-செயல் தூய்மையானதாக, தரமானதாக இருக்கும். முன்பு சொன்னதுபோல், மேலதிகாரியின் வேலையை நாம் செய்கையில் அது மேலானதாக இருக்கும்.

இந்த மூன்று மாத அனுபவம் உனக்கு ஆனந்தம் தரும். பிறகு நீ பழைய பாதைக்கு, நீதான் செய்பவன் என்றும் மனநிலைக்கு, திரும்பமாட்டாய். உனக்கு இந்த புதிய கண்ணோட்டத்தில் சுவை ஏற்பட்டுவிடும். அந்தச் சுவை இதுவரை அறிந்திராததாக இருக்கும் நடந்தால் பிரதட்சிணம், சாப்பிட்டால் நைவேத்தியம் (படையல்) என்பதுபோல் நமது செயல்கள் கடவுளுடன் இணையும். கடவுள் தன்மூலம் எதைச் செய்விக்கிறாரோ, எப்படிச் செய்விக்கிறாரோ அது தனக்கு சம்மதம் என்னும் மனநிலை உதிக்கும்.

'மந்தமான அறிவுள்ளவன் இதுதான் உண்மையான நிலை என அறிந்தும் மூடத்தனத்திலேயே நீடிக்கிறான். ஆனால் ஞானி மூடனைப்போல் பின்வாங்கிக்கொண்டு தன்னைச் சுருக்கிக் கொள்கிறான் அல்லது சமாதிநிலையை அடைகிறான்.' **(சுலோகம் 208)**

**அ**ஷ்டாவக்ரர் முந்திய சுலோகங்களில் எல்லாவற்றையும் கடவுள்மீது விட்டுவிடுங்கள் என்கிறார். மந்தபுத்தி உள்ளவன் தப்பர்த்தம் எடுத்துக் கொள்வான். போர்வையைப் போர்த்திக் கொண்டு தூங்கிவிடுவான். 'நான் செய்வதற்கு என்ன இருக்கிறது? கடவுளே எல்லாவற்றையும் செய்யப்போவதால் நல்லதாய்ப்

போயிற்று. இனி நானாக எதுவும் செய்ய வேண்டியதில்லை' என்ற முடிவிற்கு வருவான்.

முல்லா நஸ்ருத்தீனின் மனைவி மனநோய் மருத்துவரிடம் சென்றாள்: “என் கணவர் எப்பொழுதும் எதையாவது மறந்து விடுகிறார். குடை, பேனா, செருப்பு, மூக்குக்கண்ணாடி, கர்சீப் என்று அவர் எங்காவது தொலைத்து மறதி மன்னராக இருக்கிறார். இது கூடப் பரவாயில்லை. சில சமயம் என்னைக்கூட மறந்துவிடுகிறார். என்னை நிகழ்ச்சிகளுக்கு அழைத்துச் சென்றால் என்னை அங்கேயே விட்டுத் தனியாக வீடு திரும்புகிறார். நான் காத்திருந்து வீடு திரும்பி காரணம் கேட்டால் ‘மறந்து போச்சு’ என்கிறார்.

மனநோய் மருத்துவர் ஆறுதல் கூறினார். “கவலைப் படாதீங்கம்மா. குணப்படுத்திடலாம். ஆனா இதில ஒரு சிக்கல் இருக்கு. சில கேஸ்களில் நோயாளி இன்னொரு துருவத்திற்குப் போய்விடக்கூடும். அதாவது, அவர் தனது பொருளைத் தொலைப்பதற்குப் பதிலாக, மறந்துபோய், இன்னொருவரின் குடை, செருப்பு முதலியவற்றைக் கொண்டுவரக்கூடும்,” என்றார்.

மனைவி பதறினாள், “அப்படின்னா, இவருக்கு சிகிச்சை செய்ய வேண்டாம், டாக்டர். இவர் மறந்துபோய் இன்னொருவரின் மனைவியை வீட்டுக்கு அழைத்து வந்துவிட்டால் என் கதி என்ன ஆகும் என்று யோசியுங்கள்,” என்றாள்.

மந்தபுத்தி உள்ளவன் எது செய்தாலும் அதில் மூடத்தனமிருக்கும். ஆகவேதான் ஆன்மிகத்தில் குருவின் தேவை வலியுறுத்தப்படுகிறது. அவரால்தான் மக்களை முட்டாள் தனத்திலிருந்து காப்பாற்ற முடியும். மக்களின் முட்டாள்தனம் அவர்களைத் தவறான திசையில் இட்டுச்செல்வதை அவர் தடுத்துவிடுவார்.

முல்லா நஸ்ருத்தீன் கைக்கடிகாரம் கட்டியிருக்கவில்லை. ஆகவே அவர் வழியில் எதிர்ப்பட்ட ஒருவரிடம், “இப்பொழுது மணி என்ன ஆகிறது?” என்று கேட்டார். அந்த ஆள் பதினோரு மணி ஆவதாகச் சொன்னார். உடனே அவர் முகத்தில் குழப்பம்

தெரிந்தது. அவர் நெற்றியில் அடித்துக்கொண்டு, "ஒரே குழப்பமாக உள்ளதே. எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போல் இருக்கிறதே." என்றார்.

மணி சொன்னவர் கவலையுடன் கேட்டார், "ஏன் பைத்தியம் பிடிக்கும்? பதினோரு மணிக்கும் பைத்தியம் பிடிப்பதற்கும் என்ன சம்பந்தம்?" அதற்கு நஸ்ருத்தீன், "ஏன் சம்பந்தமில்லை? இன்று நான் அவ்வப்பொழுது பலரிடம் மணி கேட்டேன். ஆளுக்கு ஒன்றாக மணி சொல்கிறார்கள். எட்டு, ஒன்பது, பத்து என்று கூட்டிக்கொண்டே செல்கிறார்கள். நீங்களும் கூட்டி மணி பதினொன்றாகிறது என்கிறீர்கள். இப்படி ஆளுக்கு ஆள் குழப்பினால் பைத்தியம் பிடிக்காமல் என்ன செய்யும்?" என்று திருப்பிக் கேட்டார்.

நமது புத்தி ஒழுங்காகச் செயல்பட வேண்டும். அது குறித்த சந்தேகமிருந்தால் குருவிடம் சேர்ந்து ஆலோசனை பெற வேண்டும்.

ஞானி தனது ஆற்றலை வெளிப்படுத்த, விளம்பரப்படுத்த விரும்புவதில்லை. அவர் தனக்கு ஒன்றுமே தெரியாதுபோல் ஒதுங்கி நிற்கிறார். இவ்வாறு அவர் உலகப் பற்றுகளிலிருந்தும் தொடர்புகளிலிருந்தும் விலகி நிற்கிறார். ஆகவே மக்கள் அவரை மந்தபுத்திக்காரர் என நினைத்து அவரைப் பின்தொடர்வதில்லை. அவரை அலட்சியப்படுத்தி விடுகிறார்கள். அவருக்கும் அது சௌகரியமாகிவிடுகிறது.

**வ**ர்தமான மகாவீரர் துறவறம் மேற்கொள்ள விரும்பினார். ஆனால் தாயாரின் அனுமதி கிடைக்கவில்லை. 'நான் உயிருடன் உள்ளவரையிலும் நீ துறவியாகக் கூடாது' என்று சத்தியம் செய்யச் சொன்னார். சிறிது காலம் சென்ற பிறகு தாயார் இறந்துபோனாள். மயானத்திலிருந்து திரும்பியதுமே அவர் தன் அண்ணனிடம் துறவறத்திற்காக அனுமதி கேட்டார். அண்ணன் அழுதுவிட்டார். "அம்மா இறந்துவிட்டாரென்று நான் துடித்துக் கொண்டிருக்கும்போது நீ சாமியாராகப் போக விரும்புவதாகச் சொல்லி மேலும் அழவைக்கலாமா?" என்று கேட்டார்.

மகாவீரர் அண்ணனை எதிர்த்து வாய்திறக்க முடியவில்லை. ஆனால் அவர் தமது வாழ்க்கை முறையை மாற்றிக்கொண்டார். அவர் வீட்டில்தான் இருக்கிறாரா என்று தெரியாத அளவுக்கு வாழ்க்கையைச் சுருக்கிக்கொண்டார். இரண்டாண்டுகள் கழிந்தன. குடும்பத்தினருக்கு அவர் வீட்டில் இருப்பதும் இல்லாமல போனதுபோலவே ஆகிவிட்டது. அவர் வீட்டு வேலைகளில் தலையிடுவதில்லை. வீட்டுப் பிரச்சினைகளில் கருத்துக் கூறுவதில்லை. அவர் இருந்தும் இல்லாதவர்போல், சூனியம்போல் ஆகிவிட்டார்.

இதையெல்லாம் கவனித்து வீட்டுப் பெரியவர்கள் அவரிடம், "இனியும் நீ துறவியாவதைத் தடுப்பது சரியில்லை. நீ ஏற்கெனவே வீட்டைவிட்டு வெளியேறியவன் மாதிரிதான். உன் உடல்தான் இங்குள்ளது. உனது ஆத்மா காட்டுக்குப் போயாகிவிட்டது" என்றனர்.

ஞானம் பெற்ற மனிதன், சிறிது சிறிதாக, தேவையற்ற உலக நடவடிக்கைகளில் ஈடுபடாமல் தன்னைச் சுருக்கிக் கொள்கிறான். தன்னுடைய நடவடிக்கைகளையும் குறைந்தபட்ச நிலைக்குக் கொண்டுவந்து விடுவான். அவரை மூடன் என்று மற்றவர்கள் நினைக்கும் அளவிற்கு அவன் பின்வாங்கிவிடுவான்.

'பக்குவப்படாதவன் மனத்தை ஒருமுகப்படுத்த, புலன்களை அடக்க, தீவிரமான பயிற்சி செய்கிறான். ஆனால் பக்குவப் பட்டவன் உறங்கும் மனிதனைப்போல் தனது அடிப்படையில் நிலைபெறுகிறான். செய்ய வேண்டியது எதுவும் இருப்பதாக அவன் கருதுவதில்லை.' **(சுலோகம் 209)**

**ப**க்குவப்படாதவன் அவசரக்குடுக்கையாக இருப்பான். எதற்கெடுத்தாலும் வெறிபிடித்தவன்போல் செயல்படுவான். பணத்தின் பின்னால் ஓடுவதைப் போலவே, தியானப் பயிற்சி என்றாலும் தீவிரமாக ஈடுபடுவான். அவன் பிடிவாதக்காரனாக இருப்பான். இத்தகையோர்தான் ஹட (அடம்) யோகம் (பிடிவாதமாக உடலை வருத்தி யோகப் பயிற்சி செய்தல்) என்பதை ஆரம்பித்தவர்கள், ஆதரிப்பவர்கள்.

ஞானி படிப்படியாக அமைதிநிலையை அடைகிறான். இது படிப்படியாக உறக்கத்தில் ஆழ்வதுபோன்ற நிலை. ஆழ்ந்த தூக்கம் வந்துவிட்டால், அஹங்கார உணர்வு வெளிப்பட வாய்ப்பில்லை. கனவுகளும் தோன்றுவதில்லை. எண்ணங்கள் எழுவதில்லை. அப்போது ஞானி எல்லையற்றவனாகிறான். மாமனிதன் (மஹாஷய்) ஆகிறான். கணவன்-மனைவி, இந்து-முஸ்லிம், ஆண்-பெண், பெற்றோர்-குழந்தைகள், ஏழை-செல்வந்தன், இளைஞன்-கிழவன், அழகன்-குரூபி, துறவி-இல்லறத்தான் என்று எந்த எல்லைகளும் இருப்பதில்லை.

இவ்வாறு ஞானி தனது சுபாவத்தில், ஆளுமையில் சிரமமின்றி லயித்துப்போகிறான். பிறகு அவன் இயற்கையாக நடைபெறுவதை அப்படியே நடக்கவிடுகிறான். ஏதேனும் செய்துகாட்ட வேண்டும் அல்லது தான் குறிப்பிட்ட விதமாக ஆகவேண்டும் என்ற பிடிவாதம் அவனுக்கு இருப்பதில்லை.

இந்நிலையிலுள்ள ஞானிக்குக் கடவுள் எங்கும் காட்சி தருவார். தன்னை அறிந்தவன் கடவுளையும் அறிந்தவனாகி விடுகிறான். பூவில், இலையில், அருவியில், பிறர் கண்களில் என்றெல்லாம் எங்கு நோக்கினும் அவனுக்குக் கடவுள் தரிசனமாகத் தெரியும்.

**தவசிகளின் எளிய குடிசை**
**கனிகள் மலர்களின் வண்ணத் தோட்டம்**
**பாழடைந்த மண்டபம், பொலிவுடைய மாளிகை**
**பளபளக்கும் சாலைகள், அழுதுவடியும் சந்துகள்**
**கோணல் மாணல் வீடுகள், தாழ்ந்து இடிக்கும் கூரைகள்**
**உயர்ந்து நிற்கும் மின்கம்பம்**
**சந்தையில் கூச்சல், பரபரப்பு**
**மயானத்தில் சாவின் பேரமைதி**
**எல்லா வாசல்களும் உன் வாசல்களே**
**எல்லா சன்னல்களும் உன் சன்னல்களே**
**நான் எந்த இடத்தை வணங்கினாலும்**
**உன் இல்லமென நினைத்து வணங்குகிறேன்**

**ஹரி ஓம் தத்ஸத்!**

முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! கூட்டமான சூழ் நிலையில் மனம் இறையுணர்வில் லயிப்ப தில்லை. தனிமையில் இருக்கவும் நடுங்கு கிறேன். இது மூளைக்கோளாறா? ஏதாவது ஒன்றாவது ஒத்துவர வேண்டுமல்லவா?**

**த**னிமையில் முதல் வகை சுற்றிலும் யாரும் இல்லாமல் போவது. இது நீயாக விரும்பியதன்று. இது உன்மீது சுமத்தப் பட்டது. ஆகவே இது உண்மையான தனிமை இல்லை. அந்த சமயம் இன்னொருவரைப் பற்றி ஞாபகம் வருகிறது. அருகில் எவராவது இருந்தால் நன்றாக இருக்கும்போல் தோன்றுகிறது.

வெளியில் பார்ப்பதற்குத்தான் நீ தனியாளாக உள்ளாய். உள்ளுக்குள்ளே அப்படியில்லை. மனத்தில் யாரையோ நினைக்கிறாய். இந்தத் தனிமை உனக்கு சம்மதமில்லை. இந்தத் தனிமை அமைதியின்மையைத்தான் கொடுக்கிறது. இந்தத் தனிமை சிறிது நேரத்தில் நீங்காவிடில், நீ நண்பனின் வீடு, கிளப், கடைத்தெரு என்று எங்காவது போய் மற்றவர்களுடன் சேர்ந்து கொள்கிறாய். செய்தித்தாள் படிக்கிறாய்; ரேடியோ போட்டுக் கேட்கிறாய்; ஏதாவது செய்வதில் ஈடுபடுகிறாய்.

இத்தகைய தனிமை சுவையற்றது. இது உடல் சார்ந்த தனிமை. இது ஆன்மிகத்துடன் சம்பந்தப்பட்டதன்று.

இரண்டாவது தனிமை ஏகாந்தம் எனப்படுகிறது. இந்தத் தனிமை இன்பம் தருகிறது. இன்னொருவர் அருகில் இருக்க வேண்டுமென்ற எதிர்பார்ப்பு அகன்றுவிடுகிறது. இன்னொருவர்

தேவைப்படுவதும் இல்லை. இதிலிருந்து தப்பித்துப் பரபரப்பான சூழ்நிலைக்குப் போகும் ஆசை எழுவதில்லை. மனத்தில் அமைதி நிலவுகிறது.

முதலாவது வகைத் தனிமை எதிர்மறையானது (நெகடிவ்). இரண்டாவது வகைத் தனிமை நேர்மறையானது (affirmative). முதல் வகையில் இன்னொருவர் அருகில் இல்லாமை முள்ளாய்க் குத்துகிறது. இரண்டாவதில் தன் நினைவே மேலோங்கியுள்ளதால் சுவையாகத் தெரிகிறது. இதில் நீ உன்னுடனேயே இணைந்து விடுகிறாய். முதலாவதில் தனிமையைப் பொறுக்க முடியாமல் கண்ட இடத்திற்கும் அலைகிறாய். இரண்டாவதில் உனது மனம் என்னும் பறவை தனது கூட்டிற்கே திரும்பிவிடுகிறது. இதனால் மனத்தில் கொந்தளிப்பு இல்லாமல் ஆழ்ந்த அமைதி நிலவுகிறது. இதுதான் தியான நிலையின் அடிப்படை.

மூன்றாவது வகை தனிமையும் ஒன்று உண்டு. அதற்கு கைவல்யம் என்று பெயர். முதல் வகையில் தன் நினைவு இல்லை. இன்னொருவர் பற்றிய ஏக்கம் உள்ளது. இரண்டாவது வகையில் தன் நினைவு உண்டு. மற்றவர்களின் நினைவு எழுவதில்லை. மூன்றாவதான கைவல்யத் தனிமையில் தன் நினைவும் இல்லை, பிறர் நினைவும் இல்லை. எவரும் மிஞ்சியிருக்கவில்லை.

நான் அல்லது தன் நினைவு மட்டுமே மிஞ்சியிருந்தாலும் மனத்தின் ஒரு மூலையில் இரண்டாவது நபரின் தேவை ஒளிந்திருக்கும். நான் என்பதுடன் நீ சுயமாக சேர்ந்துவிடுகிறது. முதல் வகையில் 'நான்' கீழே, நீ மேலே. இரண்டாவதில் 'நான்' மேலே, 'நீ' கீழே. மூன்றாவதில் நானும் மிஞ்சியிருக்காது; நீயும் மிஞ்சியிருக்காது. இது இரண்டாவதான ஏகாந்தத்தைவிட உயர்ந்ததாகையால், இதை பரம ஏகாந்தம் என்று கூறலாம். இது சமாதிநிலை. இந்த நிலையில் எல்லாக் கூட்டமும் போய்விட்டது, 'நீ'யும் போய்விட்டது.

முதல் வகையில் அமைதியின்மை நிலவுகிறது. இரண்டாவது வகையில் அமைதி நிலவுகிறது. மூன்றாவது வகையில் ஆனந்தம் நிலவுகிறது.

முதலாவது எதிர்மறையானது. இரண்டாவது ஆமோதிப்பு வகையானது. மூன்றாவது நிலை திருவிழா போன்றது.

ஒருவனுக்கு உடல்நலம் சரியில்லை. அவன் நோயாளி. அவன் எதிர்மறையான நிலையில் இருக்கிறான். இன்னொருவனுக்கு . நோயில்லை. எனினும் முன்னெச்சரிக்கைக்காக மருத்துவரிடம் செல்கிறான். அவர் சோதனைகள் செய்துவிட்டு எந்த நோயுமின்றி ஆரோக்கியமாக இருப்பதாகத் தெரிவிக்கிறார். அதைக் கேட்டு அவன் துள்ளிக் குதிக்கவில்லை. அவன் விசேஷமாக எதுவும் உணரவில்லை. மருத்துவ மொழியில் அவன் உடல்நலத்துடன் உள்ளது உறுதிப்படுகிறது. அவ்வளவே.

ஒருவன் நோயாளி. நீ மருத்துவரின் கண்ணோட்டத்தில் ஆரோக்கியமாக உள்ளாய். 'உங்களுக்கு எந்த மருந்தும் தேவையில்லை. வீட்டுக்குப் போங்க' என்று மருத்துவர் அனுப்பிவிடுகிறார். உனக்குத் திருப்தி. ஆனால் நீ திருவிழாபோல் ஆடிப்பாடி வீட்டுக்குத் திரும்பவில்லை.

உடல்நலத்தில் மூன்றாவதான உயர்ந்த நிலை ஒன்றுண்டு. அந்நிலையில் நீ மருத்துவரிடம் போக வேண்டும் என்றுகூட நினைப்பதில்லை. ஆரோக்கியம் பற்றி நினைவே இல்லாத அளவிற்கு நீ ஆரோக்கியச் செழிப்புடன் விளங்குகிறாய். உனக்கு உடல்நினைவே எழாத அளவிற்கு ஆரோக்கியமாக விளங்குகிறாய். உன்னையும் ஜனகரைப்போல் விதேகன் என்று அழைக்கலாம்.

'கூட்டத்தின் நடுவில் இருப்பதில் உன் மனம் இஷ்டப்படவில்லை' என்றாய்.

மிக நல்ல செய்தி! இந்த மனநிலை ஆன்மிகப் பயணம் மேற்கொள்ளுவதற்கு உகந்தது. கும்பலுடன் சேர்ந்தால் எங்கும் போய்ச் சேராமல் அலைந்து திரிய வேண்டியதுதான். கும்பலுடன் சேர்வதில் மனம் லயித்தால் தன்னுடன் தன்னுடைய நிஜத்துடன், சேர்வதில் மனம் லயிக்கவில்லை என்று பொருள்படும்.

நீ மேற்கொண்டு தனிமை உனக்கு பயம் தருகிறது என்றும் சொன்னாய். அதில் தப்பில்லை. அதுவும் இயற்கைதான்.

வாழ்க்கையில் நீண்ட காலம் கூட்டத்துடனேயே இருந்து உனக்குப் பழக்கமாகிவிட்டது. இதனால் தனிமை உன்னைச் சங்கடப்படுத்துகிறது. கூட்டத்தில் கலந்து வாழ்ந்தால் உன் வாழ்க்கை வீணாகிவிடும் என்று உனக்குத் தெரிந்துவிட்டது. ஆனால் பழக்கம் உன்னைத் தடுக்கிறது. ஆகவே தனிமை என்றால் உனக்குத் தயக்கமாக இருக்கிறது. மனம் உன்னைக் கூட்டத்திற்கு அடிமையாக வைத்திருக்கிறது.

தியானம் உனக்கு மனத்திலிருந்து விடுதலை பெற்றுத் தருகிறது. கூட்டத்தின் ஆதிக்கத்திலிருந்து விடுபடுவதை முக்தி நிலையின் ஆரம்பம் எனலாம்.

நீ உன் மனத்தை ஆராய்ந்து பார். உன் மனத்திலுள்ள எதுவும் கூட்டம் கொடுத்ததுதான். நீ இந்து மதத்தவன், அழகன், அறிவாளி என்றெல்லாம் கூட்டம் சொன்னதை நம்பினாய். இப்படி உன்னைப் பற்றிச் சுற்றிலுமுள்ளோர் கூறும் கருத்துகள் உன் மனத்தை உருவாக்குகின்றன. உனது நிஜ சொரூபம் மனத்தைக் கடந்ததாகும். அது கடவுளிடமிருந்து உனக்கு வந்தது.

கூட்டம் சலித்துப் போவது நல்ல அறிகுறி. ஆகவே கூட்டம் உனக்கு எதை-எதைக் கொடுத்ததோ அவற்றையெல்லாம் கைவிட வேண்டும். அப்போதுதான் தனிமையில், எதுவுமில்லாத நிலையில், மனம் லயிக்கும். ஆகவே மனத்தின் பாதிப்பிலிருந்து விடுபடுவது தான் உண்மையான விடுதலை. கூட்டத்தை விட்டுக் காட்டுக்குப் போனால் மட்டும் மனம் அடங்கிவிடாது. அதேசமயம், கூட்டத்திலிருந்தாலும் தனிமை உணர்வுடன் இருப்பதும் சாத்தியமே.

உதாரணமாக, நீ இந்துக்களின் மத்தியில் இருந்தாலும் வாழ்ந்தாலும் 'நான் இந்து' என்னும் உணர்வைக் கைவிட்டு இருக்க முடியும். கூட்டம் நீ அழகானவன் என்று மெச்சும். பக்குவப்பட்டு விட்டால் நீ அந்த மதிப்பீட்டை அலட்சியம் செய்வாய். 'நான் அழகன்-குரூபி, ஆரோக்கியமானவன்-நோயாளி, நேர்மையாளன்-போக்கிரி' என்றெல்லாம் உன்னைப் பற்றி உனக்குத்தானே சரியாகத் தெரியும். மற்றவர்களுக்கு எப்படி உன் அந்தரங்கம் தெரிய முடியும்! மற்றவர்களின் கருத்துகளின்

அடிப்படையில் உன்னை நீ மதிப்பிடலாமா? இந்த மற்றவர்கள் தங்களைப் பற்றியே சரியாக அறிந்திருக்க மாட்டார்களே.

உன்னைப் பற்றிய அறிவை நீ உன்னிடமிருந்துதான் நேராகப் பெற வேண்டும் அதை இன்னொருவர் மூலம் பெறுதல் சரியன்று. பிறர் கருத்தைக் கடன்வாங்கி நீ உன்னைப் பற்றி முடிவு செய்யக்கூடாது. நீ விழித்துக்கொண்டால் கடனாகப் பெற்ற கருத்துகளை உதறிவிடுவாய். பிறகு நீ கூட்டத்தின் நடுவே இருக்கநேர்ந்து மக்கள் உன்னை அறிவாளி, ஒழுக்கமானவன் என்றெல்லாம் கூறினாலும் நீ அந்த மதிப்பீடுகளைப் பொருட்படுத்தமாட்டாய். கூட்டத்துடன் கொடுக்கல்-வாங்கல் இராது. இந்த அளவு பக்குவம் வந்துவிட்டால், நீ கூட்டத்தின் நடுவிலும், தனிமையை அனுபவிக்க முடியும்.

எப்பொழுதாவது இதை முயன்றுபார். கடைத்தெருக் கூட்டத்தில் இருக்க நேரிடும்போது நீ கூட்டத்திற்கு வெளியே உள்ளதாகக் கற்பனை செய். ஒரு நிமிடம் உன் மனத்தில் ஒரு சன்னல் திறப்பதுபோலிருக்கும். உனக்குள் ஓர் அலை பாய்வதுபோலிருக்கும். வாழ்க்கையில் புதிய பிரவாகம் பெருக்கெடுக்கும். அந்த பிரவாகம் உன்னை ஏகாந்தம் என்னும் நிலைக்கு இட்டுச்செல்லும். அப்போது மனம் மிகவும் அமைதிப்படும்.

ஆனால் அங்கும் நின்றுவிடாதே. பெரும்பாலோர் மனம் நிம்மதி அடைந்தால் அங்கேயே நின்றுவிடுகிறார்கள். வீடு வந்து சேர்ந்து விட்டோம் என்று நினைக்கிறார்கள். சாந்தம் என்பது வழியில் தங்கும் கூடாரம். போய்ச்சேர வேண்டிய கடைசி இடம் வேறு. சாந்தநிலை பாலம் போன்றது. பாலம் என்பது முடியுமிடமில்லை, அமைதியின்மையிலிருந்து புறப்பட்டு ஆனந்தநிலை என்னும் கடைசி முகாமுக்கு வந்துசேர்வதற்கு உதவுகின்ற பாலம்தான் சாந்தம்.

அமைதியின்மையைவிட சாந்தம் உயர்ந்த நிலை. சாந்தத்தைவிட ஆனந்தம் உயர்ந்த நிலை. மற்றவர்களை விட்டதுபோல் உன்னையும் மறந்துவிடு. உன் அஹங்காரமும் மறைந்துவிடும். அப்போது ஓர் அபூர்வ நிகழ்ச்சி நடைபெறும்.

புல்லாங்குழல் ஒலிபோல் கேட்கும். அது மனிதனின் வாசிப்பில்லை; கடவுள் இசைக்கும் கீதம். ஆனால் அந்தப் புல்லாங்குழல் நீதான்!

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஒருவன் தன் வாழ்க்கையைக் குறிப்பிட்ட திசையில் இட்டுச்செல்ல முயலும்போது மற்ற திசைகளிலிருந்து வரும் அழைப்புகள் அவனைக் குழப்புகின்றன. இதற்குப் பதிலாக, அவன் தனது வாழ்க்கையை எல்லா திசைகளிலும் செலுத்த முடியுமா? இதனால் இதுவா அதுவா என்னும் குழப்பம் நீங்கி, வாழ்க்கையைச் சிதறிப்போகாமல் காப்பாற்ற முடியுமா?**

இந்தக் கேள்வி ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் என்றாவது ஒருநாள் எழத்தான் செய்கிறது. நீ முதலில் தேர்ந்தெடுத்தே வாழ்க்கையைத் தொடங்குகிறாய். எதை நீ முடிவு செய்கிறாயோ அதற்கேற்ப உன் வாழ்க்கைப் பயணத்திற்கு ஒரு திசை அமைகிறது. மற்ற திசைகள் கைவிடப்படுகின்றன. நீ தேர்ந்தெடுத்துள்ள திசை உன்னை வரையறுக்கிறது. நீ யார் என்று உனக்குத் தெரியவருகிறது. நீ சத்தியத்தைத் தேடுபவனாயின் நீ சத்யார்த்தி. தியானத்தைத் தேடுபவனாயின் நீ தியானி. மதம் கூறும் வழியில் சென்றால் நீ ஆத்திகன். புண்ணியம் செய்தால் புண்ணியாத்மா.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: 'இப்படித் தெரிந்தெடுத்தலைக் கைவிடு. செயல்புரிகின்ற தன்மையையும் (கர்த்ருத்வம்) கைவிடு. செய்பவன் நான் (கர்த்தா) என்ற உணர்வையும் கைவிடு.' இதைப் பின்பற்றும்போது உனக்கு பயமுண்டாகும். வாழ்க்கை சிதறுமே என்று அஞ்சுவாய். அப்படியில்லை. உன் அஹங்காரம்தான் சிதறும்.

அஷ்டாவக்ரர் கூறுகிறபடி உன்னை எல்லா திசைகளிலும் சுதந்திரமாக விடு. குறிப்பிட்ட ஒன்றைத் தெரிந்தெடுக்காதே.

எதிர்காலம் குறித்துக் கவலைப்படாதே. என்ன நடக்குமோ என்று நீயாக முடிவுசெய்யாதே. ஒவ்வொரு நிமிடமும் முழுமையாக வாழ்ந்துபார். வாழ்க்கை உன்னை எங்கே கொண்டு செல்லுமோ அங்கு வாழு. காற்றில் பறக்கும் உலர்ந்த இலை போல் உன்னை சுதந்திரமாக விடு.

முல்லா நஸ்ருத்தீன் பாதையில் சென்றுகொண்டிருந்தார். பயில்வான்போல் பெரிய உடலமைப்புடைய ஒருவன் பின்னாலிருந்து அவர் முதுகில் ஓங்கிக் குத்துவிட்டான். நஸ்ருத்தீன் எகிறித் தரையில் விழுந்தார். கோபத்துடன் எழுந்தவர் தன்னைத் தள்ளினவன் பயில்வான்போல் இருப்பதைக் கவனித்தார். அவனுடன் சண்டைக்குப் போகமுடியாது என்பது புரிகிறது. ஆனால் மனிதன் எந்த நிலையிலும் ஏதாவது சொல்லித் தப்பிக்கக்கூடியவன் ஆயிற்றே.

நஸ்ருத்தீன் அவனை நோக்கி, "என்னை ஏன் குத்தித் தள்ளினாய்? காரணத்துடனா அல்லது விளையாட்டிற்காகவா?" என்று கேட்டார். அவன் அதட்டலாக, "காரணத்துடன்தான் என்று வைத்துக்கொள்," என்றான்.

"அப்படின்னா சரி. காரணம் எதுவானாலும் பரவாயில்லை. தமாஷா யாராவது என்னை முதுகில் தட்டினாத்தான் எனக்குப் பிடிக்காது," என்று நஸ்ருத்தீன் நிலைமையைச் சமாளித்தார். குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்பது போன்ற இந்த அணுகுமுறை நுணுக்கமாக அகங்காரத்தைக் காக்கிறது.

இதேபோல் நீ விரும்புவது ஒன்று, கிடைப்பது வேறொன்று. உன் தோல்வியை மறைக்க நீ ஜெயித்தவனை அவன் 'அயோக்கியன் அதனால் அவன் வென்றான். நானோ நேர்மையைக் கைவிடாதவன். அதனால் தோற்றேன்,' என்று காரணம் கூறிச் சமாளிப்பாய். சிலசமயம் நீ 'உலகமே எனக்கு எதிராகச் சதிசெய்கிறது. நான் தனியொருவனாகவே உலகத்துடன் மோதவேண்டியுள்ளது' என்பாய். அல்லது, 'நான் தீவிரமாக முயலவில்லை. வேடிக்கையாகத்தான் இந்த விஷயத்தை எடுத்துக்கொண்டேன்' என்பாய். இதெல்லாம் அகங்காரத்தின் மீது அடி விழும்போது நீ கூறும் சாக்குகள்.

நீ எந்த முயற்சியிலாவது வென்றால் நீதான் அதற்குக் காரணம் என்று அகங்காரம் உன்னைப் பாராட்டும். சாதகமான சூழ்நிலையில்தான் நீ வென்றாய் என்பதை நீ ஒத்துக் கொள்வதில்லை. உன் முயற்சியில் நீ தோற்றால், நீ அதற்குக் காரணமில்லைபோல் வாதங்களை முன்வைக்கிறாய் அல்லது பிறரைப் பழிசொல்கிறாய்.

கடவுள் உன்னை அகங்காரத்துடன் பிறப்பிக்கவில்லை. அதை நீதான் உன்னிடம் பிறப்பித்து வளர்த்துக்கொண்டாய். நீ அகங்காரத்தை விலக்கிவிட்டால் முதலில் இருந்த நிலையை அடைவாய். பிறந்த சமயம் உனக்கு ஆத்மா பற்றி உனக்கு உணர்வில்லை. இப்போது நீ வளர்ந்துவிட்டதால், அகங்காரம் நீங்கியதும் ஆத்மாவின் அறிமுகம் பெறுவாய்.

ஞானத்தின் உச்சநிலையில் கவனச் சிதறல் (distraction) இருக்காது என்கிறார் அஷ்டாவக்ரர். ஞானநிலையில் நீ எதையும் தெரிந்தெடுப்பதில்லை (choose). இந்தத் தெரிந்தெடுத்தலால்தான் பல இடையூறுகள் உண்டாகின்றன.

நீ தியானத்தில் அமர்கிறாய். ஒரு நாய் வந்து குரைக்கிறது. உன் கவனம் சிதறுகிறது. ஏனெனில் நீ உன் கவனத்தை ஒன்றில் குவிப்பதில் (மையப்படுத்துவதில்) ஈடுபட்டாய். நேரம்-இடம் தெரியாமல் இந்த நாய் வந்துதொலைத்தது. 'ஒருவேளை முற்பிறவியில் இதற்குக் கெடுதல் ஏதாவது செய்ததால் இப்போது வந்து பழிவாங்குகிறதோ. ஒரு நாளைக்குள்ள 24 மணி நேரத்தில் இந்த நேரத்தை நாய் தவிர்த்திருக்கக் கூடாதா?' என்று நினைப்பாய்.

நீ தியானத்தில் அமர்கிறாய். குழந்தை அழத் தொடங்கு கிறது. உனக்குத் திகைப்பாக இருக்கிறது. நீ தியானத்தில் அமர்ந்தது குழந்தைக்கு எப்படித் தெரியும் என வியக்கிறாய். அப்பாவிக் குழந்தை; தொட்டிலில் கிடக்கிறது; அது உன் தியானத்தைக் கெடுக்க வேண்டுமென்று அழவில்லை.

நீ தியானத்தில் அமர்கையில் மனத்தை ஒன்றில் (ஒரு புள்ளியில்) குவிப்பேன் என்று தெரிவுசெய்தாய். இதனால்தான்

கவனச் சிதறலும் விளைந்தது. உன்னைச் சுற்றிலும் பலவகை இயக்கங்கள் நடைபெறுகின்றன. வாகனங்கள் ஓடுதல், விமானம் பறக்கும் ஒலி, சமையலறையில் மனைவி உருட்டும் பாத்திரங் களின் ஓசை, தெருவில் விளையாடும் அல்லது சண்டையிடும் சிறுவர்களின் கூச்சல், காக்கைகள் கத்துதல்—என்றெல்லாம் எத்தனையோ இடைஞ்சல்கள். இவை ஏன் ஏற்பட்டன.

அஷ்டாவக்ரரின் பார்வையில், நீ 'எந்தக் கவனச் சிதறலுக்கும் ஆளாகாமல் தியானம் செய்வேன்' என்று முடிவெடுத்ததுதான் காரணம். ஆகவே அவரைப் போலவே நானும் கவனத்தை மையப்படுத்துவதை ஆதரிக்கவில்லை. நீ உன்னைக் கட்டுப்படுத்தி உன் கவனத்தை மையப்படுத்த முயல்வது அகங்காரத்தின் விஸ்தரிப்பேயாகும். அதனுடன் உண்மையான தியானத்திற்குத் தொடர்பில்லை. மனத்தைக் குவிக்க முயல்வது மனத்தைச் சிதறடிக்கிறது! இதனால் ஏற்கெனவே இருந்த மன அமைதியும் கெடுகிறது.

மனத்தைக் குவிப்பதே தியானம் என்று யோகம் சம்பந்த மான நூல்களில் காணப்படுகிறது. அவற்றை எழுதியவர்கள் தியானத்தின் உள்ளர்த்தத்தை அறிந்திராதவர்கள். தியானத்தின் 'அ-ஆ' கூட அவர்கள் அறிந்திருக்கவில்லை. தியானம் என்றால் கவனத்தைக் குவித்தலா? இல்லவே இல்லை என்று ஆயிரம் முறைச் சொல்லுவேன். அடிப்படையில், தியானம் எனில் கவனம் சிதறாமை என்பது உண்மைதான். ஆனால் அதற்காக வலிந்து, வேண்டுமென்றே மேற்கொள்ளப்படும் முயற்சியால் கவனம் கலைந்துதான் போகிறது.

ஆகவே விசித்திரமாக, தியானம் என்பது பன்முகக் கவனம் என்று அர்த்தமாகிறது. நடப்பதை நடக்கவிட்டு விடுவோம். குழந்தை அழுகிறது. சரி, அழட்டும். நாய் குலைக்கட்டும். அவற்றிற்குத் தடையுத்தரவுபோட நாம் யார்? மற்றவர்களின் உரிமையில் குறுக்கிட நமக்கென்ன உரிமை? 'நான் தியானம் செய்கையில், நாய் குரைக்கலாகாது; காகம் கரையக்கூடாது; குழந்தை அழக்கூடாது; தெருவில் போக்குவரத்து நிறுத்தப்பட வேண்டும்; ஆகாயத்தில் விமானம் பறக்கக்கூடாது—என்றெல்லாம்

முற்றுப்புள்ளி வைக்க நான் யார்? அப்படி நான் உத்தரவிட்டால் அது நம் அகங்காரத்தின் அறிவிப்பாகிவிடும்.

இல்லை, நான் யாருமில்லை. நடப்பனவற்றை நான் ஏற்கிறேன். எத்தனை-எத்தனை ஒலிகள் வேண்டுமானாலும் கேட்கட்டும். அவற்றை நான் கேட்பேன். ஆனால் அவற்றை எதிர்க்காததால், வெறுக்காததால், கவனம் சிதற வாய்ப்பில்லை. நான் தியானம் செய்கையில் நாய் குலைக்கக்கூடாது என்று நான் நிபந்தனை விதிக்காததால், எனக்குப்பாதிப்பு உண்டாகாது.

மனத்தைக் குவிக்க முயல்வது கால்விரலில் காயம்படுவது போன்றது. நாள் முழுதும் பட்ட காலிலேயே படுகிறது. சிறுவனான உன் மகன் காலில் ஏறி ஆட்டச் சொல்கிறான். இத்தனை நாளாக இல்லாமல் இன்று வந்து ஏறுகிறான். பாதையில் செல்கையில் எவனோ விரலை மிதித்துவிடுகிறான். அறைக்குள் நுழைகையில் கதவு இடிக்கிறது. பொருட்கள் காயப்பட்ட விரலை உரசியபடி விழுகின்றன.

இவ்வாறெல்லாம் முன்பும் நிகழ்ந்தன. இதுவரை உனக்குக் கால்விரல் நினைவே எழுந்ததில்லை. ஏனெனில் முன்பு காயம் இல்லை. உனக்கு ஏற்பட்ட காயத்தைப் பார்த்தால் சுற்றிலுமுள்ள எல்லாம் அதைத் தாக்குவதாகக் கூற முடியாது. யாருக்கும் உன் காயம் பற்றித் தெரியாது. நீ மனத்தைக் குவிப்பதற்காக உட்கார்ந்தாய். அவ்வளவுதான், காயம் உண்டாகிவிட்டது. அற்ப விஷயங்களெல்லாம் தியானத்தைச் சிதைக்கின்றன.

நீ தியானத்தில் அமர்ந்தாய். உடலில் எங்கோ எறும்பு ஊர்வதை உணர்கிறாய். அரிப்பாக உள்ளது. அது தலையில் ஏறி விட்டதுபோல் தோன்றுகிறது. திடீரெனக் கால் மரத்துப்போகிறது. உலகமே உன்னுடைய தியானத்தை எதிர்ப்பதுபோலுள்ளது. இல்லை, உலகம் உன் தியானத்தை எதிர்க்கவில்லை. அது உன் கவனக் குவிப்பைத்தான் எதிர்க்கிறது. உலகம் உன் எதிரியன்று. கவனக் குவிப்பு முயற்சியை மேற்கொள்வதன் மூலம் நீதான் உலகை உன் எதிரியென்று அறிவிக்கிறாய். 'எறும்புகள் என்மேல் ஏறுவதை நான் விரும்புவதில்லை; காற்று வீசக்கூடாது; பறவைகள் பாடக்கூடாது; சாலையில் யாரும் நடையொலி எழுப்பக்கூடாது;

சமையலறையில் பாத்திரம் விழக்கூடாது' என்றெல்லாம் அறிவித்து, நீ உலகத்தினிடம், 'நான் இப்போது தியானம் செய்கிறேன். எல்லோரும், எல்லாமும் என் தியானம் முடியும்வரை அமைதியாகக் காத்திருக்கட்டும்,' என்று எச்சரிக்கிறாய். நீ இப்படி உலகிற்கு விரோதமாகப் போவதால், நிகழ்பவை எல்லாம் இடையூறுகளாக உனக்கு எரிச்சலூட்டுகின்றன. இதனால் தியானத்தை ஆரம்பிப்பதற்கு முன்னாலிருந்த மன அமைதியும் காணாமல் போய்விடுகிறது.

தியானத்தின் உண்மையான அர்த்தம் பன்முகக் கவனம் என்பதாகும். அதையே எதையும் பொருட்படுத்திக் கவனிக்காமை (non-concentration) என்றும் சொல்லலாம். சாந்தமாக, ஓய்வாக நீ உட்கார்ந்துவிட்டாய் எனலாம். நடப்பது நடக்கட்டுமென்று நீ ஏற்றுக்கொண்டாய் எனலாம். இந்த ஏற்பின் விளைவாக ஒன்று சிதறும்; அது உன் அகங்காரம். ஒன்று சமாளித்து நிற்கும். அது நீதான். அடுத்து ஒன்று போகும்; அது உன் பொய் உருவம். ஒன்று வரும்; அது உன் மெய் உருவம். ஒன்று போகும்; நீ நீங்குவாய். ஒன்று வரும்; கடவுள் வருவார் (ஆத்மாவில் பிரவேசிப்பார்).

நீ எதையும் தேர்ந்தெடுக்க முயலாவிடில், ஏதேனும் ஒன்றை வற்புறுத்தாவிடில், உன் வாழ்க்கை சகஜமாக, இயல்பாக அமையும். கபீர்தாசர், சமாதிநிலையும் வற்புறுத்திப் பெறுவதன்று என்றும், அது இயல்பாக நிகழ வேண்டும் என்றும் கூறுகிறார். 'ஸாதோ ஸஹஜ பலீ' (சாதுக்களே, சகஜமான சமாதிதான் நல்லது) என்கிறார். நீ மௌனமாக, பன்முகக் கவனத்துடன் (அதாவது பாதிப்பின்றி) தியானம் செய்தால் ஒருநாள் பின்வருமாறு உணர்வாய்:

**இது என்ன புதிய இடம்**
**தரைகூட தென்படவில்லை**
**இன்பமோ சோகமோ**
**இல்லை இங்கு**
**உனது காற்று இங்கென்னைக்**
**கொண்டுவந்து சேர்த்தது**

**நீதான் எனது வாழ்க்கைமுறை**
**நீதான் எனது சகபயணி**
**நீதான் எனக்கு விளக்கொளி**
**நீதான் பார்வை கொடுத்தவன்**
**நீயின்றேல் என் வாழ்க்கை**
**கல்லறைப் பிணவாழ்க்கையாகிவிடும்**

நீ முழுமையாக உன்னை பரமாத்மாவின் கைகளில் ஒப்படைத்துவிடு. இதனால் எதுவோ சிதறும். எது சிதறுமோ அது சிதறுவதற்காகத்தான் உள்ளது. அது சிதறத்தான் வேண்டும். அது (அகங்காரம்) சிதறுவது சுபமானது. எதுவோ சமாளித்துக்கொண்டு நீடிக்கும். எது நீடிக்க வேண்டுமோ அதுதான் சமாளித்துக் கொள்ளும்.

தற்போது தவறான ஒன்று பிடித்துவைக்கப்பட்டுள்ளது; சரியான ஒன்று உறக்கத்தில் உள்ளது. தவறானதைப் போகவிடு. அப்போதுதான் சரியானது விழிக்க முடியும். சாரமற்றதை சாரமற்றதாகக் காணும்போது சாரம் பிறக்கும். பொய்யைப் பொய்யென அடையாளம் காணும்போது சத்தியத்தின் முதல் கிரணம் வெளிப்படும்.

## மூன்றாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! கடவுளை அடையும் வழி எது? தாகமாக உள்ளது. ஆனால் நீர் நிலைக்கான பாதை கிடைக்கவில்லை. வழிகாட்டுங்கள்.**

**தா**கம் இருக்க முடியாதே! தாகமாக உள்ளது என்கிறாய். உண்மையில் தாகமில்லை. ஏனெனில் தேவை என்பது பாதையும் போடும். ஆன்மிகத் தாகம் இருந்தால் அதுவே பாதையுமாகும். இந்த வகைத் தாகத்திலிருந்து பாதையைப் பிரிக்க முடியாது. பாதை பற்றி தனியாகப் பேசினால் ஆன்மிகத் தீர்கம் குறைபட்டதாக இருக்கும். தாகம் உச்சக்கட்டத்தைத் தொடும்போது, கடவுளிட மிருந்து பிரிந்திருக்கும். விரகம் பெருநெருப்பாய் எரியும்போது, பாதை தானாகவே உருவாகிறது.

வீட்டில் தீப்பிடித்துவிட்டதாக வைத்துக்கொள். நீ யாரிடமாவது 'கதவு எங்கே உள்ளது? வாசல் கதவு எங்கே உள்ளது?' என்றெல்லாம் விசாரித்தபடியா அலைவாய்? ஜன்னல் தெரிந்தால் எப்படியாவது உடைத்தல்லவா வெளியேறுவாய். 'வீட்டு வரைபடம் எங்கே? அதில் தப்பிக்கும் வழி போட்டிருக்கும்' என்றெல்லாம் சொல்லித் தாமதிக்கமாட்டாய். உயிரின் மீது உனக்குள்ள அச்சம் தானாகவே நீ வெளியேற ஏதாவது வழியைக் காட்டுகிறது. உன் கவலையே வழியாகிவிடுகிறது.

வழி விசாரிப்பது ஓய்வில்தான் சாத்தியப்படும். அதைப் பயன்படுத்த வேண்டிய தேவையில்லாதபோது மக்கள் அது பற்றி விசாரிக்கின்றனர். முதலிலேயே வழி தெரிந்துவைத்திருத்தல் சமயத்திற்கு உதவும் என்கின்றனர். வழி பற்றிய விவரம் கிடைத்தாலும் புதிய சந்தேகம் தோன்றுகிறது. இந்த வழிகாட்டியை நம்பலாம் என்பதற்கு என்ன உத்தரவாதம் உள்ளது? வேறு பல வழிகாட்டிகளும் இருப்பதாகத் தெரிகிறதே. முதலில் இதை முடிவுசெய்ய வேண்டும். சரியான வழியைச் சொல்லுபவர் யார்? புத்தரா, மகாவீரரா, கிருஷ்ணரா, இயேசுநாதரா அல்லது வேறு யாராவதா?

இவ்வாறாக, மீண்டும் கேள்வியைப் பார்த்தால், உன் தாகத்தை ஆராய்ந்துபார். தாகம் உண்மையானதாக இருக்காது. தாகம் இருந்தால் (தீ விபத்துப் போல் தேவை மூண்டால்) வழியும் கிடைத்துவிடும், அல்லது வழியைத் தேடுவாய். நீயேகூட புதிய வழி கண்டுபிடிப்பாய். ஆனால் உண்மையான (ஆன்மிகத்) தாகம் இருக்க வேண்டும். நீ இருக்கும் இடத்திலேயே வழியும் உள்ளது. ஆனால் தாகம் எடுத்தால்தான் அந்த வழியுடன் உனக்குத் தொடர்பு ஏற்படுகிறது.

ஆகவே நான் உனக்குச் சொல்லிக்கொள்வது: வழியைத் தேடியபடி இருக்காமல் உன் தாகத்தை தீவிரப்படுத்து, ஆழமாக்கு. உன் தாகம் இனிப் பொறுக்க முடியாத அளவிற்கு உயராவிடில், அதைத் தணிக்க உனது எல்லாவற்றையும் பணயமாக வைக்க நீ தயாரில்லையெனில், உனது (ஆன்மிகத்) தாகம் முழுமை பெறவில்லை என்று பொருள்.

இந்தியாவின் மீது படையெடுத்தபின் அலெக்சாந்தர் தமது நாட்டிற்குத் திரும்புகிறார். வழியில் ஒரு துறவி எதிர்ப்பட்டார். அவர் அலெச்சாந்தரைப் பார்த்து பலமாகச் சிரித்தார். "என்னையா அவமதிக்கிறாய்? நான் யார் தெரியுமா? மாவீரன் அலெக்சாந்தர்" என்றதும் துறவி, "நீ அப்படி ஒன்றும் மாமனிதன்போல் தோன்ற வில்லை. என் கண்ணுக்கு நீ பிச்சைக்காரன்போல் தெரிகிறாய்," என்றார்.

"ஏ துறவியே! ஒன்று நீ பைத்தியக்காரனாய் இருக்க வேண்டும் அல்லது நீ சாகும் வேளை நெருங்கிவிட்டதுபோல் இருக்கிறது. நான் உலகம் முழுவதும் வென்றவன். என்னையா பரதேசிப்பயல் என்கிறாய்?" அலெக்சாந்தர் மிரட்டினார்.

"உன் பேச்சு வெற்று உளறல்தான். நீ ஒரு பாலைவனத்தில் சிக்கிக்கொண்டால், எங்கும் பசுமையில்லாமல் போனால், ஒரு கோப்பைத் தண்ணீர் கிடைத்தால் அதற்கு விலையாக உன் நாட்டில் எத்துணை பங்கு தருவாய்?" துறவி கேட்டார்.

"நான் என் நாட்டில் பாதியைத் தருவேன்."

"தண்ணீர் தருபவர் அது போதாது என்று மறுத்தால்..."

"என் முழுநாட்டையும் தர சம்மதிப்பேன்."

துறவி அட்டகாசமாகச் சிரித்தார். "அப்படியானால் உன் மொத்தப் பேரரசின் மொத்த மதிப்பு ஒரு கோப்பை தண்ணீர் அளவுதானா? இதற்குப் போய்ப் பெரிதாக அலட்டிக் கொள்கிறாயே."

தண்ணீருக்குப் பதிலாகக் கடவுளை உருவகப்படுத்தினால், அவர் உன்னைச் சந்திக்க தயாராக உள்ளார் என்று ஒருவர் தெரிவித்தால், அச்சந்திப்பிற்காக நீ எதை இழக்க அல்லது ஈடாகக் கொடுக்க முன்வருவாய்? அலெக்சாந்தர் முதலில் பாதி நாட்டைக் கொடுப்பேன் என்றதுபோல், நீ உன் கடையில் பாதியை அல்லது வீட்டில் பாதியை அல்லது செல்வத்தில் பாதியைக் கொடுப்பாயா? அதற்குப் பதிலாக நீ, "இறைவா! எனக்குக் குடும்பச் செலவுகள் நிறையக் காத்திருக்கின்றன. மகளுக்குக் கல்யாணம்

செய்யவேண்டும். மகன் கல்லூரிப் படிப்புச் செலவும் உள்ளது. உங்களைச் சந்திப்பதற்கான கட்டணமாக நான் பணம் செலவழிக்கும் நிலையில் இல்லை. நாள் இறக்கும்போது எப்படியும் சந்திக்க வருவீர்கள். அப்பொழுது என்னிடத்தில் ஏதாவது மிஞ்சியிருந்தால் தருகிறேன்." என்று நிகழ்காலச் சந்திப்பைத் தட்டிக் கழிப்பாய்.

ரவீந்திரநாத தாகூரின் புகழ் பெற்ற கவிதை ஒன்று கதையாக விரிகிறது.

ஒரு பிச்சைக்காரன். வழக்கம்போல் தனது அழுக்கு ஜோல்னா பையை எடுத்துக்கொண்டு பிச்சை கேட்கக் கிளம்பினான். பையில் கொஞ்சம் அரிசி போட்டுக்கொண்டான். எல்லாப் பிச்சைக்காரர்களும் கிளம்பும் முன் அப்படித்தான் செய்வார்கள். அப்படிப் பையில் ஏற்கெனவே கொஞ்சம் அரிசி கிடந்தால்தான் தாங்களும் அரிசி போடுவார்கள். 'நமக்கு முன்னால் எவரோ பிச்சை போட்டிருப்பதால் நாமும் அவ்வாறே செய்வோம். இல்லாவிட்டால் நம் பெயர் கெடும்' என நினைக்கிறோம். கோயிலில் குருக்களும் சிலைக்கு கற்பூரம் காட்டியபின் தட்டெடுத்து பக்தர்களிடம் வருகிறார். அதில் ஏற்கெனவே கொஞ்சம் சில்லறை போட்டு எடுத்துவருவார். அவர் காலித் தட்டு கொண்டுவந்தால் நீ காசு போடத் தயங்குவாய். 'வேறு ஒருவர் முதலில் போடட்டும். அவர் எவ்வளவு போடுகிறார் என்று பார்ப்போம். அதற்கேற்றபடி நாமும் காசு போடுவோம்' என்று நீ பின்வாங்குகிறாய். ஆனால் அர்ச்சகர் ஏற்கெனவே காசுள்ள தட்டுடன் வந்தால், நீ போடாமல் இருக்க முடியாது. நீ நழுவினால் அவர் உன்னைக் கஞ்சப்பயல் என்று நினைத்துவிடுவாரே என்று கூச்சப்பட்டுக் காசு போடுவாய். இதுகூடப் பரவாயில்லை. சிலர் செல்லாத பணம் கிடைத்தால், தனது கவனக்குறைவை மறந்து, கடவுள்மீது சினமடைந்து, பழிவாங்குவதுபோல் அர்ச்சகரின் தட்டில் அல்லது உண்டியலில் அதைப் போட்டுவிடுவார்கள்!

அந்தப் பிச்சைக்காரன் முன்னேறிச் செல்கையில் அரசரின் தேர் எதிரே வருவதைக் கண்டான். சூரிய ஒளியில் தேர் தங்கமாய்ப் பளபளத்தது. பிச்சைக்காரன் நெகிழ்ந்துபோனான்.

இத்தகைய அதிர்ஷ்டம் அவனுக்குக் கிடைத்ததில்லை. அரண்மனைக்குள் அவன் என்றும் நுழைய வாய்ப்பில்லை. உள்ளே நுழைய முடிந்தால்தானே அரசரிடம் பிச்சை கேட்டுப் பெரிய அளவில் தானம் பெறலாம். இன்றோ அரசரைப் பாதையி லேயே சந்தித்து, தன் ஜோல்னாப் பையை விரித்துக் காட்டி தானம் பெறலாம் என்று பிச்சைக்காரன் உவகையடைந்தான்.

தேர் நெருங்கியது. பிச்சைக்காரன் இருந்த இடத்தை அடைந்ததும் தேர் நின்றுவிட்டது! பிச்சைக்காரன் நடுங்கினான். அடுத்து, அரசர் தேரிலிருந்து இறங்கினார். பிச்சைக்காரனுக்கு அதிர்ச்சி. தன்னைச் சமாளித்துக்கொண்டு ஜோல்னா பையைப் பிச்சைக்காரன் விரிப்பதற்கு முன்பே அரசர் தன் கையிலிருந்த ஒரு ஜோல்னா பையை அவன் முன் விரித்துக்காட்டினார்!

பிச்சைக்காரனது குழப்பத்தைப் பார்த்து அரசர், "நண்பா, இன்று நான் பிச்சை எடுத்தால்தான் நாடு பிழைக்கும் என்றும் இல்லாவிடில் நாட்டிற்குப் பெரிய சங்கடம் நேரும் என்றும் அரண்மனைச் சோதிடர் எச்சரித்துள்ளார். மேலும் இன்று காலை நான் அரண்மனையிலிருந்து வெளிப்பட்டு முதன்முதலாக நான் சந்திக்கும் நபரிடம் நான் பிட்சை கேட்டுப் பெறவேண்டும் என்றும் சோதிடர்கள் பரிகாரம் கூறியுள்ளார்கள். நீ பிச்சைக்காரன்போல் தெரிகிறாய். நீ எனக்கு எதுவும் கொடுப்பது சிரமம்தான், ஆனால் வேறு வழியில்லை நாட்டைக் காப்பாற்ற வேண்டிய அவசியம் உள்ளது. பெயரளவிற்காவது எனக்கு ஏதாவது பிட்சைபோடு, மறுக்காதே," என்று கெஞ்சினார்.

பிச்சைக்காரன் அரண்டுபோனான். அவன் யாருக்கும் எதுவும் கொடுத்ததில்லை. எப்போதும் பிறர்தான் கொடுக்க வேண்டும் என்ற நிலையில் அவன் இருந்துள்ளான். அவனுக்குக் கொடுத்துப் பழக்கமில்லை. எவருக்காவது எப்போதாவது கொடுத்ததாக ஞாபகம் இல்லை.

நீ உன் நிலைமையுடன் ஒப்பிடு. கடவுள் உன் முன்னால் வந்து துண்டு விரித்தால் நீயும் இதேபோன்ற சங்கடத்துக்கு உள்ளாவாய். நீயும் இதுவரை கேட்பவனாகவே, யாசிப்பவனாகவே இருந்துவந்திருக்கிறாய். நீ பிரார்த்தனை என்று பெருமையாகச்

சொல்வது உன் கோரிக்கைகளின் பட்டியல்தானே. வேறென்ன? நீ கொடுப்பதாக என்றாவது அறிவித்திருக்கிறாயா? நீ கடவுளை தியானித்து, 'பிரபு! நான் என்னையே உங்களுக்கு அளிக்க ஆசைப்படுகிறேன். நீ என்னை எடுத்துக்கொள். என் மீது இரக்கம் காட்டு. என்னை ஏற்றுக்கொள்' என்று கெஞ்சியிருக்கிறாயா? கோயில் வாசலில் உள்ள பிச்சைக்காரனுக்கும் கோயிலுக்குள் சென்று வரம் என்ற பெயரில் பிச்சை கேட்கும் உனக்கும் என்ன வித்தியாசம்?

கதையில் வரும் பிச்சைக்காரன் பயந்துவிட்டான். நாட்டிற்கு ஆபத்து என்பதால் மறுக்கவும் முடியாது. அரசருக்குக் கோபம் வந்தால் தன் தலை தப்பாது என்று அவனுக்குத் தெரியும். அவன் பைக்குள் கைவிட்டான். ஒரு பிடி அரிசி எடுத்துக் கொடுக்கும் அளவு இருந்தாலும் அவனுக்குத்தான் கொடுத்துப் பழக்க மில்லையே. வேறுவழியின்றி அவன் ஒரேயொரு அரிசியை எடுத்து அரசர் கையிலிருந்த பைக்குள் போட்டான்!

விஷயம் முடிந்தது. அரசர் பையை மூடி தேரில் அமர்ந்தார். அவர் சென்ற பிறகுதான் பிச்சைக்காரனுக்கு தான் அவரிடம் பிச்சை கேட்கவில்லையே என்பது ஞாபகம் வந்தது. நிலைமை தலைகீழாக அல்லவா ஆகிவிட்டது. பிறகு அவன் தன்னையே நொந்துகொண்டு மற்றவர்களிடம் பிச்சை கேட்கச் சென்றான். அவனே கொடுப்பவனாக அன்று ஆரம்பித்ததாலோ என்னவோ நிறையப் பிச்சை கிடைத்தது. பை நிறைந்துவிட்டது. ஆனால் பை கனத்தைப்போல் அவன் மனமும் கனத்தது. 'சே! அரசரே எதிரே வந்து நின்றும் அவரிடம் பிச்சை கேட்டு என் வறுமையை நிரந்தரமாகப் போக்கிக்கொள்ளாதிருந்து விட்டேனே. சூழ்நிலை காரணமாக அரசர் முதல் பிச்சைக்கு ஈடாக எதையும் கொடுக்கும் மனநிலையில் இருந்தாரே. இந்த அரிய வாய்ப்பு இனி கிடைக்கவே கிடைக்காதே' என அவன் வருந்தினான்.

குடிசை வாசலில் அவன் மனைவி காத்திருந்தாள். பை நிறைந்திருந்ததைக் கண்டு மகிழ்ச்சிகொண்டாள். கணவனைப் பாராட்டினாள், அவன் சோகமாகச் சொன்னான், "சிரிப்பை நிறுத்து. இன்று எத்தகைய பேரிழப்பு நேரிட்டது என்று உனக்குத் தெரியாது.

அரசரையே நேருக்கு நேர் தனியாகச் சந்திக்க முடிந்தது. ஆனால் அவரிடம் யாசகம் கேட்காமல் இருந்துவிட்டேன். இப்படி துரதிர்ஷ்டம் இதுவரை நேர்ந்ததில்லை."

பிறகு அப்படியே பையைக் கவிழ்த்துக் கொட்டினான். கீழே பரவியவற்றை உற்றுக் கவனித்த அவன் நெஞ்சில் அடித்துக் கொண்டு அழத் தொடங்கிவிட்டான். காரணம், கீழே சிதறிய அரிசிமணிகளில் ஒற்றை அரிசிமணி தங்கமாக மாறி ஜொலித்தது. 'ஐயோ, என்னிடம் அப்போதிருந்த பிடி அரிசியையும் அரசருக்குப் போடாமல் இருந்து விட்டேனே. அவருக்குத் தந்திருந்தால் என்னிடமிருந்த அரிசியெல்லாம் தங்கமாக மாறியிருக்குமே' என்று அவன் புலம்பினான்.

ஆம், நாம் ஒன்றைப் பிறருக்கு உதவியாகக் கொடுத்தால் அது தங்கம்போல் மதிப்புடையதாகத் திரும்பிவரும். பிறரிட மிருந்து யாசித்துப் பெற்றால் அது தங்கமாயினும் மண்ணுக்கு சமமாகிவிடும். இதனால்தான் சாஸ்திரங்கள் தான மகிமையை விரிவாகக் கூறுகின்றன.

உனக்கு ஆன்மிகத் தாகம் எடுத்திருந்தால், அதைத் தணிப்பதற்காக வரும் கடவுளுக்கு நன்றி தெரிவிக்க உன்னையே கொடுத்துவிடு. பழம், தேங்காய், இனிப்புகளை சமர்ப்பித்தால் போதாது. 'அன்றன்றே கெட்டுவிடுகின்ற பொருட்களை சமர்ப்பித்தால் உன் நன்றி உணர்வு அற்ப அளவே வெளிப் படுகிறது எனலாம். சாவு உன்னிடமிருந்து எதைப் பறிக்க முடியாதோ அதை கடவுளுக்கு அர்ப்பணிப்பது உனக்கு சம்மதமானால், கடவுள் இப்பொழுதே உனக்குக் கிடைத்துவிடுவார். அவர் உன் வீட்டு வாசலில் நிற்கிறார். கதவைத் தட்டுகிறார். பிச்சைக்காரராக இருக்குமோ, காசு போட வேண்டியிருக்குமோ என்று நீ அஞ்சுகிறாய். நீ உன் மகனை வாசலுக்கு அனுப்பி 'அப்பா வீட்டில் இல்லை; வெளியே போயிருக்கிறார்' என்று சொல்லுமாறு ஏவுகிறாய்.

உனக்கு (ஆன்மிக) தாகம் என்கிறாய். என்னால் நம்ப முடியவில்லை. ஏனெனில் எவருக்காவது உண்மையில் தாகம்

எழுந்தால், அதைத் தணிக்க, கடவுள் அவர் பின்னாலேயே வந்துவிடுவார்.

**கடலிலிருந்து கார்மேகம்**
**தானே எழும்பி வருவதில்லை**
**பூமியின் தீவிர தாகம்தான்**
**அதைப் பிடித்திழுத்து வருகிறது**

வானத்தில் எப்பொழுதும் மேகங்கள் உள்ளன. நீதான் அவற்றைக் கூப்பிடுவதில்லை. உனக்கு உண்மையான அல்லது தீவிரமான தாகம் ஏற்படவில்லை என்பதுதான் காரணம்.

தாகத்தைத் தணித்துக் கொள்வதற்கான வழியென்ன என்றும் கேட்கிறாய். புத்தரிடம் ஒருவன் சென்று, "நீங்கள் புத்தநிலையை அடைந்தவர்கள் வழி மட்டும் காட்டுவார்கள் என்றீர்கள். அப்படியானால் அவர்களுடனேயே இருப்பதால் (சத்சங்கத்தால்) என்ன நன்மை?" என்று கேட்டான். புத்தர் அதற்கு, "சத்சங்கத்தால் (ஞானிகளுடன் உறைவதால்) ஆன்மிகத் தாகம் மூண்டெழும். இறையுணர்வைப் பெற்றாக வேண்டும் என்று பிடிவாதமாகத் தோன்றும்" என்றார்.

புத்தரைப் போன்றவர்களைச் சார்ந்து இருப்பதால் உனக்குள்ளும் ஆன்மிகத் தாகம் எழும். இவர்களைப்போல் நாமும் ஆக முடியும், ஆக வேண்டும் என்னும் பிடிவாதம் தோன்றும். ஆனால் உன்னை முழுமையாக அர்ப்பணிக்க வேண்டும். அரை குறையாக அர்ப்பணிக்கக் கூடாது. ஆன்மிக விஷயத்தில் கஞ்சத்தனம் வேண்டாம். கடவுளிடம் உன் புத்திசாலித்தனம் பலிக்காது.

**அ**மெரிக்காவில் ஒரு சம்பவம். வருமான வரி அலுவலகத்திற்கு ஒரு கடிதம் வந்தது. அதில் ஒருவர் பின்வருமாறு எழுதியிருந்தார்:

"ஐயா, எனது கடந்த காலத் தவறு ஒன்றை மன்னித்து விடுங்கள். இருபது ஆண்டுகளுக்கு முன் வருமானவரி கட்டுவதில் மோசடி செய்தேன். அதன் பிறகு என்னால் சரியாகத் தூங்கவே முடியாகப் போய்விட்டது. பிராயச்சித்தமாக நான் 50

டாலருக்கான காசோலை அனுப்பியுள்ளேன். நான் மேற்கொண்டு 50 டாலர் அபராதமாகத் தர வேண்டியுள்ளது. எனினும் இப்பொழுது அனுப்பிய தொகை காரணமாகத் தூக்கம் வந்து விட்டால் சரிதான். அப்படியும் தூங்க முடியாவிடில் மீதித் தொகையையும் அனுப்பிவைக்கிறேன்.'

இக்கடிதத்தை நீ எழுதியதாகக் கற்பனை செய்தால் யாரை நீ ஏமாற்றுகிறாய்? பாதி கொடுத்தால் போதுமா? இருபது ஆண்டாகிவிட்ட நிலையில் வருமான வரி அலுவலகமே இதை மறந்திருக்கும். உண்மை உனக்குத்தான் தெரியும். அப்படியிருந்தும் பாதி வரிப்பணம்தான் அனுப்புகிறாய். அதற்குப் பதிலாகத் தூக்கம் வர வேண்டும் என எதிர்பார்க்கிறாய். தூக்கம் வந்து விட்டால் மீதி வரி நிலுவையைக் கட்டமாட்டாய் என்று அர்த்தமாகிறது.

நீ ஊரை, உலகத்தை, யாரை வேண்டுமானாலும் ஏமாற்று. கடவுளை ஏமாற்ற நினைக்காதே. ஏமாற்ற முயன்றால் பிறகு உன்னால் உட்கார, நிற்க, தூங்க என்று எதுவும் செய்ய முடியாது. கடவுளை ஏமாற்ற முயல்வது உனது எதிர்காலத்தையே ஏமாற்றுவதற்கு ஒப்பாகும். ஆத்மாவிற்குச் செய்யும். வஞ்சனையாகும். நாம் எல்லோருமே எவ்விதத்திலாவது கடவுளை ஏமாற்ற முயலுகிறோம். பிறகு 'வழி தெரியவில்லையே' என்கிறோம்.

வழி உன் கண்ணெதிரேயே உள்ளது. நீ நிற்கும் இடத்தில் அவ்வழி உள்ளது. உண்மையில் வழிகள் அநேகம் உள்ளன. ஆள் ஒருவன், வழிகள் பலப்பல. அன்பு வழி, தியான வழி, பக்தி வழி, ஞான வழி, யோக வழி என்று எத்தனையோ பாதைகள், எத்தனையோ உபாயங்கள். ஆனால் நீ அசைந்து கொடுத்தால் தானே? பாதைகள் பிரியும் நாற்சந்தியிலேயே நீ சௌகரியமாக உட்கார்ந்துவிட்டாய்.

சமணமத சாஸ்திரங்கள் மனிதனை நாற்சந்தி (ஜங்ஷன், சந்திப்பு) என்று குறிப்பிடுகின்றன. தேவலோகத்தினர் மோட்சம் பெறவேண்டுமானால் அவர்கள் மனிதப் பிறவி எடுக்க வேண்டுமென அந்த சாஸ்திரங்கள் கூறுகின்றன. தேவர்கள் ஒரு பாதையைப் பின்பற்றிச் சென்று சுவர்க்கத்தை அடைந்துவிட்டனர்.

அங்கு பாதை முடிகிறது. மேற்கொண்டு அவர்கள் மோட்சத்திற்குச் செல்லவேண்டுமானால் மனிதப் பிறவி என்னும் ஜங்ஷனுக்கு வந்தாக வேண்டும்.

சுவர்க்க வாழ்க்கையும் ஒருநாள் திகட்டிப்போகும். துன்பம் சலிப்பைத் தருவதுபோல் நீடித்த இன்பமும் அலுப்பூட்டும். எதையும் தொடர்ந்து செய்வது அலுப்புத் தருகிறது. இன்பமும் துன்பமும் மாறி-மாறி வருவதால் வாழ்க்கையில் சுவை தெரிகிறது. இது ஒரு பொருளை ஒரு தோளிலிருந்து மறு தோளுக்கு மாற்றிக்கொள்வது போன்றதாகும்.

துன்பம் வந்தால் சுகத்தின் எதிர்பார்ப்பு அந்தத் துன்பத்தை சகித்துக்கொள்ளச் செய்கிறது. சுகம் வந்தபின் அது திகட்டும்போது துன்பம் வந்து மாற்றத்தை ஏற்படுத்துகிறது. இனிப்பிற்குப் பின் காரம் சாப்பிடுவதுபோல்தான் இதுவும். இவ்வாறாக நமது வாழ்க்கைப் பயணம் முன்னேறிச் செல்கிறது. சுவர்க்கத்திலோ இன்பம் மட்டுமே உண்டு. என்றைக்கும் எல்லா உணவுகளிலும் சர்க்கரை போட்டிருப்பது போன்றிருக்கும் நிலை. முதலில் சுவையாக இருந்தாலும் பிறகு வாந்திதானே வரும்.

ஆகவே அவர்கள் இன்பமும் துன்பமும் கலந்ததாகிய மனிதப் பிறவியாகிய நாற்சந்திக்கு வந்துதான் ஆக வேண்டும். எல்லாப் பாதைகளும் மனிதப் பிறவியிலிருந்தே தொடங்கு கின்றன. உலகம், நாகம், சுவர்க்கம், மோட்சம் என்று பாதைகள் பிரிகின்றன. ஏற்கெனவே மனிதப் பிறவி எடுத்துவிட்ட நீ நாற்சந்தியிலேயே உட்கார்ந்துகொண்டு, 'எங்கே போவேன்? எவ்வழி போவேன்?' என்று புலம்புகிறாய். உனக்கு எங்கும் போக விருப்பமில்லையெனில் சும்மாவாவது இருந்துவிடு. வீணாகக் கேள்வி கேட்காதே. நீ எங்கும் போக விரும்பாவிடில் உன்னைப் பின்னாலிருந்து எவரும் பிடித்துத்தள்ள முடியாது. போக வேண்டாம் என்றால் நேர்மையாக இரு. 'நான் எங்கும் போக வேண்டியதில்லை. ஆகவே நான் போகமாட்டேன். நான் போக இஷ்டப்படும்போது போய்க்கொள்கிறேன்' என்று அறிவித்துவிடு.

ஆனால் மனிதன் மோசடிப் பேர்வழி. 'நான் தற்சமயம் கடவுளை நோக்கிப் பயணம் மேற்கொள்ள விரும்பவில்லை'

என்று வெளிப்படையாக அறிவிக்க அவன் தயாரில்லை. ஆனால் அவன் நடிக்கிறான். 'நான் கடவுளை நோக்கிப் போகத்தான் விரும்புகிறேன். வழி தெரியவில்லையே. என்ன செய்வது?' என்று கைவிரிக்கிறான்.

பதஞ்சலி முனிவர், அஷ்டாவக்ரர், புத்தர், மகாவீரர் என்றெல்லாம் எத்தனையோ ஞானியர் உனக்கு வழிகளை அறிமுகப்படுத்தியிருக்கிறார்களே. ஆனாலும் நீ 'வழி என்ன?' என்று கேட்கிறாய். இத்தனை வழிகள் இருக்க உனக்கு ஒன்றுகூடவா கிடைக்கவில்லை? என்னிடம் வழி கேட்கிறாய். நான் ஒரு வழி சொன்னால் அது பத்தோடு பதினொன்றாகத்தானே ஆகிவிடும். நீ வழிகாட்டும்படி புத்தர், மகாவீரர் முதலியவர்களிடம் ஏற்கெனவே கேட்டாயிற்றே. இப்படியே நீ ஆயுள் முழுதும் கேள்வி கேட்பவனாக இருந்துவிடுவாய். ஒவ்வொரு பிறவியிலும் தொடர்ந்து கேள்வி கேட்பாய்.

ஆனால் நீ மோசடிக்காரன். நீ உண்மையில் எந்த ஆன்மிகப் பாதையிலும் பயணிக்கத் தயாராக இல்லை. முதலில் உனது நோக்கத்தை, உனது திட்டத்தைத் தெளிவுபடுத்திக்கொள், உறுதிசெய்துகொள். நிஜமாகவே உனக்குத் தாகமா என்றும், அது எந்த அளவிற்குத் தீவிரமாக உள்ளது என்றும் மதிப்பீடு செய்.

என் கண்ணோட்டத்தின்படி, ஒருவன் ஓர் ஆன்மிகப் பாதையைத் தேர்ந்தெடுத்துவிட்டால், உலகமே திரண்டுவந்தாலும், அவனைத் தடுக்க முடியாது. உனக்குத் தேடல் வேட்கை இருந்தால் தேடித்தான் தீருவாய். உனது ஆன்மிகத் தாகம் வலுவடையும்போது, கொழுந்துவிட்டு எரிவதுபோல் ஆகும்போது, உனது முழு ஆளுமையும் உன் உதவிக்கு வருகிறது. தற்சமயம் நீ பணத்தைத் தேடுகிறாய்; பதவியைத் தேடுகிறாய். ஆனால் உன் பேச்சு மட்டும் கடவுளைப் பற்றியதாக இருக்கிறது. நீ நாடுவது ஒன்று, பேசுவது வேறொன்று. உன் பேச்சின் மூலம் உன்னைச் சுற்றிலும் புகைமண்டலத்தை உருவாக்கிக் கொள்கிறாய். அதற்கு அப்பாலிருந்து உன்னைக் காண்பவர்கள் உன் சுயரூபம் தெரியாமல் ஏமாறுகின்றனர். நீயும் உன்னிடமே ஏமாறுகிறாய். உன்னைச் சிறந்த பக்தனென்று நினைத்துக் கொள்கிறாய்.

இலங்கையில் ஒரு புத்தபிட்சு இருந்தார். அவருக்கு ஆயிரக்கணக்கில் பக்தர்கள் பிட்சுவுக்கு 90 வயதாகிவிட்டது. இறக்கும் தருணம் நெருங்கியது. கடைசிச் சந்திப்புக்கு அவர் பக்தர்களை அழைத்தார். அவர்கள் குழுமியதும் அவர் அறிவிப்பு செய்தார். "நான் சிறிது நேரத்தில் நிர்வாணநிலையை (மோட்சம் liberation) அடைய உள்ளேன். எனது தவ வலிமையால் என்னுடன் உங்களில் ஒருவரை அழைத்துச் செல்லும் சக்தி பெற்றிருக்கிறேன். என்னுடன் யார் வருகிறீர்கள்? எழுந்து நில்லுங்கள்" என்று கேட்டார். "இவரைப் பார்த்துவிட்டுத் திரும்பிப்போய் நம்முடைய வழக்கமான வேலைகளைத் தொடரலாமென நினைத்தால் இவர் அற்பாயுளிலேயே நம்மை சாகச் சொல்கிறாரே' என்று அவர்கள் நடுங்கி ஒரு கணம்வரை நாவெழாதிருந்தனர்.

ஒருவன் மட்டும் கையை உயர்த்தினான். அவனும் எழுந்து நிற்கவில்லை.

பிட்சு அவனைப் பார்த்து. "எழுந்து நிற்க வேண்டும் என்று சொன்னேனே. கையைத் தூக்கினால் போதாது." என்று நினைவூட்டினார்.

அதற்கு அம்மனிதன், "எழுந்துநின்றால் உங்களுடன் சேர்ந்து மோட்சத்துக்குப் போகும்படி ஆகிவிடுமே. கடையைப் போட்டது போட்டபடியே இங்கு வந்துவிட்டேன். வீட்டிலும் சொல்லிக்கொள்ளவில்லை. சமூகத்தில் எனக்கு நிறையைக் கடமைகள் உள்ளன. ஆனால் உங்களை மீண்டும் தரிசிக்க முடியாமல் போய்விடுமே என்றுதான் இப்போது வந்தேன். கையை உயர்த்தியதற்குக் காரணம், இப்போது நீங்கள் மோட்சம் பெறுவதற்கான வழியை மட்டும் சொல்லிவிட்டு நிர்வாண மடையுங்கள். பிற்காலத்தில் ஒருசமயம் நீங்கள் கூறும் வழியை உலகைவிட்டுப் போகும் காலத்தில் நான் பயன்படுத்திக் கொள்வேன்," என்று விளக்கினான்.

பிட்சு சிரித்தார். "போன 50 ஆண்டுகளாக நான் வேறென்ன செய்துகொண்டிருந்தேன்? மோட்சப் பாதை எதுவென்றும், அதில் எப்படிச் செல்வது என்பதையும்தானே இத்தனை காலமாக உபதேசித்தேன். ஆகவேதான் சிலராவது என்னுடன் சேர்ந்து

மோட்சத்துக்குக் கிளம்ப தயாராக இருப்பீர்களென்று நினைத்தேன். ஒருவர்கூட எழுந்து நிற்கவில்லையே,'' என்று வருந்திக் கூறினார்.

இன்று கேட்ட கேள்வி: கடவுளுடன் இணைய வேண்டும். அந்த விருப்பம் தாகம்போல் உள்ளது. அதற்கு உபாயம் என்ன?

முதலில் உன் தாகத்தை மீண்டும் பரிசோதித்துக்கொள்ளு. உனக்கு இன்னமும் போதுமான வேட்கை எழவில்லை. உன் தாகம் முழுமையாக இருந்திருந்தால் நீ கடவுளுடன் கலந்து போயிருப்பாய். இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கமாட்டாய். தாகப் பற்றாக்குறைதான் உனக்கும் கடவுளுக்கும் நடுவே இடைவெளிபோல் உள்ளது. தீவிரத் தாகமே பாதையாக மாறுகிறது. தீவிரத் தாகமே கடவுளுடன் சேர்த்துவிடுகிறது.

## நான்காவது கேள்வி

**ஓஷோ அவர்களே! சீடர் சுவாமி ஆனந்த தீர்த்தர் ஆங்கிலத்தில் சுலோக பாடம் நடத்தும்போது நீங்கள் அதை மிகவும் கவனமாகக் கேட்கிறீர்கள். சிஷ்யை கிருஷ்ணசேதனா அம்மையாரின் சமஸ்கிருதத்தில் இந்த மகாகீதையை ஓதுகையில் கண்களை மூடியபடி கேட்கிறீர்கள். இந்த வித்தியாசம் ஏன்? இதன் ரகசியம் என்ன? அம்மையாரின் உச்சரிப்பில் குறை ஏதும் உள்ளதா?**

**நா**ன் ஆங்கில மொழியை அதிகமாக அறிந்திருக்கவில்லை! ஆனந்த் ஓதும்போது நான் கேட்கையில் எதுவும் விட்டுப்போகக்கூடாது என்பதற்காக அதில் முழுக் கவனம் செலுத்துகிறேன். சமஸ்கிருதமோ நான் துளிக்கூட அறிந்திருக்கவில்லை! ஆகவே கண்ணை மூடிக்கொண்டு ஒலியின்பத்தில் ஆழ்ந்துவிடுகிறேன். எதுவும் விட்டுப்போகும் என்று எனக்கு பயமில்லை.

கிருஷ்ணசேதனாவின் உச்சரிப்பில் குறையிருக்காது. குறை தோன்றினாலும் என்னால் கண்டுபிடிக்க முடியாது. எனக்குத்தான் மொழி தெரியாதே.

சமஸ்கிருதத்தில் ஓதப்படுவதைக் கண்களை மூடிக்கொண்டு கேட்பது தான் சிறப்பு. அது அகத்தின் மொழி. உள்ளே நோக்க வெளிக் கண்களை மூட வேண்டும்.

ஆங்கிலம் புறத்தின் மொழி. வெளியுலகின் மொழி. கண்களைத் திறந்து வைத்தபடிதான் அம்மொழியைக் கேட்க வேண்டும்.

ஆங்கிலம் மேற்கத்திய மொழி. மேற்கத்திய நாடுகள் புற உலகை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அந்நாடுகளின் செயற்பாடுகளும், சாதனைகளும் கண்ணைத் திறந்துவைத்து நிகழ்த்தப்படுகின்றன.

சமஸ்கிருதம் கிழக்கத்திய நாடுகளின் ஆத்மாவின் ஆழத்திலிருந்து வெளிப்பட்ட மொழி. கிழக்கத்திய நாடுகளின் சாதனைகள் எல்லாம் கண்களை மூடிய நிலையிலேயே பெறப்பட்டன. மேற்கு நாடுகள் சொல்லும் வழி: விழிகளைத் திறந்துவை. அனைத்தையும் பார். கிழக்கு நாடுகள் சொல்லும் வழி: பார்ப்பதாயிருந்தால் கண்களை மூடிக்கொண்டு பார்! மேற்கு பார்க்கிறது மற்றதை. கிழக்கு ப்ர்க்கிறது தன்னை. இன்னொன்றைப் பார்க்க வேண்டுமாயின் கண்கள் திறந்திருக்க வேண்டும். தன்னைத் தனக்குள் பார்க்க வேண்டுமாயின் திறந்த கண்கள் தடையாக அமையும். கண்களைத் திறந்தால் உலகம் தெரியும்; மூடினால் நீ தெரிவாய்!

ஆங்கிலம் சொற்களின் அர்த்தத்தை அடிப்படையாகக் கொண்ட மொழியாகும். சமஸ்கிருதம் ஒலியமைப்பை ஆதாரமாகக் கொண்ட மொழி. ஆங்கிலம் பேசக் கேட்கையில் இசையுணர்வு தோன்றுவதில்லை. சமஸ்கிருதம் இசைமயமான மொழி. முற்கால மொழிகள் காவிய மொழிகளாக உருவானவை. சமஸ்கிருதமும் அரேபிய மொழியும் காவிய மொழிகள். திருக்குர்ரானை இசையுடன் ஓதுவதே சாலச் சிறந்தது. இம்மொழிக் காவியங்களைப் பாட்டுக் கேட்பதுபோல் கண்ணை மூடிக்கொண்டு கேட்டு ரசிக்க வேண்டும்.

ஆங்கிலம் அறிவியலின் மொழி. சமஸ்கிருதம் ஆன்மிக மொழி. ஆங்கிலத்தில் ஒவ்வொரு சொல்லுக்கும் தெளிவான,

உறுதியான அர்த்தம் உண்டு. சமஸ்கிருதத்தில் ஒவ்வொரு சொல்லுக்கும் பலப்பல அர்த்தங்கள். அது நெகிழ்ந்து கொடுக்கும் மொழி. அதில் பிரவாகம் (ஓட்டம்) உள்ளது.

பகவத்கீதை ஆங்கிலத்தில் படைக்கப்பட்டிருந்தால் அதற்கு நூற்றுக்கணக்கான உரைகள் தோன்ற முடியுமா? ஆங்கிலத்தில் ஒரு சொல்லுக்கு ஓர் அர்த்தம் என்று முடிவு செய்யப்பட்டு விட்டதே. ஆனால் பகவத்கீதை சமஸ்கிருதத்தில் தோன்றியதால் எதிர்காலத்திலும் ஏராளமான உரைகள் எழுதப்படும். ஒவ்வொரு சொல்லுக்கும் 10-12 அர்த்தம் உள்ளது. உரையாசிரியர் தமது கண்ணோட்டப்படி விரும்பிய அர்த்தம் எடுத்துக்கொள்ளலாம்.

ஆங்கிலமும் அதுபோன்ற மொழிகளும் கேட்பவருக்கும் படிப்பவருக்கும் இஷ்டப்படி அர்த்தம் எடுத்துக்கொள்ள வாய்ப்புத் தருவதில்லை. உன் கற்பனைக்கும் எதையும் விட்டுவைப்பதில்லை. அம்மொழிகள் எல்லாவற்றையும் வெளிப்படையாகச் சொல்லிவிடுகின்றன.

சமஸ்கிருதம், அரபி வகை மொழிகள் முழுவதையும் சொல்வதில்லை. அவை ஆரம்பக் கட்ட அர்த்தத்துடன் நின்றுவிடுகின்றன. மேற்கொண்டு விரிவாக்கம் செய்வதை உன் வசதிக்கு விட்டுவிடுகின்றன. படிக்கும் உனக்கு முழுமையான அர்த்த சுதந்திரம் உண்டு. நீயே சிந்தித்து நீயே பூர்த்தி செய்து கொள்ளலாம். இதனால்தான் சமஸ்கிருத வாக்கியத்தை சூத்திரம் என்கிறார்கள். சூத்திரம் என்றால் கயிறு என்று பொருள். அக்கயிற்றைப் பிடித்தபடி உன்னால் முடியும் தொலைவுவரை செல்லலாம்.

மேற்கத்திய மொழிகள் கணிதத்துடனும் அறிவியலுடனும் சேர்ந்து வளர்ந்தவையாகும். ஆகவே மேல்நாட்டுச் சிந்தனையாளர்கள் சமஸ்கிருதத்தில் ஒவ்வொரு சொல்லுக்கும் பல அர்த்தம் உண்டென அறிந்து அதிசயிக்கின்றனர். அவர்களது நோக்கில் மொழியில் வரும் சொற்களுக்கு நிச்சயமான அர்த்தம் இருக்க வேண்டும். அவ்வாறில்லாவிடில் கணக்கியலும் அறிவியலும் வளர முடியாது. சொற்களின் அர்த்தத்தை நிச்சயிக்க முடியாவிடில் இந்தத் துறைகளில் சிரமம் விளையும்.

இத்துறைகளில் எச்சொல்லுக்கும் அர்த்தம் தெளிவானதாக, முடிவானதாக இருக்க வேண்டும். ஒவ்வொரு சொல்லின் அர்த்தமும் வரையறுக்கப்பட்டிருக்க (defined) வேண்டும். சமஸ்கிருதத்தில் அர்த்தத்திற்கான முடிந்த முடிவான வரையறை கிடையாது. அம்மொழியில் ஓர் அர்த்தம் இன்னோர் அர்த்தத்தில் சென்று கலக்கும். ஓர் அர்த்தம், அலை வீசுவதுபோல், இன்னோர் அர்த்தத்தைப் பிறப்பிக்கும்.

ஆகவே ஆங்கிலத்தை நான் கண்களைத் திறந்துவைத்துக் கேட்கிறேன். அது நான் ஆங்கிலத்திற்குக் காட்டும் மரியாதை. சமஸ்கிருதத்தை நான் கண்களை மூடியபடி கேட்கிறேன். அது நான் சமஸ்கிருதத்திற்குக் காட்டும் மரியாதை. நான் மொழி அறிஞன் இல்லை. ஆகவே உச்சரிப்புக் குறைபாடு, இலக்கணத் தவறு ஆகியவை என்னை பாதிப்பதில்லை. இவை இரண்டும் முக்கியமானவை அல்ல. நான் சமஸ்கிருத ஒலிகளின் சங்கீதத்தை மட்டும் அனுபவிக்கிறேன். நான் மொழியியல் (linguistics) விதிமுறைகளை அறிந்திராததால் நான் சொற்களுக்கான அர்த்தத்தை என் வசதிப்படியும் தேவைப்படியும் அமைத்துக் கொள்கிறேன். மொழியியல் வல்லுநர்கள் நான் கூறும் அர்த்தத்தை ஒப்புக்கொள்வார்களா என்பது குறித்து எனக்குக் கவலையில்லை.

நான் அஷ்டாவக்ரரின் சூத்திரங்கள் குறித்துச் சொல்வது அவற்றின் சொல்வழி விளக்கமன்று. சூத்திரங்களின் ஒலியின் சங்கீதம் எனக்குள் பாய்ந்து, அது என் அனுபவத்துடன் கலந்து, பிறகு கேட்கும் எதிரொலியே என் சொற்பொழிவுகள் ஆகும்.

நீ மலை பிரதேசம் சென்று சத்தமாகக் கத்தினால் பள்ளத்தாக்கில் அதன் எதிரொலி கேட்கிறது. பள்ளத்தாக்கு உன் ஒலிக்கு விளக்கம் தருவதாகவா சொல்வாய்? பள்ளத்தாக்கு நீ உண்டாக்கிய ஒலியை உள்ளிழுத்துக்கொண்டது. அதைத் திருப்பி வெளியே விட்டது. ஆகவே இப்போது திரும்பிவரும் எதிரொலியில் பள்ளத்தாக்கு தனக்கே உரியதான நறுமணத்தை, தன்னிடம் நிலவும் பேரமைதியை, தனது மௌனத்தை, தனது வரலாற்றுப் பழைமையை, தனது சுயசரிதையை அதில் கலந்து அனுப்பிவைக்கிறது.

இந்த சுலோகங்கள் குறித்துப் பேசுகையில், நான் என் வாழ்க்கையின் அம்சங்களையும் கலந்து தருகிறேன். நான் பேசுவதெல்லாம் என்னோடுதான் சம்பந்தப்பட்டவை. இந்த சுலோகங்களைத் துணி மாட்டும் கொக்கிகளாக நினைத்தால் அவற்றில் என்னைத்தான் தொங்கவிடுகிறேன்.

கிருஷ்ணசேதனா அன்புடன் சுலோகம் ஓதுகிறாள். அவள் ஓதும் முறையில் உச்சரிப்புத் தவறு, இலக்கணத் தவறு பார்க்கக் கூடாது. அவளது அன்பு, உணர்ச்சி, சமர்ப்பணம், நெகிழ்ச்சி, இதயபூர்வமான ஆர்வம் ஆகியவற்றையே கவனிக்க வேண்டும்.

## ஐந்தாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! சாஸ்திரங்கள் உலகத்தை விஷம் நிறைந்ததாகக் கூறுகின்றன. நீங்களோ உலகத்தை விட்டு ஓடாதே என்று தடுக்கிறீர்கள். இந்த முரண்பாடான கருத்துகளால் சீடனின் மனத்தில் குழப்பம் விளையாதா?**

**சா**ஸ்திரங்கள் உலகை விஷமமானது என்று கூறினால் அம்முடிவு பரீட்சிக்கப்பட்டதா? அப்பரீட்சையின் உரைகல் என்ன? சாஸ்திரம் படித்து நீ உலகை விஷமயமானதா இல்லையா என்னும் முடிவிற்கு வரமுடியாது. நீ உலகில் வாழ்ந்து அடிபட்டு, அனுபவப்பட்ட பிறகுதான் சரியான முடிவிற்கு வரமுடியும்.

சாஸ்திரம் உலகை விஷமயமாகப் பார்க்கிறது. சரி, சாஸ்திரம் அவ்வாறு கூறுகிறது என்பதையாவது அறிந்துகொண்டாய். அக்கருத்து சரியா, தவறா என்று எவ்வாறு அறிவாய்? சாஸ்திரம் கூறுவதால் மட்டுமே ஒரு விஷயம் உண்மையாகிவிடாது. எழுதிவைக்கப்பட்டவை உண்மையாகத்தான் இருக்கும் என்பது உறுதியில்லை. எழுதியதை நம்பும் அறிவிலிகள் நிறையவே உள்ளனர்.

ஒரு நண்பர் என்னைச் சந்தித்தபோது என்மீது புகார் செய்தார். "நீங்கள் கூறுவதுபோல் எந்த சாஸ்திரத்திலும்

எழுதப்பட்டிருக்கவில்லையே," என்றார் அவர். நான் அவரது மதிப்பீடு தவறென்பதைச் சுட்டிக்காட்டினேன்.

"சாஸ்திரம்போல் நான் என் கருத்தைகளை எழுதித் தரவேண்டும் என்கிறீர்களா? அச்சிட்டும் தரவேண்டும் என எதிர்பார்க்கிறீர்களா? கையெழுத்திலோ, அச்சிலோ நான் கருத்துகளை வெளியிட்டால்தான் நம்புவீர்களா?

"சாஸ்திரம் எப்படி உருவாகிறது? யாராவது எழுதிய பிறகுதானே அது உண்டாகிறது. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டதாலேயே சாஸ்திரம் உண்மையாகிவிடுமா? இந்த நிலையில் நான் இப்பொழுது சாஸ்திரம் எழுதினால் அது ஏற்கப்பட மூவாயிரம் ஆண்டு காத்திருக்க வேண்டுமா? சரி-தவறு என்பதற்கும் கால இடைவெளிக்கும் என்ன சம்பந்தம்? அப்படியாயின் மூவாயிரம் ஆண்டுகள் முன் சார்வாகரும் அவரைச் சார்ந்தவர்களும் 'கடவுளைப் பற்றிக் கவலைப்படாதே. வாழ்க்கையை சுகமாக அனுபவி. கடன் வாங்கியாவது நெய் சாப்பிடு' என்றெல்லாம் சொன்னதும் சரிதான் என்று ஒத்துக்கொள்வீர்களா?" என்று கேட்டேன்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் கோபமாக இருந்தார். அது தேர்தல் சமயம். அவர் மனைவியின் பெயர் வாக்காளர் பட்டியலில் இல்லை. அவர் மனைவியை அழைத்துக்கொண்டு தேர்தல் அதிகாரியின் அலுவலகத்திற்குச் சென்றார். அவர் அதிகாரியிடம், "இவள் என் மனைவி. நன்றாகப் பார்த்துக்கொள்ளுங்கள். இவள் பெயர் சென்ற முறை வேட்பாளர் பட்டியலில் இருந்ததே. இப்பொழுது ஏன் பெயர்நீக்கம் செய்யப்பட்டது?" என்று கத்தினார்.

அதிகாரி வாக்காளர் பட்டியலைப் பார்த்தபின், "உங்கள் மனைவி காலமாகிவிட்டதால் பெயர் நீக்கப்பட்டது என்று வீடுகளுக்கு வந்து விசாரித்த அலுவலர் எழுதிவிட்டார். உங்கள் மனைவி இப்போது என் எதிரே இருப்பினும், எழுதியிருப்பதை மாற்றும் அதிகாரம் எனக்கில்லை. எழுதியிருப்பதுதான் முடிவு," என்று கைவிரித்துவிட்டார்.

நஸ்ருத்தீனின் மனைவி கணவரை சமாதானப்படுத்தி, "எழுத்து மூலம் தெரிவிக்கப்படுவது சரியாகத்தான் இருக்கும்.

வீடுகளுக்கு வந்த அலுவலர் விசாரித்துத்தான் எழுதியிருப்பார். வேண்டுமென்றே தவறாக எழுதியிருக்க மாட்டார். வாருங்கள், வீட்டுக்குப் போவோம்," என்று அழைத்தாள்.

சிலர் சாஸ்திரங்களைக் கண்மூடித்தனமாக நம்புகிறார்கள். சாஸ்திரத்தில் எழுதப்பட்டுள்ளது என்பதற்கு அர்த்தம் என்ன? அதன் பின்னணி என்ன? சாஸ்திரம் படைத்தவன் தன் வாழ்க்கையில் சில அனுபவங்களைப் பெற்றிருப்பான். அந்த அனுபவங்களையும் அவை குறித்த தன் அபிப்பிராயங்களையும் ஒரு நூலாக எழுதிவைக்கிறான். நீயும் அதன் பக்கங்களைப் புரட்டி மட்டும் நம்பிவிடாமல், உன் சொந்த அனுபவங்கள் மூலம் அக்கருத்துகள் சரியா, தவறா என்று மதிப்பிட்டு முடிவு செய்ய வேண்டும். வாழ்க்கைதான், அவரவர் அனுபவங்கள்தாம், சாஸ்திரத்தைப் பரிசோதிக்கும் உரைகல்லாக அமைய முடியும்.

அதனால்தான் நான் சீடர்களிடம், "சாஸ்திரங்கள் கூறுவதைக் கேட்டு உலகை விட்டு ஓடாதீர்கள். பிறகு உன் சொந்த சாஸ்திரம் உருவாக இயலாது. உன் அனுபவங்களைக் கொண்டு சொந்த சாஸ்திரம் தயாரித்துக்கொள். அப்போதுதான் உன் முடிவுகள் உன்னைப் பொறுத்தவரை சரியானவை என்று உறுதி கூறலாம்" என்றேன்.

நீ படைக்கும் சாஸ்திரம்தான் உனக்கு முக்தி பெற்றுத்தரும். முற்காலத்தில் எவரோ எழுதிய சாஸ்திரத்தின் மூலம் அவருக்கு மட்டுமே முக்தி கிடைத்திருக்கும். அது உனது முக்திக்கு உதவாது. ஞானத்தைக் கடன்வாங்க முடியாது. ஞானம் அத்துணை மலிவானதன்று. வாழ்க்கையில் நூற்றுக்கணக்கான முறை தடுக்கி விழுந்து, ஆழ்ந்த அனுபவம் பெற்று, அந்த அனுபவம் பக்குவப்பட்டு ஞானம் ஒளிவீசுகிறது.

ஆகவே வாழ்க்கையில் பிரவேசி. வீட்டைவிட்டு ஓடாதே. சாஸ்திரம் என்ன சொல்கிறது என்பதைக் கவனி. ஆனால் அதுவே உண்மை என்று முடிவுகட்டாதே. சாஸ்திரம் சொல்வதால் நீயும் அவசரப்பட்டு வாழ்க்கை விஷமயமானது என்று திருப்பிச் சொல்லாதே. வாழ்க்கையில் ஆழ்ந்துசெல். வாழ்க்கையின் எல்லா முகப்புகளையும் ஆராய்ந்துபார். வாழ்க்கை வானவில்போல்

வண்ணமயமானது. வாழ்க்கையின் எல்லா ஒலிகளையும் கேட்டு மகிழ். வாழ்க்கையின் மூலை முடுக்கையெல்லாம் அலசு. எல்லாவற்றையும் அடையாளம் கண்டுகொள். இப்படி வாழ்க்கையை முழுமையாக ஆராய்ந்தபின் நீயும் வாழ்க்கை விஷமயமானது என்னும் முடிவிற்கு வந்தால், அதுதான் உண்மையான அறிவு, பட்டறிவு, ஞானம் எல்லாமாகும். உனக்குள் பெரிய மாற்றம் நிகழும். இதை விட்டு சாஸ்திரம் மூலம் வாழ்க்கை பற்றி கேட்டல், படித்தல், மனப்பாடம் செய்தல், திருப்பி ஒப்புவித்தல் ஆகியவை மூலம் என்ன பலன் கிட்டியது?

ஏட்டறிவு மட்டும் பெற்று எதை விட முடிந்தது? என்ன மாற்றம் விளைந்தது? உன்னிடம் காமம், குரோதம், உலோபம் அப்படியே நீடிக்கின்றன. பணத்தின் மீது உனக்குள்ள பிடிப்பு துளியும் குறையவில்லை. தீய பண்புகள் எல்லாம் முன்புபோலவே நீடிக்கின்றன. வாழ்க்கை விஷமயமாகிவிட்டது. நீ தப்பிக்காமல் அப்படியே நிற்கிறாய்.

அப்படியில்லை, அவசரப்படாதே. நானும் உன்னிடம் வாழ்க்கை விஷமயமானது என்பது உண்மைதான் என்று கூறுகிறேன். இன்னொரு விஷயமும் உனக்குத் தெரிவிக்கிறேன். வாழ்க்கை அமிர்தம் போன்றது என்றும் சாஸ்திரங்களில் புகழப்பட்டுள்ளது. ஆகவே வேதம் நம்மை அமிர்தத்தின் புதல்வர்கள் (அம்ருதஸ்ய புத்ர:) என்றழைக்கிறது. சாஸ்திரங்கள் சொல்வது; வாழ்க்கை அமுதமயமானது. ஏனெனில் வாழ்க்கை என்பதுதான் கடவுள்.

ஆகவே நிச்சயமாக இரண்டு வகையான வாழ்க்கைகள் இருப்பது தெளிவாகிறது. ஒன்றை நீ பார்வையற்றவனைப்போல் அணுகினாய். அது விஷமயமாகத் தெரிந்தது. இன்னொரு விதமான வாழ்க்கையை நீ கண் திறந்து காணலாம். அது அமுதம் போன்றது. உன்னிடமுள்ள தீய குணங்களின் வழியாகப் பார்த்ததில் ஒருவகை வாழ்க்கை தென்பட்டது. தியானம் மற்றும் சமாதியின் மூலமாகப் பார்த்தபோது வேறொரு வாழ்க்கை தெரிந்தது. கீறல் விழுந்த மூக்குக் கண்ணாடி வழியாகப் பார்த்ததில் வாழ்க்கை கோணல்மாணலாகத் தெரிந்தது.

கண்ணாடியைக் கழற்றிவிட்டுப் பார். வாழ்க்கை அமுதமாகத் தெரியும்.

ஒருவகையில், சாஸ்திரங்களால் பழிக்கப்படுகின்ற வாழ்க்கையிலும் முன்னோர்கள் கடவுள் மறைந்திருப்பதையும் உணர்ந்தார்கள். ஒவ்வோர் இலையிலும் கடவுள் இருப்பதாகவும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஒவ்வொரு மணல் துளியிலும் அவர் உள்ளார். அவரே எத்திக்கிலும் வீற்றிருக்கிறார். கல்லும் குன்றும் அவரே. அவர் இல்லாமல் காலியாகவுள்ள இடம் எதுவும் கிடையாது. அருகில் இருப்பவரும் அவரே. தொலைவில் உள்ளவரும் அவரே—இவ்வாறெல்லாம்கூட சாஸ்திரங்கள் உரைக்கின்றன.

வேடிக்கை என்னவென்றால், நீ விரும்பும் அம்சங்களை மட்டுமே சாஸ்திரத்திலிருந்து தெரிந்தெடுத்துக் கொள்கிறாய். இது ஒரு மோசடி. நீ சொல்ல விரும்புபவற்றிற்குத் தோதான மேற்கோள்களை சாஸ்திரத்திலிருந்து பெயர்த்தெடுக்கிறாய். நீ எங்கே வாழ்க்கையை முழுமையாகப் பார்த்திருக்கிறாய்? கிணறு தோண்டும்போது முதலில் நிலத்தின் மேற்பரப்பிலுள்ள கல்-மண், குப்பைகளை அகற்றுவது போல், நீ இதுவரை வாழ்க்கையை மேலோட்டமாகத்தான் பார்த்துள்ளாய். மேலும் தோண்டினால் கையில் நல்ல மண் படுகிறது. அடுத்த கட்டம் ஈரமான மண் தெரிகிறது. மேலும் தோண்டினால், முதலில் தண்ணீர் அழுக்காக வருகிறது. அதன் பிறகுதான் நல்ல தண்ணீர் கிடைக்கிறது. வாழ்க்கையும் அப்படித்தான். தோண்டிக் கொண்டே செல்.

நீ வாழ்க்கை விஷமயமானது என்றாய். ஏனென்றால் நீ மேலாகத்தான் வாழ்க்கைக் கிணறைத் தோண்டியிருக்கிறாய். ஆகவே எங்கும் குப்பைகூளமாகத் தெரிகிறது. இதை மட்டுமே கவனித்து நீ வாழ்க்கையை நிந்திக்கிறாய். கொஞ்சம் ஆழத்தில் சென்று பார்.

நீ புராணங்களில் பாற்கடல் கடையப்பட்ட வர்ணனையைப் படித்திருப்பாய். முதலில் ஆலகால (ஹலாஹல) விஷம் வெளிப்பட்டது. அடுத்து அமிர்தம் வெளிப்பட்டது. நீ கதைச் சுவையை மட்டும் கவனித்தாய். ஆழ்ந்து படி. எங்கிருந்து விஷம்

எழும்பியதோ அதே இடத்திலிருந்துதான் அமுதமும் ஊற்றெடுத்தது தெரியவரும். கடைசியில்தான் அமிர்தம் கிடைக்கும்.

தேடிக்கொண்டே செல். வாழ்க்கை நடத்துவதும் கடலைக் கடைவது போன்றதுதான். விஷம் கிடைக்கும் கட்டம்வரை வந்ததும் வெறுத்துப் போய் உட்கார்ந்துவிடாதே. அப்படியே நிறுத்திக்கொண்டால் நீ வரையும் வாழ்க்கை ஓவியம் அரைகுறையாக இருக்கும் அது பொய்யான ஓவியமாக அமையும். வாழ்க்கையில் விஷம் மட்டுமே உனக்குக் கிடைத்தால், பிறகு கடவுளை எங்கே தேடுவாய்? வாழ்க்கையைத் தவிர தேடுவதற்கு வேறு களம் கிடையாதே. வேறு எங்கே போவாய்? அவர் வேறு எங்காவது இருப்பார் என்பது பொய். ஆகவே உன் வாழ்க்கையிலேயே தோண்டு. ஆழமாகத் தோண்டு. தோண்டிய படியே இறங்கு. அமுத கலசம் கையில் கிடைக்கும்வரை தொடர்ந்து தோண்டு.

வாழ்க்கையில் விஷம் இருக்கிறது என சாஸ்திரங்கள் கூறுவது உண்மை. வாழ்க்கையில் அமிர்தம் இருக்கிறது என சாஸ்திரங்கள் கூறுவதும் உண்மை. ஆனால் இந்த இரண்டு விஷயங்களையும் நீ உன் வாழ்க்கையின் அனுபவங்களின் மூலமே உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். தற்சமயம் உனது வாழ்க்கை விஷம் மட்டுமே நிறைந்ததாக உள்ளது. அதற்காக வாழ்க்கையைக் குறை சொல்லக்கூடாது. நீ வாழ்க்கையை ஆழமாகத் தோண்டாமல் விஷக்கட்டம் வந்ததும் உன் முயற்சிகளை நிறுத்திவிட்டமைதான் காரணம்.

**விஷமம் நிறைந்த இளமைக் காலம்**
**தளர்ந்துபோன முதுமையின் அவலம்**
**துன்பங்களின் தீவிர ஓலம்**
**இன்பத்தின் இனிய முணுமுணுப்பு**
**ஒவ்வொரு குரலும் உனது ஒலி**
**ஒவ்வொரு வீணையும் உன் சொத்து**
**நான் வீணைத் தந்தியை மீட்டுகையில்**
**உனது குரலே வெளிப்படுகிறது**

தோண்டு. ஆழ்ந்து அமிழ்ந்து செல். நீ உன் மனைவியிடம் விஷத்தை உணர்வது போல், மேலும் ஆராய்ந்தால், அவளிடம் அமிர்தமும் இருப்பது தெரிய வரும். அவ்வளவு ஏன்? நீ உன்னையே ஆராய்ந்தால் உனக்குள்ளும் விஷமும் அமிர்தமும் உள்ளதைக் காண்பாய். விஷம் மேற்பரப்பில் உள்ளது. ஒருவேளை பாதுகாப்பிற்காக அப்படி இருக்கும் ஏனெனில் கீழேயுள்ள அமிர்தத்திற்குக் காவல் தேவை அப்பணியை விஷம் செய்கிறது.

நீ ரோஜாச் செடியில் ஒவ்வொரு பூவைச் சுற்றிலும் முள்கள் நிறைய இருப்பதைப் பார்த்திருப்பாயே. முள்கள் காவல் பணி செய்கின்றன. பூக்களும் முள்களும் ஒரே செடியிலிருந்தே உண்டாகின்றன். முள்களால் குத்தப்பட்டு அழுது திரும்பாதே. பிறகு ரோஜாப் பூக்களின் அறிமுகம் கிடைக்காதுபோய் வருந்துவாய். முள்கள் உண்டென்பது உண்மைதான். ஆனால் அவை எங்கு உள்ளனவோ அங்குதான் பூக்களும் மறைந்திருக்கின்றன. அந்த முள்கள் காவலர்கள் மட்டுமே ஆகும்.

வாழ்க்கையில் விஷம் நிறையவே உள்ளது. ஆனால் அது காக்கும் பணியைச் செய்கிறது. இதைப் புரிந்துகொண்டதும் நீ உண்மையான ஆத்திகன் ஆகிவிடுகிறாய். விஷம் கவசம் போன்றது என்றும், முள்கள் பூக்களுக்குத் தோழர்கள் என்பது தெரிந்ததும் நீ உண்மையான ஆத்திகன் ஆகிறாய். அப்போது நீ கடவுள் பற்றிப் பேசுகையில் 'அவர் உள்ளார்' என்பாய்.

## கடைசிக் கேள்வி (கேள்வி கேட்டவர் ராமகிருஷ்ண பாரதி)

**ஓஷோ அவர்களே! குடும்பத்தினர் என் திருமணம் பற்றி பேச்செடுக்கும் போதெல்லாம், நான் ஆத்ம அடிப்படையில் ஓஷோவுடன் எனக்குத் திருமணம் ஆகிவிட்டதென என்னை அறியாமலே அவர்களிடம் கூறுகிறேன். அவர்தான் என் குரு அவர்தான் எனக்கு சகலமும். இதைக் கேட்டு என் உறவினர்கள் எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாகக் கேலி செய்கிறார்கள். இந்த நிலைமையைத் தெளிவாக்குங்கள்.**

**இ**தில் தெளிவுபடுத்த என்ன உள்ளது? நீ ஏற்கெனவே பைத்தியம்தானே. அவ்வாறு பைத்தியமாவது சுபம், சௌபாக்கியம் எனலாம். எல்லா வகை அறிவும் நல்லவை என்று சொல்ல முடியாது. அதுபோல் எல்லா வகைப் பைத்தியமும் கெடுதல் அல்ல. சில வகையான பைத்தியக்காரத்தனம் சில அதிர்ஷ்டசாலிகளுக்கே அமைகிறது.

உலகத்தின் பார்வையில் அறிவாளிகள் எனப்படுவோர் சத்தியத்தைத் தேடிச்செல்பவராக இருத்தல் அரிது. அறிவாளிகள் கடை வைப்பார்கள், வியாபாரம் செய்வார்கள், பணம் சம்பாதிப்பார்கள், டில்லிக்குச் சென்று அமைச்சர்-அதிகாரிகளுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வார்க்ள். அறிவாளிகள் ஆன்மிக விஷயங்களில் சிக்கிக்கொள்ள மாட்டார்கள். ஆன்மிகம் என்பது பொழுதுபோகாத சோம்பேறிகளுக்குத்தான் என்பார்கள்.

**மீ**ராபாய் 'உலகம் மானம்-அவமானம் என்று கூறுகின்ற இரண்டையும் நான் கைவிட்டேன்' என்று அறிவித்தார். அவருடைய குடும்பத்தினர் அவரது போக்குக் கண்டு கவலைப்பட்டனர். அவர் செத்தால் நல்லதென விஷம் கொடுத்து அனுப்பினர். ஓர் அரசி பொது இடங்களில் நடனமாடுவது, சாமியார்களோடு நெருங்கிப் பழகுவது போன்ற செயல்களால் குலத்திற்கு களங்கம் விளைகிறதே என்று அரண்மனை உறவினர் கோபப்பட்டனர். அவர்களது அகங்காரம் சீறியெழுந்தது. முகத்திரை அணியாமல் மீராபாய் ஊர் சுற்றுவதும், கோயில்களில் பாடுவதும் அரசப் பெண் செய்யக்கூடாத இழிவான செயல்கள் என்று எண்ணிய உறவினர் அவர் தொலைந்தால் நல்லது என்று முடிவுகட்டினர்.

என்னிடம் வந்து சந்நியாசம் பெற்றவர்களும் மூளையில் மாற்றம் அடைந்திருப்பார்கள். அது புரியாமல் அக்கம் பக்கம் உள்ளவர்கள் என் சீடர்களை மூளைக் கோளாறு உள்ளவர்களாக நினைப்பார்கள். அது சரிதான். உலகில் பெரும்பான்மையானவர் களின் மூளை இயங்கும் விதத்திலிருந்து சந்நியாசியின் மூளையின் இயக்கம் வேறுபடுவதால், சந்நியாசியைப் பைத்தியக் காரர் என்று மக்கள் தூற்றுகிறார்கள். தாக்கவும் செய்கிறார்கள்.

இந்தக் காவி உடை பைத்தியம் பிடித்ததன் அடையாளம்தான். தொன்று தொட்டே இது மூளை கலங்கியதைக் காட்டும் சீருடையாகும்! இது உலகிற்கு முதுகைக் காட்டியவர்களின் சீருடை. அவர்கள் தங்களது எல்லாவற்றையும் பணயம் வைத்துக் கடவுளை நோக்கிய பயணத்தை மேற்கொண்டவர்களாவர். கடவுளுக்காக எதையும் தியாகம் செய்ய தயாராக இருப்பவர்கள். கடை வியாபாரம்போல் சந்நியாசம் லாப நோக்கம் உடையதன்று. எல்லாவற்றையும் ஆன்மிகப் பயணம் என்ற போட்டியில் இழக்க முன்வரும் மனப்பான்மை முக்கியம்.

சந்நியாசத்தில் ஈடுபாடு உடைய நீ குடும்பத்தினரை உன் வழிக்குக் கொண்டுவர முயலாதே. அவர்கள் சொல்வதும் சரிதான். சத்தமாய்ச் சிரித்தல், ஆடுதல், பாடுதல் முதலியவை சராசரி மனிதனிடம் காணப்படுவதை அவர்கள் தவறென நினைப்பது வழக்கம்தான். அவர்கள் தலைமுறைகளாக குறிப்பிட்ட விதமான ஒரேயொரு அளவுகோல் கொண்டே தங்களையும் பிறரையும் மதிப்பீடு செய்கின்றனர். அது என்ன அளவுகோல்?

படி, வேலை பார், திருமணம் செய், குழந்தை பெறு, வீடு கட்டு, குழந்தைகளைப் படிக்கவை, அவர்களையும் இதேபோல் தொடர்ந்து குழந்தை பெறு என்று போதிப்பது—இப்படியே வாழ்க்கை ஒரு சக்கரம்போல் மீண்டும்-மீண்டும் சுழல்கிறது. இதில் சிந்தனையின் அடிப்படையிலான வாழ்க்கை நடத்த வாய்ப்பில்லை. மக்கள் இயந்திரம்போல் இயங்குகிறார்களே தவிர, உணர்ந்து வாழ்பவர்கள் அரிதிலும் அரிதாக உள்ளனர். எல்லோரும் உணர்ந்து வாழ்வதைத் தள்ளிப்போட்டுக் கொண்டே சென்று, வாழாமலே வாழ்க்கையை முடித்துக் கொள்கின்றனர்.

இத்தகைய சமூகக் கண்ணோட்டத்திலிருந்து விலகி, துறவு மனப்பான்மை கொண்டிருப்பவனை உலகம் கோணல் புத்திக்காரன் என நிந்திக்கிறது. எனினும் மக்கள் அச்சம் அல்லது மரபு காரணமாகத் துறவியின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறார்கள். ஆனால் வீட்டுக்குள் வந்தபின், பாதத்தைத் தொடவைக்கும் துறவறத்தின் மேன்மையை மறந்து, தங்களது பழைய வாழ்க்கையையே தொடருகிறார்கள்.

உனது பக்கத்து வீட்டுக்காரரின் மகன் துறவறம் மேற்கொண்டால் நீ அவன் கால்களைத் தொட்டு வணங்குகிறாய். ஆனால் உன் மகன் துறவியாவதற்கு ஒத்துக்கொள்வாயா? உன்னை மீறித் துறவியானால் அவன் கால்களைத் தொட்டு வணங்குவாயா?

**நா**ன் சிறுவனாக இருந்தபோது எங்கள் வீட்டிற்குத் துறவிகள் வந்துசெல்வது வழக்கம். என் தந்தைக்கு அவர்களை வரவேற்று உபசரிப்பது பிடிக்கும். முதன்முதலாக நான் துறவி-துறவறம் என்பதன் பொருளைப் புரிந்துகொண்டபின் அப்படியொருவர் எங்கள் வீட்டிற்கு வந்தபோது என் அப்பா குனிந்து அவருடைய கால்விரல்களை ஸ்பரிசித்து வணங்கினார். என்னையும் அவ்வாறே 'சரண ஸ்பரிசம்' செய்யச் சொன்னார். அந்தத் துறவியின் வயது என் தந்தையின் வயதில் பாதிதான் இருக்கும்.

நான் கேட்டேன், "நானும் சாமியாராகிவிட்டால், என்னைவிட நீங்கள் வயதில் மிகப் பெரியவராயினும் என் கால்விரல் தொட்டுக் கும்பிடுவீர்கள் அல்லவா?"

"சாமியாராவதா? ஏன் பைத்தியம்போல் உளறுகிறாய்?" என்று என் தந்தை கோபித்துக் கொண்டார்."

நான் விடவில்லை. "அப்பா, சாமியாராவது பைத்தியக் காரத்தனம் என்றால், நீங்கள் சாமியாராகிய அந்தப் பைத்தியத்தின் காலை ஏன் தொட்டு வணங்கினீர்கள்?" என்று அவரை மடக்கினேன்.

இதைக் கேட்டு என் தந்தை திடுக்கிட்டார். அவர் யோசனையில் ஆழ்ந்தார். மறுநாள் அவர் என்னிடம், "ஆம், இதில் முரண்பாடு இருக்கிறது. நீ கேட்ட கேள்வி சிக்கலானது. இந்தக் கோணத்தில் நான் இதுபற்றிச் சிந்தித்ததில்லை. நீ சாமியாராக விரும்பினால் நான் நிச்சயமாகத் தடுப்பேன். நான் கால் தொட்டு வணங்கிய அந்தத் துறவியும் யாருடைய மகனாகவோ தான் இருப்பார். அவரை நான் வணங்குகிறேன் என்றால், அது யார் துறவறம் மேற்கெண்டாலும் கால் தொட்டும் வணங்கும்

மரபை உறுதிப்படுத்துகிறது. ஆகவே நீ சந்நியாசியாக மாறினால் உனக்கும் அதே மரியாதையை நான் தரவேண்டும்." என்று தெளிவுபடுத்தினார்.

எவரோ முன்பின் தெரியாதவர் துறவியானால் நீ அவரை ஆனந்தமாக வரவேற்கிறாய். உன் மகன் துறவியாக விரும்பினால் அதை பிரச்சினையாகக் கருதுகிறாய். மீராபாய் உனக்குச் சொந்தமில்லை. ஆகவே அவரை நீ பக்தியின் சிகரம் என்று போற்றிப் புகழ்கிறாய். ஆனால் அவள் கணவரான மேவார் மகாராணா, 'அவள் ஒரு கிறுக்கு. அரச குலத்தின் மாண்பு-மரியாதையைச் சீரழித்தவள்' என்று பழி கூறினார்.

உன் குடும்பத்தினரின் செயல்பாடும் அப்படித்தானே உள்ளது. அவர்களும் குடும்பத்தினரல்லாத துறவிகளின் வந்தால் காலை ஸ்பரிசிக்க விரைவார்கள். மீரா பஜன் நிகழ்ச்சி நடைபெற்றால், தவறாது செல்வார்கள். பஜன் கேட்டுத் தலையாட்டி ரசிப்பார்கள். ஆனால் துறவு மனப்பான்மையுடன் நீ பஜன் பாடினால் குடும்பத்தினர், "ஏ கிறுக்கு! வாயை மூடு." என்று அதட்டுவார்கள். மீராபாயின் குடும்பத்தினரும் அவரை அப்படித்தான் கண்டித்தனர்.

இம்மாதிரியான மக்கள் ஒருவிதமான தூக்கத்திலேயே வாழ்ந்து முடிந்துவிடுகின்றனர். தாங்களும் சரியாக வாழாத அவர்கள் வேறுவிதமான வாழ்க்கையும் இருக்கக்கூடும் என்று அவர்கள் நினைத்துப் பார்த்ததில்லை. தாங்கள் வாழும் வாழ்க்கைதான் சரியானதென்று நினைக்கிறார்கள். அதுபோன்றே நீயும் வாழ்வதுதான் அறிவுடைமை என்று உனக்குப் போதிக்கிறார்கள். நீ தடம் புரண்டால் பிரச்சினை வருமென எச்சரிக்கிறார்கள்.

அவர்களின் பேச்சைக் கேட்டுப் பயப்படாதே. அவர்களின் பேச்சுக்கு விளக்கம் தேடாதே. இவர்களுக்கு உன் நிலையை எப்படிப் புரியவைப்பது என்ற சிந்தனை வேண்டாம். இது புரியவைத்துப் புரியக்கூடிய விஷயமன்று. இது புரிதலுக்கு அப்பாற்பட்ட விஷயம். இது உயர்ந்த விஷயம். "ஆமாம்,

நானொரு கிறுக்கு, ஞானம் கிறுக்கு" என்று அவர்களிடம் அறிவித்து விஷயத்தை முடிவுக்குக் கொண்டுவா.

**உன்னைப் பார்த்த கண்ணிரண்டும்**
**வேறு எதையும் காணவில்லை**
**இனி ஏன் மடத்தில் அபிஷேக பூஜை?**
**இனி ஏன் கையில் ஜெபமாலை?**
**வாழ்தல் நமக்கு தோத்திரம்**
**மரித்தல் நமக்கு அக்னி யாகம்**
**உன்னைத் தீண்டி இந்த நிலம்**
**என்றும் பசுமையாய் மாறியது**
**பாவ-புண்ணியம் பேசாதே**
**சுவர்க்கம்-நரகம் பேசாதே**
**ஆண்டவன் நினைவு இருந்தால் போதும்**
**பாழ்நிலமும் பிருந்தாவனமாகிவிடும்**

உனது வாழ்க்கையை ஒரு சக்தி தீண்டியுள்ளது. தெய்விகக் கிரணம் ஒன்று உன்னைத் தொட்டுச் சென்றிருக்கிறது. உன் சுற்றுப்புறம் பிருந்தாவனமாக மாறிவருகிறது. நீ உன்னைக் கிறுக்கு என்று ஒத்துக்கொள். இதனால் உனக்கும் நன்மை; உன் குடும்பத்தினருக்கும் நன்மை விளையும்.

அறிவுபூர்வமாகச் சிந்தித்துதான் துறவியானதாக அவர்களுக்கு விளக்கம் தராதே. உன்னை புத்திசாலி என்று அவர்கள் ஒத்துக்கொள்ள மாட்டார்கள். புத்தியுள்ளவன் சாமியாராவானா என்று அவர்கள் திருப்பிக் கேட்பார்கள். புத்தியுள்ளவன் கடை வைத்து வியாபாரம் செய்வான்; அலுவலகம் அல்லது தொழிற்சாலை சென்று பணம் சம்பாதிப்பான்; பதவிகளைப் பிடிக்கப் போட்டிபோடுவான்; அரசியல் கோதாவில் இறங்குவான்; டில்லிக்குச் சென்று செல்வாக்கை நிலை நாட்டுவான்—என்றெல்லாம் அவர்கள் சுட்டிக்காட்டுவார்கள். கிறுக்குகளான சிலர்தான் சாமியாராவார்கள் என்று ஏளனம் செய்வார்கள்.

ஆனால் உண்மையில் நீ அதிர்ஷ்டசாலி. உலகத்தின் பார்வையில் அறிவாளிகள் எனப்படுபவர்கள் துரதிருஷ்டசாலிகள். கடை வியாபாரம் நன்றாக நடக்கும். முதலாளி ஆன்மிகத்தில்

திவாலாக இருப்பார். பெரிய பதவிகள் கிடைக்கும். அதற்காக ஆத்மாவின் குரல் அடக்கப்படும். வங்கிக் கணக்கில் பணம் சேரும். ஆனால் செல்வத்துள் செல்வமாகிய ஆன்மிகச் செல்வம் சிறிதும் சேர்ந்திருக்காது. ஒருநாள் சாவு வரும். பிறகு டில்லிக்குப் போய் தர்பார் நடத்த முடியாது. வெறுங்கையோடு வந்தார்கள். வெறுங்கையோடு திரும்புகிறார்கள். இவர்களா அறிவாளிகள்? ஆனால் இத்தகையாரே எண்ணிக்கையில் மிக அதிகம். சமூகத்தில் பெரும்பான்மையோரே எல்லாம் முடிவுசெய்வதால் தங்களைக் கெட்டிக்காரர்கள் என்று அறிவித்துக் கொள்கிறார்கள்.

மகாத்மா புத்தரையே அறிவிலி என்று கருதியவர்கள் உண்டு. அவர் பெயரைவைத்தே 'புத்தூ' என்று ஒரு வசவுச்சொல்லே உண்டாகிவிட்டது. 'புத்தூ' என்றால் பரம முட்டாள் என்று பொருள்! புத்தரின் சமகால மக்கள் புத்தரை புத்தூ என்றே கருதினர். "இவர் என்ன மனிதர்! மாளிகையைவிட்டு வெளியேறினார். அரச வாழ்க்கை, மனைவி, மகன், பெற்றோர் என்று அனைத்தையும் துறந்து, எந்தத் திட்டமுமின்றி, அலையத் தொடங்கினார். இவர் சரியான 'புத்தூ' என்று கேலி செய்தனர். பரம ஞானம் பெற்றவர் என்னும் சொல்லிலிருந்து பரம முட்டாள் என்னும் எதிர்மறையான சொல் பிறந்தது என்பது மொழியியலில் ஒரு விந்தைதான். ஒரே சொல்லின் அர்த்தம் காலப்போக்கில் மாறுபாடு அடைவது வேறு விஷயம்.* இங்கே இரு சொற்களும் நீடித்து எதிரெதிரான பொருள் தருகின்றன.

அப்படித்தான் எப்பொழுதும் நடைபெறுகிறது. சமூகத்தோடு ஒத்துப் போகாமல் சாமியாராகி மழித்தலும் நீட்டலும் மேற்கொண்டால் நீ பைத்தியம் என்றுதான் உதாசீனப்படுத்தப் படுவாய். இதுதான் உலகத்தின் இயற்கை. சத்தியத்தைத் தேடிப் போகின்றவனை உலகத்தின் மந்தைக் கூட்டம் பைத்தியக்காரன் என்றுதான் அழைக்கும். நீ மக்கள் கூட்டம் உன்னை மதிக்க வேண்டுமென்று எதிர்பார்க்காதே. துறவியான பிறகும் மக்கள்

---

* நாற்றம் என்னும் சொல் முன்பு பொதுவாக வாசனை அல்லது சிறப்பாக நறுமணம் என்ற அர்த்தம் கொடுத்தது. பொன்மலர் நாற்றமுடைத்து என்று புகழ்வர். இப்போது சாக்கடை நாற்றம் என்று அர்த்த மாற்றம் அல்லது அர்த்த வீழ்ச்சி ஏற்பட்டுவிட்டது.

உன்னை மதித்து வணங்க வேண்டுமென்று நீ எதிர்பார்த்தால் ஓஷோவின் (என்) சந்நியாசியாகாதே. அதற்குப் பதிலாக இந்து ஜகத்குரு, பௌத்த பிட்சு, சமணத் துறவி, கிறிஸ்தவ பாதரி என்று வேறு வகை சந்நியாசியாகிவிடு. மக்கள் உன்னைக் கால் தொட்டும் வணங்குவார்கள்; அறிவாளி என்றும் புகழ்வார்கள்.

இவர்களின் துறவறம் உணவு-உடை அளவில் மட்டுமே நீடிக்கிறது. இவர்களுக்குப் புகழாசையும், அதிக எண்ணிக்கையில் மக்கள் தங்களை வழிபட வேண்டும் என்னும் ஆசையும் உள்ளது. அவர்கள் உள்ளுலக அமைதி வாழ்க்கையை மறந்துவிட்டார்கள். வெளியுலகக் கொண்டாட்டங்களிலும், புறச் சடங்குகளிலுமே ஒவ்வொரு நாளையும் ஓட்டிவிடுகிறார்கள்.

•

ஒரு பெண்மணி என்னைச் சந்தித்தாள். அவள் சமண மதத்தைச் சேர்ந்தவள். "என் கணவருக்கு நீங்கள் சந்நியாசம் அளித்தீர்கள். தயவுசெய்து அதிலிருந்து அவரை விடுவியுங்கள். இதைவிட அவர் சமண மதத் துறவி ஆகியிருக்கலாம். நீங்கள் கொடுத்த சந்நியாசம் உண்மையான துறவறம்தானா? உங்கள் துறவற முறை எங்களுக்குப் பெரிய தொல்லை கொடுக்கிறது. துறவியான பிறகும் என் கணவர் தொடர்ந்து வீட்டிலேயேதான் வசிக்கிறார்! இது எப்படி நியாயமாகும்?" என்று அழுதபடியே அவள் புகார் செய்தாள்.

"ஏன் அழுகிறாய்? நீ இதற்காக சந்தோஷப்பட வேண்டுமே. அவர் சமணத் துறவி ஆகியிருந்தால் வீட்டைவிட்டு அல்லவா வெளியேறியிருப்பார்," என்று நான் சுட்டிக் காட்டினேன்.

"அவர் அப்படிச் செய்திருந்தால் அது எனக்கு சம்மதம்தான். என்னால் குழந்தைகளைச் சமாளித்து வளர்க்க முடியும். தனி ஒருத்தியாகவே குடும்பம் நடத்துவேன்," என்று அவள் எதிர்வாதம் செய்தாள்.

என்ன விசித்திரம்! கணவன் தொலைந்து போனால் கவலையில்லையாம். குடும்பம் அல்லல்படுமே என்றும் கவலை இல்லை. சமூகத்தால் அங்கீகரிக்கப்பட்ட விதமான சந்நியாசமாக இருந்தால் கணவன் சாமியாராக வீட்டைவிட்டுப் போனாலும் பரவாயில்லையாம் அப்போதுதான் மக்கள் அவளைப் பார்த்து, "நீ

பாக்கியசாலி. உன் கணவன் முனிவராகிவிட்டார். நீ முந்தியப் பிறவிகளில் தவம் செய்திருப்பாய். அதனால் உனக்கு அதிர்ஷ்டம் அடித்திருக்கிறது,'' என்று பாராட்டுவார்கள்.

அவள் மனத்திற்குள்ளே அழுவாள், கவலைப்படுவாள். குழந்தைகளைப் படிக்கவைக்க வேண்டும்; குடும்பச் செலவுகளுக்குப் பணம் வேண்டுமே என்று குழம்புவாள். ஆனால் இன்னொரு விதத்தில் பார்த்தால், 'என் கணவர் சாமானியர் இல்லை, யோகி' என்று அவளது அகங்காரம் திருப்தியடைகிறது.

ஆனால் எனது வழியிலான சந்நியாசம் என்பதுதான் பிரச்சினையாகிவிட்டது. 'ஓஷோவிடம் சந்நியாசம்* பெற உன் கணவனுக்குப் பைத்தியமா?' என்று ஊரார் ஏசியதுதான் அவளால் பொறுக்க முடியவில்லை. ஜைன மதத் துறவியாகக் கணவன் மாறினால் அதன்பின் அவள் விதவையாகத்தான் கருதப்படுவாள். அதுவும் அவளுக்கு சம்மதம்!

சற்று யோசி. மனித மனத்தை அகங்காரம் எப்படியெல்லாம் ஆட்டுவிக்கிறது என்பதைக் கவனி. என் முறையிலான துறவியின் நடவடிக்கைகள் மற்ற வகையான சந்நியாசிகளிலிருந்து வேறுபடுகிறது. ஆகவே என் சீடரான சந்நியாசியை சமூகம் பைத்தியம் என நினைக்கிறது.

எனது சந்நியாசம் சோகமும் குற்ற உணர்வும் நிறைந்த வாழ்க்கை முறையன்று. எனது சந்நியாசம் ஆவேசத்தாலும், ஆனந்தத்தாலும் நிறைந்து விளங்குகிறது. நீ சமூகத்தின் முன்னால் 'ஓஷோ சந்நியாசி முறை'யைப் பெருமையாகக் கூறி, உன்னை மேதாவிபோல் காட்டிக்கொள்ளாதே. சமூகம் துறவியை மதிப்பிடப் பயன்படுத்தும் அளவுகோல் வேறு.

'நான் ஒரு முட்டாளுங்க' என்று அறிவிப்புச் செய்துவிடு. பிறகு எவரும் உன்னைத் தொந்தரவு செய்யமாட்டார்கள்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

---

* ஓஷோவிடம் துறவறம் பெற்றவர்கள் வீட்டிலேயே வசித்து, வேலைக்குச் சென்று, குடும்பக் கடமைகளைச் செய்யலாம். பற்றுதான் கூடாது. தாமரை இலைமேல் தண்ணீர்போல் உலகில் வாழ்ந்தும் ஒட்டாமல் வாழவேண்டும். சாட்சி மனப்பான்மை தேவை.

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

அப்ரயத்நாத் ப்ரயத்னாத்வா மூடோ நாப்னோதி நிர்வ்ருதிம் |
தத்வ நிஸ்சய மாத்ரேண ப்ராக்ஞோ பவதி நிர்வ்ருத: || 210

சுத்தம் புத்தம் ப்ரியம் பூர்ணம் நிஷ்ப்ரபஞ்சம் நிராமயம் |
ஆத்மாநம் தம் ந ஜானந்தி தத்ர அப்யாஸ்பரா ஜனா: || 211

நாப்னோதி கர்மணா மோக்ஷம் விமூடோ அப்யாஸ ரூபிணா |
தன்யோ விக்ஞான மாத்ரேண முக்த ஸ்திஷ்ட்டத்ய விக்ரியம் || 212

மூடோ நாப்நோதி தத்வரஹ்ய யதோ பவிதும் இச்சதி |
அநிச்சின்னபி தீரோ ஹி பரப்ரஹ்ம ஸ்வரூப பாக் || 213

நிராதாரா க்ரஹ வ்யக்ரா மூடா: ஸம்ஸார போஷகா: |
ஏதஸ்யான அர்த்த மூலஸ்ய மூலச்சேத: க்ருதோ புதை: || 214

ந ஸாந்திம் லபதே மூடோ யத: ஷமிதும் இச்சதி |
தீர ஸ்தத்வம் விநிஸ்சித்ய ஸர்வதா ஸாந்த மானஸ: || 215

'**அ**ஞ்ஞானி முயற்சியாலோ, முயலாமையாலோ சுகத்தை அடைவதில்லை. ஞானி, பரமதத்துவமானதை உறுதியாக அறிந்து மகிழ்ச்சியடைகிறான்.' **(சுலோகம் 210)**

இது முக்கியமான சுலோகம், சாதகர்கள் இதை ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டும். இது முதல் கட்டம். இங்கே கோணலானால் முற்றிலும் கோணலாகிவிடும். இங்கே தடுமாறாமலிருந்தால் பாதி வேலை முடிந்தமாதிரிதான்; ஆன்மிகப் பாதையில் பாதியைக் கடந்தாகிவிட்டதுபோல்தான்.

இந்த சுலோகம் அஸ்திவாரம் போன்றது. மூடன் வாழ்க்கையில் சுகம் பெறக் கடுமையாக முயலுகிறான். ஆனால் கிடைப்பது என்னவோ துன்பம்தான். சுகத்திற்கான முயற்சியில் அவன் வெற்றி பெறுவதில்லை. சுவர்க்கத்தைச் சென்றடைய யார்தான் விரும்பமாட்டார்கள்? ஆனால் எல்லோரும் நரகத்திற்கே போய்ச்சேருகிறார்கள். சுவர்க்கத்திற்கான முயற்சி நரகத்தில் முடிவடைகிறது. அமிர்தத்திற்கு முயன்ற உனக்கு விஷம் கிடைக்கிறது. அன்பை யாசித்ததற்குப் பலனாக வெறுப்பு கிடைக்கிறது. படைப்பில் உள்ள எல்லாமே உன்னை எதிர்ப்பதாக உனக்குத் தோன்றுகிறது: அவற்றை வெல்ல முடியாது. தோல்விதான் நிச்சயம். சுகத்தை யார்தான் விரும்பவில்லை? ஆனால் சுகம் யாருக்குத்தான் கிடைக்கிறது? இது மிகவும் வியப் பூட்டும் விஷயமாகும். எல்லோரும் சுகத்தை விரும்பியபோதிலும் எவருக்கும் சுகம் கிடைப்பதில்லை என்னும்போது எங்கேயோ பெரிய கோளாறு உள்ளது என்று தெரியவருகிறது. 'சுகத்தை அடைவேன்' என்று ஒருவன் நினைக்கும்போது அந்த நினைப்பிலேயே கோளாறு ஆரம்பமாகி விடுகிறது.

சுகம் நமது சுபாவத்தின் அங்கம். சுகத்தையும் சேர்த்த ப்டிதான் நாம் பிறந்தோம். ஆகவே அது நமக்கு ஏற்கெனவே சொந்தமான ஒன்றுதான்.

நெருப்பு எரிக்கும் என்பது அதன் இயற்கை. அதுபோலவே சுகமாக இருப்பது ஆத்மாவின் சுபாவம். சத்-சித்-ஆனந்தம் நமக்குள்ளே உறைகிறது. நமக்கு உள்ளே இருப்பதை உணராமல் அதை நாம் வெளியில் தேடி பெற்றுவிட முடியும் என நினைப்பதுதான் நாம் செய்யும் தவறு. இவ்வாறு தேடுதலிலேயே நம் வாழ்க்கை முடிந்து விடுகிறது.

உதாரணமாக, உனக்கு எதிரே தரையில் பணம் விழுந்து கிடக்கிறது. நீயோ வானத்தை நோக்கிப் பார்வையைச் செலுத்திப் பணத்தைத் தேடுகிறாய். நீ எதை அல்லது யாரைத் தேடி நெடும்பயணம் மேற்கொள்ளுகிறாயோ அது அல்லது அவர் இருப்பது உன் அருகில்தான். எது உனது சுபாவத்திலேயே உள்ளதோ அதை முயற்சி செய்து தேடுகிறாய்.

வாழ்க்கையின் தர்க்கப்படி, நீ தேடியது விரைவில் அல்லது எளிதில் கிடைக்காவிடில் மேற்கொண்டு நீ சிந்திப்பதில்லை. பதிலாக, உன் முயற்சியை மேலும் தீவிரமாக முடுக்கிவிடுகிறாய். 'ஒருவேளை நான் முழு மனத்துடன் ஓடவில்லை; முழு சக்தியை உபயோகித்து ஓடவில்லை' என நினைத்து உன் வேகத்தை அதிகப்படுத்துகிறாய்.

அல்லது மற்றவர்கள் உன் முயற்சி வெற்றி பெறுவதில் தடையாக உள்ளதாக நீ நினைக்கிறாய். தடைகளை விலக்கியாக வேண்டும். இடைஞ்சலாக இருப்பவர்களை ஒழித்துவிட வேண்டும். அவர்களுடன் போராட வேண்டும். எப்படியாவது சுகத்தைப் பெறுவதுதான் முக்கியம் என்று நீ நினைக்கிறாய். ஒருவர் மற்றவரின் கழுத்தை நெரிக்குமளவு போட்டி தோன்று கிறது. நீ பயணிக்கும் படகில்தான் மற்றவர்களும் பயணிக்கின்றனர் (sail in the same boat). அவர்களுக்கும் சுகம் வசப்படவில்லை. அவர்கள் மிகவும் சினந்து காணப்படுகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் நீ அவர்களின் சுகத்திற்கு இடையூறாக இருப்பதாக நினைக்கிறார்கள். அவர்கள் உன்னை அழிக்கத் திட்டமிடுகிறார்கள். ஆகவே சமூகத்தில் போட்டி, போராட்டம், வன்முறை மிகுந்துள்ளது. இதற்கு மாற்று (antidote) என்ன?

சுகத்தை வெளியே தேடும் முயற்சியைக் கைவிடு. அதைத் துரத்தியபடி ஓடுவதை நிறுத்து. அமைதியாக அமர்ந்து கண்களை மூடிக்கொள். உனக்குள்ளேயே சிறிது நேரம் லயித்துவிடு. இப்படி லயிப்பவர் ஆத்மாராம் எனப்படுவார். 'நான் வெளியே தேடி-தேடி களைத்தேன், தோற்றேன். நான் தேடுவது ஒருவேளை வெளியே இல்லை என நினைக்கிறேன். அடுத்து, சற்று உள்ளே பார்வையைச் செலுத்துவேன்' என்று முடிவு செய்.

உனக்குள்ளேயே இருக்கும் சுகத்தை நீ அடையாளம் காணாத வரையிலும் நீ அகிம்சாவாதியாக முடியாது. நீ தண்ணீருக்குக் கொடுக்கும் மதிப்புக்கூட பிறரது ரத்தத்திற்கு கொடுப்பது கிடையாது. இரவில் விளக்குப் போட்டால் அதில் பூச்சிகள் பட்டுச் செத்துப்போகும் என்று நீ மாலையிலேயே இரவுணவை முடித்துக்கொண்டால் அகிம்சாவாதியாகி விடுவாயா?

ஹிம்சை (வன்முறை) ஏன் நிலவுகிறது? 'எனக்கு சுகம் கிடைக்கவில்லை. காரணம், வேறொருவர் என் முயற்சிகளில் குறுக்கிடுகிறார். பக்கத்து வீட்டுக்காரர் இடைஞ்சல் செய்கிறார். மேலும் பல போட்டியாளர்கள் உள்ளனர். மற்றவர்கள் டில்லியில் தங்கள் செல்வாக்கை நிலைநாட்டச் செய்கின்றனர். என்னால் டில்லிக்குப் போக இயலவில்லை. டில்லியை நோக்கி முன்னாலும் பின்னாலும் பலத்த கூட்டமாகச் செல்கிறார்கள். நான் கையில் கத்தி எடுத்து, நாலாபுறமும் சுழற்றி, நிறையப் பேரை வெட்டி வீழ்த்தினாலொழிய நான் செல்லப் பாதை கிடைக்காது.' இத்தகைய மனப்பான்மை வன்முறைக்கு வேராகிறது.

வாழ்க்கையில் சுகம் கிடைக்கவில்லை என்பது வன்முறையின் அடிப்படையாகும். சுகமாக இருப்பவன் வன்முறையில் இறங்கமாட்டான். வன்முறையில் ஈடுபட காரணம் கிடையாது. எதை விரும்பினானோ அது கிடைத்துவிட்டபின் வன்முறை பற்றி நினைவே எழாது.

வன்முறை துன்பப்படுபவனின் அடையாளமாகும்; அவனது வெளிப்பாடு ஆகும். ஆகவே நீ வன்முறையைக் கைவிடாமல் சுகம் பெற முடியாது. நீ சுகத்தைத் தேடி அடை. வன்முறைச் சிந்தனை தானாகவே உதிர்ந்துவிடும். போராட்டம் முடிவுக்கு வரும். எதற்குப் போராட வேண்டும்? சுகம் உனக்குள்ளேயே அலைகளை எழுப்பியபடி இருக்கிறது. சுகம் உனக்குள்ளே ஏரிபோல் பரந்திருக்கிறது. எவருடனும் போட்டியில்லை. நீ உலகில் வரும்போதே சுகத்தை எடுத்துக்கொண்டுதான் வந்தாய். அதை எவராலும் பிடுங்க முடியாது. அதை எவராலும் அழிக்க முடியாது. ஆத்ம சுகத்திற்கும் வெளிமனிதர்களுக்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது.

இவ்வாறு, சுகத்திற்கு இன்னொருவன் தேவையில்லை என்பது தெளிவாகிறது. நீ எப்பொழுது வேண்டுமானாலும் கண்களை மூடிக்கொண்டு மனம் என்னும் ஏரியில் (மானசரோவரம்) மூழ்கித் திளைக்கலாம். சுகம் என்றும் ப்ற்கடலில் பள்ளி கொள்ளலாம். மனத்தின் வீணையை மீட்டி இனிய இசை கேட்கலாம்.

சுகம் உனக்குள் இருக்கிறது. வெளியே எங்கும் அலையத் தேவையில்லை. ஓர் அங்குலம்கூட யாத்திரைசெய்ய வேண்டிய தில்லை. முன்பு நீ பயணம் செய்ததால்தான் சுகத்தைவிட்டு விலகிச்சென்றாய். ஓடினதால்தான் சுகத்துடனான இடைவெளி அதிகரித்தது. பெற வேண்டுமானால் ஓடுவதைக் கைவிட வேண்டும். யார் துரத்தி ஓடுவதை நிறுத்திவிடுகிறாரோ அவரையே சந்நியாசி என்கிறோம். அவர் 'சுகம் தொலைவில் இல்லை, அருகிலேயே உள்ளது' என்கிறார். எவ்வளவு அருகில் என்றால் 'கையை நீட்ட வேண்டிய அவசியம்கூட இருக்காது' என்பார். அது உன் உள்ளங்கையிலேயே உள்ளது. கண்ணைத் திறந்து காண்பது மட்டும்தான் பாக்கி.

மூட மனிதன் முயற்சியாலும் சரி, முயற்சியின்மையாலும் சரி, சுகத்தை அடைவதில்லை என்கிறார் அஷ்டாவக்ரர்.

மூட மனிதன் என்ன, எந்த மனிதனுமே முயன்று சுகம் பெற முடியாது என்று இதுவரை பார்த்தோம். எவ்வளவு ஓடியும் தேடியும் சுகம் கிடைக்கவில்லை என்று புரிந்துகொண்டோம். ஆகவே அடுத்ததாக எந்த முயற்சியும் செய்யாமலே (அப்ரயத்னம்) சுகம் கிடைக்கிறதா என்று பார்க்க மனிதன் முடிவு செய்கிறான். ஏனெனில் ஞானி முயற்சியின்மை மூலம் சுகம் கிடைப்பதாகச் சொல்கிறான்.

இங்கே சராசரி மனிதன் (ஆன்ம அறிவில் மூடன்) தவறு செய்கிறான். அவனால் ஞானியின் மொழியைச் சரியாகப் புரிந்துகொள்ள முடிவதில்லை. அவன் கையில் சத்தியத்தை எடுத்துக் கொடுத்தாலும் அது பொய்யாகிவிடும். அவன் கையில் தங்கத்தை எடுத்துக்கொடு. அது மண்ணாக மாறிவிடும்.

சராசரி மனிதனிடம் சுயமான பார்வை கிடையாது. முதலில் அவன் ஓடி-ஓடி சுகத்தைத் தேடுகிறான். அது கிடைக்கவில்லை. பிறகு அவன் ஞானிகளை அணுகுகிறான். சுகத்தை எப்படி அடைவது என்று அவர்களிடம் அவன் வழி கேட்கிறான். அவர்கள் 'முயன்று சுகத்தைப் பெற முடியாது. முயலாமை மூலம் அதைப் பெற முடியும்' என்று நுணுக்கமாக உபதேசிக்கிறார்கள்.

முயலாமை என்பதற்கு பாமர மனிதன் வேறு அர்த்தம் எடுத்துக்கொள்கிறான். சும்மாயிருத்தல், சோம்பிக் கிடத்தல் என்று அர்த்தம் செய்துகொள்கிறான். அப்படியெனில் ஒன்றும் செய்ய வேண்டாமா என்று தன்னையே கேட்கிறான். அவன் ஓடுதல், செய்தல் ஆகியவை அறிந்திருக்கிறான். சும்மாயிருந்தால் சுகம் பெறலாம் என அவன் இதுவரை நினைத்ததில்லை. 'நல்லதாகப் போயிற்று' என்று கருதி அவன் போர்வை போர்த்திக் கொண்டு தூங்கிவிடுகிறான்!

சுகம் என்பது ஓடி தேடுவதாலும் கிடைக்காது; தூக்கம் போடுவதாலும் கிடைக்காது. ஓடாமல் விழித்த நிலையில் அது கிடைக்கிறது. ஓடும்போது விழித்திருத்தல் இயற்கை. தூங்கினால் ஓடுவது இயலாது. சாமானியன் ஓடுதல், தூங்குதல் என்னும் இரண்டு வழிகள் மட்டுமே அறிந்திருக்கிறான். பகல் முழுதும் ஓடுகிறான். இரவு முழுதும் தூங்குகிறான். தினமும் இதே கதை. ஒரே கதை.

முயலாமை என்பதை ஞானி கூறும்போது உன்னைத் தூங்கப்போகச் சொல்லவில்லை; சோம்பேறித் தனத்தைத் தூண்டவில்லை. அஷ்டாவக்ரர் முன்பொரு சுலோகத்தில் ஞானியைச் சோம்பேறி சிரோமணி என்றார். இதில் சிரோமணி (மகுடம்) என்னும் சொல் கவனத்திற்குரியது. ஆகவே ஞானி சாதாரணச் சோம்பேறியில்லை; உன்னைப் போன்ற சோம்பேறி யில்லை. அவன் விசேஷமான சோம்பேறி. அவன் ஓடுவது மில்லை, உறங்குவதுமில்லை. ஓடுதல் என்பது தூக்கத்துடன் இணைந்தே வருகிறது.ஓடுபவன் தூங்குவான்; தூங்குபவன் ஓடுவான். தூங்கினால் ஓய்வு கிடைத்து, சக்தி சேர்ந்து ஓடுவாய். ஓடினால் களைத்துத் தூங்குவாய்.

விழித்தல், ஓடுதல், உறங்குதல் ஆகியவை ஒன்றுட னொன்று இணைந்துள்ளன. உலகியலில், ஓடினால் தூக்கம்; ஓடாவிடில் விழிப்பு. ஆன்மிகத்தில், ஓடாவிடில் தூக்கம்; ஓடினால் தூக்கமில்லை. சுகம், மேன்மேலும் வசதி, சுகம் என்று துரத்தி ஓடுவதால் சுகமும் கிடைக்காமல் போய் துன்பமும் விளைகிறது. பணம் சேரச் சேர, தூக்கம் குறைந்துபோகிறது. தூக்கம் வராமல்

அல்லது போதாமல் அல்லல்படுபவர்கள் குபேரநாடாகிய அமெரிக்காவில்தான் அதிகம். அதிபட்ச அளவில் தூக்க மாத்திரை விற்பனையாவதும் அங்குதான்.

ஞானி முயலாமை (no effort) என்று கூறும்போது சராசரி மனிதன் அதை எப்படிப் புரிந்துகொள்கிறான்? 'சரிதான், தேடி ஓடினால் கிடைக்காது' என்று அர்த்தப்படுத்துகிறான். புத்தர், மகாவீரர், அஷ்டாவக்ரர் முதலியோர் 'போதும் ஓட்டம், உட்காரு' என்று சொல்வதால், ஓடுவதை நிறுத்திவிடுகிறான். போர்வை போர்த்திக்கொண்டு படுத்துவிடுகிறான். அப்படியும் சுகம் கிடைப்பதில்லை. ஆக, பாமரனுக்கு முயன்றாலும் சுகமில்லை; முயலாவிடிலும் சுகமில்லை.

கடிதம் மூலம் ஒருவர் என்னிடம் சந்தேகம் கேட்டார். 'அஷ்டாவக்ரர் எதுவும் செய்யாமல் சும்மா இருக்கச் சொல்கிறார் என்று கூறும் நீங்கள் சீடர்களை நிறைய தியானப் பயிற்சி செய்யச் சொல்கிறீர்களே. சில சமயம் ஆசிரமத்தில் திருவிழாபோல் ஆடி-பாடச் சொல்கிறீர்கள். இது முரண்பாடாக இல்லையா?' என்று அவர் கேட்கிறார்.

இவரது கேள்வியின் சாரம்—முயலாமையால் கிடைக்கும் என்றால், ஒரு போர்வை எடுத்துக்கொடு. கால் நீட்டித் தூங்குவோம். அஷ்டாவக்ரர் நம்மைச் சோம்பேறி சிரோமணி ஆகுமாறு கூறிய பின் தியானம் செய்யும் சிரமத்தை ஏன் எடுத்துக்கொள்ள வேண்டும்?

மறுபடியும் நீ தவறு செய்கிறாய். முதலில், முயலுதல் என்னும் தவறிழைத்தாய். இப்போது, முயலாமை என்னும் தவறிழைக்கிறாய். ஞானியின் மொழிக்கு மேலோட்டமான அர்த்தம் கொள்ளக்கூடாது. அதை உனது மொழிக்கு மாற்றாதே. நீ உன்னைக் கரையிலேயே ஒதுக்கிவிடு. ஞானியின் சொற்களை அவரது கண்ணோட்டப்படியே புரிந்துகொள். உலக வழக்கத்தின் படியும் உன் பழக்கத்தினபடியும் நீ ஞானியின் சொற்களுக்கு அர்த்தம் தந்தால், நீ தடம் புரள்வாய். நீ தப்பர்த்தம் எடுத்துக்கொண்டுவிட்டுப் பிறகு ஞானியின் சொல் பலிக்கவில்லை என்று குறை கூறுவாய்.

முயற்சி-முயலாமை இரண்டினாலும் சாமானிய மனிதன் சுகம் பெறுவதில்லை என்கிறார் அஷ்டாவக்ரர். முயற்சியில் வெளிப்புறத் தேடுல்-ஓடுதல்-பரபரப்பு காரணமாக சுகத்தின் இலக்கு தவறிவிடுகிறது. முயலாமையில் அதற்குச் சோம்பேறித் தனம் என்று அர்த்தம் கொள்வதால் சுகம் கிடைக்க வாய்ப்பே இல்லை. சரியான வழி இந்த இருவித அணுகுமுறைகளுக்கும் மத்தியில் உள்ளது.

ஓடும் சமயம் விழித்திருப்பது சுலபம் என்றேன். தூங்கும்போது, ஓடாமலிருப்பது சாத்தியம் என்றும் சொன்னேன். சுகம் பெறும் வழி இந்த இரண்டிற்கும் நடுவில் உள்ளது. ஓடுபவனைப்போல் விழிப்புடன் இரு. அதே சமயம், உறங்குபவனைப்போல் அமைதியாக ஓய்வில் இரு. அப்போது நீ ஞானியின் மொழியைப் புரிந்துகொண்டதாக அர்த்தமாகும். உலகச் செக்கில் சுழலும் மனிதனைப்போல் சுறுசுறுப்பாய் விழிப்புடன் செயல்படு. அதே சமயம், தூங்குபவனைப் போல் ஆழ்ந்த ஓய்வில் இரு. ஆத்மா விழித்திருக்கட்டும்; உடல் தூங்கட்டும், மனம் தூங்கட்டும்.

ஆகவே பதஞ்சலி முனிவர் சமாதிநிலையை உறக்கம் போன்றது என்றார். வித்தியாசத்தைக் கவனிக்கவும். சமாதியை உறக்கம் என்று அவர் சொல்லவில்லை. உறக்கம்போல என்கிறார். உறக்கத்தைப் போலவே சமாதியிலும் ஆழ்ந்த அமைதியும் ஓய்வும் கிடைக்கிறது. எனினும் சமாதியில் விழிப்பும் ஒரு கிரணம் அளவு மறைந்துள்ளது.

எனவே கிருஷ்ணர் பகவத்கீதையில் 'யா நிஷா ஸர்வ பூதானாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ'* என்கிறார். இதற்கு, எல்லோரும் தூங்கும் இரவில் புலனடக்கமுடையவன் (யோகி) விழித்திருக்கிறான் என்று பொருள். எங்கும் இருட்டு, உறக்கம், ஓய்வு. ஆனால் உள்மனத்தின் ஆழத்தில் ஒரு கிரணம் ஒளிவிடுகிறது.

ஓடு, ஆனால் கிடைக்காது. தூங்கு, ஆனால் கிடைக்காது. ஓடுவதில் விழிப்புணர்வை மிச்சப்படுத்து. தூங்குவதில் ஓய்வான

* பகவத்கீதை 2:69

அமைதியை மிச்சப்படுத்து. விழிப்பையும் ஓய்வமைதியையும் இணை. சமாதி கூடிவிடும்.

ஆகவே, புத்தர் 'மஜ்ஜிம் நிகாய' என்றொரு வழியைக் காட்டுகிறார். இதற்கு நடுவிலுள்ள வழி என்று அர்த்தம். வலப்பக்கமோ, இடப்பக்கமோ சாயாதே, செல்லாதே என்று எச்சரிக்கிறார். இந்தக் கோடியும் வேண்டாம்; அந்தக் கோடியும் வேண்டாம்; நடுவில் இரு. எதிலும் மிகையாக இருத்தல் (extremes) உலக இயல்பு. மிகையைத் தவிர்த்து நடுவில் இருத்தல் புத்தர் கூறும் நிர்வாண நிலை.

மூடன் என்று இந்த சுலோக வரிசையில் வரும் சொல்லுக்கு முட்டாள், மடையன் என்றெல்லாம் அர்த்தமில்லை. உறங்குவதுபோல், வசியத்தில் ஆழ்ந்தவன்போல், மயக்கத்தில் இருப்பவன்போல் தெளிவற்ற மனநிலையில் இருப்பவனையே அஷ்டாவக்ரர் மூடன் என்கிறார்.

மூடன் மெத்தப் படித்தவனாகவும் இருக்கக்கூடும். அஷ்டாவக்ரர் கூறும் மூடர்கள் பெரும்பாலும் அறிஞர்களாக இருப்பார்கள். சாஸ்திரங்களை நன்கு கற்றிருப்பார்கள். வாத விவாதங்களில் வெல்ல முடியாத அளவிற்கு தர்க்கத் திறமை பெற்றிருப்பார்கள்.

மூடன் என்று அஷ்டாவக்ரர் கூறுவதை உளவியல் அடிப்படையில் வரையறுக்க வேண்டாம். உளவியல் மூடனை அறிவிலி (imbecile) என்று அர்த்தம் கொள்கிறது. அஷ்டாவக்ரர் ஒருவனை மூடன் என்பது ஆன்மிக அடிப்படையிலாகும். அவன் விழிப்புப் பெற்றவன்போல் தெரிகிறான்; எல்லாம் அறிந்தவன் போல் தெரிகிறான். அது உண்மையில்லை. தன்னை அறிஞன் எனக் கற்பனை செய்து தன்னை ஏமாற்றிக்கொள்வதோடு பிறரையும் ஏமாற்றுகிறான். இதனால் அவனை அகங்காரி என்றும் சொல்லலாம்.

சில சமயம் நீ புத்தகத்தில் முழுப்பக்கமும் படிப்பாய். உன் கண்கள் வரி வரியாக ஊர்ந்தன. சொற்களையும் கவனித்தாய். முற்றுப்புள்ளி முதலிய நிறுத்தற் குறிகளும் உன் பார்வையில்

பட்டன. ஆனால் அந்தப் பக்கத்தைப் படித்து முடித்த பிறகு உனக்கு என்ன படித்தோம் என்று நினைவுக்கு வராது.

ஏனென்றால் நீ படித்த அந்த சில நிமிடங்களுக்கு நீ மூடனாக இருந்தாய். நீ சுயநினைவு இன்றியே அந்தப் பக்கத்தைப் படித்திருக்கிறாய். உன் கண்களும் இயங்கின; புத்தியும் செயல் பட்டது. ஆனால் ஆத்மா என்னும் தளத்தில் நீ மயக்கநிலையில் இருந்தாய். வெளியிலிருந்து பார்த்தவர்கள் நீ ஆழ்ந்து படிப்பதாக நினைத்திருப்பார்கள். ஆனால் நீ படித்தது மனத்தில் துளிக்கூடப் பதியவில்லை என்றும், இன்னொரு முறை படித்தால்தான் கொஞ்சமாவது விஷயம் புரியும் என்பது உனக்கு மட்டுமே தெரியும்.

நீ யோசித்தது உண்டா? தினமும் 24 மணி நேரமும் எப்படியோ ஓடிவிடுகிறது. காலை-மாலை என இரண்டாகப் பிரிந்து காலம் முழுதும் கரைந்துவிடுகிறது. சிறிது காலம் விழித்திருக்கிறாய்; சிறிது காலம் தூங்குகிறாய்; நடக்கிறாய், பேசுகிறாய், தகராறு செய்கிறாய், காதலிக்கிறாய்; திருமணம் செய்துகொள்கிறாய். பணம் சம்பாதிக்கிறாய்—இப்படியெல்லாம் தொடர்ந்து நடைபெறுகிறது. இதெல்லாம்தான் நீ செய்ய விரும்பினாயா என்று எப்போதாவது நீ யோசித்தது உண்டா? இவற்றைச் செய்வதற்காகவா நீ பிறவி எடுத்தாய்? இதுதான் உன் தலைவிதியா?

'இப்படிக் காலத்தை ஓட்டுவதற்காகத்தான் வந்தேன் என்று பக்காவாகச் சொல்ல முடியாது' என்பாய். ஏன் வந்தாய்? எங்கே போக நினைக்கிறாய்? எங்கே போக விரும்பவில்லை? பணம் சம்பாதிப்பதா, வேண்டாமா? என்ன சம்பாதிக்க வேண்டும் என்றும் தெரியவில்லை. எதை இழக்கிறாய் என்றும் தெரியவில்லை. எதற்கும் தெளிவான கணக்கு வழக்கு இல்லை. கூட்டத்தால் நெட்டித் தள்ளப்பட்டு நீ செல்கிறாய்.

நீ வீட்டிலோ, கடையிலோ உட்கார்ந்திருக்கிறாய். சிலர் சேர்ந்து கூட்டமாக எங்கோ போகிறார்கள். அதைப் பார்த்ததும் நீ கையிலுள்ள வேலையை அப்படியே போட்டுவிட்டுக் கூட்டத்துடன் சேர்ந்துகொள்கிறாய். கூட்டம் கல்லெறிந்தால்,

எதற்கு என்று தெரியாமல் நீயும் சேர்ந்து கல்லெறிகிறாய். 'நீ தனியாக அவ்வாறு செய்வாயா?' என்று கேட்டால், என்ன சொல்வாய்? "நான் அவ்வாறு நடந்துகொள்ள மாட்டேன். கூட்டத்தின் பாதிப்பால் சுயநினைவை இழந்துவிட்டேன்," என்றுதான் பதில் சொல்லுவாய்.

ஒருவன் உன்னைத் திட்டுகிறான். நீ கோபத்தால் பொங்குகிறாய். அவனைத் தாக்குகிறாய். வழக்கு நடக்கிறது. 'என்னை அறியாமல், என்னை மீறித் தாக்குதல் நடந்துவிட்டது' என்று வாக்குமூலம் அளிக்கிறாய். செயல் நடந்ததாகச் சொல்வாயே தவிர, 'நான் செய்தேன்' என்று சொல்லமாட்டாய்.

கொலை செய்தவனும், 'நான் கொலை செய்ய விரும்பிய தில்லை. என்னைப் பழித்தவன் மீது கோபத்தால் கல் எறிந்தேன். அது அவன் தலையில் பட்டு அவன் சாவான் என்று நான் நினைக்கவில்லை' என்று தன் தரப்பு வாதத்தை முன்வைக்கிறான்.

ஒருவன் திட்டினான் என்றால் அவன் கொல்லப்பட வேண்டிய அளவிற்குக் குற்றம் செய்யவில்லை. அவன் இறந்து விடுவான் என்று நினைத்ததும் இல்லை. கல்லை வீசியதும் கொல்ல வேண்டும் என்னும் எண்ணத்துடனன்று. எப்படியோ, நடக்கக்கூடாது நடந்து விட்டது. அவன் இறந்ததும் நீ நடுங்கினாய். 'இதென்ன, இப்படிச் செய்து விட்டேனே!' என்று உன் மீதே பரிதாபப்பட்டாய்.

பெரும்பான்மையான கொலைகள் ஆவேசத்தில்தான் செய்யப்படுகின்றன. கொலை செய்தவன் அந்த சமயம் சுயநினைவுடன் இருப்பதில்லை. நீ உனக்குள் ஆழ்ந்து பார்த்தால் ஒரு கொலைகாரன் தெரிவான்! அவன் என்றைக்கு வேண்டு மானாலும் வெளிப்படுவான். நீ இதுவரை கொலை செய்ததில்லை என்பதால் எதிர்காலத்தில் நீ கொலை செய்யமாட்டாய் என்பதற்கு உத்தரவாதம் கிடையாது. சுயநினைவு (self-awareness) மந்தமாயிருக்கும்போது யாரும் எதுவும் செய்யக்கூடும்.

நீ சுயநினைவுடன், முழுவிழிப்புடன் காதலிப்பதில்லை. சுயநினைவுடன் நீ ஒருவர் மீது வெறுப்புக் கொண்டதில்லை.

சுயநினைவுடன் நண்பனைத் தேர்ந்தெடுக்கவோ, எதிரியை ஒதுக்கவோ செய்ததில்லை. இந்த சுய உணர்வற்ற நிலைமைதான் மூடத்தனம் என்பது. புத்தர் இந்த நிலையை 'மூர்ச்சை' என அழைக்கிறார்.

ஞானி எதுவும் செய்வதில்லை. சுகத்திற்காக முயலுவது மில்லை. முயலாமை என்று கூறி சோம்பேறியாகவும் இருப்பதில்லை. சுகம் தனது சுபாவம் என அவன் அறிந்துள்ளான். ஆகவே சுகத்திற்காக அவன் அலட்டிக்கொள்வதில்லை.

ரின்ஜாயீ என்பவர் ஜப்பானிய ஜென் புத்த மதப் பிரிவைச் சேர்ந்தவர். முதலில் அவர் நம்மைப்போல் சாதாரணமான வராகத்தான் இருந்தார். ஒருநாள் அவர் மக்கள் நடமாட்டம் அதிகமில்லாத பகுதியில் உலாவச் சென்றார். பொழுது விடியும் நேரம். சூரிய கிரணங்கள் கிழக்கில் எட்டிப் பார்த்தன. பறவைகள் பாடியபடி கூடுகளைவிட்டு வெளியேறி வானில் பறக்கத் தொடங்கின. சுற்றிலும் இயற்கையின் பேரழகு.

ரின்ஜாயீ ஒரு பௌத்த மடத்தைக் கடந்து செல்கையில் பிட்சுக்கள் ஓதிய மந்திரங்கள் அவர் காதில் விழுந்தன. மிகத் தெளிவாகக் கேட்ட மந்திரம் 'வெளியே நீ தேடுபவர் உனக்குள்ளேதான் இருக்கிறார்' என்பதாகும்.*

இதை அபூர்வமான மந்திரம் என்று சொல்ல முடியாது. எல்லா ஞானிகளும் இதையேதான் சொல்லி வந்திருக்கிறார்கள். 'ஆனந்தம் உனக்குள்ளேதான் இருக்கிறது. ஆத்மா உனக்குள்ளே தான் இருக்கிறது' என்றும் அவர்கள் கூறுகிறார்கள்.

ஆனால் அந்தக் குறிப்பிட்ட சூழ்நிலையில் அந்த மந்திரம் ரின்ஜாயீயின் சிந்தனையைக் குலுக்கிவிட்டது. தூக்கத்தில் எழுப்பப்பட்டதுபோல் அவர் திடுக்கிட்டார். அப்படியே திகைத்து நின்றார். அந்த மந்திரம் அம்புபோல் அவர் உள்ளத்தினுள் பாய்ந்தது. ஆழமாக இறங்கியது. அந்த நிமிடமே அவர் புது அவதாரம் எடுத்ததுபோல் ஆனார். தேடாமலேயே அவருக்கு ஞானம் கிடைத்துவிட்டது. சமாதி நிலை கிட்டிவிட்டது.

---

* The Kingdom of God is within you.

அவர் ஞானம் தேடவுமில்லை. சமாதிநிலையைப் பெற முயலவுமில்லை. சத்தியத்தைத் தேடும் வேட்கையும் அவருக்கு எழுந்ததில்லை, அவர் அந்த மந்திரம் அந்த மடத்தில் ஓதப்பட்ட சமயம் தற்செயலாகத் தான் அவர் அந்த வழியே சென்று கொண்டிருந்தார்.

ஒவ்வொரு கோயிலிலும் நாள்தோறும் நீண்ட நேரம் மந்திரங்கள் ஓதப்படுகின்றன. பூசாரியின் வாய் பல மணிநேரம் மந்திரங்களை முணுமுணுக்கிறது. எத்தனையோ ஆண்டுகளாக மந்திரங்களைக் கூறிவரும் அவர் ஆன்மிக லாபம் எதுவும் பெற்றதில்லையே. அவர் சாஸ்திரங்கள் அறிந்தவராயிருப்பார். மத அறிவு பெற்றிருப்பார். ஆனால் அவர் உள்நோக்கிக் கவனத்தைச் செலுத்தாததால், ஆன்மிகத்தைப் பொறுத்தவரையில் அவர் மூடர் என்றே கருதப்படுவார். கிளிக்கு 'ராமா-ராமா' என்று சொல்லிக் கொடுத்தால் அதையே அது திருப்பிக் கூறுகிறது. இதனால் அதற்குப் புண்ணியம் கிடைத்து மோட்சத்துக்குப் போய்விடாது.*

ரின்ஜாயீ மடத்தின் வாசலைக் கடக்கும்போது மந்திரத்தை பூசாரியின் குரலில்தான் கேட்டார். எனினும் பூசாரி இல்லாமல்போய், டேப் ரிகார்டர் மூலம் மந்திரம் கேட்டிருந்தாலும் எவருக்கும் ஞானம் கிடைத்திருக்கும். கிரகிக்கும் தன்மை, உள்வாங்கும் தன்மை உன்னிடம்தான் உள்ளது. நீ எத்துணை சுயநினைவோடு மந்திரத்தின் பொருளைப் புரிந்துகொள்கிறாய் என்பது உன்னைத்தான் பொறுத்திருக்கிறது.

அன்று விடியற்காலையில், சூரியனின் உதய கிரணங்களின் ஒளியில், உலகம் விழிக்கும் அக்கணத்தில், தன்னை அறியா மலேயே ரின்ஜாயீ ஞான விழிப்புப் பெற்றிருப்பார். சுயநினைவால் (ஆத்ம உணர்வால்) நிறைந்திருந்த அவ்வேளையில், தினமும் ஓதப்படும் சாதாரண மந்திரம் அகப்புரட்சியை விளைவித்து விட்டது. ரின்ஜாயீ மகாஞானி ஆகிவிட்டார். உலாவப் போன அவர் பிறகு வீடு திரும்பவில்லை. அவர் மடத்துக்குள் சென்று

* உண்மையில் நாம் சொல்லிக் கொடுத்துக் கிளி கற்பதில்லை. நாம் அடிக்கடிச் சொல்வதைத் திருப்பிச்சொல்லி நம்மை நையாண்டிதான் செய்கிறது. ஆப்பிரிக்கா, அமேஸான் பகுதிக் கிளிகள் மிகத்தெளிவாக மனிதர் பேச்சை நையாண்டி செய்வதில் வல்லவை.

தலைமை பிட்சுவிடம் கோரிக்கை வைத்து சந்நியாசி ஆகிவிட்டார்.

இதை அறிந்து, மந்திரம் ஓதியவர் ரின்ஜாயீயிடம், “நான் பல்லாண்டுகளாக இந்த மந்திரங்களை ஓதிவருகிறேன். எனக்குக் கிடைக்காத ஆன்ம அனுபவம் உமக்கு எப்படி வாய்த்தது?” என்று கேட்டார். அதற்கு ரின்ஜாயீ பின்வருமாறு பதில் கூறினார்.

“நீங்கள் எத்தகைய மனப்பான்மையுடன் மந்திரம் ஓதுகிறீர்களோ அது எனக்குத் தெரியாது. மந்திரம் என் காதில் விழுந்தது. என் கண்கள் மூடின. உள்ளத்தில் சுகஉணர்வு கடல் அலைகள்போல எழும்பத் தொடங்கியது. இதற்கு முன் இப்படி நான் உணர்ந்தது இல்லை. இதற்கு முன் இப்படியான அனுபவம் கிடைத்ததில்லை. இந்த மந்திரம் உள்ளுணர்வைத் தூண்டும் பணியை மட்டும்தான் செய்தது. அந்த ஆன்ம அனுபவத்திற்கு நான் ஏற்கெனவே தயார்நிலையில் இருந்திருக்கிறேன் என்பது இப்போதுதான் புரிகிறது,” என்றார்.

ரின்ஜாயீ மேன்மேலும் ஞானத்தைப் பெருக்கிக்கொண்டார். அவரிடம் நூற்றுக் கணக்கில் சீடர்களாகச் சேர்ந்தார்கள். ரின்ஜாயீ தமக்கு ஆத்ம புரட்சியை விளைவித்த அந்த மந்திரத்தை தினமும் தமது மடத்தில் ஓத ஏற்பாடு செய்திருந்தார். ஆனால் வேறு யாரும் ஆன்ம அனுபவம் பெற்றார்களில்லை. அவருக்கு நிகழ்ந்தது மற்றவர்களுக்கு நிகழவில்லை.

ஆகவே மந்திரத்தின் பாதிப்பு உனது கிரகிக்கும் சக்தியைப் பொறுத்துத்தான் அமைகிறது. நீ சாந்தமாக, முழு விழிப்புடன், சுயநினைவுடன் மந்திரத்தைக் கேட்டால் ஒரு நொடியில் உனக்குள் பலத்த மாறுதல் நிகழ்கிறது. பிறகு ஜெபம், தவம், தியானம் ஆகிய எதுவும் செய்யத் தேவைப்படாது. பிறகு எதுவும் செய்ய வேண்டாம். செய்யாமல் இருக்கவும் எதுவும் செய்ய வேண்டாம்.

சத்தியமான தத்துவம் உள்ளத்தில் உறுதியாகப் பதிந்துவிட்டால் புரட்சி ஏற்பட்டுவிடும். ஆளுமை புதிய உருவமெடுக்கும்.

சுகம் என்பது பெறுதல் உணர்வில்லை. அது அறிதலுடன் சம்பந்தப்பட்டது. அது தேட வேண்டிய ஒன்றில்லை. அது அடையாளம் காணப்பட வேண்டிய ஒன்றாகும். எங்கும் வெளியில் செல்ல வேண்டாம். உன் சொந்த வீட்டிற்குத் திரும்பினால் போதும். நீ உன் வீட்டிலிருந்து வெகு தொலைவு சென்றுவிட்டாய். அதுதான் பிரச்சினை. திரும்பி வா.

எப்படித் திருப்பிவருவது என்று கேட்காதே. நீ தொலைவில் சென்றுவிட்டதாகச் சொன்னது ஓர் எண்ணம் மட்டுமேயாகும். நீ எப்படித் தொலைவில் செல்ல முடியும்? நீ வீட்டில் உட்கார்ந்து கொண்டு கொல்கத்தா போவதாகக் கற்பனை செய்வதுபோல்தான் இதுவும். அந்தக்கற்பனையிலிருந்து நீ உடனடியாகத் திரும்பி உன் வீட்டிற்கு நீ வரமுடியும். கொல்கத்தாவிலிருந்து ரயிலில் வருவதா, விமானத்தில் வருவதா, எப்படி வருவது என்று நீ கேள்வி கேட்கமாட்டாய்.

'திரும்பி வா' என்று கூறிய உடனேயே நீ உன் மையத்திற்கு வந்துவிடுவாய். நீ எங்கும் எப்போதும் போனதில்லை. 'நீ' என்பவன் எங்கோ சென்றதாக நீ நினைத்தமை பிரமை மாத்திரமே. உலகம் ஒரு பிரமை. உலகம் மாயை. நீ உலகத்தில் வசிப்பதாக உனக்குத் தோன்றுகிறது. நீ அதற்கு வெளியில்தான் இருக்கிறாய்.

'பயிற்சிகள் மற்றும் முயற்சிகளையே கடைப்பிடிக்கின்றவனால் ஆத்மாவை அறிய முடியாது. அது சுத்தமானது, ஞானமயமானது, பிரியமானது, பூரணமானது, கபடமற்றது, துன்பம் இல்லாதது.' **(சுலோகம் 211)**

**எ**வன் பயிற்சிகளிலேயே மாட்டிக்கொள்கிறானோ, முயற்சிகளிலேயே சிக்கிக்கொள்கிறானோ, அவன் தூய, ஞானமயமான, ஆனந்தமான ஆனந்தத்தை அறிந்துகொள்ள மாட்டான்.

மக்கள் இது தெரியாமல் 'என்ன விதமான பயிற்சி செய்தால் ஆத்மஞானம் கிடைக்கும்?' என்று கேட்டு அலைகிறார்கள். அப்படி சாத்தியமில்லை என்கிறார் அஷ்டாவக்ரர்.

பயிற்சி என்பதற்கு அர்த்தம் நீ எவ்வாறு இல்லையோ அவ்வாறு ஆவதற்கான முயற்சி என்பதாகும். நீ ஏற்கெனவே எப்படியுள்ளாயோ அப்படியே இருக்க முயற்சி தேவைப்படாது. பயிற்சி என்பது புதிதாக மேலே ஒன்றைப் போர்த்திக்கொள்வது போலாகும். பயிற்சி உன்னைச் சேதப்படுத்தி மாற்றுகிறது. ஏதோ ஒன்றை உன்மீது சுமத்துகிறது.

எந்தப் பூவும் நறுமணத்தை மாற்றிக்கொள்ள ஆசைப்பட்டு வேறு பூவாக மாற முயலுவதில்லை. எந்தப் பறவையும் வேறு வகைப் பறவையாக மாற முயலுவதில்லை. இனிய குரலுக்கு ஆசைப்பட்டு மயில் குயிலாக மாறவோ, மயிலின் நடனம் கண்டு வான்கோழி அதுபோல் ஆட முயன்றதே தவிர மயிலாக மாற முயன்றதில்லை. காக்கை குயிலைப் போல் பாடப் பயிற்சி எடுத்து நீண்ட காலம் முயன்று குயில் அளவிற்குப் பாடத் தொடங்கி னாலும், ஒரு கட்டத்தில் அதன் இயற்கையான, கரகரப்பான குரல் வெளிப்பட்டே தீரும்.

**ம**காகவி காளிதாசரின் வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சி. அவரை ஆதரித்த போஜ மகாராஜாவின் தர்பாருக்குப் பன்மொழி அறிஞர் ஒருவர் விஜயம் செய்தார். அவர் ஒரு போட்டி வைத்தார். அவரது தாய்மொழி யாது என்று சரியாகக் கண்டுபிடித்துச் சொன்னால், அவர் லட்சம் ரூபாய் பரிசு தருவார். தவறாகச் சொன்னால் தோற்றவர் அந்த அறிஞருக்கு லட்சம் ரூபாய் தண்டனையாகத் தர வேண்டும்.

அந்த அரசவையில் இருந்த அறிஞர்கள் சவாலை ஏற்றுக்கொண்டு, அவருடன் பல மொழிகளில் பேசிப்பார்த்தார்கள். அவர் எந்த மொழியையும் தாய்மொழி போலவே சகஜமாகப் பேசியதால் போட்டியாளர்கள் தோற்றார்கள்.

போஜ மகாராஜா காளிதாசரை இந்தப் போட்டியில் கலந்து கொண்டு நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்றுமாறு கேட்டுக் கொண்டார்.

காளிதாசர் சில நாள் அவகாசம் கேட்டார். காரணம் சொன்னார்: "அந்த அறிஞர் பல மொழிகளை ஆழமாகக்

கற்றிருக்கிறார். எம்மொழியையும் தாய்மொழி போலவே பேசுகிறார். ஒருவர் தன் தாய்மொழியில் என்னென்ன தவறுகள் செய்வார்களோ அவற்றையே இவரும் செய்கிறார். ஒவ்வொருவர் தாய்மொழியையும் அவர்கள் பேசும் பாணியிலேயே இவரும் பேசுகிறார்.

அந்த அறிஞர் அரண்மனையில் மேல்மாடியில் தங்கி யிருந்தார். தினமும் போட்டியில் எவரையாவது வென்று லட்சரூபாய் மூட்டையுடன் மாடிக்கு வருவார். அப்படி ஒருநாள் அவர் துள்ளியபடி படிகளில் ஏறி வருகையில் மாடியில் ஓரிடத்தில் ஒளிந்திருந்த காளிதாசர் வேகமாக இறங்கி, பலமாக அறிஞர் மீது மோதினார். எதிர்பாராத இந்த மோதலில் அதிர்ச்சியடைந்த அறிஞர் தன்னைச் சமாளித்துக்கொள்ள முடியாமல் படிகளில் உருண்டு தரையில் விழுந்தார். அவர் காளிதாசரை ஏராளமான வசவுச் சொற்களால், கெட்ட வார்த்தைகளால் அருச்சித்தார்.

காளிதாசர் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, போஜ மகாராஜா விடம் சென்று, அறிஞரின் தாய்மொழியைக் கண்டுபிடித்து விட்டதாகக் கூறினார். அறிஞர் அரசவைக்கு அழைக்கப்பட்டார். காளிதாசர் அவரது தாய்மொழி இன்னது என்று கூறியதும், அவர் அதை ஒப்புக்கொண்டு, லட்சம் ரூபாய் சன்மானம் கொடுத்து விட்டார்.

நமது கற்பனையில் ஒரு காகம் நன்கு சங்கீதம் பயின்றாலும் தன் உண்மையான குரலை ஒரு சூழ்நிலையில் வெளிப்படுத்தியே தீரும். ஒருவன் கோபத்தில் திட்டும்போது தனது தாய்மொழியில் தான் திட்டுவான். மற்ற மொழிகளில் ஒருவன் மகாபண்டிதனா யினும் அவற்றை உபயோகித்து அவனுக்குத் திட்டவராது.

---

* கிருஷ்ணதேவராயர் சபையிலும் இப்படி ஒரு போட்டி வருகிறது. தெனாலிராமன் இரவு வேளையில் முகமூடித் திருடனாக அறிஞரின் அறைக்குச் சென்று தாக்குகிறார். அப்போது அறிஞர் போடும் கூச்சலில் அவரது தாய்மொழி வெளிப்பட்டு விடுகிறது. அபாயத்தில் எவரும் தாய்மொழியிலேயே கத்துவார்கள்.

என் நண்பர் ஒருவர் இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர். அவர் மனைவி அமெரிக்கப் பெண்மணி. நண்பர் தனது வாழ்க்கையில் இரண்டு பிரச்சினைகளைத் தெரிவித்தார். தன் மனைவியிடம் காதலாகப் பேசும்போது கூறுகின்ற சில ஆங்கிலச் சொற்கள் செயற்கையாக ஒலிக்கின்றன என்றார். இந்தியில் அவருக்கு இயற்கையாகவே வரக்கூடிய விதம் விதமான சொற்களை உபயோகிக்க முடியவில்லையே என அவர் ஏங்கினார்.

இரண்டாவது பிரச்சினை: மனைவி மீது கோபம் ஏற்பட்டால், திட்டுவதற்கு அவருக்கு ஆங்கில வார்த்தைகள் தெரியாதாம். இந்தியில் ஏராளமான திட்டுகள் அவருக்குத் தெரியுமாம். ஆனால் என்ன செய்வது? அந்தத் திட்டுகளை அவருடைய மனைவியால் புரிந்துகொள்ள முடியாதே!

காதலிலும் - காமத்திலும், கோபத்திலும்-அபாயத்திலும் மனிதர்கள் தமக்கு சுபாவமான தாய்மொழியையே பயன்படுத்து வார்கள். இது இயற்கையின் நியதி. இதில் விதிவிலக்கு கிடையாது. பயிற்சியின் மூலம் நாம் நமது சுபாவத்தின் மீது எதை-எதையோ ஏற்றிவைக்கலாம். ஆனால் நாம் நமது சுபாவத்தில் லயித்திருப்பதுதான் சுகம் தரும் என்று அஷ்டாவக்ரர் கூறுகிறார். ஆகவே சுகத்திற்காக நாம் தனிப்பயிற்சி செய்ய முடியாது. அப்படி ஏதேனும் பயிற்சி மேற்கொண்டால் துன்பமே விளையும். இருப்பதை மறைத்து இல்லாததை உருவாக்குவதால், அப்படி உருவாகியது ஒரு கட்டத்தில் காலைவாரி விடுவதால், அஷ்டாவக்ரருக்குப் பயிற்சி குறித்து உயர்ந்த அபிப்பிராயம் இல்லை. ஆன்மிகப் பயிற்சியும் உடற்பயிற்சிபோல் மேன்மேலும் தூண்டிக்கொண்டே செல்லும். ஒரு கட்டத்தில் ஆன்மிகம் மறந்துபோய் பயிற்சியைத் தொடருவதே மிஞ்சி நிற்கும். உனது உள்ளும் புறமும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்களாக இல்லாமல், இரு வேறு உலகமாகப் பிரிந்துவிடும்.

மனவியல் வல்லுநர்கள் இந்தப் பிளவு நிலையை schizophrenia (முரண் மூளைநோய்) என்கின்றனர். ஒரே மனிதன் உள்ளும் புறமும் பிரிந்து இரண்டாகிறான். அந்த இடைவெளியை

நிரப்ப முடியாமல் போய்விடுகிறது. காலப்போக்கில் நீ உன் நிஜ முகத்தை மறந்து விடுவாய் நீ அணிந்திருக்கும். முகமூடியையே அசல் முகம் என நினைப்பாய். யானைக்கு சாப்பிடுவதற்கு ஒருவகைப் பல்லும், காண்பிப்பதற்கு துதிக்கையிலுள்ள வேறு பல்லும் (தந்தம்=பல். ஆங்கிலத்திலும் dental) என அமைந்துள்ளன.

நீ எத்தனை விதமான முகமூடி அணிந்திருக்கிறாய் என்று சிந்தித்தது உண்டா? மனைவி, மகன்-மகள், வேலைக்காரர்கள், உன் முதலாளி என்று நீ தொடர்புகொள்ளும் ஒவ்வொருக்கும் ஏற்றபடி முகமூடிகளை மாற்றிக்கொள்கிறாய். நீயே உணர முடியாதபடி சூழ்நிலைக்கேற்ப வெகுவேகமாக முகமூடியை மாற்றிவிடுகிறாய். உன் முயற்சியின்றியே (automatic) இது சம்பவிக்கிறது.

கணவன்-மனைவி தகராறு. சூடான வாத விவாதம். அந்த நேரம் அவர்கள் நிஜமான முகத்துடன் இருக்கிறார்கள். வாசலில் கதவைத் தட்டும் சத்தம். கணவன்-மனைவி அவசரமாக முகமூடி தரிக்கிறார்கள். மலர்ந்த முகத்துடன் கதவைத் திறந்து, ஒற்றுமையுடன் இனிமையாக வரவேற்கிறார்கள். இலட்சிய இணைஞர் என வந்தவர் வியக்கிறார். நமக்கு இப்படி ஓர் அன்பான மனைவி வாய்க்கவில்லையே எனப் பொறாமையும் கொள்கிறார். கதவு திறக்கப்படுவதற்கு முன் நடைபெற்றுக் கொண்டிருந்த உள்நாட்டுக் கலகம் பற்றி அவருக்குத் தெரியாது.

மற்றவர்கள் சிரித்தபடி இருப்பதைப் பார்த்து நீ உலகில் உன்னைவிடத் துன்பப்படுபவன் யாரும் இருக்க முடியாது என்று நினைக்கிறாய். உனக்கு உன் உண்மை நிலை தெரியும். மற்றவர்களுக்கு உன் முகமூடிதான் தெரியும். நீ மற்றவர்களை ஏமாற்ற முடியும். உன்னை நீ எப்படி ஏமாற்றிக்கொள்ள முடியும்? நீ நடித்தாலும் உன் மனசாட்சி உன் வேஷத்தைக் கலைத்துவிடும்.

நீ எத்தகைய பொக்கிஷத்துடன் உலகிற்கு வந்தாயோ அதை இன்னும் திறந்து பார்த்தாயில்லை. மேலே-மேலே நீ அதற்கு வர்ணம் பூசிக்கொண்டே சென்றாய். பூட்டின் துளைகூட அடைத்துவிடும் அளவிற்கு நீ வர்ணம் பூசிவிட்டாய். நீ எதைத் தேடுகிறாயோ அது உனக்குள்ளே பூட்டப்பட்டிருக்கிறது.

நீ உனக்கு ஏற்கெனவே எது கிடைத்துள்ளதோ அதை அறியாமல் உலகில் தேடியபடியே வந்திருக்கிறாய். நீ எவருடன் அறிமுகம் செய்துகொள்ள வந்திருக்கிறாயோ அந்த ஆள் நீதான். நீ வேறொருவன்போல் மாற முயல வேண்டாம். நீ உன்னுடன்தான் நட்பை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும். உன்னை நீயே உன் கண்களால் பார்க்க, ஊடுருவிப் பார்க்க வேண்டும். உன் கையை நீ பற்றிக்கொள்ள வேண்டும். உன்னை நீ தழுவிக்கொள்ள வேண்டும்.

அப்போது நீ என்றுமே அசுத்தம் அடைந்தவனில்லை என்பதை அறிவாய். நீ சுத்தமானவன். நீ புத்தன் (ஞானி). அன்புமயமானவன், முழுமை பெற்றவன். உனக்குள் கடவுள் வீற்றிருப்பதால் துயரங்கள் நீங்கியவன்.

'அறியாமையில் உழல்பவன் பயிற்சிகள் என்னும் கர்மங்களை மேற்கொண்டாலும் மோட்சம் பெறுவதில்லை. செயல்களற்ற ஞானி தனது ஞானத்தின் மூலமே முக்தி பெற்று, கடவுளில் நிலைக்கிறான்.' **(சுலோகம் 212)**

**மோ**ட்சம் என்பது ஓர் இலக்கன்று; போய்ச்சேரும் இடமன்று. அது உனக்கு முன்புறத்தில் இல்லை; பின்புறம் உள்ளது. கையை விரித்து விசிறி மோட்சத்தைத் தேட வேண்டியதில்லை. பார்வையை உள்ளுக்குள் திருப்பி அதைத் தேட வேண்டும். மோட்சம் உனக்குள் ஆழத்தில் கிடக்கும் வைரம் போன்றது. நீ உள்ளக் கடலில் ஆழ்ந்து மூழ்கினால் அதைப் பெறலாம்.

நீ எத்துணை பயிற்சி வேண்டுமானாலும் மேற்கொள். ஜெபம் செய், தவம் செய், உண்ணாமல் உபவாசம் இரு; குடும்பத்தை தியாகம் செய்; சமூக வாழ்க்கையைத் துற; இமயமலைக் குகையில் தஞ்சமடை. இதனாலெல்லாம் மோட்சம் கிடைத்துவிடாது. ஏனெனில் உன் ஞானக் கண்கள் திறக்கவில்லை. ஆகவே மோட்சம் உனது சுபாவம்தான், உனக்கு இயற்கைதான் என்று உனக்குத் தெரியவில்லை. இங்கேயே, உன்னிடமே ஒன்று கிடைக்குமானால் அதைத் தேடி நீ ஏன் இமயமலைக்குப் போக வேண்டும்?

பணம் உன்னைத் தடுத்து நிறுத்தவில்லை. உலோகங்களாகிய தங்கமும் வெள்ளியும் உன்னைத் தடுக்க முடியுமா? வீடு-நிலம்-கடை உன்னைத் தடுக்கவில்லை. மனைவி, குழந்தைகள் தடுக்க முடியவில்லை. வேறு வெளியாள் உன்னை எப்படித் தடுக்க முடியும்? நீ உன் அறியாமை காரணமாகத்தான் முன்னேறாமல் தேங்கிவிட்டாய். நீ எங்கும் போக வேண்டாம். எதையும் கைவிட வேண்டாம். உன் அறியாமையை மட்டும் உடைத்தெறி.

அவ்வாறு நீ அறியாமையை உடைதெறிந்தால் உனக்குள் வீற்றிருக்கும் கடவுளை தரிசிப்பாய். உன் மனைவி, குழந்தைகளிடம் கடவுளைக் காண்பாய். நீ எவ்வாறோ அவ்வாறே உலகமும் மாறிவிட்டதைக் காண்பாய். இதுவே மோட்சநிலை. தன்னை, தனது நிஜ சொரூபத்தை அறிதலே மோட்சம்.

செயல் மேற்கொள்வதால் வெளியே உள்ளது கிடைக்கிறது. செயலின்மையை மேற்கொள்வதால் உனக்குள் இருப்பது கிடைக்கும். செயலின்மையும் சோம்பேறித்தனமும் ஒன்றல்ல என்பதை நினைவில்கொள். செயலின்மை என்பது செயலின் சாந்தநிலையைக் குறிக்கிறது. பரபரப்பின்மையைக் குறிக்கிறது. அலை எழும்பாத ஏரி போன்றது இந்த நிலை. செயல் நிலையில் ஈடுபடுத்தப்படும் சக்தி செயலின்மை நிலையிலும் உண்டு. ஆனால் இதில் நிரம்பிய, ஆனால் தளும்பாத, ஏரிபோல் சக்தி பரவி நிறைந்திருக்கும். அந்த நிரம்பிய சக்தி உன்னைக் கடவுளுடன் இணைக்க காரணமாக அமையும்.

மோட்சத்தைத் தேடுவதால் ஒருவன் முக்தனாகி விடுவதில்லை. முக்தனுக்கு தான் முக்தனாகிவிட்டது தானாகவே தெரிந்துவிடும். இதை உபநிடதம் அஹம் ப்ரஹ்மாஸ்மி (நான் கடவுள்) என்ற மந்திரத்தால் அறிவிக்கிறது. இது முயன்று அடையும் விஷயமில்லை. தானாகவே உணரும் விஷயம். 'நான் கடவுள்' என்று சொல்லுகையில், நீ இன்றிலிருந்து கடவுள் ஆகிவிட்டதாக அர்த்தமில்லை. நீ ஏற்கெனவே எதுவாக இருந்துவந்துள்ளாயோ அதனுடன் இன்று நீ அறிமுகம் செய்துகொண்டாய் என்று அர்த்தம்.

ஒரு விதை நடப்படுகிறது. மரமாக அது வளர்கிறது. அதில் மாம்பழங்கள் உண்டாகின்றன. ஆகவே மாமரத்தின் தன்மை அந்த விதையில் மறைந்திருந்தது என்று அர்த்தம். எது வெளியில் வந்ததோ அது ஏற்கெனவே உள்ளே இருந்தது. எந்த விதையை வேண்டுமானாலும் விதைத்துவிட்டு அது மாமரமாக வளர வேண்டுமென நீ எதிர்பார்க்க முடியாது. மாமரத்திற்கான விதையை நட்டால்தான் பிறகு மாம்பழம் கிடைக்கும்.

உபநிடத முனிவருக்கு ஒரு தியான நிலையில் தான் கடவுள் என்று தெரியவந்தது. சித்தார்த்தர் ஒருநாள் தான் புத்தர் எனக் கண்டுகொண்டார். அவர்கள் என்றுமே கடவுட்தன்மை கொண்டிருந்தார்கள். ஆனால் அதை ஒரு கட்டம்வரை வளர்ந்த பிறகுதான் அறிந்தார்கள். இருட்டில் உள்ள வைரம் வெளிச்சம் வந்த பிறகு கண்ணுக்குப் புலப்படுகிறது. ஆனால் அது ஏற்கெனவே அங்குதான் இருந்திருக்கிறது.

பக்குவமடையாதவன் கடவுளாக தான் ஆக வேண்டும் என விரும்புகிறான். ஆனால் அப்படி அவனால் ஆக முடிவதில்லை. ஏனெனில் தான் ஏற்கெனவே கடவுள்தான் என்பதை அவன் உணரவில்லை. எதற்காவது ஆசைப்பட்டால் அது உன்னிடம் இல்லை என்று பொருள். ஒருவேளை அது உன்னிடமிருந்தால், அந்த விஷயம் உனக்குத் தெரிந்திருக்கவில்லை என்றும் பொருள்.

ஓர் ஆண் உன்னிடம் வந்து, "நான் ஆணாக வேண்டும். வழி சொல்லுங்கள்," என்றால், நீ என்ன சொல்வாய்? "ஏன்பா உனக்கு பயித்தியமா? நீ ஏற்கெனவே ஆம்பிளைதானே. இனி ஆவதற்கு என்ன இருக்கிறது?" என்று கேட்டாய். அவன் மேலும் பிடிவாதம் பிடித்தால், நீ முகம் பார்க்கும் கண்ணாடியை அவனிடம் கொடுத்து, "நீயே உன்னை நன்றாகப் பார்த்துக்கொள்," என்பாய்.

சத்குரு என்பவர் இதைத்தான் செய்கிறார். உன் ஆத்மாவைக் காண (உணர) உன் முன் ஆன்மிகக் கண்ணாடி வைக்கிறார்.

பழங்கதை ஒன்று. கர்ப்பமான சிங்கம் ஒன்று ஒரு பாறையிலிருந்து இன்னொன்றுக்குத் தாவுகையில், குட்டி பிறந்து, கீழே பள்ளத்தாக்கில் ஓர் ஆட்டுமந்தையில் விழுந்தது. ஆகவே அது மற்ற ஆடுகளைப் போலவே வளர்ந்தது. ஆடுகளைப் போலவே கத்தியது. ஆடுகளைப்போல் எடுத்ததற்கெல்லாம் நடுங்கியது. சிங்கம் எங்கும் தனியாகச் செல்லும். ஆனால் இந்த சிங்கக்குட்டி பயம் காரணமாக ஆட்டுமந்தையைவிட்டு வெறியேறாது.

ஒருநாள் ஒரு சிங்கம் ஆட்டுமந்தையைத் தாக்கியது. சிதறி ஓடும் ஆடுகளுடன் வளர்ந்துவிட்ட ஒரு சிங்கமும் ஆடுபோல் கத்தியபடி ஓடுவதைக் கண்டு அது ஆச்சரியமடைந்தது. அது ஆடுகளை மறந்துவிட்டு, சிங்கத்தைத் துரத்திப் பிடித்தது. இளைய சிங்கம் தன்னை விட்டுவிடும்படியும், மற்ற ஆடுகளுடன் போகவிடுமாறும் கெஞ்சியது, அழுதது.

மூத்த சிங்கம் அதை ஒரு நதிக்கரைக்கு இழுத்துச் சென்றது. நீரில் தன் முகத்தையும் அதன் முகத்தையும் காண்பித்து, "பார்த்துக் கொள். நீயும் என்னைப்போல் சிங்கம்தான், ஆடில்லை," என்று நிரூபித்தது. அவ்வளவுதான், இளைய சிங்கத்திடமிருந்து தன்னை அறியாமலேயே கர்ஜனை கிளம்பியது. இத்தனை ஆண்டுகளாக அடக்கப்பட்டிருந்ததால் அந்த கர்ஜனை சுற்றுப்புறமெல்லாம் நடுங்குமளவு பயங்கரமாக ஒலித்தது.

சத்குருவும் உன்னை ஆட்டுமந்தை போன்ற அற்ப மனிதர்களின் கூட்டத்திலிருந்து பிரித்தெடுக்கிறார். நீ அவருடன் செல்ல மறுப்பாய். "என்னை விட்டுவிடுங்கள். நான் இந்து. நான் முஸ்லிம், நான் கிறிஸ்தவர். இன்று ஞாயிறு. சர்ச்சுக்குப் போக வேண்டும்," என்றெல்லாம் கெஞ்சுவாய்.

ஆனால் நீ சத்குருவிடம் மாட்டிக்கொண்டால் அவர் உன்னை உன் நிஜ சொரூபத்தைக் காணுமாறு கட்டாயமாகச் செய்துவிடுவார். அதைத் தொடர்ந்து நீ புத்தரிடம், மகாவீரரிடம், கிருஷ்ணரிடம், அஷ்டாவக்ரரிடம், இயேசுநாதரிடம், ஜரதுஸ்திரரிடம் என்ன உள்ளதோ அதுவே, அந்த கடவுள்

தன்மையே, உன்னிடமும் உள்ளது என்று தெரியவந்ததும் உன்னிடமிருந்தும் கர்ஜனை வெளிப்படும். அது ‘நான் கடவுள்’ (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்னும் பேரொலியாகக் கேட்கும்.

நீ ஆடு அல்லன். கூட்டத்தில் (மந்தையில்) கலந்திருப்பதால் நீ ஆடுபோல் உணர்ந்தாய். விழிப்புப் பெறு. கூட்டத்திலிருந்து விலகு. கூட்டம் உனக்குப் பயிற்சி கொடுத்துத் தனக்குள் இழுத்துக் கொண்டுவிட்டது. எனினும் குற்றம் ஆட்டுமந்தையினுடையது அன்று. ஆடுகள் வேண்டுமென்றே சிங்கக்குட்டியைத் தங்களைப்போல் ஆக்க முயலவில்லை. தமக்குத் தெரிந்ததை அவை சொல்லிக்கொடுத்தன. அவற்றைப் பார்த்துச் சிங்கக்குட்டி தானாகவும் ஆட்டு இனத்தின் பழக்கங்களைக் கற்றுக்கொண்டது.

உன் பெற்றோர் தமக்குத் தெரிந்ததை உனக்குப் பயிற்றுவித்தனர். அவர்கள் தம்முடைய முன்னோர்களிடமிருந்து குறிப்பிட்ட விதமாக வாழ்வதைக் கற்றனர். அவர்கள் உன்னையும் ‘தினமும் அதிகாலையில் எழுந்திரு. ராம நாமம் சொல்லு. சூரிய நமஸ்காரம் செய். குளித்து பூஜை செய். நாள் முழுதும் நேரம் கிடைக்கும்போதெல்லாம் ராமா-ராமா என்று சொல்லு. கோயிலுக்குப் போ. திருவிழாக்களுக்குப் போ’ என்றெல்லாம் அவர்கள் செய்ததைப் போலவே செய்யச் சொன்னார்கள். தனக்கு என்ன தெரியுமோ அதைத்தான் கூட்டம் கற்றுக்கொடுக்க முடியும்.

நீ முக்தனாக வேண்டும் என்று ஆசைப்பட்டால், நீ ஏற்கெனவே முக்தனில்லை என்று நீ நினைப்பதாகப் பொருள்படும். கதையில் வரும் இளஞ்சிங்கம் மூத்த சிங்கத்திடம், “நான் உன்னைப்போல் சிங்கமாக ஆவதற்கு வழி சொல்லிக்கொடு.” என்று வேண்டுவதாக வைத்துக்கொள்வோம். அதற்கு மூத்த சிங்கம் வேடிக்கையாக, “நீ தலைகீழாக நின்று பயிற்சி எடு. ஆசனங்கள் போடு. முடிந்தபோதெல்லாம் ‘நான் சிங்கம்’ என்று ஜெபம்செய்,” என்றெல்லாம் கூறுவதாக வைத்துக் கொள்வோம். இளம்சிங்கமும் அவற்றைக் கடைப்பிடித்தால் அவை வீண் முயற்சியாகிவிடும். ஏனெனில் அது ஏற்கெனவே சிங்கம்தானே. விழிப்புதான் தேவையே தவிர, பயிற்சி தேவையில்லை. “நீ சிங்கம்,” என்றதும் இளம்சிங்கம் தனது

நிஜத்தை உணர்ந்து கர்ஜித்ததைப்போல், சத்குரு 'நீ கடவுள்.' என்றதும் நீ உன்னை அறிந்தால், நீ பாக்கியசாலி.

'ஏதோ ஒன்றாக ஆக வேண்டும் என்று விரும்புவதுதான் அவ்வாறு ஆகவிடாமல் தடுக்கிறது. நீ ஏற்கெனவே எவ்வாறு உள்ளாயோ அதை எப்படி ஆக முடியும்? பக்குவப்பட்டவர்கள் விரும்பி முயலாவிடிலும், கடவுளை வழிபடுபவராக இருப்பர்.' **(சுலோகம் 213)**

நீ விழிப்புப் பெற்றால் மட்டும் போதும். ஏதோ ஒன்றாக ஆக விரும்புவது (becoming) ஆன்மிகவாதியின் குணமன்று. ஏற்கெனவே இருப்பதை (being) அறிமுகப்படுத்திக் கொள்வதே ஆன்மிகம். ஆக வேண்டுமென்று ஓட்டப் பந்தயம் மேற் கொள்ளுதல் உலக வாழ்க்கை. ஏற்கனவே உள்ளதை உணர்தல் ஆன்மிக வாழ்க்கை.

பக்குப்பட்டவன் என்று இந்த சுலோகத்தில் கூறப்படுபவன் தன்னை உணர்ந்தவன் ஆவான். தான் ஆடு இல்லை, சிங்கம் என்று கர்ஜித்தவன் அவன். அவன் தனது உண்மையான முகத்தை அறிந்தவனாக இருப்பான்.

மூத்த சிங்கத்துடன் ஆற்றங்கரைக்குச் சென்றபோது இளம் சிங்கத்தின் மனத்தில் தான் சிங்கமாக ஆக வேண்டும் என்ற கற்பனை இருந்ததில்லை. அது மூத்த சிங்கத்தின் பிடியிலிருந்து தப்பிக்கத்தான் முயன்றது. "என்னை விட்டுவிடு. என்னை ஏன் இழுக்கிறாய்? நான் ஆடு. நான் ஆடாகவே இருக்க விரும்புகிறேன். எனக்கு வேறுவிதமான விருப்பம் கிடையாது. என்னைச் சுற்றியுள்ள உலகம் எனக்கு வசதியாகத்தான் இருக்கிறது. நான் மகிழ்ச்சியாக உள்ளேன். என்னை என் குடும்பத்திலேயே இருக்கவிடு." என்றுதான் கதறியது.

ஆனால் அது தண்ணீரில் தன் முகத்தைப் பார்த்தது. பிறகு நடந்தது அதன் வசத்தில் இல்லை. நீரில் தெரிந்த சத்தியத் திலிருந்து தப்ப முடியாத நிலை உருவானது. தன்னை அறியாமல் கர்ஜனை பிறந்தது 'நான் கடவுள்' என்று.

ஒருவன் முயலாவிடிலும், சிறிது விழிப்பு உண்டானாலும், ஒரு ஞான கிரணம் அவனை ஸ்பரிசித்தாலும், அவன் கடவுள் நினைவில் ஆழ்ந்துபோவான். கடவுளை பஜன் (துதி) செய்பவன் ஆகிவிடுவான்.

'பஜன்' என்றால் தடையின்றிப் பெருக்கெடுத்தல் என்று பொருள். துண்டாகாமல், பிளவுபடாமல், அகண்டமாக பிரவாகித்தல் என்று பொருள்.

கோயில்களில், மடங்களில் அகண்ட நாம பஜனை, அகண்ட கீர்த்தனை என்ற நிகழ்ச்சிகள் நடைபெறுவதை அறிந்திருப்பாய். ஒலிபெருக்கிவைத்து நாள் முழுதும் சப்தம் எழுப்பி, அக்கம் பக்கத்தில் வசிக்கும் மக்களுக்குத் தலைவேதனையாக இந் நிகழ்ச்சிகள் தொல்லை தருகின்றன. நிகழ்ச்சியில் பங்கேற்பவர்கள் தாமும் தூங்குவதில்லை, சுற்றுப்புறவாசிகளையும் தூங்க விடுவதில்லை.

அகண்ட பஜனை என்னும் பெயரே தவறு. நீ எது செய்தாலும் அதில் இடைவெளி இருக்கும். எந்த வேலையும் இடைவெளியின்றி நடைபெறாது. நடுவில் ஆங்காங்கே நிறுத்தங்கள் இருக்கத்தான் செய்யும்.

இதோ நான் பேசுகிறேன். சொற்களின் இடையே காலி இடம் விட்டுதான் பேசுகிறேன். ஆகவே நான் பேசுவது அகண்ட பேச்சில்லை. அகண்ட ராம நாம பஜனை என்னும் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. ஆனால் இரண்டே முறை ராமா என்று சொன்னாலும் நடுவில் துண்டு விழுவதை (கண்டம்) தவிர்க்க முடியாது. இடைவெளியே கொடுக்காமல் வேகமாகச் சொன்னாலும் 6-7 முறைதான் சொல்ல முடியும். ரயில் பெட்டிகள் ஒன்றின்மேல் ஒன்றேறி விபத்துக்குள்ளாவதுபோல், ஒரு 'ராமா'வின் மீது இன்னொரு 'ராமா'வை ஏற்றிவைத்தால் உன் பஜன் சேதமடைந்துவிடும்.

ஆனால் வெளியே 'ராம்-ராம்' என்று முணுமுணுக்காமல், 'நான் கடவுள் என்பது உன் நினைவிற்கு வந்துவிட்டால், பிறகு இரவிலும் பகலிலும், உறக்கத்திலும் விழிப்பிலும் அதே நினைவு நீடிக்கும். அப்போது அது அகண்ட வழிபாடு ஆகிவிடும்.

அந்த இளம் சிங்கத்திற்கு தான் யார் என்று தெரியவந்ததும், 'நான் சிங்கம்' என்று 24 மணி நேரமும் சொல்லியபடியே இருக்க வேண்டிய தேவை அதற்கெழவில்லை. ஒரு பார்வையில் விஷயம் முடிந்தது. ஒரு கர்ஜனையில் அறிவிப்பு நிகழ்ந்தது. இனி அது சிங்கம் போலவே நடந்துகொள்ளும். நடப்பது, உட்காருவது, தூங்குவது, எழுந்திருப்பது, பார்ப்பது எல்லாம் சிங்கத்திற்கு இயற்கை முறையிலேயே அது செய்யும். சிறிது நேரம் மட்டும் சிங்கமாக இல்லாமல் அது இனி என்றும் சிங்கமாகவே இருக்கும். அதுபோல, 24 மணி நேரம் மட்டும் அகண்ட பஜன் என்று குறுகிய கால கடவுள் சிந்தனைக்குப் பதில், முழு வாழ்க்கையும் கடவுள் மயமாகிவிட வேண்டும்.

ஆன்மிகத்தில் பக்குவப்பட்டவனைச் சொற்களின் அடிப்படையில் மதிப்பிட முடியாது. அவன் வாழும் முறையைப் பார்க்க வேண்டும். அவனது வாழ்க்கையில் மனத்தில் அமைதி நிலவும். ஆனந்தம் பிரதிபலிக்கும். கடவுள் எழுந்தருளியிருப்பது புலப்படும். அவன் பேசுவது கடவுளின் பேச்சு எனலாம். அவன் பேசாவிடில் அவனது மௌனத்திலும் கடவுள் இடம் பெறுகிறார். அவன் தூங்கினாலும் விழித்தாலும் கடவுள் அதில் பிரதிபலிப்பாகிறார்.

**பு**த்தர் தூங்கும்போதும் புத்தராகவே இருந்தார். அவரது தூக்கத்திலும் புத்தத் தன்மை தெரிந்தது. முதன்மைச் சீடரான ஆனந்தர் பல்லாண்டுகளாக புத்தருக்குத் தொண்டாற்றி வந்தார். புத்தரின் பாதுகாப்பிற்காகவும், அவருக்கு எதுவும் தேவையானால் உதவுவதற்கும் ஆனந்தர் புத்தர் தூங்கும் அறையிலேயே படுத்திருப்பார். நடுவில் அவ்வப்பொழுது விழித்து புத்தர் தொந்தரவின்றி உறங்குகிறாரா என்று கவனிப்பார். அந்த சந்தர்ப்பங்களில் புத்தரின் முகத்தில் வர்ணிக்க முடியாத சாந்தி நிலவுவதைக் கண்டு பரவசமடைவார்.

நீ இரவில் தூங்குகையில் அதைப் படம் பிடித்தால் உன் முகத்தில் சாந்தியா துலங்கும்? அப்போது வாயில் வந்ததை உளறுவாய். முகத்தைப் பல கோணலாக்கிக் கொள்வாய். படுக்கையில் புரளுவாய். கை-கால் உதறுவாய். பகல் பொழுதில்

நீ சந்தித்த பிரச்சினைகள் கனவில் மீண்டும் வந்துவிடும். கனவிலும் கடையில் உட்காருவாய். கல்லாப் பெட்டியிலுள்ள பணத்தை எண்ணுவாய். கணக்கு உதைக்கும். மீண்டும் எண்ணுவாய். இடையிடையே வியாபாரமும் செய்வாய்.

முல்லா நஸ்ருத்தீன் துணிக்கடை வைத்திருந்தார். ஒருநாள் இரவு தூங்குகையில் அவர் போர்வையைக் கிழித்துவிட்டார். அருகில் யடுத்திருந்த மனைவி, "இதென்ன, போர்வையைக் கிழிக்கிறீர்களே?' என்று திட்டினாள். அதற்கு நஸ்ருத்தீன், "நீ குறுக்கே பேசாதே. வீட்டில் கொடுக்கும் தொல்லை போதாதென்று கடைக்கும் வந்து அதிகாரம் செய்ய ஆரம்பித்துவிட்டாயா?" என்று கத்தினார். உடனே அவரது கனவு கலைந்துவிட்டது. அவர் கனவில் ஒரு வாடிக்கையாளருக்குத் துணி அளந்து கிழித்துக் கொண்டிருந்தார்.

பகலில் கடை நடந்தால், இரவில் கனவிலும் கடை நடக்கும். பகலில் நீ ஆடாக இருந்தால் இரவிலும் நீ ஆடாக இருப்பாய். பகலில் சிங்கமாக இருந்தால் இரவிலும் உன் சிங்க இயல்பு தொடரும். நீ அடிப்படையில் எப்படி உள்ளாயோ அத்தன்மையே உன் விழிப்பிலும் தூக்கத்திலும் வெளிப்படும்.

புத்தர் உறங்கிய விதம்கூட ஆனந்தருக்கு மகிழ்ச்சி தந்தது. அவர் இரவு முழுதும் ஒரே நிலையிலேயே உறங்கினார். புரள்வதில்லை. கை அசைப்பதில்லை. கால்கள் ஒரே நிலையிலேயே இருக்கும். பகலெல்லாம் புத்தர் எப்படி உடலை அசைக்காமல், ஓய்வாக வைத்திருந்தாரோ இரவிலும் அவ்வாறே அவரது உடல் அமைதியாகக் காணப்பட்டது.

ஒருநாள் ஆனந்தர் இது பற்றிக் கேட்டார். "சத்குருவே, இரவில் நீங்கள் தூங்குவது உங்களது தனிப்பட்ட விஷயம். ஆனால் நான் அவ்வப்பொழுது விழித்து நீங்கள் உறங்குவதைக் கவனித்தேன். இது தவறுதான். என்னை மன்னித்து என் சந்தேகத்தை நிவர்த்தி செய்யுங்கள். அதாவது, நீங்கள் இரவில் தூங்கும்போதும் புத்தத் தன்மையை நீடித்து உணருகிறீர்களா?"

புத்தர் சொன்னார்: "கடல் நீரை எந்த இடத்தில் பருகினாலும் உப்புக் கரிக்கும். புத்தராகிய நானும் எந்நிலையிலும் புத்த

இயல்புடனேயே நீடிக்கிறேன். என் சுயநினைவு எங்கே ஓடிப்போய்விடும்? என் உள்ளத்தின் விளக்கு ஒரே மாதிரியே ஒளிவீசியபடி இருக்கும்."

புத்தர் கனவிலும் வன்முறையில் ஈடுபடமாட்டார். நீ பகலில் விழித்திருக்கையிலும், இரவில் கனவிலும் வன்முறையை மேற்கொள்ளத் தயங்கமாட்டாய். அதுமட்டுமல்ல, பகலில் நீ செய்யமுடியாத இழிசெயல்களையும் இரவில் கனவில் செய்வாய். பகலில் கோபத்தில் நீ ஒருவனைக் கழுத்தை வெட்டிக் கொல்ல விரும்பினாய். அது சட்டவிரோதமானது. கனவில் சட்டத்தின் ஆட்சி கிடையாது. கனவில் நீ பலரையும் கொல்லலாம்.

புத்தருக்கு அபூர்வமாகத்தான் கனவு வந்திருக்கும். ஆசைமயமான வாழ்க்கை நடத்துபவர்களுக்குத்தான் கனவு வரும். எதிர்காலத்தில் வாழ்பவர்களுக்குத்தான் (becoming) கனவு வரும். எதிர்காலத்தில் எப்படியெல்லாம் ஆகவேண்டுமென ஏங்குவோருக்குக் கனவு வரும். ஏனெனில் பகலில் நிகழ்காலத்தில் அப்படி ஆக முடிவதில்லை. நிஜத்தில் ஒருவர்தான் பிரதமர் பதவியை வகிக்க முடியும். கனவில் எத்தனை பேர் வேண்டுமானாலும் பிரதமராகலாம். எல்லாப் பாதைகளும் ரோம் நகரத்திற்கு இட்டுச் சென்றன என்றொரு 14ஆம் நூற்றாண்டு பழமொழி.* தற்கால இந்தியாவில் எல்லாப் பாதைகளும் அதிகார மையமாகிய தில்லியை நோக்கியே செல்கின்றன. பகலில், நிஜத்தில், அங்கு சென்று அதிகாரத்தைக் கைப்பற்ற இயலாத வர்கள் இரவில், கனவில், தில்லிக்குச் சென்று விடுகின்றனர்.

ஞானிக்கோ எதுவுமாக ஆகவேண்டியதில்லை. எது உண்மையாக உள்ளதோ அதை அவர் அறிந்து விட்டார். அதிலேயே மகிழ்ச்சி அனுபவிக்கிறார். வேறு கோரிக்கை எதுவும் அவர் முன்வைக்கவில்லை. அவர் எந்த நிலையில் உள்ளாரோ அதில் முழுதிருப்தியுடன் விளங்குகிறார். அவர் பரிசுத்தமான, ஞானமயமான, அன்பு வடிவான, பரிபூரணமான கடவுளை அறிந்து கொண்டார். அதன்பின் அவருக்கு வேறென்ன தேவைப்படும்? அவருக்கு எதிர்பார்ப்புகள் இல்லை. எனவே அவருடைய

---

* All roads lead to Rome.

இரவுகள் கனவற்றவையாக உள்ளன. பகல்பொழுதுகள் ஆசைகளற்றவையாகக் கழிகின்றன. பகலிலும் இரவிலும் அவரது வாழ்க்கை ஒரே லயத்தில் இயங்குகிறது.

ஞானி நாம ஜெபம் செய்வதில்லை. பூரண ஞானம் பெற்றவர்கள் 'ராமா-ராமா' என்றெல்லாம் ஏதோ ஒரு பெயரைக் கிளிப்பிள்ளைபோல் தொடர்ந்து சொல்வதில்லை. அவருக்குள் இடைவிடாமல் ஓம்கார நாதம் கேட்கிறது. உள்ளே உயிரின் வீணை ஒலிக்கிறது. உள்ளே இறைவன் பாடுகிறார். ஆகவே ஞானி வாய் திறந்து சப்தமாக ஜெபம் செய்யத் தேவை எழுவதில்லை. அந்த உள்ளொலியை வெளிமுயற்சிகளால் தோற்றுவிக்க முடியாது.

'ஆதாரமேதும் இல்லாத, பிடிவாதக்காரர்களான மூடர்கள் உலகைத் தாங்கிப் பிடித்துள்ளனர். பிரச்சினைகளின் மூலமாகிய இவ்வுலகை ஞானிகள் வீழ்த்துகிறார்கள். **(சுலோகம் 214)**

ஞானி தன் சுயமான ரூபத்தை, சொரூபத்தை, அறிந்தவராக இருப்பார். அவர் தனது இயற்கையான இயல்பை உணர்ந்தவராக இருப்பார். குயிலும், ரோஜாவும், தாமரையும், பறவைகளின் ஒலியும் தத்தம் இயற்கையில் நீடிப்பதைப்போல், நீ உன் சொரூபத்தை அறிந்துகொள்ளும் நாளன்று நீ ஞானம் பெறுவாய்.

**நகரத்தின் இலக்கண மொழியைக் கைவிடு**
**காட்டுமொழி பேசு சுதந்திரமாக**
**அதில்தான் உள்ளது பறவைகளின் பண்**
**முயல்களின் அப்பாவித்தனம்**
**கிளைகளில் மலரும் பூவின் ஆதி மணம்**
**பின்னிக் கிடக்கும் மரங்களின் தோழைமை**
**குந்தி உட்கார்ந்துள்ள குன்றின் அமைதி**
**சுட்டெரிக்கும் வெயில் முடிந்து**
**பசுமை பரப்பும் மழைக்காலம்**
**சந்தம் யாப்பென்னும் துருப்பிடித்த**
**பரம்பர சன்னலைத் திறந்துவிடு**
**புதுமையான பாடல் ஒன்று**
**காட்டின் குளிர்ச்சியுடன் நுழையட்டும்**

ஞானி செயற்கை மொழியைக் கைவிட்டு, தமக்கு இயல்பான மொழியில் பேசுவார். அதுவே அவர் துதிக்கும் விதமாகும். அவர் நாட்டின் செயற்கையைவிட காட்டின் இயற்கைக்கு அதிகம் பொருத்தமானவராக இருக்கிறார். அவர் கடவுளைச் சேர்ந்த வராகிறார். பயிற்சிகள், முகமூடிகள், சமரசங்கள் முதலியவை அவரது வாழ்க்கையில் கிடையாது. மேலோட்டமான விஷயங்கள் தன் மீது படர்வதை அவர் ஏற்பதில்லை. உள்நோக்கிப் பாய்கின்றவற்றிலேயே கருத்துச் செலுத்துகிறார்.

நீ வாழ்க்கையில் ஏற்று அங்கீகரித்த பல கருத்துகளுக்கும், பல முடிவுகளுக்கும் ஆதாரம் இல்லை என்பது உனக்குத் தெரியுமா? எதையும் அனுபவித்த பிறகா கருத்துக் கூறுகிறாய்? 'கடவுள் உண்டா?' என்று உன்னிடம் ஒருவர் கேட்டால், நீ சட்டென்று 'ஆமாம்' என்கிறாய். உண்மையிலேயே அது உனக்குத் தெரியுமா? நீ கடவுளைச் சந்தித்தது உண்டா? கடவுளின் நிழலாவது உன் மீது படர்ந்ததுபோல் எப்பொழுதாவது உணர்ந்திருக்கிறாயா? அது தெரியாமலே நீ கடவுள் பெயரால் கலவரம் உண்டாக்கி, பிற மதத்தினரைக் கொல்ல தயாராக உள்ளாய்.

நீ மற்றவர்கள் சொல்வதைத்தான் திருப்பிச் சொல்கிறாய். ஆனால் அவர்களும் நேரடியான அனுபவத்தால் அறிந்தவர்கள் இல்லை. வாழ்க்கையில் எதற்கும் ஒரே ஆதாரம் அனுபவம் மட்டுமேயாகும். அனுபவம் மூலம் உனக்குத் தெரிந்ததை தைரியமாகச் சொல். எது தெரியாதோ அதையும் மெழுகிப் பூசாமல் வெளிப்படையாகத் தெரிவித்துவிடு. இவ்வாறு நேர்மையைக் கடைப்பிடி. வாழ்க்கையில் உரசலின்றி நடத்தச் சில பொய்கள் தேவைப்படலாம். ஆனால் கடவுளைப் பற்றி உனக்குத் தெரியும்போல் பெரிய பொய்களை அள்ளிவீசாதே.

பொய் பேசக்கூடாது என்று உனக்கு அறிவுறுத்துபவர்கள் தாம் உனக்குப் பெரிய பொய்களைக் கற்பிக்கிறார்கள். கோயில் பூசாரிகள், சாஸ்திர அறிஞர்கள், மடாதிபதிகள், துறவிகள் போன்றவர்கள் உன்னிடம் கடவுளை நம்புமாறு சொல்கிறார்கள். உனக்கு இறையனுபவம் ஏற்பட்டிராதபோது அவர்கள் சொல்வதை எப்படி ஏற்பாய்?

"நீங்கள் சொல்வதைநான் ஏற்கவில்லை" என்று முகத்திலடித்ததுபோல் பதில் சொல்லாதே. கடவுள் இல்லையென்று மட்டும் உனக்கு உறுதியாக எப்படித் தெரியும்? நீ என்ன பதில் சொல்ல வேண்டும்? "கடவுள் இருக்கிறாரா, இல்லையா என்று எனக்கு நேரடியாகத் தெரியாது. என் அனுபவத்தில் என்ன தெரிய வருகிறதோ அதை முடிவாகக்கொள்வேன்," என்று கூறு. நீ உன்னைத் திறந்த மனமுடையவனாக வைத்திரு. உன் மனக்கதவு திறந்தபடி இருக்கட்டும். 'உண்டு' என்று சொல்கிற ஆத்திகனும், 'இல்லை' என்கிற நாத்திகனும் அனுபவத்தின் அடிப்படையில் அவ்வாறு கூறவில்லை. ஆகவே இவர்களின் மனக்கதவு மூடியே உள்ளது.

தனது மனக்கதவைத் திறந்து வைத்திருப்பவனையே நான் ஆன்மிகவாதி என்பேன். அவன் தனக்குள் சொல்லிக்கொள்வான்; 'கடவுள் எனப்படுபவரே, நீர் உண்டெனில் என் உள்ளத்தில் பிரவேசியுங்கள். நான் மனக்கதவைத் திறந்துவைத்து, தரையில் கம்பளம் விரித்துவைத்துள்ளேன். உங்கள் வருகையைத் தடுக்கமாட்டேன். நீங்கள் வந்தால் வரவேற்பேன். உங்களுடன் சேர்ந்து நடனமாடுவேன். ஆனால் நீங்கள் இல்லாவிடில் நான் என் செய்வேன்? உங்களை நான் படைக்க முடியாது.'

ஞானி என்பவர் ஆதாரமற்ற நம்பிக்கைகளை, வீண் பிடிவாதங்களை, ஒருதலைபட்சமான முடிவுகளை வேரோடு அகற்றிடுவார். இவை தீமைகளின் வேராக இருக்கின்றன.

மக்கள் தங்கள் அறியாமையை ஒப்புக்கொண்டு, வீண்பிடிவாதம் செய்யாமலிருந்தால், தேடுதலை மீண்டும் தொடங்கலாம். விட்ட இடத்திலிருந்து யாத்திரையைத் தொடரலாம்.

ஆனால் ஒவ்வொருவரும் தங்களைக் குறிப்பிட்ட மதத்தவன் என்கிறார்கள். தங்களது புனிதநூலென குறிப்பிட்ட ஒன்றைக் கூறுகிறார்கள். குறிப்பிட்ட தெய்வத்தை வழிபடுவதாக அறிவிக்கிறார்கள். இவற்றைக் காப்பதாகச் சொல்லிக் கத்தியை உருவுகிறார்கள்.

மதங்களின் பெயரால் ஏற்பட்ட நாசத்திற்கு சமமான அழிவு வேறு எதனாலும் ஏற்பட்டதில்லை. மத குருக்கள் தாங்கள்

பின்னணியில் பாதுகாப்பாக இருந்துகொண்டு மற்றவர்களைக் கலவரத்திற்குத் தூண்டிவிட்டு. கொல்ல-கொல்லப்பட காரணமாய் இருந்து வந்துள்ளனர். அன்புவழியை உலகிற்கு உபதேசிக்கும் மதத்தலைவர்கள் ரத்தத்தால் பூமி நனையக் காரணமாகவும் இருந்து வருகிறார்கள்.

விழிப்புப் பெற்ற ஞானிகள் இந்த விபரீதத்தை தடுத்துள்ளனர். 'எதையும் வற்புறுத்த வேண்டாம்; எதற்கும் பிடிவாதம் வேண்டாம். கண்ணைத் திற. மனத்தைத் திற. மனத்திலுள்ள கதவுகள். சன்னல்களைத் திற. காற்று உள்ளே வரட்டும். கடவுளின் செய்தி கொண்டுவரட்டும். ஞான கிரணங்கள் உனக்குள் இறங்கட்டும். அவை கடவுளின் செய்தி கொண்டுவரட்டும்.

நீ உன்னை இந்து. முஸ்லிம் என்றெல்லாம் சொல்லிக் கொண்டு கதவை மூடி உட்கார்ந்திருக்கிறாய். அல்லது உன்னை ஆத்திகன். நாத்திகன் என்றெல்லாம் வகைப்படுத்திக்கொள்கிறாய். கடவுள் கதவைத் தட்டுகிறார். நீ திறப்பதில்லை. காற்றடித்ததால் கதவு ஓசைப்படுத்தியது என்கிறாய். கடவுளின் திருவடிகளின் சப்தம் கேட்கிறது. ஆனால் அதை நீ உலர்ந்த இலைப் பரப்பின் மீது காற்று செல்லும் ஓசை என்கிறாய்.

இவையெல்லாம் கடவுளின் வருகைதான். அவர் காற்று வீச்சில் வருகிறார்; உலர்ந்த இலைகளின் சரசரப்பில் வருகிறார். சில சமயம் மேகமாகத் திரள்கிறார். பிறகு மழையாகப் பொழிகிறார். சூரியனில், சந்திரனில் வருகிறார். நூற்றுக் கணக்கான விதமாக வருகிறார். நீ சற்றுக் கண்ணைத் திற.

முன்கூட்டியே வலுவான கருத்தை உருவாக்கிக் கொள்ளாதே. கோட்பாடுகள், சித்தாந்தங்கள், தத்துவங்களின் பின்னால் ஒளியாதே. கோட்பாடுகளைத் தூக்கி எறி. அவை மதிப்பற்றவை. சத்தியத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள். அதற்கான ஒரே வழி அனுபவம்தான். அனுபவமே எதற்கும் ஆதாரம். தர்க்கம் மூலம் நிரூபிக்க முடியாததையும் அனுபவம் நிரூபிக்கும். தர்க்கம் மூலம் கடவுள் உண்டெனலாம், இல்லையெனலாம்.

ஆனால் அனுபவம் இது சம்பந்தமாக உறுதியான முடிவைப் பெற்றுத் தரும்.

'அறிவு பக்குப்படாதவன் சாந்த நிலையை அடைய முயலுகிறான். அதில் அவன் வெற்றி காண்பதில்லை. ஆனால் அறிவில் நிலைபெற்றவன் உண்மையை உறுதியாக அறிந்து கொண்டு எப்பொழுதும் சாந்தமான மனநிலையில் நீடிக்கிறான்.' **(சுலோகம் 215)**

"சாந்தமாக இருக்க வேண்டுமென நினைப்பதால் மட்டுமே அமைதி கிடைத்துவிடாது. ஏனென்றால் ஆசைப்படுதலே அமைதி யின்மைக்குக் காரணம். ஆகவே அமைதி கிடைக்க ஆசைப்படு கிறேன் என்று சொல்லக்கூடாது. அவை எதிரெதிரானவை.

என்னைச் சந்திப்பவர்களில் சிலர் தங்கள் மனம் அமைதி ஆகவேண்டும் என வேண்டுகின்றனர். 'ஆக வேண்டும்' என்ற விருப்பம் இருக்கும்வரையிலும் அங்கே அமைதி ஏற்பட வழியில்லை. எந்த விருப்பமும் உன்னை அமைதியின்மைக்குத் தான் கொண்டுவிடும். அந்த முயற்சியில் வெவ்வேறு திசையில் இழுக்கப்படுவாய். அமைதியைக் கொண்டுவருகின்ற முயற்சியில் கைவசமுள்ள அமைதியையும் இழப்பாய்! முன்பு பணத்துக்காக அமைதியை இழந்தாய். பதவிக்காக அமைதியை இழந்தாய். கடைத்தெருவில் விலைவாசி உயர்வால் அமைதி இழந்தாய். பங்குச் சந்தையில் ஏற்ற இறக்கத்தால் அமைதி இழந்தாய். பிறகு ஒரு கட்டத்தில் அமைதியைப் பெற முயலுகிறாய். 'பெறுதல்' என்ற அடிப்படைத் தவறு காரணமாக அப்போதும் அமைதி கிடைக்காது.

அமைதியாகுதல் என்பதற்கு எதையும் பெறவேண்டுதல் மிஞ்சியிருக்கவில்லை என்று அர்த்தம். பெறுதல் நீங்கிய இடத்தில் அமைதி வந்துசேரும். இந்தக் கதவு வழியாக விருப்பம் வெளியேறினால், இன்னொரு கதவு திறந்து சாந்தி உள்ளே நுழையும். விரும்பும் ஆசையும் அமைதி நிலையும் ஒன்றாக வசிக்க முடியாது. 'அமைதிக்கு ஆசைப்படுகிறேன்' என்று ஒருவன் சொன்னால் அவனது அறிவு பக்குவப்படவில்லை என்பதையே அது காட்டுகிறது.

ஞானி எதையும் வேண்டுமெனக் கேட்பதில் அசாந்தி, எதையும் துரத்தி ஓடுவதில் அசாந்தி, ஏதாவது ஒன்றாக ஆவதில் அசாந்தி என்பதைப் புரிந்துகொண்டுவிட்டார். செய்வதற்கு இனி என்ன மிஞ்சியுள்ளது? இதை அறிந்ததும் ஓட்டம் நின்றுவிடும். ஏதாவது ஆக வேண்டுமென்ற எண்ணம் சாம்பலாகிவிடும். நீ எது செய்தாலும் அதில் திருப்தி நிறைந்திருக்கும்.

யோகம் மூலம் அமைதி கிட்டும் என்று சிலவகை சந்நியாசிகள் கூறுவர். பதஞ்சலி முனிவரின் அஷ்டாங்க யோகத்தைப் பின்பற்றச் சொல்வார்கள். மகாசிக்கலானது இவ்வழி. கடுமையான பயிற்சிகளைக் கொண்டது.

அஷ்டாங்க (அஷ்ட அங்க) யோகம் எட்டுப் பிரிவுகள் கொண்டது. ஒவ்வோர் அங்கத்தின் கீழும் யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், பிறகு சமாதி என்று எட்டு கிளைப் பிரிவுகள். பிறகு அவை ஒவ்வொன்றிலும் அதற்கு மேலும் பல சிறு பிரிவுகள். உதாரணமாக, சமாதியில் சவிகல்ப சமாதி, நிர்விகல்ப சமாதி, சபீஜ சமாதி, நிர்பீஜ சமாதி என்றெல்லாம் பிரிவுகள். இந்த ஒரு பிறவி போதாது அனைத்தையும் கற்க. முதல் கட்டமான யமம் என்பதிலேயே பத்து கட்டளைகள் உள்ளன. அவற்றைப் பின்பற்றுவதே சிரமம். பிறகு சமாதிநிலை பற்றி எப்படிப் பேச்செடுப்பது? ஆகவே யோகிகள் ஆசனங்களிலேயே சிக்கிக்கொண்டு விடுகிறார்கள். எல்லா ஆசனங்களையும் கற்க ஒரு வாழ்க்கை போதாது.

ஆகவே—செய்தலால் அமைதி கிடைக்காது. அறிதலால் கிடைக்கும்; உணர்தலால் கிடைக்கும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஐந்தாண்டுகளாக உங்கள் சொற்பொழிவுகளைக் கேட்டு வருகிறேன். சந்நியாசியாகிவிட வேண்டுமென சில சமயம் தீவிரமாக விரும்புகிறேன். இம்முறை சந்நியாசம் பெறவே வந்துள்ளேன். ஆனால் வீட்டிலிருந்து கிளம்பியதிலிருந்து உடலில் நடுக்கமாக உள்ளது. மனத்தில் பயம் சூழ் கிறது. மனம் துறவறம் ஏற்க ஒப்பவில்லை போல் தெரிகிறது. இது என்ன பிரச்சினை? இதை நான் எப்படி எதிர்கொள்வது?**

மனம் எப்படியப்பா துறவறத்துக்கு ஒப்புதல் தரும். துறவறம் என்பது மனத்தின் மரணத்தை அல்லவா குறிப்பிடுகிறது? சாதாரண மரணமில்லை, தற்கொலை! ஆகவே மனம் சங்கடப்படுவது இயற்தைான். மனம் அஞ்சுவதும் நடுங்குவதும் நியாயம்தான். ஆகவே மனம் தடைமேல் தடையாகப் போடுகிறது. மனம் எதிர்க்காமல் துறவறத்தை ஆதரித்தால் அது அதிசயம்தான். மனமோ அற்ப விஷயங்களில்கூட நம்முடன் ஒத்துழைப்பதில்லை. எதிர்த்து முரண்டு பிடிக்கிறது. எந்தச் சட்டையை அணிவது என்பதிலும்கூட மனமும் நாமும் ஒத்துப்போக முடியவில்லை. இரண்டு வேலைகள் வந்தால், இதைச் செய்வதா, அதைச் செய்வதா என்று மனம் ஊசலாடுகிறது.

ஒரு மனம்தான் நமக்கு உள்ளதெனினும் நடைமுறையில் நமக்கு ஒன்றையொன்று எதிர்க்கும் இரட்டை மனம் உள்ளது. மனம் எதையும் இரண்டு விதமாகப் பார்க்கிறது. அது துவைதத்தை (ஒன்றல்ல, இரண்டு என்பதைப்) பின்பற்றுகிறது. மனம்

இருக்குமிடத்தில் மல்யுத்தம் நிச்சயம் இருக்கும். மனம் நீங்கினால் போட்டியில்லை. மனிதன் சுதந்திரமாகிறான்.

சந்நியாசம் என்பது மனத்தைச் சிறிது சிறிதாகத் தேய்த்து அழித்துவிடுவதற்கான முயற்சிதான். மனத்தைப் பின்தள்ளி, மனமற்ற நிலைக்கு சாதகனை சந்நியாசம் கொண்டு சேர்ப்பிக்கிறது. இதுதான் மனத்தின் பயத்துக்கு காரணம்.

மனத்துக்கே மதிப்பளித்து வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கினாயே, எந்த இலக்கை நீ அடைந்திருக்கிறாய்? மீண்டும்-மீண்டும் பிறவி, பிறப்பு-இறப்பு என்னும் சக்கரச் சுழற்சி, மாற்றி-மாற்றி வருதல்-போதல், தொட்டிலிலிருந்து சுடுகாடுவரை தொடர்ந்த ஓட்டம், அர்த்தமற்ற ஓட்டம் முதலியவை மனத்தை நம்பியதன் பலன். இன்னும் எத்தனை காலம்தான் மனத்திற்கு அடிமைசெய்வாய்?

என்றாவது ஒருநாள் விழித்துக்கொள். மனத்திடம், ‘இதுவரை சரி, நீ சொல்வதைச் சொல்லிக்கொண்டிரு. நான் சுயமாகச் செயல்பட உள்ளேன்’ என்று தெரிவித்துவிடு. பிறகு அவ்வாறே செய். கொஞ்சமாவது மனத்தைக் கடந்துசெல்; கொஞ்சமாவது மனத்தைவிட உயரமாக எழும்பு. இல்லாவிடில் வாழ்க்கை இப்படியே சல்லடையில் தண்ணீர்போல் ஓடிவிடும். உன் கைகள் என்றும் காலியாகவே இருந்துவிடும்.

**மலரிலிருந்து கனவு பெருகிற்று**
**யதார்த்தம் முள்ளாய்க் குத்திற்று**
**பூங்கா மரங்களின் அழகெல்லாம்**
**கருவேல மரத்தால் சிதைந்தது**
**வசந்தம் விலகுவதைப் பார்த்தோம் நாம்**
**ஊர்வலம் கலைந்து புழுதி எழுந்தது**

**முழுதுமாய்த் தூக்கம் கலையவில்லை**
**அதற்குள் சூடான வெயில்**
**காலைத் தூக்கி அடியெடுத்து வைக்கையில்**
**வாழ்க்கை வழுக்கி நழுவி விட்டது**
**இலைகள் கருகி உதிர்ந்தன**
**கிளைகள் வாடி முறிந்தன**

**விருப்பம் சரியாய் நிறைவேறும் முன்**
**ஆயுளே முடிந்து போனது**

**கீதங்கள் கண்ணீராய் மாறின**
**சந்தங்கள் சமாதியாய் ஆயின**
**விளக்குகள் எல்லாம் புகையைக் கக்க**
**நாம் திருப்பத்தில் தயங்கியபடி நிற்கிறோம்**
**வயது மட்டும் கூடுவதைப் பார்த்தோம்**
**ஊர்வலம் கலைந்தது புழுதி எழுந்தது**

விழிப்புப் பெறுதல் என்பதன் அர்த்தம் மனத்தின் முன் மண்டியிடாதே என்பதுதான். உன்னை நான் மனத்துடன் மோதச் சொல்லவில்லை. இதை நினைவில் வை. மோதல் தேவையில்லை. மனத்தின் பேச்சைக் கேட்காமலிருந்தால் போதும். இந்த வித்தியாசத்தைப் புரிந்துகொள். மனத்துடன் மோதினால் நீ என்றும் மனத்தைவிட்டு வெளியேற முடியாது. நீ மனத்தை ஒப்புக் கொண்டாலும் எதிர்த்தாலும் அதன் வசத்திலேயே இருப்பாய். எவருடன் நாம் மோதுகிறோமோ அவரிடமிருந்து விலகி நின்று மோத முடியாது. மனம் நமது எதிரி. நண்பனைவிட எதிரிதான் நமக்கு அருகில் உள்ளான். நாம் நண்பனை மறக்கலாம். எதிரி நம்மை மறப்பதில்லை. எவனுடன் சண்டையிட்டு, கீழே தள்ளி, நெஞ்சிலேறி உட்காருகிறோமோ, அவனை அப்படியே விட்டுவிட்டு விலகுவது எப்படி? அவன் உடனே எழுந்து மீண்டும் தாக்குவானோ என்று நமக்கு பயமுள்ளது. ஆகவே வென்றவன் தோற்றான் என்றொரு நிலை தோன்றுகிறது.

ஆகவே நான் மனத்துடன் உன்னை மோதச் சொல்லவில்லை. அது தேவையுமில்லை. எஜமானன் தன் அடிமையுடன் மோதவா செய்வான்! அடிமை ஏதாவது சொல்ல, எஜமானன், "நீ சொல்லி நான் கேட்க முடியாது," என்று சொல்லிவிட்டால் விஷயம் முடிந்தது. எஜமானன் அடிமையுடன் மோதினால், அது இருவரும் சமம் என்பதுபோல் காட்டி, எஜமானனுக்குத் தாழ்வை உண்டாக்கும். அடிமை என்ன சொல்லுகிறான் என்று கவனிக்கும் நிலைவரை எஜமானன் விட்டுக்கொடுக்கலாம். ஆனால் அவன் தனது முடிவின்படியே செய்ய வேண்டும்.

ஆகவே மனத்துடன் மோதாதே. மனத்துடன் மோதி நீ துறவியானால் உன் துறவறம் ஆரம்பத்திலேயே சேதப்பட்டுவிடும். நீரில் மூழ்கியவன் தப்பிக் கரையில் கால் வைத்ததும் வழுக்கி மீண்டும் நீரில் விழுந்ததுபோல் ஆகிவிடும். அம்பு குறி தவறி மையத்தைத் தொடாமல் அருகில் பட்டு விழுந்ததுபோல் ஆகிவிடும்.

மனத்துடன் மோதாதே; மனத்தை வெல்ல முயலாதே; அதேசமயம் மனத்திடம் தோற்காதே. நீதான் எஜமானன். இதை அறிவிக்க வேண்டியுள்ளது. மனத்துடன் சண்டையிட்டு நீதான் முதலாளி என்று நிரூபிக்க வேண்டியதில்லை. மனத்துடன் சண்டையிட்டால் நீதான் அதன் தலைவனா என்று உனக்கு சந்தேகம் இருப்பதாகவும், சண்டை மூலம் உன் தலைமையை நிரூபிக்க வேண்டியுள்ளதாகவும் அர்த்தமாகும்.

ஆனால் நீதான் எஜமானன். சுபாவத்தின் அடிப்படையில் நீதான் எஜமானன். மனத்திடம் சொல்லு, 'ஆமாம், என் நீண்டகால வேலைக்காரன். இமைப்பொழுதும் என்னைவிட்டு நீங்காதவன். அந்த உரிமை காரணமாக நீ உன் கருத்தைச் சொல்லலாம். இதுவரை உன் பேச்சுப்படியே நடந்தேன். நற்பயன் விளைய வில்லை. அடுத்து, உன்னுடன் மோதாமல், என் இஷ்டப்படியே செயல்புரிவேன்.'

பிறகு துறவறத்தில் சீராக இறங்கு. நீ மோதலைத் தவிர்த்தால், மனம் என்ற ஒன்று தான் இருந்த சுவடே தெரியாமல் விடைபெற்றுக் கொண்டு விடும்.

துறவறம் மேற்கொள்வது குறித்து ஐந்தாண்டுகளாக யோசித்து வருவதாகச் சொன்னாய். சில சமயம் தீவிரமாகத் துறவற ஆர்வம் எழும்பியதாகச் சொன்னாய். அப்படியும் அது பிறகு தணிந்துபோனது என்றால், நீ கனவிலும் முக்திபெற முடியாது.

எப்படியோ இந்த முறை சந்நியாசம் ஏற்றுத்தான் தீர்வது என்று இங்கு வந்துவிட்டாய். ஆனால் தயக்கம் பூரணமாக நீங்கவில்லை. வீட்டிலிருந்து புறப்பட்ட பிறகு மனம் படபடப்பாக இருப்பதாகச் சொன்னாய்.

இது முற்றிலும் இயற்கைதான். படபடப்பு தோன்றியிரா விடில்தான் பிரச்சினை. இதற்காகக் கவலைப்படாதே. துறவறத்தினால் உனக்கு என்ன ஆகுமோ என்று தெரியாததால் நடுக்கம் உண்டாகிறது. ஊராரும் உற்றாரும் நீ துறவியாவதை எப்படி எடுத்துக் கொள்வார்களோ—ஏசுவார்களோ, பாராட்டு வார்களோ—என்பது தெரியாது. பைத்தியம் என்று சிரிப்பார்களா? கோழை என்று அவமானப்படுத்துவார்களா? மனைவியும் பிள்ளைகளும் உன் முடிவை எப்படி எதிர்கொள்ளுவார்கள்?

புதிய பாதையில் செல்லுகையில் கவலை ஏற்படுவது இயற்கையே. பழைய பாதை பழக்கமானது. அதில்தான் நீ இதுவரை பயணித்திருக்கிறாய். ரயில் பெட்டிகள்போல் ஒரே பாதையில் சென்றிருக்கிறாய். இப்பொழுது நீ அந்தத் தண்டவாளத்திலிருந்து இறங்கித் தடம் மாறுகிறாய். ஒரே தடத்தில் செல்வதைக் கைவிடுகிறாய். ராஜபாட்டையிலிருந்து விலகி ஒற்றையடிப் பாதையில் நடைபோடுகிறாய். ராஜ வீதியில் பலத்த கூட்டம். முன்னும் பின்னுமாகத் தள்ளு முள்ளு. வல-இடப் பக்கங்களிலும் கூட்டம், கூட்டத்துடன் கலந்து போனால் தைரியமாக உள்ளது. இத்தனை பேர் பின்பற்றும் உலக வாழ்க்கை தவறாக இருக்காது என்று தோன்றுகிறது.

ஆனால் எல்லோருமே இப்படித்தான் ஒருத்தரை ஒருத்தர் பார்த்து இத்தனை பேர் தப்பான வழியில் போகமாட்டார்கள் என நினைத்துக் கொள்கிறார்கள். நீ யாரைப் பார்த்துக் கும்பலில் சேர்ந்தாயோ அவர் உன்னைப் பார்த்துத்தான் கும்பலில் சேர்ந்திருப்பார். நீ பக்கத்திலிருப்பவனுக்கு ஏற்றபடி நடைபோட்டு முன்னேறினால் அவன் உன்னைப் பார்த்துக் காலடி வைக்கிறான். கூட்டம் ஒருத்தரை ஒருத்தர் தாங்கியபடி உள்ளது. பின்னால் வருபவர்கள் முன்னால் செல்பவர்களுக்கு வழி தெரிந்திருக்கு மென நம்புகிறார்கள். முன்னால் செல்பவர்கள் பின்னாலிருந்து தள்ளப்படுவதால் அங்குமிங்கும் அலைக்கழிக்கப்பட்டுச் செல்கிறார்கள். தலைவருக்கு எல்லாம் தெரியும் என்று கட்சித் தொண்டர்கள் கண் மூடித்தனமாகப் பின்பற்றுவதுபோல்தான் இதுவும்.

ஒருவரோடு ஒருவர் ஒட்டி உரசிக்கொண்டு கூட்டம் நகர்கிறது. அது எங்கே போகிறது? ஏன் போகிறது? எவருக்கும் தெரியாது.

நீ இன்று துறவறம் மேற்கொள்வதாயின் கூட்டத்திலிருந்து பிரிந்துவிட்டாய். கூட்டத்தைக் கைவிட்டாய். மந்தை ஆடாக இனியும் இருப்பது உனக்கு சம்மதமில்லை. இனி ஒற்றையடிப் பாதையில் செல். உனக்கு முன்னாலும் பின்னாலும் யாருமில்லை. இனி நீ தனியானவன். ஆகவேதான் உனக்கு அச்சம். அடுத்து என்ன நடக்குமோ என்று உதறல். உனது நடுக்கம் நீ புதிய பாதையில் பாதம் பதித்துவிட்டதையே நிரூபிக்கிறது.

இந்தப் புதுமை மனத்திற்குப் புரிவதில்லை. மனம் பழைமை வாதத்தில் ஊறிக்கிடக்கிறது. இத்தனை நாள் செய்ததையே என்றும் செய்ய மனம் விரும்புகிறது. மனம் ஓர் இயந்திரம். வழக்கமான விதத்திலிருந்து மாறுபட்டு அது இயங்காது. மனம் மிரட்டுகிறது. 'உன் ஆயுளில் இத்தனை ஆண்டுகள் கழிந்துவிட்டன. இன்னும் சிறிது காலம் பொறுத்துக்கொள். பழைய வழியே, பழகிய வழியே பாதுகாப்பு. ஏன் புதிய பாதைக்கு மாறி வம்பை விலைக்கு வாங்க வேண்டும்?' என்று கேட்கிறது.

நீ உடம்பு சொல்வதைக் கேட்காதே. மனம் சொல்வதைக் கேட்காதே. ஏனெனில் நீ உடலில்லை, நீ மனமில்லை. நீ ஆத்ம உணர்வானவன். நீ சாட்சி மனப்பான்மை கொண்டவன். உடல் நடுங்குவது உனக்குத் தெரியும். ஆனால் நடுங்குபவன் நீ அல்லன் என்று உன்னால் பிரித்துப் பார்க்க முடிகிறது. மனத்தின் சங்கடத்தையும் நீ அதற்கு அப்பால் நின்று பார்க்கிறாய். சாட்சியாவதும் சந்நியாசி ஆவதும் ஒன்றுதான்.

உடலையும் மனத்தையும் துறந்தால் அந்தரத்தில் நிற்க நேரிடுமே என்று நினைக்க வேண்டாம். உடலையும் மனத்தையும் கடந்த ஆத்மாவுடன் முதலிலும், ஆத்மா மூலமாக பரமாத்மாவுடன் அடுத்தும் உனக்கு உறவு உண்டாகிவிடும்.

அஞ்சாதே. தைரியமாக இரு. கரையிலேயே இருந்தால் கூழாங்கற்கள்தான் கிடைக்கும். நீரில் ஆழ்ந்து இறங்கு. முத்துகள்

கிடைக்கும். அதுவும் முக்தி கிடைப்பதும் ஒன்றுதான். (சமஸ்கிருதத்தில் முத்தை முக்தா என்பார்கள்).

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஒருவன் மாலையை உருட்டி ஜெபித்தான். இன்னொருவன் மதுக்கோப்பையைப் பிடித்தான். ஒவ்வொருவனும் தனக்கு ஆதரவாகத் தோன்றியதைப் பற்றிக்கொண்டான். இப்படித் தனக்கு ஆதாரம் என்று ஒவ்வொருவரும் முரண்படுகையில் சத்தியம் என்பது எது?**

சத்தியம் எது என்று துல்லியமாக வரையறுக்க முடியாது. சத்தியம் என்பது அனுபவத்தால் உணரப்படுவது. அதைச் சொற்களின் மூலமோ, படமாகவோ எல்லைக்குட்படுத்த முடியாது. அதை சாஸ்திரங்களும் முழுமையாகச் சொன்னதில்லை. சத்தியத்தின் மீதுள்ள போர்வையை விலக்கினால் எல்லா மதத்தினரும் திடுக்கிடுவார்கள். அவர்கள் எதையெல்லாம் சத்தியம் என்று பின்பற்றினார்களோ அவை அடிப்படையான சத்தியத்திலிருந்து மாறுபட்டிருப்பதைக் காண்பார்கள்.

சத்தியத்தை விளக்குவது என்பது பேசமுடியாதவன் வெல்லத்தின் சுவையை விளக்க முயல்வது போன்றதாகும். ஒருவன் இதுதான் சத்தியம் என்று கூறும்பொழுதே அது அசத்தியமாகிவிடும். ஏனெனில் சத்தியத்தைக் கூற முடியாது என்பதே அதன் அடிப்படை. சத்தியம் விரிந்து பரந்திருக்கிறது. அதை உள்ளங்கையில் அடக்க முடியாது. சாஸ்திரங்களிலும் மதங்களின் கோட்பாடுகளிலும் உள்ளங்கை அளவு சத்தியமே வசப்படுகிறது. நாத்திகர்களும்கூட சத்தியத்தை அறிந்தவர்களில்லை. ஏனெனில் அனுபவத்தின் அடிப்படையில் அவர்கள் நாத்திகர்களானவர்களில்லை.

பல வகையான மதங்களைப் பின்பற்றும் ஆத்திகர்களும் சத்தியம் எது என்று அறிய நேர்ந்தால், இதுவரை சடங்குகளைப் பின்பற்றி வாழ்க்கையே வீணாக்கி விட்டோமே என்று கண்ணீர் விடுவார்கள்.

மகாத்மா காந்தியடிகளின் ஆசிரம பிரார்த்தனையில் 'ஈஸ்வர் அல்லா தேரே நாம்' என்றொரு வரி வரும். ஆனால் கடவுளின் பெயர் இவையல்ல. அவருக்குப் பெயர் எதுவும் கிடையாது. அவர் நாமம் அற்றவர் (அ+நாம்). சங்கராச்சாரியாரோ, போப் ஆண்டவரோ 'இதுதான் கடவுளின் பெயர்' என்று கூற முடியாது. மதத் தலைவர் ஒவ்வொருவரும், ஒவ்வொரு மதத்தின் நூல்களும் கடவுளுக்கு வெவ்வேறு பெயர் தருகின்றன. எல்லாமும் சரி—விரிந்த பார்வையில்-குறுகிய வட்டத்தில். எல்லாமும் தவறு.

பார்வையற்ற ஐவர் யானையைத் தொட்டுத் தடவி விளக்க முயன்ற கதை நினைவிற்கு வருகிறது. காலைத் தொட்டவன் கம்பம்போல் இருக்கிறது என்றான். காதைத் தொட்டவன் முறம்போல் இருக்கிறது என்றான். இப்படி ஆளுக்கு ஒருவிதமாக யானையை வரையறுக்கிறார்கள். ஒருவர் முடிவை ஒருவர் மறுத்து பலமாக விவாதம் செய்கிறார்கள். அவர்கள் சொல்வது தவறு என்றும் ஒரேயடியாகக் கூறிவிட முடியாது. ஒவ்வொருவரும் தத்தம் அறிவுக்கேற்பக் கூறுகின்றனர்.* அவர்களில் எவனும் தவறாகச் சொல்லவில்லை. அல்லது எல்லோருமே தவறாகச் சொல்கிறார்கள். ஒவ்வொருவர் சொன்னதும் சரி என்றால் அது சிறிதளவே உண்மையானது.

பொய்யைவிட அரை உண்மை அதிக ஆபத்தானது. ஏனெனில் பொய்யை நம் உள்ளுணர்வே கண்டுபிடித்துவிடும். ஆனால் கால் உண்மை, பாதி உண்மை எனில் நம்பிவிடுகிறோம். அதுவே காலப்போக்கில் முழு உண்மைபோல் தோன்றத் தொடங்குகிறது. ஏனெனில் பொய்கூட பலமுறை சொல்லப்பட்டால் உண்மைபோல் ஒலிக்கிறது.

கண் அறுவை சிகிச்சை மூலம் அந்த ஐவருக்கும் பார்வை கிடைத்துவிட்டால், யானையைப் பார்த்து அதிசயிப்பார்கள். ஒவ்வொருவரும் தங்கள் வர்ணனை பிரம்மாண்டமான சத்தியத்தின் சிறு அம்சம்தான் என்பதைக் கண்டுகொள்வார்கள். இதேபோல் கூட்டம் சத்தியமென எதையோ நம்பி எங்கோ

* அவரவர் தமதம தறிவறி வகை வகை (நம்மாழ்வார்)

போகிறது. நீயும் அந்த மந்தையில், துறவறம் பூண்டு மகாசத்தியத்தை நீ உணர்ந்ததும், கூட்டத்தினரிடமும் சத்தியம் இருந்தும் அதன் அளவு அற்பமானது என்று நீ தெரிந்து கொள்வாய்.

எந்தக் கோட்பாட்டையும் பிடிவாதமாகப் பிடித்துக் கொள்ளாதே. ஏனெனில் அது பர்தாபோல் உன் கண்ணை மூடிவிடும். நீண்ட காலமாக நீ நம்பி வருகின்ற கருத்துகளைக் கைவிடுவது சிரமம்தான். அப்படி நீ அவற்றைக் கைவிட்டால், இத்தனை காலமாக நீ மூடனாக இருந்தாய் என்று அர்த்தமாகி விடுமே என்று மனம் அஞ்சுகிறது. கருத்தை மாற்றிக்கொண்டால், அது தோல்வியாகக் கருதப்படும் என்பதால் அகங்காரம் உன்னை அப்படியே இரு என்கிறது.

மக்கள் கண்ணைத் திறந்து பார்க்க மறுக்கிறார்கள். கண்ணைத் திறந்தால் தென்படும் சத்தியம் அவர்கள் இதுவரை பின்பற்றிய தத்துவக் கோட்பாட்டைப் பொய்யாக்கிவிடும் என்று பயப்படுகிறார்கள். தாங்கள் படித்த முட்டாளாகிவிடுவோமே என்று பயப்படுகிறார்கள். இதை தீக்கோழியின் கண்ணோட்டம் எனலாம். எதிரியைக் கண்டால் அப்பறவை கழுத்துவரை மணலில் புதைத்துக்கொண்டுவிடும். இப்பொழுது எதிரி கண்ணுக்குத் தெரியாததால், தீக்கோழியின் தர்க்கப்படி, எதிரி யாரும் எதிரில் இல்லை!*

மக்களில் பெரும்பான்மையோரின் கண்ணோட்டமும் இதுவே. ‘கடவுள் உள்ளாரெனில் அவர் ஏன் கண்ணுக்குத் தெரிவதில்லை?’ என்று அவர்கள் வாதம் செய்கிறார்கள். கண்ணுக்குத் தெரியவில்லை என்பதால் கடவுள் என்பவர் இருக்க முடியாது என்பது அவர்களது வாதம். தீக்கோழியின் வாதமும் இதுவே. தீக்கோழி நாத்திகப் பறவை என்று நினைக்கத் தோன்றுகிறது! எதிரியைக் கண்ணால் காண்பதுதான் மெய் என

---

* தீக்கோழி நெருப்புத் துண்டுகளை உண்ணாது! எட்டடி உயரமான அது தன்னை மறைத்துக்கொள்ள இயலாது. எதிரியைக் கண்டால் அது தரையில் படுத்துக் கழுத்தை மணலில் நீட்டும். அப்போது கழுத்துவரை மணலில் புதைவதுபோல் தெரியும்.

அது நினைப்பது போல மக்களும் கடவுள் விஷயத்தில் அப்படி நினைக்கிறார்கள்.

தீக்கோழி தலை உயர்த்திக் கண்ணைத் திறந்தால் எதிரியிடமிருந்து தப்ப முடியும். தப்பியோட முடியும். தாக்க முடியும். எதிர்ப்பை எப்படியாவது வெளிப்படுத்த முடியும். கண்ணை மூடிவைத்திருப்பதால் அது எதிரிப் பறவைக்கு இரையாகிறது.

நீ கண்ணைத் திற. பழைய கண்ணோட்டம் உன் இமைகளை ஒட்டிவைத்ததுபோல் மூடியிருக்கும்வரை உன் கண் திறக்காது. நீ இந்து, முஸ்லிம் என்றெல்லாம் ஆகாதே. ஆத்திகன், நாத்திகன் என்று பிரிந்துபோகாதே சத்தியம் எப்படிப்பட்டது என்று தெரியும்போல் உளறாதே. 'எனக்கு எதுவும் தெரியாது. இதுவரை பழக்கப்பட்ட எண்ணங்கள் என் பார்வையை மறைக்கின்றன. அவை அகன்றால், சத்தியத்தை அது உள்ளபடியே பார்க்க முடியும் என நம்புகிறேன்' என்று ஒப்புக்கொள்.

நான் நினைவூட்டுகிறேன்—பர்தா கடவுளின் மீது போடப் பட்டிருக்கவில்லை. பர்தா சத்தியத்தின் மீது விரிக்கப்பட்டிருக்க வில்லை. பர்தா உன் கண்ணைத்தான் மறைத்துள்ளது. ஆகவே உன் கண்ணை மூடியிருக்கும் திரை அகன்றால் எல்லோருக்கும் கடவுள் தெரிவாரென நினைக்காதே. கடவுள் மீது பர்தா இருந்தால் ஒரு ஞானி அதை நீக்கியதும் எல்லா சாமானியர்களுக்கும் கடவுள் தெரிவார். ஆனால் நிலைமை அப்படியில்லை.

புத்தர் முகத்திரையை நீக்கியபோது அவருடைய கண்கள் மட்டுமே திறந்தன. சுற்றியிருந்தவர்களின் கண்கள் மூடியபடியே இருந்தன. என் கண்ணிலிருந்து திரையை விலக்கினால், என் கண்கள்தான் திறக்கும். உன் கண்கள் திறக்கமாட்டா.

கண்ணை மறைக்கும் இந்த பர்தா எதனால் ஆனது? உன் அபிப்பிராயங்கள், ஒருதலை பட்சமான முடிவுகள், நீ கற்ற சாஸ்திரங்கள், நீ ஒப்புக்கொண்ட தத்துவக் கோட்பாடுகள் முதலியவை குறுக்கும் நெடுக்குமாக ஓடி, பர்தாவைப் பின்னுகின்றன.

சோவியத் ரஷ்யாவில் ஆத்திகத்திற்கு ஒப்புதல் கிடையாது; அறிந்தேற்பு (recognition) கிடையாது. ஏனெனில் அங்கு நாத்திக அரசாங்கம் அமைந்துள்ளது. தொடக்கப் பள்ளியிலிருந்து பல்கலைக்கழகம் வரை அங்கு நாத்திக வாதமே வேரூன்றி யுள்ளது. அங்கே நாத்திகனாக இருப்பதுதான் நன்மை. அங்கே ஆத்திகனாக இருந்தால் பிரச்சினைகள் எழும். சிறைக்குப் போகவும் நேரிடலாம்.

இங்கே இந்தியாவில் ஆத்திகனாய் இருப்பதுதான் லாபமானது. இங்கே நாத்திகனாய் இருப்பதில் சங்கடங்கள் உண்டு. கடையில் ஜெபமாலையை உருட்டியபடி வியாபாரம் செய்தால், வாடிக்கையாளர்கள் அதிகமாகக் கிடைப்பார்கள். இடையிடையே 'ராம்-ராம்' என்று முணுமுணுத்தபடி வியாபாரம் செய்தால், வாடிக்கையாளர்கள் அதிகமாக மதிப்புக் கொடுப்பார்கள். அந்தக் கடையில் விலை சற்று அதிகமாக உள்ளதையும் கவனிக்க மாட்டார்கள். கடைக்காரரின் ஆத்திக நடவடிக்கைகள் மயக்க மருந்துபோல் வாடிக்கையாளர்களை வசப்படுத்துகின்றன.

ஆன்மிகத்தில் நம்பிக்கை வைத்து, எந்த நாட்டில் வசித்தாலும் ஆத்திகராக இருப்போம் என்பவர்களின் எண்ணிக்கை குறைவு. இதேபோல், ஆன்மிகத்தை நம்பாமல், எந்த நாட்டிலும் நாத்திகராகவே இருப்போம் என்று கூறக்கூடியவர்களின் எண்ணிக்கை குறைவு. பாதுகாப்பு கருதி, லாபம் கருதி, சூழ்நிலைக்கேற்றபடி பெரும்பான்மை மக்கள் ஆத்திகராகவோ, நாத்திகராகவோ ஊரோடு ஒட்டி வாழ்வதையே விரும்புகிறார்கள். இந்தியாவிலுள்ள ஆத்திகர்கள் ரஷ்யாவில் வசிக்க நேர்ந்தால் என்ன செய்வார்கள்? பற்றுறுதி (conviction) உள்ள ஆத்திகர்களும் நாத்திகர்களும் குறைவான எண்ணிக்கை யிலேயே உள்ளனர்.

ரஷ்யாவும் 1917க்கு முன் ஆத்திக நாடாக இருந்தது. அங்கு கிறிஸ்தவ மதம் பரவியிருந்தது. சர்ச்சுகள் காணப்பட்டன. பாதரியார்கள் வாழ்ந்தனர். ரஷ்யப் புரட்சி (1917) நடந்து ஐந்தாறு வருடங்களில் நாடே மாறியிருந்தது. குழந்தைகளிலிருந்து கிழவர்கள்வரை எல்லோரும் நாத்திகர்களாகிவிட்டனர்! மன்னன்

எவ்வழி மக்கள் அவ்வழி என்பதுபோல் அரசாங்கமே மக்கள் ஆத்திகர்களாக இருக்க வேண்டுமா அல்லது நாத்திகத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமா என்பதை நிச்சயிக்கும் அளவிற்கு ஆன்மிகம் வலிமை குன்றிவிட்டது.

ஒருவன் ஆத்திகத்தைப் பின்பற்றுவதோ, நாத்திகத்தைப் பின்பற்றுவதோ, சுயமான அனுபவத்தின் அடிப்படையில் நிகழ வேண்டும். ஆன்மிக உணர்வு அரசாங்க ஆணைக்கு (G.O.) உட்பட்டதாக அமையக் கூடாது. சுய லாபம் கருதி ஆத்திகனாவதோ, நாத்திகனாவதோ மோசடியாகும், சமூகக் குற்றமாகும்.

நமது அனுபவத்தை ஆதாரமாகக் கொள்ளாமல், பிறரிடமிருந்து ஆத்திக அல்லது நாத்திகக் கருத்துகளைப் பெற்று பின்பற்றுவதால் அவை மதிப்பிழக்கின்றன. நான் உன்னை ஆத்திகனாகவோ, நாத்திகனாகவோ மாறு என்று சொல்லவில்லை. கண்களைத் திறந்து நீயே பார் என்று மட்டும் ஆலோசனை தருகிறேன். உனக்குத் தெரியாதெனில் ஒப்புக்கொண்டுவிடு. நீ ஆத்திகனாகவோ, நாத்திகனாகவே மட்டுமே இருக்க விரும்புகிறாய். இதை சமூகம் ஏற்கும். ஆனால் எனக்குத் தெரியாது (agnosticism)* என்று சொன்னால், அதாவது, கடவுள் உண்டா, இல்லையா என்பதைக் கண்டுபிடிக்க முடியாதென்றால், சமூகத்திற்குக் குழப்பம் உண்டாகும்.

நீ பலரிடம் 'கடவுள் உள்ளாரா?' என்று கேட்டுப்பார். உண்டு அல்லது இல்லை என்றே பதில் கிடைக்கும். அதிசயமாகத்தான் எவனோ ஒருவன் துணிந்து, "ஐயா, தெரியானதயா, நான் இந்த விஷயத்தில் முட்டாளுங்க," என்பான். அத்தகையவன்தான் உண்மையான ஆன்மிகன். அவன் நேர்மைவாதி. வேறு எவனையாவது "கடவுள் உண்டா?" என்று கேட்டுப்பார். "ஆமாம், உண்டு," என்பான். "எப்படித் தெரியும்?" என்று தொடர்ந்தால், "என் அப்பா சொன்னார்," என்பான். அவருக்கு அவருடைய

---

* அனுபவ எல்லைக்குள் வசப்படாத ஒன்று உண்மையில் இருக்கிறதா என்பதை அறிய முடியாது என்னும் கொள்கை. சான்றுகள் போதாமையால் கடவுள் குறித்து முடிவாகக் கூறுதலைத் தள்ளிப்போடும் கண்ணோட்டம். இக்கோட்பாட்டின் தலைசிறந்த உதாரணமாக பெர்ட்ரண்ட் ரஸ்ஸலைக் கூறுவர்.

அப்பா அப்படிச் சொல்லியிருப்பார். இவை செவிவழிச் செய்திகள். அனுபவம் மூலமாகக் கடவுள் உண்டு என்று சொன்ன மிகுதொன்மைக்கால மனிதனை நீ கண்டறிய முடியாது.

இந்து மதம் சாஸ்திரப் பயிற்சியை இருவகைப் படுத்துகிறது.—ஸ்ருதி, ஸ்ம்ருதி. சுருதி என்றால் கேட்ட விஷயம். நம் சாஸ்திரங்கள் எல்லாம் கேட்டே கற்றவை. குரு சொல்வார், சீடன் கேட்பான். ஸ்ம்ருதி (ஸ்மரணை) மனப்பாடம் செய்யப்பட்ட விஷயம்.

நீ இரண்டையும் கைவிடு. காதால் கேட்டுக் கற்றும், பிறகு கற்றதை மனப்பாடம் செய்தும் நீ சத்தியத்தை அடைய முடியாது. சுருதி, ஸ்ம்ருதி விலகியதும் திரை விலகிவிடும். சத்தியம் எதிரில் காட்சி அளிக்கும். சத்தியம் எப்பொழுதும் உன்னுடன்தான், உன் எதிரிலும் உன்னைச் சூழ்ந்தும் நிற்கிறது. இந்த மரங்களில், இந்தக் காற்றில், மனிதர்களில், பறவைகளில் விலங்குகளில் சத்தியம் நிற்கிறது. கடவுள் என்னும் மகாசத்தியம் நூற்றுக் கணக்கான வடிவங்களில் வெளிப்படுகிறது. ஆனால் நீயோ வீடெனும் குகையில் உட்கார்ந்து ஊசிப்போன சாஸ்திரங்கள் கொண்ட நூல்களைப் புரட்டுகிறாய். அவற்றில் சத்தியத்தைத் தேடுகிறாய். புத்தகத்தை மூடு. வெளியே எட்டிப்பார். சூரியனின் கிரணங்களில் சத்தியம் ஒளிவீசுவதைக் காண்பாய். சத்தியம் காற்றில் கலந்துவந்து உன் வீட்டுக் கதவைத் தட்டும் ஒலியைக் கேட்பாய்.

'எனக்குக் கடவுளின் இருத்தல் பற்றித் தெரியாது' என்று ஒப்புக் கொண்டதும், நீ இது குறித்துத் தெரிந்துகொள்வதற்காக முதலடி எடுத்துவைத்துவிட்டதாக அர்த்தமாகும். ஆத்திகர்களும் நாத்திகர்களும் சுய அனுபவமின்றிக் கூறுகின்ற கருத்துகளை நீ பின்பற்றத் தயார் இல்லை என்று அர்த்தமாகும்.

'நான் ஆன்மிகத்தில் பூஜ்ஜியம்' என்று அறிவித்துவிடு. அப்போது ஞானத்தின் முதல் கிரணம் உனக்குள் இறங்க வழி கிடைக்கும். இந்த அளவிற்கு அடக்கமானவர்களின் வாழ்க்கையில்தான் ஞானக் கிரணம் இறங்குகிறது. 'எனக்குக் கடவுளைப் பற்றித் தெரியாது' என்று ஒருவன் ஒப்புக்கொண்டதும், கடவுள் அவன் மீது இரக்கப்பட்டு அவனது உள்ளக் கதவைத்

தட்டுகிறார். ஆனால் தங்களுக்குக் கடவுளைப் பற்றி எல்லாம் தெரியும்போல் நடந்துகொள்கிற பண்டித அறிஞர்களின் உள்ளத்தில் ஞான கிரணங்கள் நுழைவதில்லை.

### மூன்றாம் கேள்வி

**ஓஷோ! உங்களை என்னிடம் இரக்கம் காட்டுமாறு வேண்டுகிறேன். எனது அறியாமை காரணமாக வெட்கத்துடன் முகத்தை மூடியபடி இங்கே வந்துள்ளேன். நான் செய்த பாவங்கள் என்னை நடக்கவிடவில்லை. இது என்ன நிலைமை?**

என் முன்னிலையில் முகத்தைக் காட்ட முடியாதவன் கடவுளின் எதிரில் மட்டும் எப்படி முகம் காட்டுவாய்? காண்பிப்பதற்கு உன்னிடம் எத்தகைய முகம் உள்ளது? உனக்கு அநேக முகங்கள். அனைத்தும் முகமூடி தரித்துள்ளன. அவை அனைத்தையும் கைவிட்டாக வேண்டும். பிறகு கடவுளுக்கு அர்ப்பணிக்க உன்னிடம் என்ன மிஞ்சியிருக்கும்? உன் கடந்த கால வாழ்க்கையில் என்ன சாரம் இருந்தது? கடவுளுக்குச் சார்த்த உன்னிடம் என்ன பூ இருக்கிறது?

செடிகளின் பூக்களைச் சார்த்துவதால் உன் பூஜை முடிந்துவிட்டதாகவா நினைக்கிறாய்? இயற்கை அன்னையின் உலகில் பூஜை நடக்கையில் நீ குறுக்கிட்டு அதைக் கெடுத்துவிட்டாய். செடிகளில் பூக்கள் கடவுளின் பூஜையில் ஒன்றியிருந்தன. அவை உயிரோட்டமுடன் கடவுளின் திருவடிகளை அலங்கரித்தன. மணம் பரப்பின. காற்றில் நடனமாடின. நீ அவற்றைப் பறித்துக் கொன்றுவிட்டாய். மணம் சிதறி வீணானது. செத்த பூவை நீ கடவுளின் பாதங்களில் தூவினாய். ஏற்கெனவே மண்ணாலும் கல்லாலும் செதுக்கப்பட்ட சிலைகள் உயிரற்று ஜடமாக உள்ளன. அவற்றிற்கேற்றபடி உன் பூஜையும் இருக்கவேண்டுமென நினைத்து நீ பூக்களைப் பறித்து, உயிரை நீக்கி, ஜடமாக்கியபின் சமர்ப்பிக்கிறாய்.

நீ உனது ஆத்மாவைத்தான் பூவாக இடவேண்டும். உள்ளக் கமலமாகிய அதைத்தான் அளிக்க வேண்டும். புத்தரும்,

அஷ்டாவக்ரரும், கபீர்தாசரும், குரு நானக்கும் இந்தப் பூவைத்தான் சமர்ப்பித்தனர். நீ உன் ஆத்மாவையே பூமாலையாகக் கடவுளுக்குச் சார்த்தினால் நீயே கடவுளின் ஓர் அம்சம் ஆகிவிடுவாய்.

நீ கடவுளிடம் உன்மீது இரக்கம் காட்டுமாறு வேண்டுகிறாய். நீ பிச்சைக்காரனைப்போல் கெஞ்சுகிறாய். நீ அரசனைப்போல் அவரிடம் உரிமையுடன் எதையும் கேட்க வேண்டும். எதையும் கேட்டுப் போகிறவன் கடவுளை நெருங்க முடியாது. (தன்னையே) கொடுக்கப் போகிறவன்தான் கடவுளை நெருங்க முடியும்.

நீ எதையாவது எடுத்துக்கொண்டு கடவுளை சந்திக்கச் செல். உனது வாழ்க்கையில் எதையாவது படைத்து அதை சமர்ப்பிக்கச் செல். நீ படைத்ததன் நறுமணம் அவரைச் சென்றடையட்டும். பஜன், நடனம், கவிதை, சமாதி, தியானம், அன்பு இப்படி எதையாவது கொண்டு செல். வெறுங்கையுடன் கடவுளின் திருச்சபைக்குச் செல்லாதே. சமூகத்திலும் வெறுங்கையுடன் போனால் அப்படியே திருப்பி அனுப்பப்படுவோம். ஆனால் கையில் அன்பளிப்பு கொண்டுசென்றால் பல மடங்கு திருப்பிக் கிடைக்கும்.

நீ இங்கு உன் கால்களால் நடைபோடுவதில்லை. பிறரால் தூக்கிச் செல்லப்படுகிறாய். கண்ணாடியில் பார். உன் முகத்தில் மரணக்களைதான் தெரிகிறது. நீ இறப்பதைத் தவிர உலகத்தில் தினமும் ஒழுங்காகச் செய்யும் வேறு வேலை என்ன? தினமும் இறக்கிறாய்; ஆனால் வளர்கிறேன், வாழ்கிறேன் என்று சொல் கிறாய். நீ பிறந்த அன்றிலிருந்தே இறக்கத் தொடங்கிவிட்டாய். நீ வாழ்க்கையை ஆடி-பாடி கொண்டாடினாயா? திருவிழாவில் கலந்து கொள்வதுபோல் வாழ்க்கையைக் கழித்தாயா?

நீ கூட்டத்தால் தள்ளிக்கொண்டே செல்லப்படுவது சரியன்று. இதை மாற்ற முடியும். இதற்கொன்று செய்ய வேண்டும். பிரார்த்தனை மட்டும் செய்வதால் பலன் விளையாது. பிரார்த்தனை என்பது வேண்டுகோள்களின் பட்டியல்தானே. அதில் பிச்சைக்காரத்தனம் மறைந்துள்ளது. நீ வாழ்க்கையைப் பற்றிய உன் கண்ணோட்டத்தை முழுமையாக மாற்றிக்கொள்ள வேண்டும்.

கடவுளை ஆதாரமாகக் கொண்டு வாழ்வதைப் பற்றி சிந்திக்காதே. நீ உன்னை மாற்றிக்கொள். உன்னை உன் வசப்படுத்து. இது உன்னால் முடியும். நரகத்திற்குப் பயணம் செய்யக்கூடியவன் சுவர்க்கத்திற்குப் பயணம் செய்ய முடியாதா? பாவச் செயல்களைப் புரிபவன் புண்ணியச் செயல்களைப் புரிய முடியாதா? தீயவை அல்லது நல்லது செய்வதற்கான அடிப்படை சக்தி ஒன்றுதான். உன்னுள் இருக்கும் ஆற்றலைத் தவறாகப் பயன்படுத்தினால் உன் முகம் களை இழப்பதைப்போல், நற்செயல் புரிந்து உன் முகம் ஒளிவீசச் செய்யவும் முடியும்.

வாழ்க்கையை உன் கையில் எடுத்துக்கொள். பிரார்த்தனையை நீ தப்பிப்பதற்கான சாக்காக எடுத்துக்கொள்ளாதே. 'பிரார்த்தனை செய்தேன். என்னை மாற்றியமைக்கும்படி கடவுளிடம் வேண்டினேன். அவர் என்னை மாற்றவில்லை. இதற்குமேல் நான் செய்வதற்கு என்ன இருக்கிறது?' என்று புலம்பாதே. நீ உன்னை மாற்றும் பொறுப்பைத் தள்ளிவிட்டு, அப்படியும் நீ மாறாததால், அவர்மீது பழியைப் போட்டுவிட்டு அப்பாவிபோல் உன்னைக் காட்டிக்கொள்கிறாய். இதற்கு அர்த்தம் நீ அடிப்படையில் மாறவில்லை என்பதுதான்.

உன் பிரார்த்தனை பெரும்பாலும் உன் பொறுப்பைத் தட்டிக் கழிக்கவே பயன்படுகிறது. நீயாக எதுவும் செய்யத் தயாராக இல்லை. கடவுளுக்கு சவால் விடுகிறாய். 'எங்கே, என்னை மாற்றி அதிசயம் நிகழ்த்து' என்று கேட்பதுபோல் உன் பிரார்த்தனை அமைகிறது. ஆனால் கடவுள் இந்த அதிசயத்தை நிகழ்த்திய தில்லை, நிகழ்த்தப் போவதுமில்லை. உன்னை மாற்றிக்கொள்ள உனக்கு முழு சுதந்திரம் தரப்பட்டுள்ளது. வாழ்க்கையில் உல்லாசமாகப் பாடிக்கொண்டே செல்ல உனக்கு சுதந்திரமுள்ளது.

மொழியிலுள்ள எழுத்துகளைக் கொண்டு வசவுச் சொற்களும் கூறமுடியும்; துதிப்பாடலும் இயற்ற முடியும். சொற்களை மாற்றிப்போட்டு பாவம்-புண்ணியம், போகம்-யோகம் என்று எதையும் உருவாக்கலாம்.

சந்நியாசம் என்பது தற்போதுள்ள ஏற்பாட்டை மாற்றி அமைப்பதுதான். .நீ இல்லறத்தானாக இருந்து வாழ்க்கையைப்

பார்த்தாகிவிட்டது. அடுத்து, சந்நியாசியாக இருந்து வாழ்க்கையைப் பார். உன்னிடம் ஏற்கெனவே உள்ள எதிலும் குறையில்லை. சொற்களை மாற்றிப் போடுவதுபோல், உன் வாழ்க்கையில் புதிய மாற்றம் கொண்டுவர வேண்டும்.

உதாரணமாக, ஹார்மோனியம் ஒன்று வைக்கப் பட்டிருக்கிறது. சங்கீதம் தெரியாத ஒருவன் அதை வாசிக்கிறான். விரல்கள் சரியாக உள்ளன. ஹார்மோனியத்தில் பழுதில்லை. விரல்களும் அக்கம் பக்கமாக ஓடுகின்றன. ஓசையும் எழுகிறது. தெருவில் உள்ளவர்கள் இந்த வாசிப்பால் பைத்தியம் பிடிக்கும் அபாயம் உள்ளதென போலீசில் புகார்செய்கிறார்கள்!

என்ன குறை? ஹார்மோனியம் வாசிக்கப் பயிற்சி தேவை. சுரங்கள், அவற்றை இணைத்தல் முதலியவை கற்க வேண்டும். எந்த ஒலி சாதாரணமானவனையம் பைத்தியம் பிடிக்கச் செய்யுமோ அதே இசை வித்தகன் கையில் வெளிப்பட்டு மனக்கோளாறு உள்ளவர்களைக் குணப்படுத்தும்.

இசையின் மருத்துவப் பயன்பாடு குறித்து, இசையும் ஒருவகை மருத்துவமே என்பது குறித்து ஐரோப்பாவில் ஆராய்ச்சி நடக்கிறது. எதிர்காலத்தில் இசை மூலம் பைத்தியம் பிடித்தவர் களுக்கு சிகிச்சை மேற்கொள்ளும் சாத்தியக்கூறு உள்ளது. ஏனெனில் அது உள்ளத்தை அமைதிப்படுத்துகிறது. மன இறுக்கத்தைத் தளர்த்துகிறது. சங்கீதம் மனிதனின் ஆரோக் கியத்திற்கு உதவக்கூடும்.

வாழ்க்கையெனும் வீணையை மீட்டத் தெரிந்தவனை நான் சந்நியாசி என்பேன். சந்நியாசி தனது வாழ்க்கை வீணையை வாசிப்பதில் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றுவிட்டால், அவர் கடவுளை நோக்கிச் செல்லவேண்டியிருக்காது. கடவுளே அவரிடம் வருவார். நீ ஆன்மிகத்தில் முழுமை பெற்று, பக்குவமடைந்து, உனது தியானம் நறுமணம் பரப்ப, உனது ரோமங்களில் இசை நிறைந்தால், அப்போது ஆனந்த வெள்ளம் பெருகும். இந்த சூழ்நிலையில் கடவுள் உன்னிடம் எப்படி வராமலிருப்பார்?

பூ மலர்ந்தால் வண்டு தானாகவே அதைத் தேடி வரும். உன் உள்ளக் கமலம் மலர்ந்தால் கடவுள் உன்னை நாடி வருவார்.

கடவுள் அவ்வாறு உன்னைத் தேர்ந்தெடுத்தால் உனக்குள் புரட்சி நிகழ்கிறது. சாதாரண இரும்புபோன்ற உன் ஆளுமை அவரது பாதரசம் (திருவடி ரசம்) பட்டுத் தங்கமாக மாறுகிறது. கடவுளை வரவழைப்பது உன் கையில்தான் உள்ளது. சொற்களால் (மந்திரங்களால்) அழைத்தால் பயனில்லை. உனது வாழும் முறையே அவரைக் கவர்ந்திழுப்பதாக அமைய வேண்டும்.

எனது வாழ்க்கை சிதறிவிட்டது
நீ பாதரசம் நான் இரும்பு
என்னை நீ ஸ்பரிசித்தால்
தங்கமாய் என்றும் மின்னுவேன் நான்

நீ அமிர்தம் நானோ நஞ்சு
உனது திருவடி திருப்தியின் உறைவிடம்
ஆசைத் தாகம் என் நிரந்தரத் தோழி
உடலும் மனமும் வாழ்க்கையும் பட்டினி
வயல்கள் எல்லாம் உலர்ந்து காய்ந்தன
மேகமாய் வந்து பொழிக நீ இங்கு

எனது திறமை புகழைத் தேட
எனது கற்பனை பணம் தேடியது
எனது மனத்தைக் காவலராய்
காமமும் குரோதமும் காத்து நின்றன
மனம் பேராசையின் வாழ்விடமானது
சுய அறிவில்லை உலகமும் அறியேன்
மேடையின்றியே நடிக்கும் எனக்கு
இயக்குநராக நீ அமைந்தால்
சத்திய தரிசனம் நான் பெறுவேன்

நூலற்ற ஊசிபோல் ஆனது வாழ்க்கை
எதையும் தைக்காமல் வீணாய்ப் போனது
அறுந்த பட்டமாய் ஆனது வாழ்க்கை
ஆசை காட்டியும் கைக்கு வரவில்லை

பருவநிலை படுமோசம்
பாதையோ மகாகடினம்
அருட்சோதியே வழிகாட்டு

நீர்க்குமுழியும்கூட உடைந்து
கரையற்ற கடலில் கலந்துவிட்டது

**ஏனோ நான் பூபோல் உதிர்ந்து**
**மண்ணில் கலக்கவில்லை**

**எத்தனை காலம்தான் பொறுப்பேன் இன்னும்**
**பிரபு, என் வாழ்க்கை லீலையை முடித்துவைத்திடு**
**நீ வரும்போது கண் திறக்க முடியாதபடி**
**களைப்பில் என்னை ஆழ்த்தாதே**

கடவுள் தேர்ந்துதான் எடுக்கிறார். ஆகவே அதற்குரிய தகுதியை வளர்த்துக்கொள். சமாதி நிலை பழகு. பிரார்த்தனையைக் கைவிடு. யாசிப்பதைக் கைவிடு. ஒரு நீர்மத்தை (திரவத்தைப்) பிடித்து வைக்க பாத்திரம் தேவைப்படுவதுபோல், கடவுளின் அருளமுதத்தைப் பெற்றுத் தக்கவைத்துக் கொள்ள நீயும் பொருத்தமான பாத்திரமாகு.

## நான்காம் கேள்வி (கேட்பவர் சுவாமி அரவிந்த யோகி)

**ஓஷோ அவர்களே! என் பூர்வாசிரம குடும்பத்தினரும், என் ஊர் மக்களும் என்னைக் கிறுக்கன் என்கிறார்கள். இதனால் மனத்தில் தர்மசங்கடமாக உள்ளது. மக்களின் பேச்சால் என் மன அமைதி கெடுகிறது. இந்த நிலையை எதிர்கொள்வது எப்படி?**

**நீ** ஏற்கெனவே துறவியாகிவிட்டாய். பிறகு மக்கள் உன்னைப் பற்றி என்ன வேண்டுமானாலும் சொல்லட்டுமே. அவர்கள் உன்னைக் கிறுக்கு என்றால் அது சந்நியாசியாகிய உன்னை ஏன் உறுத்துகிறது? பைத்தியம் என்றால் ஏதோ குற்றவாளியா? நீயும் சாதாரண மக்களைப்போல் சிந்திக்கலாமா? பிறகு உன் மதிப்பீடுகளுக்கும் மக்களின் மதிப்பீடுகளுக்கும் நடுவில் என்ன வேறுபாடு?

நீ பைத்தியமாக ஆனது உன் அதிர்ஷ்டம். உன்னை அவ்வாறு கேலிசெய்வோருக்கு நன்றி கூறு. ஏனெனில் உனக்கு ஏற்பட்டது கடவுளின்மேல் பித்து. மக்களும் கிறுக்குகள்தாம். அவர்கள் பணப்பைத்தியமாக, பதவிப் பைத்தியமாக, புகழ்ப் பைத்தியமாக உள்ளனர். அவர்களுக்கு அற்ப விஷயங்களில்

பைத்தியம் பிடித்திருக்கிறது. நீ அர்த்தமுள்ள ஒன்றைக் குறித்துப் பைத்தியமாக உள்ளாய்.

நீ பயப்படாதே. கவலைப்படாதே. ஆனால் நீ மன அமைதியை இழக்கிறாயெனில் நீ இன்னும் முழுமையாகப் பக்குவம் பெறவில்லை என்றாகிறது. அது உன்னிடம் மேலோட்டமாகவே காணப்படுகிறது.

நீ அமைதியாக இரு. உலகமே திரண்டெழுந்து உன்னைப் பைத்தியம் என்றாலும் உன் மனக்கடலில் சிறு அலைகூட எழக்கூடாது. உனது புன்னகை மறையக்கூடாது. உனது ஆனந்தம் சிதையா வண்ணம் காப்பாற்றிக்கொள்.

நீ ஊர்மக்களைப் பார்த்து, "நான் உங்களுக்குக் கடமைப்பட்டுள்ளேன். எனக்கு நினைவூட்டினீர்கள். நான் இன்னும் முழுப்பைத்தியம் ஆகவில்லை. நீங்கள் அந்த எண்ணத்திற்கு வலுவேற்றினீர்கள். உங்கள் ஆசியால் நான் சிறிது காலத்தில் முழுமையான இறைப் பைத்தியம் ஆகிவிடுவேன் என நம்புகிறேன்," என்று அடக்கமாகக் கூறு.

அப்போது நீ ஆச்சரியப்படுவாய். ஊர்மக்கள் உன்னை வணங்கத் தொடங்குவார்கள். அவர்கள் உன்னைப் பைத்தியம் என்றபோது நீ தடுமாறியிருந்தால், உன் கதை அத்துடன் முடிந்திருக்கும். நீ என்றும் துறவி ஆகியிருக்கமாட்டாய். நீ உறுதியாக நின்றால், அவமானத்தைப் பொறுத்துக்கொண்டால், அவர்கள் யோசிப்பார்கள். அவர்களுக்கும் கொஞ்சமாவது அறிவு இருக்கிறது. தங்களுக்குள் உன்னைப் பற்றிப் பேசுவார்கள்.

"இவனைப் பைத்தியம் என்கிறோமே. அது ஒருவேளை தவறோ? இவன் கிறுக்கு என்றாலும் விசேஷமான கிறுக்கு போலிருக்கிறதே," என்று குழப்பமடைவார்கள். உன் மேதைமை, உன் தேஜஸ் சிறிது சிறிதாக அவர்களைக் கவரும். முன்பு உன்னைப் பார்த்து ஓடியவர்கள் நெருங்கிவந்து பக்கத்தில உட்காருவார்கள். அடுத்து, உன் பாதம் தொட்டு வணங்குவார்கள். கடைசியில் சிலர் தங்களை உன் சீடராக ஏற்கும்படி கேட்டுக் கொள்வார்கள்!

முதலில் உன்னை எதிர்த்தவர்கள் பிறகு அலட்சியப்படுத்தி விலகி நிற்பார்கள். உன்னை அலட்சியம் செய்தவர்கள் கால ஓட்டத்தில் உன்னிடம் ஆர்வம் கொள்வார்கள். அந்த ஆர்வலர்கள் சில காலம் கழித்து உன்னை வணங்கத் தொடங்கு வார்கள்.

இப்படித்தான் எப்போதும் நடக்கிறது. எனவே எதற்கும் பயப்படாதே. ஊர்மக்கள் உன்னைக் கேலிசெய்வதையும் பழிப்பதையும் அவர்கள் உனக்கு வைக்கும் தேர்வாக நினைக்கலாம். அவர்களது விமரிசனம் ஓர் உரைகல்லாகும். இத்தேர்வில் நீ வென்றால் அவர்கள் உனக்கு பூஜையே செய்வார்கள். இவ்வாறு அவர்கள் உனக்கு மறைமுகமாக நன்மையே செய்கிறார்கள்.

**ரோமம் தோறும் மல்லிகை மலர்க**
**மூச்சுத் தோறும் செண்பக மணம்**
**தோலின் துளைகளில் பூங்கொடி தோன்றுக**

**அவயவம் தோறும் முல்லை ஆகுக**
**காலடி தோறும் கடல் அலை தழுவுக**
**பாதை தோறும் கதம்பம் பரவுக**

**இடிந்துகிடந்த என் வீடு**
**உன்னால் மாறியது மாளிகையாய்**
**விளக்கின்றியே ஜொலித்தது அது**
**கிழிந்த எனது பழைய சட்டை**
**நட்சத்திரம் பதித்த நீலப்பட்டானது**

**அனைத்து இன்பமும் உள்ளங்கையில்**
**துன்ப கோபுரங்கள் இடிந்து வீழ்ந்தன**
**நேற்றுவரைக்கும் கிண்டல் பேச்சு**

நீ ஊராரின் ஏச்சுப் பேச்சுக்கு அஞ்சாமல் சந்நியாசி ஆகிவிட்டாய். உண்மையாகவே முழுமையான இறைப்பைத்தியமாகிவிடு. திரும்பிச் செல்லாதே. கோழைதான் புறமுதுகு காட்டுவான். சந்நியாசியோ, மாவீரன். அவன் குன்றுபோல் உறுதியாகத் தன் லட்சியத்தில் நிற்பான்.

சந்நியாசத்தைவிட வீரமான நடவடிக்கை உலகில் வேறு கிடையாது. ஏனெனில் குடும்பஸ்தர்கள்தாம் உலகில்

பெரும்பான்மையோராக, பெருங்கூட்டமாக இருக்கிறார்கள். கூட்டத்தைவிட்டு விலகித் தனிமனிதனாவது என்பது சாதாரண விஷயமில்லை. கூட்டம் நீ எடுத்த முடிவை ஆதரிக்காது. நீயும் மற்றவர்களைப் போலவே இருக்க வேண்டுமெனக் கூட்டம் எதிர்பார்க்கிறது. எல்லோரையும் போலவே உடையணிதல், எழுதல், உட்காருதல், நடத்தல், பழக்கங்கள் கொண்டிருத்தல் முதலியவற்றை உன்னிடம் எதிர்பார்க்கிறது. நீ சுதந்திரமான போக்கை மேற்கொண்டால் சமூகத்தால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியாது. உன் சுதந்திரமான போக்கு அவர்களை மட்டம் தட்டுவதுபோல் அவர்களுக்குத் தோன்றுவதால் சமூகத்திற்கு உன் மீது கோபம் மூள்கிறது.

இயேசுநாதர் விஷயத்தில் இப்படித்தான் நடந்தது. தனிமனிதரான அவரது போக்கு சரியெனில், தங்கள் கதியென்ன என்று மீதிப்பேர் யோசித்தார்கள். நாம் எல்லோரும் குற்றவாளிகளா என்று கோபம் கொண்டார்கள். ஆகவே அவர்கள் இயேசுவைச் சிலுவையில் தொங்கவிட்டனர். தங்களைக் காப்பாற்றிக்கொள்ள வேறு வழியின்றி அவ்வாறு செய்தனர். அவரைத் தண்டிப்பதில் மக்களுக்கு விசேஷ ஆர்வம் இல்லை. அவர்களின் கோபத்திற்கு காரணம், இயேசுவின் வாழ்க்கை சரி என்றால் நாம் ஒட்டுமொத்தமாக முட்டாளகளாகி விடுகிறோம் என்ற தர்க்கம்தான். இயேசு ஜனநாயகத்திற்கு, பெரும்பான்மை யோரின் ஆட்சிக்கு எதிராகச் செயல்பட்டவர்போல் தெரிந்தார். 'இயேசுவைச் சிலுவையில் அறை. தொல்லை நீங்கிவிடும். இந்த ஆள் இருக்கும்வரை தொந்தரவுதான்' என்று அவர்கள் முடிவெடுத்தனர்.

ஆனால் சிலுவையில் அறையப்பட்ட போதிலும் இயேசுவின் கம்பீரமும் தெய்விகமும் குறையவில்லை. அப்போது அவர், 'பரமண்டலத்திலிருக்கும் பிதாவே! இவர்களை மன்னியுங்கள். தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை இவர்கள் அறிந்திருக்கவில்லை,' என்று பிரார்த்தித்தார்.* அப்போதுதான் அங்கு திரண்டிருந்த மக்கள் தாங்கள் தவறிழைத்ததை உணர்ந்தார்கள். நம்மை உயிர்ப்பிக்க வந்தவரை நாம்

* Father, forgive them; for they know not what they do. (The Bible)

கொன்றுவிட்டோமே என வருந்தினார்கள். காலப்போக்கில் இயேசு வணங்கப்பட்டார். இன்று உலக நாடுகள் எல்லாவற்றிலும் பெரும் எண்ணிக்கையில் மக்கள் அவரை வழிபடுகிறார்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் செய்த தவற்றுக்கான பிராயச்சித்தம் இப்போதும் தொடர்கிறது.

வர்த்தமான மகாவீரரை வழிபடுவோரின் எண்ணிக்கை அதிகமில்லை. ஏனெனில் அவருடைய சமகால இந்தியர்கள் அவரைக் கொடுமைப்படுத்தவில்லை. பிராயச்சித்தம் செய்ய வேண்டிய தேவை எழவில்லை. அவரை நாம் கழுவில் ஏற்றவில்லை.

இயேசுவைச் சிலுவையில் அறைந்தவர்கள் ஆழமாகத் தங்கள் தவற்றை உணர்ந்தார்கள். ஆகவே அதற்கேற்ற அளவில் பிராயச்சித்தம் செய்ய விரும்பினார்கள். உலகெங்கும் சர்ச்சுகளைக் கட்டினார்கள். இயேசு இன்று அதிகமாக பூஜிக்கப்படுவதற்குக் காரணம் அவருக்குத்தான் அதிகபட்சக் கொடுமை இழைக்கப்பட்டது. கிறிஸ்தவம் உலக நாடுகளை வென்றுகொண்டே சென்றது. முக்கிய காரணம் சிலுவைதான்.

நீ பயப்படாதே. மக்கள் உன்மீது கல் எறிந்தாலும் பொறுத்துக்கொள். இயேசுநாதர்போல் நீயும் அந்த மக்களை மன்னிக்குமாறு கடவுளிடம் வேண்டு. அல்லது மக்கள் உன் மனவுறுதியைச் சோதிக்கிறார்கள் என்று அர்த்தம் எடுத்துக்கொள்.

நீ முழுமையான இறைப் பைத்தியமாகிவிடு. இதனால் மற்றவர்கள் என்ன சொன்னாலும் செய்தாலும் பொருட்படுத்தாத நிலைக்குச் செல்வாய். நீ சாதாரணப் பைத்தியமாக இருக்கும்போது உன்னை வீட்டைவிட்டு விரட்டிவிடுவார்கள். ஆன்மிகப் பைத்தியமானால் கடவுள் தன் வீட்டிற்குள் உன்னை அழைப்பார்.

## ஐந்தாம் கேள்வி (கேள்வி கேட்பவர் தௌலத்ராம்)

**ஓஷோ அவர்களே! சாஸ்திரங்களும் ஞானியர்களும் கூறுகின்றபடி ஆன்மிகப் பயிற்சி பெறும் சாதகன் பிறன் மனைவியை விரும்புவதால் களங்கப்படுவான் என்றும்,**

**அவனுக்கு ஆன்மிக முன்னேற்றம் கிடைக்காதென எச்சரிக்கின்றன. இந்த விளக்கம் சரியானதா?**

**இ**து தவறான விளக்கம். இங்கே கூறப்படுவது உடலால் பெண்ணாக இருப்பவளல்லள். இதைப் பிறகு பார்ப்போம். முதலில் மேலோட்டமான அர்த்தத்தைக் கவனிப்போம்.

சாஸ்திரங்களில் எழுதப்பட்டுள்ளன; ஞானிகள் கூறுகிறார்கள் என்கிறாய். சாஸ்திரங்களை எழுதியவர்கள் ஞானிகளல்லர். எழுத்தாற்றல் மட்டுமே பெற்றவர்கள். அவர்களின் சமகால சூழ்நிலை நமக்குத் தெரியாது. ஞானி எனப்படுபவர் எவனெல்லாம் இன்னொருவனின் மனைவியை நாடிச் செல்கிறான் என்றா கணக்குப் போட்டுக்கொண்டிருப்பார்? அது போலீஸ்காரரின் வேலை அல்லவா? அப்படி ஞானி எவராவது கூறியிருந்தாலும் அவரது ஞானம் முழுமையடையவில்லை என்றே அர்த்தம்.

சரி, பிற பெண் யார்? நீ ஒரு பெண்ணுடன் ஏழு முறை அக்னியை வலம் வந்தால் அவள் உனக்குச் சொந்தமாகி விடுவாளா? பெண் என்பவள் அவ்வளவு மலிவா? ஆனால் நம்நாட்டில் இத்தகைய மூடத்தனம் வேரூன்றியுள்ளது. இதனால்தான் சீதனம் (ஸ்திரீதனம்) என்ற சொல் உண்டானது. பெண்ணே ஒரு சொத்து என்ற கருத்து அவளை சடப்பொருள்போல் பார்க்கும் கண்ணோட்டத்தை ஏற்படுத்தியது. சொத்து எனில் அதை உரிமையாக்கிக் கொள்வது மனித சுபாவம்தான். ஞானி இத்தகைய கண்ணோட்டம் உடையவராக இருக்கமாட்டார். 'இங்கே யார்-யாருக்குச் சொந்தம்?' என்று கேட்டு, 'யாருக்கும் யாரும் இல்லை' என்று பதிலளிப்பார். பிற பெண்களை நெருங்குதல் பற்றிய எச்சரிக்கையை சாஸ்திரக்காரர்களும், மதத் தலைவர்களும்தான் விடுப்பார்களே தவிர, ஞானி இந்த விஷயத்தில் தலையிடமாட்டார். ஒருவனுக்கு அவன் மனைவிகூட சொந்தமானவள். இல்லை என்பார். உனக்கு சமூகம் திருமணம் செய்வித்தபோதிலும் அவ்வள் அடிப்படையில் உன் போகப் பொருள் இல்லை. அவளை அனுபவிப்பதால் மட்டும் உன் ஆன்மிகம் பாதிக்கப்படாதா?

ஒருவர் என்னிடம் வந்து தன் மனைவியைப் பற்றி புகார் செய்தார். இவளால் தன் வாழ்க்கை சிக்கலாகிவிட்டது என்றார்.

"நீங்கள் என்னிடம் பலமுறை இதே புகாரைக் கூறியுள்ளீர்கள். நீங்களும் சந்தோஷமாக இல்லை; உங்கள் மனைவியும் சங்கடப்படுகிறாள். இந்த பந்தத்திலிருந்து வெளியேறுங்கள்," என்று ஆலோசனை கூறினேன்.

"எப்படி வெளியேறுவது? அவள் கைப்பிடித்து ஏழு முறை அக்னியை வலம் வந்திருக்கிறேனே."

"அதனாலென்ன? மறுபடியும் அவள் கைப்பிடித்து அக்னியை இடது-வலதாக, அப்பிரதட்சணம் செய்துவிடுங்கள்," என்றேன்.

அவர் என்னை முறைத்துவிட்டுப் போனார். எந்த முடிச்சையும் அவிழ்க்க முடியும். முடிச்சு துன்பம் கொடுத்தால் நெகிழ்த்தி அவிழ்த்துவிடு.

ஞானியைக் கேட்டால், 'உனக்கென்று யாருமில்லை. நீதான் உனக்கு உரியவன்' என்பார். பிறனில் விழைதல் என்பதை பரஸ்த்ரீகமனம் என்று சொன்னவர்கள் பிற்காலத்தவர். முதலில் வழங்கிய சொல், ஞானிகள் கூறும் சொல் பரகமனம். இது பெண்ணுடன் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. பர+கமனம் எனில் பிறரிடம் செல்லுதல், பிறருடன் தொடர்புகொள்ளல், எதற்கும் பிறரைச் சார்ந்திருத்தல், பிறரைத் தனக்குரியவராக நினைத்தல், பிறரை முக்கியமானவராகக் கருதுதல் என்றெல்லாம் பொருள்படும். இது குடும்ப வாழ்க்கை நடத்துபவருக்கு உதவலாம். ஆனால் பர கமனம் சாதகருக்கு இடையூறாக அமையும்.

இன்னும் நுணுக்கமாகச் சொல்லலாம். பர கமனம் (வெளிநாட்டம்) கூடாது என்று தடுத்த ஞானிகள் சொல்லாமல் விட்டது ஸ்வ கமனம் (சுய கமனம், உள்நாட்டம்) என்பதாகும். அதாவது, வெளியே போனால் கெட்டுப்போவாய்; ஆகவே உள்ளே போ என்பதாகும். சாதகன் தனக்குள் பயணிக்க வேண்டும். வெளியுலகில் பிறருடன் ஒட்டிக்கொள்ளும் சாதகன் தன்னுடனான தொடர்பை பலப்படுத்திக்கொள்ள முடியாது.

எல்லோர் நடுவிலும் இரு; ஆனால் தனியாக இரு; ஒட்டிக்கொள்ளாமல் இரு. கூட்டத்தின் நடுவில் இருந்தாலும் உன் தனிமை பாதிப்படையாமல் கவனித்துக்கொள். இன்னொருவன் உன்னருகில் இருந்தாலும், உனது சுயத்தின் (self) மீது அவனது நிழல் படரவிடாதே. உனது சுயம் சுதந்திரமாக நீடிக்கட்டும்.

உன்னால் உன்மீதே உரிமையை நிலைநாட்டிக் கொள்ள முடியவில்லை. உன் மனைவி என்றே, திருமணத்திற்கு முன் பழகியிராத, பெண்ணின் மீது உனக்கு உரிமை இல்லவே இல்லை. இந்நிலையில் பிறன் மனைவியைப் பற்றிய பேச்சு எப்படி எழுந்தது.

பர கமனம் என்பதை பரஸ்த்ரீ கமனம் என்று விஸ்தரித்தவர் ஞானி அல்லது மகானாக இருக்கமாட்டார். சாதாரண இலக்கண அறிஞராக அல்லது மடாதிபதியாக இருந்திருப்பார். இவர்களின் மூளையில் அறிவு நிரம்பியிருக்கும் என்றாலும், ஓரளவு வைக்கோலும் நிரம்பியிருப்பது உண்டு!

ஓர் அறிஞர் பாதையில் சென்றபோது பாடியபடியே, ஆடியபடியே சென்றார். சிறிது தொலைவு சென்றதும் அவர் தன்னைப் பின்தொடர்ந்து ஒரு பொலிகாளை வருவதைக் கண்டார். அது அவரது பாடலைக் கேட்டோ, ஆடுவதைப் பார்த்தோ பின்தொடர்ந்திருக்கிறது. அறிஞர் பயந்துபோனார். அவர் வேகமாக நடைபோட்டார். காளையும் வேகமாக அவர் பின்னாலேயே வந்தது. வழியில் தென்பட்ட இடிந்த சுவரைக் கண்டு அறிஞர் அதன் மேல் ஏறி நின்றார். காளை அப்படியே நின்றுகொண்டு உறுமியது. அது சுவரேற முடியவில்லை. அறிஞர் சுவரைவிட்டு இறங்க முடியவில்லை.

இதைக்கண்ட சிலர் காளையை விரட்ட முயன்றனர். அது அசைந்து கொடுக்கவில்லை. எவனாவது அருகில் சென்றால் அது கொம்புகளை பலமாக ஆட்டி பயமுறுத்தியது. மாட்டைக் காணோம் என்று தேடிவந்த அதன் சொந்தக்காரன் அதை இழுத்துச்செல்ல எவ்வளவோ முயன்றான். அது மசியவில்லை. ஒரு சிறுவனை அருகில் எங்கிருந்தாவது கொஞ்சம் வைக்கோல் எடுத்துவரச் சொன்னான். வைக்கோல் கிடைத்ததும் அதைக்

காண்பித்தபடியே காளையைத் தன் வீட்டிற்கு இட்டுச் சென்றான். விசாரித்தவர்களிடம் அவன், "அந்த அய்யாவோட மூளை பூரா அறிவால நிரம்பியிருக்கிறதா சொல்றாங்க. ஆனா இந்தக் காளை அவரோட தலையில வைக்கோல் நிரம்பியிருக்கிறதா நினைச்சு அவரைத் துரத்தியிருக்கும்," என்றான்.

நீ அறிஞர் என்று புகழ்கின்ற பலரின் மூளை இப்படித்தான் குப்பைத் தகவல்களால் நிரம்பியுள்ளது.

என் நோக்கிலும் பர கமனம் (பிறரைச் சென்றடைதல் சார்தல்) அழிவேற்படுத்தும். இங்கே ஆண்-பெண் உறவு பற்றிய பேச்சில்லை. தன்னைவிட்டு விலகினால் அழிவுதான். தன்னிலிருந்து வீழ்ந்தால் அழிவுதான். தன்னில் ஆழ்வது, ஆத்மாராம் ஆகிவிடுவது அதுவே சுகம் தரும். உன் உள்ளுலகத்திற்கு அப்பால் எதுவும் கிடையாது என்பது புரிந்தால் மோதலும் வீழ்தலும் தவிர்க்கப்படும்.

நீ பணவெறி கொண்டிருக்கிறாய். மகாத்மா பணம் பாவத்தின் சின்னம் என்கிறார். அவர் சொல்வது உனக்குச் சரியெனப்படுகிறது. சிறிதளவாவது பாவம் செய்யாமல் பணம் திரட்ட முடியாதென்று உனக்கே தெரியும். பிறரைச் சுரண்டினால் பணம் சேர்கிறது. பணம் கவலையைக் கொண்டுவருவது உனக்குத் தெரியும். பணத்தைத் துரத்தியபடி செல்லும் உன் முயற்சியில் நீ மனிதத் தன்மையை இழப்பதும் உனக்குத் தெரியும் பணம் சம்பாதித்தும் மனத்தில் அமைதியில்லை என்பதையும் நீ அறிவாய்.

ஆனால், பணம் அர்த்தமற்றது, சாரமற்றது என்று கூறும் அதே மகாத்மா உன்னை தானம் செய்யச் சொல்கிறார். "எவராவது மகாத்மாவுக்கு தானம் செய்," என்று கூறுகையில் அவர் தனக்குத்தான் தானம் தருமாறு மறைமுகமாகக் கேட்கிறார்! நீ அவருக்கு தானம் செய்தால் உன்னை தான வீரன், புண்ணியாத்மா என்று புகழ்கிறார். இதுவரை உன்னை நிற்கவைத்துப் பேசியவர் உனக்கு மரியாதை தந்து அவரெதிரே உட்காரச் சொல்கிறார். பணத்தில் சாரமில்லை என்னும் சந்நியாசியே பணம் தனக்கு வருமானால் மாறிவிடுகிறார்.

**நா**ன் பள்ளிக்கூடத்து மாணவனாய் இருந்த காலத்தில் ஒரு மகாத்மாவின் சொற்பொழிவைக் கேட்கச் சென்றேன். அவர் தமது முழு அறிவையும் பயன்படுத்தி 'பிரம்மஞானம்' என்னும் தலைப்பில் அற்புதமாக உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார். அப்போது எங்கள் ஊரில் முக்கியமான வர்த்தகரான காலுராம் சேட் உள்ளே நுழைந்தார். அவர் வருவதை நாங்கள் பார்க்க வில்லை. நாங்கள் மகாத்மாவை நோக்கியபடி அமர்ந்திருந்தோம். எனவே உரையின் நடுவில் "வாருங்கள், சேட்ஜி!" என்று மகாத்மா சொன்னதும் நான் திடுக்கிட்டேன். திரும்பிப் பார்த்ததும் எனக்கு விஷயம் புரிந்தது.

நான் ஊரில் விஷமக்கொடுக்கு என்று பெயர் வாங்கியவன். நான் எழுந்து மகாத்மாவை நோக்கி, "சுவாமிஜி, பிரம்ம ஞானம் சம்பந்தமான சூத்திரங்களை விளக்கினீர்கள். அதில் 'வாருங்கள் சேட்ஜி' என்றும் சூத்திரம் உள்ளதா? அதற்கும் அர்த்தம் கூறுங்கள்." என்று அப்பாவிபோல் கேட்டேன்.

"என்ன உளறுகிறாய்?" என்று மகாத்மா சத்தம் போட்டார்.

நான் விடவில்லை. "சுவாமிஜி! தாங்கள் பிரம்மஞானத்தில் லயித்திருந்தீர்கள். சேட்டு வந்ததும் பணக்காரர் வந்திருக்கிறார் என்பதைக் கவனித்து பிரம்மத்தை நடுவில் கீழே போட்டுவிட்டீர்கள். நாங்கள் இத்தனை பேர் உள்ளே வந்தபோது, நாங்கள் சாதாரணர்கள் என்பதால், எங்களை வரவேற்று ஒரு வார்த்தை சொல்லவில்லை. நீங்கள் பிரம்மஞானத்தை விளக்கும்போது, 'பணத்தில் அப்படியென்ன இருக்கிறது? வெறும் மண்,' என்றீர்கள். அப்படியானால் இந்த சேட்டிடம் குவிந்திருப் பதும் மண்தானே. ஓஹோ, எங்களிடம் உள்ளதைவிட அதிகமாக மண் இவரிடம் உள்ளதால் வரவேற்றீர்களா?" என்று கேட்டேன்.

மகாத்மாவுக்குக் கோபம் பொங்கியது. "இந்த போக்கிரி பயலை யார் உள்ளே விட்டது? இவனை வெளியில் விரட்டுங்கள்," என்று கத்தினார். நான் போலிப் பணிவுடன், "ஏன் கத்துகிறீர்கள்? கோபம் பொல்லாதது என்று சற்று முன்னால்தானே சொன்னீர்கள்," என்று கூறிவிட்டு வெளியே ஓடிவிட்டேன்.

இப்படி நான் பிரபலமானதால், எங்கள் ஊரில் மகாத்மா யாரும் வந்தால் என் பெற்றோர் என்னை வீட்டில் பூட்டிவிட்டுச் செல்வார்கள்! நான் வளர்ந்து பல்கலைக்கழகப் பேராசிரியரான பிறகும் என் பாட்டி என் போக்குக் குறித்துக் கவலைப்படுவார். நான் விடுமுறையில் ஊருக்கு வரும்போதெல்லாம் அவர் என்னிடம், "நீ உன் ஊர்ல ஒழுங்கா இருக்கியா? அங்கே சாது, மகாத்மா யாராவது வந்தா வம்புக்கிழுக்காதே," என்று எச்சரிப்பார்.

என் பாட்டி இறுதி மூச்சு விட்டுக்கொண்டிருந்த சமயம் நான் அவரைச் சந்தித்தேன். அப்பொழுதும் அவர் இதையே சொன்னார். "பையா, நான் புறப்பட்டாச்சு. ஒரு சத்தியம் செய்து கொடு. அதன்படி இனி நீ மகாத்மாக்களுடன் மோதக்கூடாது," என்றார். குழந்தைப் பருவத்தில் அவர்தாம் என்னை வளர்த்தவர். அப்போது நான் மகாத்மாக்களுடன் வாதம் புரிந்தேன் என்று பாட்டியிடம் புகார் செய்வார்கள். என் குதர்க்கமான கேள்விகளால் ஆன்மிகக் கூட்டத்தில் கலாட்டா நடந்தது என்று வீட்டில் வந்துசொல்வார்கள். நான் கேட்ட கேள்வியான 'பிரம்மஞானத்தில் சேட்ஜி எப்படி வந்தார்?' என்பது நியாயம்தானே.

மகாத்மாக்களைப் போலவே அறிஞர்களும் முரண்பாடாக நடந்துகொள்கிறார்கள். கணிதப் பேராசிரியர் ஒருவர் நாவிதரிடம் சென்று கட்டண விவரம் கேட்டார். நாவிதர், "வேலைக்கேற்றவாறு கட்டணம். ஒரு ரூபாயிலிருந்து 10 ரூபாய் வரை வெவ்வேறு விதமாக முடிவெட்டுவேன்," என்று தெரிவித்தார். பேராசிரியர் ஒரு ரூபாய் வகையில் முடிதிருத்தச் சொன்னார். நாவிதர் அவ்வாறே முடி திருத்திச் சவரமும் செய்தார்.

அடுத்து, பேராசிரியர், "ஒரு ரூபாய் வகை வேலை முடிந்துவிட்டது, சரி. இனி இரண்டு ரூபாய் வகைப்படி முடி திருத்து," என்றார். நாவிதர் அரண்டு போனார். முடி திருத்தி சவரம் முடித்தபின் மீண்டும் எப்படி இரண்டு ரூபாய்க்கு முடி திருத்துவது என்று குழம்பினார். அதைக் கவனித்துப் பேராசிரியர், "ஏனப்பா தயங்குகிறாய்? நான் வரிசையாக 10 ரூபாய் வகைவரை முடிதிருத்திக்கொள்ள தயாராக இருக்கிறேன்," என்றார்.

எனது பள்ளிக்கூடத்து ஜியோமிதி ஆசிரியர் எதற்காகவோ ஆறு மாத சிறை தண்டனை பெற்றார். விடுதலையான நாளன்று நான் அவரை வரவேற்கச் சிறை வாசலுக்குச் சென்றேன். அவர் எனக்குப் பிடித்தமான ஆசிரியர். ஆகவே அவரது சிறைச்சாலை வாழ்க்கை எப்படி இருந்தது என்றே வரவேற்பை ஆரம்பித்தேன். அவர், "மற்ற வசதிகள் பரவாயில்லை. அறைதான் பிடிக்க வில்லை." என்றார்.

"ஏன் தரை மோசமா, பூச்சித் தொல்லையா, காற்றோ, வெளிச்சமோ போதவில்லையா?" என்று கேட்டேன்.

"அதெல்லாம் இல்லை. அறையின் சுவர் மூலைகள் துல்லிய மாக 90 டிகிரி கோணத்தில் அமையவில்லை. மூலைகளைப் பார்க்கும் போதெல்லாம் சங்கடமாக இருந்தது." என்றார்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. சிறையில் நிச்சயமாக அவருக்குப் பல அசௌகரியங்கள் விளைந்திருக்கும். அதையெல்லாம் அவரால் தாங்க முடிந்தது. வெளியில் வரும்போது அவை அவரின் நினைவில்கூட இல்லை. ஆனால் அவருக்குச் சம்பந்தமே இல்லாத அறையின் சுவர்கள் 90 டிகிரி கோணத்தில் அமையவில்லை என்பது அவரை விடாது உறுத்தி, அவரது நினைவை ஆக்கிரமித்திருக்கிறது. வடிவியல் கணித ஆசிரியர் என்ற கண்ணோட்டமே அவரிடம் இருந்திருக்கிறது.

ஒவ்வொருவனும் தனக்குரிய வழியில் சிந்திக்கிறான். தனக்கு சுபாவமான வழியில் செல்கிறான். சாதாரண மனிதனின் மொழியறிவு மேலோட்டமாக உள்ளது. நமக்கு நம்மிடமுள்ள பொருளைவிட இன்னொருவனிடம் உள்ள பொருள் கவர்ச்சிகரமாகத் தெரிகிறது. தன் மனைவியைவிட இன்னொருத்தி அழகாகத் தெரிகிறாள்.

இத்தகையோருக்கு ஏற்ற மகாத்மாக்களும் கிடைத்து விடுகின்றனர். அவர்கள் பிறன் மனைவிமீது ஆசைப்படுதல் பாவம் என்று அச்சுறுத்துகின்றனர். அவர்கள் சொல்வது மக்க ளுக்குத் தங்கள் மனத்திலுள்ள பயத்தையே நினைவூட்டுவது போலுள்ளது. மக்களின் மொழியும் போலி மகாத்மாக்களின் மொழியும் ஒன்றாக உள்ளது.

உண்மையான ஞானி வேறு அர்த்தம் கொள்வார். வெளிநோக்கைத் தவிர்த்து உள்ளே செல்லும்படி, தனக்குள் லயிக்கும்படி உபதேசிப்பார். பிறரிடம் ஆர்வமும், பிறரையே நோக்குதலும் ஆரோக்கியமல்ல என்று ஞானி கூறுவார். அவர் ஆணா-பெண்ணா, தன் மனைவியா-பிறன் மனைவியா என்பது முக்கியமன்று. பிறரிடம் ஆர்வம் காட்டினால், நீ உன் மையத்திலிருந்து விலகி விழுவாய். நீ உனது மையத்திலிருந்து தொலைவிற்குச் சென்றுவிடுவாய் என்கிறார்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! உங்கள் கருத்துகள் பலருக்குப் பிடித்தமானவையாக இல்லை. அதன் காரணமென்ன?**

**இ**ந்த விஷயம் என் சொற்பொழிவைக் கேட்பவர்களைப் பொறுத்து அமைகிறது. நீ உண்மையிலேயே சத்தியத்தை தேடி என்னிடம் வந்தவனாயின் உனக்கு என் சிந்தனை ஒட்டம் பிடித்துப்போகும். ஆனால் நீ முன்பாகவே சில முடிவுகளுக்கு வந்து, அவற்றை நான் குறிப்பிடாவிடில், என் பேச்சு கசக்கும். நீ மனத்தை வெற்றிடமாக வைத்து, பரிவுடன், அன்புடன் என் பேச்சைக் கேட்கவந்திருந்தால் அது உன்னைக் கவரும். ஆனால் பாரபட்சமான மனத்துடன் என்னை அணுகினால் நீ என் பேச்சில் சுவை காணமாட்டாய்.

என் பேச்சின் தாக்கம் உன்னைப் பொறுத்து அமையும். உன் மனத்தில் எழும் எண்ணங்களின்படி நீ பாதிப்படைவாய். மனத்தை காலியாக வைத்துக்கொண்டு என் பேச்சை லயித்துக் கேட்டால், என் கருத்துகள் அமுதமாக இனிக்கும். நீ இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர் என்ற அடிப்படையில் என் பேச்சைக் கேட்டால், அந்த மதங்களின் பெரியோர்களை நான் தாழ்த்திப் பேசுவதாகத் தோன்றும். உனக்குக் கோபம் மூளும். என் பேச்சு பிடிக்காமல் போகும். ஆனால் மதத்தின் காரணமாக உனக்குத் தரப்பட்டிருக்கும் பெயர், குடும்பம் உனக்குச் சூட்டும் பெயர் முதலியவை வெளியிலிருந்து தரப்பட்டவை. உண்மையில் நீ எந்தப் பெயரும் இல்லாமல்தான் (அநாம) பிறந்தாய்.

எனது குரல் அன்பின் குரல்
உறவும் அறியவில்லை ஊராரும் அறியவில்லை
ஒருவருக்கு வெல்லமாய் இனித்த என் குரல்
கரித்தது கடலுப்பாய் இன்னொருவருக்கு

இந்தக் குரலில் மீரா மயங்க கபீர்தாசர் மோகித்தார்
பார்வையிழந்த சூர்தாசர் மீண்டும் கண்ணொளி பெற்றார்
இக்குரலில் குயிலும் கூவ, திரண்டெழுந்தது கார்மேகம்
சுயமாய் வந்து விழுந்தது விளக்கில் விட்டில் பூச்சி
பறவைகள் இந்தக் குரல் கேட்டுப் பாதுகாப்பாய்
உணர்ந்தன

குரலுக்குரியவன் எம்மதத்தினனும் அல்லன்
நீரிலிருந்தெடுத்த மீனைப் போல
இறை விரகத்தால் துடிப்பவன் அவன்

அறிவு நினைக்கும் இதை உளறலென
மனம் அறியும் இது அமிர்த தாரையென
பரமானந்த வனத்தில் திரியும் மானைப்
பிடித்துக் கயிற்றால் கட்டாதே
வீட்டில் பூட்டி அடைக்காதே
அகங்காரத்தைக் கைவிட்டால்
எனது பாட்டு புரிந்துவிடும்.

எனது சொற்பொழிவுகளின் அர்த்தத்தை புத்தியினால் தேடாதே. இதயத்தால் புரிந்துகொள். சிந்தனையால், விவாதத்தால், தர்க்கத்தால், சித்தாந்தங்களால் என் சொற்களை ஆராயாதே. அன்புடனும் ஆர்வத்துடனும் என் உரைகளைக் கேள்.

உனக்கு உன் கூட்டின் (உடலின்) மீது மோகமென்றால், உனக்குச் சிறை கோயிலாகத் தெரிகிறதென்றால், எனது பேச்சு உன்னைக் கவராது; எரிச்சலூட்டும்.

ஆனால் என் பேச்சை விரும்பிக் கேட்டால் நீ கூட்டுக்குள் இருக்கும் பறவையைக் கண்டுகொள்வாய். அந்தப் பறவைக்கு என் கருத்துகள் சிறகுகளாக அமையும். பறவை ஆன்மிக வானில் ஆனந்தமாகப் பறக்கும்.

ஹரி ஓம் தத்ஸத்!

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

க்வஆத்மனோ தர்ஸநம் தஸ்ய யத்த்ருஷ்டம் அவலம்பதே |
தீராஸ்தம் தம் ந பஸ்யந்தி பஸ்யந்த்ய ஆத்மாநம்
அவ்யயம்|| 216

க்வ நிரோதோ விமூடஸ்ய யோ நிர்பந்தம் கரோதி வை |
ஸ்வஆராமஸ்யைவ தீரஸ்ய ஸர்வதா அஸாவ க்ருத்ரிம: ||
217

பாவஸ்ய பாவக: கஸ்சிந்ந கிஞ்சித் பாவகோ அபர: |
உபயா பாவக: கஸ்சித் ஏவமேவ நிராகுல: || 218

சுத்த மத்வயம் ஆத்மாநம் பாவயந்தி குபுத்தய: |
ந து ஜாநந்தி ஸம்மோகாத் யாவ ஜ்ஜீவம் நிர்வ்ருதா: || 219

முமுக்ஷோர் புத்திர் ஆலம்பம் அந்தரேண ந வித்யதே |
நிராலம்ப ஐவ நிஷ்காமா புத்திர் முக்தஸ்ய ஸர்வதா || 220

'**கா**ட்சியை ஆதாரமாகக் கொண்டுள்ளவனுக்கு ஆத்ம தரிசனம் எங்கே கிடைக்கும்? ஆன்மவீரன் மாறும் காட்சிகளில் நாட்டங்கொள்ளான். அவன் தரிசிப்பது ஆத்மாவைத்தான்.'
**(சுலோகம் 216)**

இந்த சுலோகத்தை இந்தியத் தத்துவக் கோட்பாட்டின் சாரம் எனலாம். தத்துவ இயலை 'தரிசனம்' என்னும் சொல்லால் வழங்குகிறோம். இது முழுமையாகப் பொருத்தமானது. ஆங்கிலத்தில் சொல்லும் பிலாஸஃபி சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்டது. ஆகவே அது ஆன்மிகத்திலிருந்து (ஸ்பிரிச்சுவாலிட்டி) விலகியுள்ளது. ஐரோப்பாவில் பிரபலமான நாத்திகர்கள் பலர் பிலாஸஃபர் என்றே அறியப்பட்டனர்.

தரிசனம் என்னும் சொல்தான் பொருத்தமானது. எல்லாரும் தான் பார்க்கிறார்கள். ஆனால் அவர்கள் பார்ப்பது காட்சிகளை. தரிசனம் என்பதில், பார்ப்பவனை (உன்னை நீயே) பார்க்க வேண்டும் என்ற அர்த்தம் கிடைக்கிறது. பார்ப்பவன் பார்ப்பது காட்சி. பார்ப்பவனை பார்ப்பவனே பார்ப்பது தரிசனம்!

மனிதர்களில் பெரும்பான்மையோர் வெளிக்காட்சிகளில் சிக்கிக்கொண்டுள்ளனர். தெய்வங்களின் சிலைகளில் மனத்தைச் செலுத்தினாலும் அதுவும் வெளிக்காட்சிதான். அது தரிசனம் ஆகாது. கடவுளும் அவர்களுக்குப் படமாகவோ, சிலையாகவோ ஒரு காட்சிதான்.

சிறுபான்மையினரான ஞானியர் பார்ப்பவனைத் தேடுகின்றனர். நான் உன்னைப் பார்க்கிறேன். நீ எனக்கொரு காட்சி. எனக்குள்ளேயிருந்து உன்னைக் காண்பவன்தான் உண்மையில் உன்னைப் பார்க்கிறான். கண்கள் நாம் பார்ப்பதற்கான கருவிகள் மட்டுமே. அவை நாமல்ல.

நீ என்னைப் பார்க்கிறாய். நான் உன் கண்ணால் படும் பொருள் (காட்சி). உனக்குள் ஒளிந்துகொண்டு என்னைப் பார்க்கிறவன், என் பேச்சைக் கேட்கிறவன் எவனோ அவன் யார்? இதுவரை நாம் அறிந்திராத அவனைத் தேடி செல்வதுதான் ஆன்மிகம் என்பது. கண்களும் காதுகளும் சன்னல்கள் போன்றவை மட்டுமே. அவற்றின் மூலம் பார்த்தலும் கேட்டலும் செய்பவன் உள்ளேயிருக்கிறான்.

கடவுளை காட்சிக்கு, காண்பதற்கு உரிய பொருள் என்று நினைத்தால், நீ கோயில்களுக்குச் செல்வாய். பூஜை-அர்ச்சனை, பிரார்த்தனை செய்வாய். இதனாலெல்லாம் ஆன்மிகத்துடன் உனக்கு இணைப்பு உண்டாகாது. உள்ளேயிருந்தபடி வெளியுலகைப் பார்ப்பவனைத் தேட நீ புறப்படுகையில் உனக்கு ஆன்மிகத்துடன் தொடர்பு ஏற்படுகிறது. அவன் (நான்) யார் என்ற அடிப்படைக் கேள்வி உனக்குள் எழ வேண்டும். அந்த மூலத்தை வசப்படுத்த வேண்டும். அடிப்படை வசமானால் எல்லாம் வசமாகிவிடும்.

நீ யார் என்று அறிகின்றவனை அறிந்தால் எல்லா வற்றையும் அறிந்த மாதிரிதான் என்று உபநிஷதம் கூறுகிறது. உள்ளே இருக்கின்ற ஒருவரை அறிந்தால் எல்லோரையும் அறிந்த மாதிரிதான் என்கிறார் மகாவீரர். ஏனெனில் அந்த ஒருவன்தான் எல்லோருக்குள்ளும் இருக்கிறான்.

கடவுளை ஒரு காட்சிபோல் நினைப்பதை நிறுத்து. அவரை உனக்குள்ளிருந்து பார்ப்பவனாகக் கருதிப் பார்வை செலுத்து. ஆத்மாவேதான் பரமாத்மா என்று இதனால்தான் சொல்கிறார்கள். முழுமையாக அறிந்துகொண்டால் பரமாத்மா; ஒரு கட்டம் வரைதான் அறிந்தால் ஆத்மா. நீ உனக்குள்ளேயே ஆழமாக இறங்கு. ஆழத்தின் கடைசியிலுள்ள மையத்தை நீ தொட்டு விட்டால், தேடுதல் முடிகிறது. நீயே கோயிலாகி விடுகிறாய். கடவுள் உனக்குள் வீற்றிருக்க வருகிறார்.

இவ்வாறு உனது தேடுதல் பயணத்தின் திசை மாற வேண்டும். காட்சி வெளியே இருக்கிறது. பார்ப்பவன் உள்ளே இருக்கிறான். காட்சி புறம் என்றால், காண்பவன் அகம். காட்சியைக் காணக் கண்களைத் திறந்துவைத்திருத்தல் வேண்டும். பார்ப்பவனைப் பார்க்கக் கண்களை மூடிக்கொள்ள வேண்டும்! காட்சிகளைப் பார்த்தறிய எண்ண அலைகள் உதவுகின்றன. காண்பனைக் காண எண்ணங்கள் எழாத, சலனமற்ற மனநிலை தேவை. காட்சியைக் காண மனம் உதவும். காண்பவனைக் காண தியானம்தான் உபாயம்.

மனத்திலிருந்து விடுதலை பெறுதல் தியானம். தியானம் பயிலாதவரையிலும் மனம் நம்மை ஆள்கிறது. மனத்தை இழந்தால் தியானம் சாத்தியமாகும். மனம், வெளிப்பார்வை; தியானம், உட்பார்வை.

**சூஃ**பி இஸ்லாமியப் பிரிவில் ராபியா என்றொரு புகழ்பெற்ற பெண் ஞானி இருந்தார். ஒருநாள் அவள் தனது குடிசைக்குள் அமர்ந்து தியானத்தில் லயித்திருந்தார். அவளது குடிசையில் துறவி ஹஸன் தங்கியிருந்தார். அவரும் புகழ் வாய்ந்தவர்.

காலை நேரம். சூரியன் உதித்தபடி மேலெழும்பியது. பறவைகள் பாடின. ஆகாயத்தில் வெள்ளை மேகங்கள் மிதந்தன. குளிர்ந்த காற்று. ஹஸன் வெளியே வந்து இயற்கையின் அழகைக் கண்டு இன்புற்றார். உடனே அவர் சத்தமாக, "ராபியாஜி, உள்ளே அப்படி என்ன செய்கிறீர்கள்? வெளியே வாருங்கள். கடவுள் அழகான காலைப்பொழுதை நம் முன் வைத்துள்ளார். வெயில் ஏறுவதற்குமுன் வந்துபாருங்கள்," என்று அழைத்தார்.

உள்ளே ராபியாவின் சிரிப்பொலி கேட்டது. "ஹஸன், வெளியே எவ்வளவு நேரம் நிற்பாய்? நீ வெளியே நின்று கடவுள் படைத்த காலை நேரத்தைப் பார்க்கிறாய். நானோ அந்த காலைப்பொழுதைப் படைத்த இறைவனையே குடிசையினுள்ளே இருந்தபடி பார்க்க முடிகிறது. காலைப்பொழுது அழகானதுதான். அதைப் படைத்தவன் முன் அந்த அழகு நிற்க முடியுமா? சூரிய ஒளி அழகுதான். சூரியனுக்கு ஒளியைக் கொடுத்தவனின் அழகுக்கு அந்த கிரணங்கள் சமமாகுமா? பறவைகளின் குரல் மிக இனிமையாகத்தான் உள்ளது. ஆனால் நான் எல்லா ஒலிகளையும் தோற்றுவித்த கடவுளின் குரலினிமையை ரசித்தபடி உட்கார்ந்துள்ளேன். தம்முடைய ஒலிகளைத்தான் அவர் பறவைகளின் மூலம் எதிரொலிக்கச் செய்கிறார். ஹஸன், உள்ளே வந்துவிடு,"—ராபியா அழைத்தாள்.

ஹஸனும் ராபியாவும் மனித வாழ்க்கையின் இருவகைகள். ஹஸன் வெளியே தேடுகிறார். ராபியா உள்நோக்காகத் தேடுகிறாள். ஹஸன் காட்சிகளில் தேடினார். அவையும் அழகானவைதாம். ஆனால் காட்சியின் அழகை ரசிப்பது என்பது ஏரியில் தெரியும் சந்திரனை ரசிப்பதுபோலாகும். ஏரியில் தெரிவது நிழல்தானே, பிரதிபிம்பம்தானே. உண்மையான சந்திரன் ஏரியில் இல்லை.

வானத்தில் தெரியும் சந்திரனைப் பார்ப்பவன் ஏரியில் தெரியும் சந்திரனை ரசிப்பவனை அசடு என்பான். மூலத்தை (ஒரிஜினலைப்) பார் என்று அறிவுறுத்துவான்.

நாம் வெளியே பார்ப்பது நமது பிரதிபிம்பம்தான். உலகம் என்பது கண்ணாடி போன்றதேயாகும். நீ மகிழ்ச்சியுடனிருந்தால்

வெளியில் திருவிழாபோல் உணர்வாய். நீ சோகமாய் இருந்தால் உலகமும் அழுவதாகத் தெரியும். நீ வலியுடன் இருக்கையில் பூக்களுக்குப் பதிலாக முள்களே தென்படும்.

உனக்குள்ளே இருப்பதுதான் வெளியில் தெரிகிறது. ஆனால் வெளியே எது தெரிகிறதோ அதன் விளக்கத்தை உள்ளேயிருந்துதானே நீ பெறுகிறாய். விளக்கம் அல்லது அறிமுகம் உள்ளேயிருந்துதான் வரும். உள்ளேயிருந்து பார்க்கிறவன்தான் அந்த விளக்கம் தருகிறான். காட்சியில் உனக்கு என்ன தெரிகிறதோ அது அந்தப் பார்ப்பவனின் நிழல்தான்.

ஒரு கவிஞர், ஓர் ஓவியர், ஒரு பாடகர், ஒரு கடைக்காரர், ஒரு விறகுவெட்டி ஆகியோர் ஒரு பூங்காவிற்கு வருகிறார்கள். எல்லோரும் ஒரே பூங்காவில் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் பார்ப்பது ஒரே பூங்காவை அன்று!

விறகுவெட்டி யோசிப்பார்: எந்த மரங்களை வெட்டலாம்; எதன் விறகு விற்கும்; எந்த மரம் நாற்காலி போன்றவை செய்ய ஏற்றது; எதன் விறகு அடுப்பெரிக்க நல்லது.

கடைக்காரர் கண்ணுக்கு மரம் தெரியாது. பல வகையான பழங்கள் மட்டுமே அவர் பார்வையில் படும். இவற்றைப் பறித்து விற்றால் எவ்வளவு பணம் சம்பாதிக்கலாம் என்று அவர் கணக்குப் போடுவார்.

கவிஞரின் கண்ணுக்குப் பூக்கள் மட்டுமே தெரியும். அவற்றின் சௌந்தர்யம் அவருக்கு ஆனந்தமளித்து அவரைக் கவிதை இயற்றவைக்கும்.[1]

ஓவியர் மலர்களின் வண்ணங்களைக் கவனிப்பார். முன்னர் பார்த்திராத நிறங்களும் அவர் கண்ணில் படும். நமக்கு எல்லா மரங்களின் நிறமும் ஒரேமாதிரித் தெரிகிறது. ஓவியர் பழுப்பில்

---

1 When all at once I saw a crowd,
A host, of golden daffodils...
A poet could not but be gay
In such a jocund company (Wordsworth)

பலவகையும், பச்சையில் பல அடர்த்தியும் (shades) இருப்பதை நுணுக்கமாகக் கவனிப்பார்.

இசைக் கலைஞர் பாடத் தொடங்கிவிடுவார்.[2] துறவி ராபியா பூங்கா உள்ளே வந்தால் என்ன செய்வாள்? எங்கும் பரவியிருக்கும் அழகைக் கண்டு அவளுடைய கண்கள் மூடிக்கொள்ளும். அந்தக் காட்சிகள் அவளுக்குக் கடவுளின் எழிலை நினைவுபடுத்தும். வெளி அழகு அவளை உள்ளே தள்ளும். அவள் வெளியிலுள்ள பூவை மறந்துவிடுவாள். அவளுக்கு உள்ளே பூ மலரும். இப்படி ஒவ்வொரு காட்சியுமே உள்ளேயிருந்து காண்பவரைப் பற்றிய செய்தியைக் கொண்டு வருகிறது.

ஆனால் காட்சியை மட்டுமே இறுதி சத்தியமாக நினைப்பவனுக்கு ஆத்ம தரிசனம் கிடைக்காது. காட்சியைத் துரத்திச் செல்பவன் தன்னிடமிருந்தே விலகிச்செல்கிறான். தனது மையத்திலிருந்து விலகுகிறான். காட்சி என்றும் அவனுக்கு வசமாகாது. அது கானல்நீர் போன்றது. ஏரியில் தெரியும் சந்திரனைப் பிடிக்க நீ தண்ணீரில் குதித்தால் என்ன ஆகும்? நிழல்கூட வசப்படாது. நீ குதித்ததால் தண்ணீர் சிதறி பிரதிபிம்பமும் கலைந்துவிடும்.

விலகி இருக்கும்போது அழகாகத் தெரிந்த ஒன்று நமக்கு வசப்படும்போது அதன் அழகு சேதப்படுகிறது. நீ பேரழகி என்று நினைத்தவள் உன் மனைவியானதும் சாதாரணமாகத் தெரிகிறாள். ஒரு பெண் ஆசைப்பட்டு மணந்த ஆணழகன் வெறும் முரடன் என்று தெரிகிறது.

உலகில் தெரிபவை நிழல்கள், பிரதிபிம்பங்கள். தூரத்துப் பச்சை கண்ணுக்கு அழகு. டமாரம் தொலைவிலிருந்து வாசிக்கப்பட்டால் இனிமையாக ஒலிக்கும். அருகில் வந்தால் அவற்றின் அருமை நீங்கிவிடுகிறது. சத்தியம் என்பது நெருங்க-நெருங்க பூரண சத்தியமாக, மகாசத்தியமாக ஆகிவிடும். அசத்தியம் என்பது தொலைவிலிருந்து சத்தியம்போல் தெரியும்.

2 பார்க்கும் மரங்க ளெல்லாம் நந்த லாலா-நின்றன்
பச்சை நிறந் தோன்றுவதையே நந்த லாலா (பாரதியார்)

அருகில் வந்தால் அதன் சாயம் வெளுத்துவிடும். இதேபோல் உண்மையான மகானை நெருங்க-நெருங்க அவர் மாமனிதராகப் பேருருவம் எடுப்பார். போலியான மகான்களை நெருங்கினால் அவர்கள் உண்மையில் அற்பமானவர்கள் என்று தெரிந்துவிடும். அவர்கள் உன்னைவிடத் தாழ்ந்தவர்களாகவும் இருக்கக்கூடும்.

ஆகவேதான் அரசியல்வாதிகள் தங்களை யாரும் நெருங்கவிடுவதில்லை. அடால்ஃப் ஹிட்லர் யாருடனும் நட்புக்கொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அவர் யாரையும் தன் தோளில் கைபோடவிட்டதில்லை. எந்தப் பெண்ணும் தன்னை நெருங்க அனுமதித்ததில்லை. அவர் தமது அறையில் தமது பாதுகாப்பிற்காகக் கூட இன்னொருவர் படுப்பதை விரும்பியவரில்லை. எவரும் தன்னை நெருங்கிவர முயல்வதை அவரால் பொறுத்துக்கொள்ள முடியாது. விலகியே நின்று மக்களின் பிரமிப்பைப் பெறுவதே அவரது நோக்கமாக இருந்தது. தொலைவிலேயே நிற்க நேர்ந்ததால் மக்கள் அவரிடம் அஞ்சினர். அவரை விசேஷமான மனிதராகக் கருதினர்.

அரசியல் மூலம் பதவிகளைப் பிடிக்கப் பலர் துடிக்கிறார்கள். காரணம், அவர்கள் ஆளுமையின் அடிப்படையில் குள்ளர்கள். பதவி நாற்காலியில் ஏறி நின்று அவர்கள் தங்களை உயரமானவர்களாகக் காட்டிக் கொள்ள ஆசைப்படுகிறார்கள். சிறுவர்கள் சில சமயம் தந்தையின் அருகில் ஒரு நாற்காலிமேல் நின்று 'நான் அப்பாவைவிட உயரம்' என்று பெருமிதமாக அறிவிப்பதுபோல், தகுதியற்ற அரசியல்வாதிகளும் குழந்தைத் தனமாக நடந்துகொள்கின்றனர். பதவி நாற்காலியில் அமர்ந்து தடபுடலாக இயங்குகின்றனர். பதவிக் காலம் முடிந்தபின் அவர்களுக்கு எவனும் வணக்கம்கூட சொல்வதில்லை.

ஆகவேதான் ஒருமுறை பதவியைப் பிடித்தவன் நாற்காலியிலிருந்து இறங்குவதில்லை. இறக்கும் சமயமும் பதவியிலிருக்க ஆசைப்படுகிறான். அப்போதுதான் அவனது இறுதிச் சடங்குகள் அரசு மரியாதைகளுடன் நடக்கும். தன்னிடம் உண்மையான தகுதி இல்லை என்று அரசியல்வாதிக்குத் தெரியும். அவனுக்கு கிடைக்கும் கௌரவம் உண்மையில் நாற்காலிக்குத் தான் என்றும் அவன் அறிவான்.

எவனுக்குத் தனது ஆத்மாவின் அனுபவம் சிறிதாவது கிடைத்துவிடுகிறதோ அவன் பதவிகளில் ஆர்வம் கொள்ள மாட்டான். மனப்பக்குவமும் சுயசிந்தனையும் இல்லாதவர்களே பதவியின் பின்னாலும், பணத்தின் பின்னாலும் ஓடுவார்கள். தாழ்வு மனப்பான்மை உள்ளவர்கள் பதவி அல்லது பணத்தின் மூலம் தங்களை உயர்ந்தவர்களாகக் காட்டிக்கொள்ள முயல்கிறார்கள். மக்களில் பெரும்பான்மையோர் இத்தகையவர்களாக உள்ளனர்.

காட்சியைத் தேடிப்போனால் ஆத்ம தரிசனம் எப்படிக் கிடைக்கும்? காட்சியை ஆதாரமாகக் கொள்பவன் தன்னை என்றும் உணர முடியாது. தன்னை உணர முடியாதவன், தனது நிஜத்தன்மையை அடைய முடியாதவன் மீதி எல்லாவற்றையும் பெற்றாலும் என்ன பயன்? இயேசுநாதர் 'உலகமே உனக்கு வசப்பட்டிருப்பினும், நீ உன்னை இழந்தவனாயின், வாழ்க்கையில் லாபம் கிடையாது' என்கிறார்.[1]

சம்பாதிப்பதற்குப் பொருத்தமானது ஒன்றே ஒன்றுதான். அது (அவன்) உனக்குள்ளேயே இருக்கிறது. அவன்தான் செல்வத்துட் செல்வம்; அவன்தான் தலைசிறந்த பதவி (பரமபதம்). அவனை நீ பெறாவிடில், நீ பிச்சைக்காரனாகவே இருப்பாய். நீ எத்துணை உயரமான நாற்காலியிலும் ஏறி அமர். அந்தஸ்து ஏணியில் எத்தனை படிகளை வேண்டுமானாலும் கடந்து ஏறு. நீ குன்றுபோல் செல்வம் குவித்துவை. நீ உலகநாயகனாகிவிடு. ஆனால் அடிப்படையில் நீ உனக்கு எஜமானன் இல்லையெனில், நீ தீனன், தரித்திரன். உன்னிடம் உலகப் பொருள்கள் இல்லாவிடிலும் நீயே உன் தலைவன் ஆயின், உன்னைப் பேரரசன் என்றே கருதலாம்.[2]

**சு**வாமி ராம் தம்மை மாமன்னர் (பாதுஷா) என்றே கூறிக்கொள்வார். அவரிடம் குறிப்பிடத்தக்க பொருள் எதுவுமில்லை. பேசும்பொழுதும் தன்னை சக்கரவர்த்தி ராம் என்றே குறிப்பிடுவார். உதாரணமாக: "இன்று காலை சக்கரவர்த்தி

---

1 For what shall it profit a man, if he shall gain the whole world, and lose his own soul? (The Bible)

2 I am the master of my fate
I am the captain of my soul (W.E.Henley)

ராம் உலாவச் சென்றார். மரங்கள் வளைந்து வணக்கம் தெரிவித்தன'' அல்லது ''சக்கரவர்த்தி இரவில் எங்கோ சென்றார். அப்போது சந்திரனும் நட்சத்திரங்களும் அவரைச் சுற்றி வரலாயின'' என்பார்.

நம் நாட்டில் இப்படிப் பேச்சு எடுபடும். எவரும் அவரை எதிர்த்துக் கேள்வி கேட்கமாட்டார்கள். நமக்கு இந்த மாதிரியான அறிவிப்புகள் பழக்கமானவை. ஆனால் அவர் அமெரிக்கா சென்றபோதும் இப்படித்தான் பேசினார். அங்கெல்லாம் இதை மூளை பேதலிப்பு என்றே கருதுவார்கள். 'இவர் தன்னை அரசர் என்கிறார். கிரகங்கள் தன்னைச் சுற்றுவதாகவும், மரங்கள் தனக்கு சலாம் போடுவதாகவும் கதைவிடுகிறார். இவரிடம் இருப்பதோ இரண்டு கோவணங்கள்தான்' என்று அமெரிக்கர்கள் பேசிக்கொண்டார்கள்.

''ஆமாம், இதனால்தான் நான் சக்கரவர்த்தி,'' என்றார் சுவாமி ராம். ''என்னிடம் இருப்பது எதையும் எவரும் பிடுங்கிக்கொள்ள மாட்டார்கள். சாவு என்னிடமிருந்து பறிப்பதற்கு எதுவுமில்லை. என்னுடன் மோதினால் சாவுதான் தோற்கும். எனது ஆட்சியை எவரும் தடுக்க முடியாது. எனது ராஜ்ஜியம் எங்கே உள்ளது என்று கேட்கிறீர்களா? அது எனக்கு உள்ளே அமைந்துள்ளது. இயேசுநாதர் குறிப்பிட்ட விண்ணரசு (Kingdom of God) தான் என் நாடு. நான் என்னையே கண்டுகொண்டேன். ஆகவே என்னை சக்கரவர்த்தியென்று கூறுகிறேன். நீங்கள் எல்லாம் கோடீஸ்வரர்களாக இருக்கலாம். ஆனால் என் பார்வையில், நாடும் வீடும் இல்லாத நீங்கள் தரித்திரர்கள்.

செல்வந்தர்களின் வெளிவாழ்க்கையில் பணம் கொட்டிக் கிடக்கிறது. எல்லா வசதிகளும் உள்ளன. ஆனால் உள்ளே காலியாக இருக்கிறார்கள். இத்தகையோரைக் குறித்துத்தான் இயேசுநாதர், 'ஊசிக் காதின் வழியாக ஒட்டகம் நுழைவது சாத்தியமானால்கூட இந்தப் பணக்காரர்கள் கடவுளின் ராஜ்ஜியத்தில் நுழைய முடியாது' என்று அன்றே சொன்னார்.*

---

* It is easier for a camel to go through the eye of a needle, than for a rich man to enter into the Kingdom of God. (The Bible)

காட்சியைத் துரத்தி ஓடுபவனுக்குக் காட்சியும் வசமாகாது; காண்பவனும் காணாமல் போய்விடுவான். இந்த ஓட்டப் பந்தயத்தில் இழப்பே அதிகம். ஆனாலும் பெரும்பான்மையான மக்கள் துரத்தி ஓடியபடியே இருக்கின்றனர். பல முறை தோல்வி கண்டாலும் அடுத்த முறை விரும்பியது கிடைக்கும் என்று ஓட்டத்தைத் தொடர்கின்றனர். ஒரு கட்டத்தில் நாம் ஆசைப்பட்டு ஒரு பொருளைத் துரத்துகிறோமா அல்லது ஆசை பின்னா லிருந்து நம்மை விரட்டுகிறதா என்பதே குழப்பமாகிவிடும்.

டால்ஸ்டாயின்[1] கதை ஒன்று. தலைப்பு: ஆறடி நிலம். (How much land does a man require?) ஒரு நாடோடி சந்நியாசி ஒரு சராசரி விவசாயி வீட்டில் தங்குகிறார். குடும்பத்தினரிடம் ஏற்கெனவே போதுமான உடை, உணவு, வசதிகள் இருந்ததால், அவர்கள் எளிமையில் திருப்தியாக வாழ்ந்தனர்.

நாடோடி விவசாயியிடம், "உன்னிடமுள்ள துண்டு நிலத்தி லேயே உழைத்து, ஏதோ சம்பாதித்து நாட்களை ஓட்டிவிடுவதா? என்றைக்காவது பணக்காரன் ஆகவேண்டாமா?" என்று கேட்டார்.

இதுநாள் வரை தன்னை ஏழையென்று நினைக்காத அந்த விவசாயி அன்றிரவு தான் ஏழையாகிவிட்டதாக உணர்ந்தான். இதுவரை பணக்காரனாக வேண்டும் என்ற எண்ணமே அவ னுக்குத் தோன்றியதில்லை. அன்றிரவு அவனால் தூங்க முடிய வில்லை. மறுநாள் காலை அவன் நாடோடியிடம், "நீங்கள் எல்லா பிரதேசங்களையும் பார்த்துள்ளீர்கள். எங்கே போனால் நான் சீக்கிரமே பெரும்பணக்காரனாக முடியும்?" என்று விசாரித்தான்.

அதற்கு அவர், "இங்கேயுள்ள உன் சிறுநிலத்தை விற்று விட்டு சைபீரியாவுக்குப் போ.[2] இங்கு கிடைத்த பணத்தைக் கொண்டு அங்கு பெரிய நிலமாக வாங்கலாம். சைபீரிய மக்களுக்கு புத்தி மட்டு; நாகரிகம் குறைவு. சுலபத்தில் நீ அவர்களை ஏமாற்றிப் பணக்காரனாகலாம்," என்று வழிகாட்டினார்.

---

1. Leo Tolstoy (1828-1910) Russian writer. His master pieces: War and Peace, Anna Karenina.
2. Siberia ரஷ்யாவின் வறண்ட மாநிலம். 68' செ. வரை வெயில். குற்றவாளிகள், அரசியல் எதிரிகள் நாடு கடத்தப்பட்ட பகுதி.

விவசாயியின் மனத்தில் ஆசை விழித்துக்கொண்டது. அவன் வீட்டையும் நிலத்தையும் விற்றான். மனைவி அழுது தடுத்தும் அவன் கேட்கவில்லை. "பயப்படாதே. விரைவில் நாம் பணக்காரர் ஆகப் போகிறோம்," என்று ஆறுதல் கூறினான். அவன் ஒருவகையில் இதுவரை பணக்காரனாகத்தான் இருந்து வந்திருக்கிறான். ஏனெனில் அவன் ஏழ்மையைப் பற்றி நினைத்ததில்லை. திருப்தியாக வாழ்ந்து வந்தவர்கள் இப்போது ஏழையாகிவிட்டோம் என்று நினைத்தார்கள்.

விவசாயி சைபீரியாவை அடைந்தான். நாடோடி சொன்னது சரியாகத்தான் இருந்தது. அப்பகுதி மக்கள் விசித்திரமான குணம் கொண்டிருந்தனர். அவர்களின் தலைவர்களை சந்தோஷப் படுத்தினால் போதும். சிறு அன்பளிப்புக்கும் பெரிய பரிசு கிடைக்கும். ஹுக்கா (குடுவை புகைப்பான்), புகையிலை, கள் முதலியவை கொடுத்து ஒரு கிராமத்தின் தலைவனை விவசாயி சந்தோஷப்படுத்தினான். தனக்குக் கொஞ்சம் நிலம், அளிக்க வேண்டினான்.

தலைவன், "எவ்வளவு நிலம் உனக்கு வேண்டும்?" என்று கேட்க, விவசாயி யோசனையில் ஆழ்ந்தான். அது கண்டு தலைவன், "உன்னால் முடிவு செய்ய முடியவில்லையா? நாளை காலை சூரியோதயத்திலிருந்து அஸ்தமனம் வரை எவ்வளவு நிலத்தையெல்லாம் கடந்து மீண்டும் திரும்பி வருகிறாயோ அந்தப் பரப்பையெல்லாம் உனக்கே சொந்தமாக்குகிறேன். சூரியன் மறைகையில் நீ கிராமத்திற்கு வந்துவிட வேண்டும் என்பது நிபந்தனை," என்று அறிவித்தான்.

விவசாயி அசந்துபோனான். அவனே வாய்திறந்து கேட்டிருந்தால்கூட இந்த அளவிற்கு நிலம் கேட்டிருக்கமாட்டான். அவனால் அன்றிரவு தூங்க முடியவில்லை. காலையில் களைப்புடன் எழுந்தான். காலை உணவு சாப்பிடவில்லை. வயிறு நிரம்பியிருந்தால் தன்னால் வேகமாக நடக்க முடியாதென அவன் அஞ்சினான். தாகத்திற்குத் தண்ணீர் மட்டும் எடுத்துக் கொண்டான்.

சூரியன் உதித்ததும் அவன் காலியான நிலப் பரப்பில் ஓடத் தொடங்கினான். இத்துணை வேகமாக அவன் வாழ்க்கையில்

ஓடியதே இல்லை. அம்பு பாய்வதுபோல் ஓடினான். ஒரு நிமிடம் மெதுவாக ஓடினாலும் நஷ்டம் விளையும் என்பதால் அவன் தீவிரமாக ஓடினான். நடுப்பகல் சூரியன் தலைக்கு மேல் நேராக வந்ததும் கிராமத்தை நோக்கித் திரும்பி ஓடிவர அவன் முடிவெடுத்தான். ஆனால் நண்பகல் ஆனபோது அவன் தொடர்ந்து முன்னோக்கி ஓட ஆசைப்பட்டான். இன்னும் கூடுதலாக நிலம் கிடைக்குமல்லவா? திரும்புகையில் முன்பைவிட வேகமாக ஓடி இந்தத் தாமதத்தை ஈடு செய்யலாமென நினைத்தான். 'இன்றைக்கு ஒருநாள் ஓடிவிட்டால் போதும். வாழ்க்கை பூராவும் ஓய்வெடுக்கலாம்' என்று எண்ணினான். நடுவில் தண்ணீரும் குடிக்கவில்லை. அதற்காக நின்றால் கொஞ்சம் நிலம் கையகப்படுத்த முடியாமல் போய்விடும் என்று அவன் மனத்தைக் கட்டுப்படுத்தினான்.

நண்பகலைக் கடந்தும் அவன் முன்னோக்கி ஓடியதால் அவன் திரும்புகையில் முன்பைவிட வேகமாக ஓடிவர முயன்றான். ஆனால் அவனால் முடியவில்லை. பசி, தாகம், களைப்பு காரணமாக அவனது வேகம் படிப்படியாகக் குறைந்தது. சூரியன் மறையும் நேரம் நெருங்கிவிட்டது. அவன் மீண்டும் பலத்தையெல்லாம் திரட்டி கிராமத்தை நோக்கி ஓடினான். சூரியன் மறைகின்ற அதே நேரத்தில் அவன் விழுந்து-எழுந்து எப்படியோ கிராமத்தின் எல்லைக்கோட்டை வந்தடைந்தான். ஆனால்... எல்லையைத் தொட்டதும் களைப்புத் தாங்காமல் கீழே விழுந்தான். பிறகு அவன் எழுந்திருக்கவே இல்லை!

கூடியிருந்த கிராமத்து மக்கள் சிரித்தார்கள். அவர்கள் அவனுக்கு சமாதி எழுப்பினார்கள். அதில் அவர்கள் 'ஒரு மனிதனுக்கு எவ்வளவு நிலம் தேவை? ஆறு அடி!' என்ற வாசகத்தைச் செதுக்கினார்கள்.

எதற்கும் ஆசைப்படுதலே கெடுதல். ஓரளவு திருப்தியாக வாழ்பவனைக் கூட ஆசை எழுந்து ஓடச்செய்கிறது. அப்போதும் அளவுடன் அதைக் கட்டுப்படுத்திக் கொள்ளலாம். ஆனால் ஆசை பேராசையாகும்போது, அது கிடைக்கும் சமயம், அனுபவிக்க முடியாமல் போய்விடும்.

துறவறத்தில் ஓரளவு விருப்பம் கொண்ட என் நண்பர் ஒருவர் என்னிடம் பேசுகையில், "மனிதன் தனது முதுமையிலாவது கடவுளை தியானிக்க வேண்டும் என்று கூறுகிறீர்கள்," என்று நினைவூட்டினார். "ஆமாம், உங்களுக்கு 60 வயதாகி விட்டது. இது உங்களுக்குக் கடைசி காலம்தான். எதற்காக இன்னமும் காத்திருக்கிறீர்கள்?" என்று நான் கேட்டேன்.

"எனக்கு இன்னும் ஐந்து வருஷம் அவகாசம் கொடுங்கள். பிறகு வருகிறேன்." என்று அவர் வேண்டினார்.

"உங்கள் இஷ்டம். காலம் யார் கையிலும் இல்லை. ஆயுள் பற்றி தெரியாது. தியானம் செய்வது ஒன்றே நம் கையில் உள்ளது. நான் உங்களை பலவந்தமாகத் துறவியாக்க முடியாது. ஆனால் ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னும் நீங்கள் உயிருடன் இருப்பீர்கள் என்று எப்படிப் பக்காவாகத் தெரியும்?"

அவர் சிரித்தார். "நீங்களே இப்படிச் சொல்லலாமா? உங்கள் ஆசீர்வாதத்தால் நான் ஐந்தாண்டுகளுக்குப் பின்பும் உயிருடன் இருப்பேன்." என்று அவர் உறுதியாகச் சொன்னார்.

இப்போது நான் சிரித்தேன். "என்னுடைய ஆசீர்வாதத்தால் உங்களுக்கு என்ன பலன் கிடைக்கப் போகிறது? நீங்கள் என் ஆசீர்வாதத்தால் பிறக்கவில்லை. என் ஆசீர்வாதத்தால் வாழ்க்கை நடத்தவில்லை. என் ஆசீர்வாதத்தால் சாவிலிருந்து தப்ப முடியாது. ஆசீர்வாதம் வெறும் ஒலி. அதைக் கேட்டு ஏமாறாதே," என்று எச்சரித்தேன்.

அவருக்கு வருத்தமேற்பட்டது. "நீங்கள் அப்படிச் சொல்லக்கூடாது. நீங்கள் எனக்கு ஆசீர்வாதம் செய்யுங்கள்," என்று கெஞ்சினார்.

"சரி, நான் உங்களை ஆசீர்வதிக்கிறேன். இதனால் எனக்கொரு செலவுமில்லை. கையைச் சற்று உயர்த்த வேண்டும். அவ்வளவுதானே. அதனால்தான் எல்லா சாமியார்களும் சுலபமாக ஆசீர்வாதம் செய்கிறார்கள். இதில் யாருக்கும் ஆட்சேபணை இல்லை. ஆசீர்வாதம் செய்வதால் எனக்கு ஒன்றும்

குறைந்துவிடாது. இதோ, எடுத்துக் கொள்ளுங்கள் என் ஆசிகளை. ஐந்து வருஷம் உயிரோடு இருந்துவிட்டால் பிறகு?"

"பிறகென்ன? நான் உங்களிடம் வந்து துறவற தீட்சை பெற்றுக் கொள்கிறேன். அதற்குள் உலகக் கடமைகளை முடித்து விடுகிறேன்," என்று கூறி அவர் சென்றார்.

ஐந்தாண்டுகள் கழித்து நானே தற்செயலாக அவரது ஊருக்குப் போக நேர்ந்தது. அவர் என்னைச் சந்திப்பதைத் தவிர்த்து, வேலை என்று எங்கெங்கோ போய்க்கொண்டிருந்தார். ஒருநாள் அவரைப் பிடித்துவிட்டேன். "அஞ்சு வருஷம் ஆயிடுச்சு. புறப்படலாமா? என்னுடன் வருகிறீர்களா?" என்று சீண்டினேன்.

அவர் பரிதாபமான குரலில் மேலும் ஐந்து வருஷம் தரும்படி கெஞ்சினார். நான் அவருக்கு டால்ஸ்ட்டாயின் 'ஆறடி நிலம்' கதையைச் சொன்னேன். உங்களுக்கு இப்போது 65 வயதாகிவிட்டது. துறவற விருப்பம் நீங்கிவிட்டதா?" என்று கேட்டேன்.

"அப்படியில்லை, சுவாமி, நான் துறவறத்தில் உறுதியாக உள்ளேன். அந்த எண்ணம் மாறவில்லை. ஆனால் வீட்டிலும் தொழிலிலும் நிறையச் சிக்கல்கள் உள்ளன. பல வேலைகள் பாதியில் நிற்கின்றன. மகன்-மகள் காலேஜ் படிப்பு இன்னும் முடிவுபெறவில்லை," என்று அவர் தனது இயலாமையை விளக்கினார்.

நான் விடவில்லை. "ஐந்து வருஷத்தில் உங்கள் பிரச்சினைகள் தீர்ந்துவிடுமா என்ன? யாருடைய பிரச்சினைகளும் தீர்ந்து போனதாக என்றைக்கும் சரித்திரத்தில் இல்லை. ஐம்பது வருஷம் நீங்கள் உயிரோடு இருந்தாலும் சிக்கல்கள் தீரப் போவதில்லை. இப்போதுள்ள பிரச்சினைகளை ஐந்து வருஷத்தில் நீங்கள் சமாளித்தாலும், புதிதாக வேறு சிக்கல்கள் தோன்றத்தானே செய்யும்," என்று நான் அவருக்கு யதார்த்தத்தைச் சுட்டிக் காட்டினேன்.

"இந்த முறை ஐந்தாண்டுகள் கழிந்ததும் 70 வயதில் உங்களிடம் வந்துவிடுவேன்."

"அப்படிச் செய்வதாக உறுதிமொழி எழுதிக்கொடுங்கள்."

அவர் பயந்துவிட்டார். "இதென்ன, இப்படிச் சொல்கிறீர்களே. நான் வாயால் உறுதியளிப்பது போதாதா? காகிதத்தில் எழுதியுமா தரவேண்டும்?" என்று கேட்டார்.

"ஆமாம், எழுதிக்கொடுங்கள். ஐந்து வருஷம் கழித்து இதே பாட்டையேதான் பாடுவீர்கள். எழுதிக் கொடுத்தால் தெம்பு கூடும்," என்றேன்.

ஐந்தாண்டுகள் கழிந்தன. ஆளைத்தான் காணோம்! 'ஐந்தாண்டுகள் முடிந்துவிட்டன. இங்கு வந்து சாமியாராகவும்' என்று தந்தி கொடுத்தேன். நேரில் வந்தார். "சுவாமி, என்னை மன்னியுங்கள். என்னால் துறவியாக முடியாது என்பது புரிந்தது. மேற்கொண்டு ஐந்து வருஷம் காத்திருக்குமாறு உங்களிடம் சொல்லவும் எனக்கு தைரியமில்லை." என்று பரிதாபமாகக் கூறினார்.

"சரி, ஒருநாள் இறந்துபோவீர்கள்தான் இல்லியா? இறக்க நேரும் சமயம் என்ற செய்வீர்கள்? யமன் வாசலில் வந்து நிற்கிறான். என்னிடம் துறவியாக மாட்டேன் என்று சுலபமாகச் சொல்லிவிட்டீர்கள். யமனுக்கு என்ன பதில் சொல்லுவீர்கள்? ஐந்து ஆண்டுகள் கழித்து வருகிறேன் என்றா?"

அதற்கு அவர், "இன்றைக்கேவா சாகப்போகிறேன்? சாவு வரும் சமயம் பார்த்துக் கொள்ளலாம்," என்றார்.

இப்படித்தான் மனிதன் நழுவிச் செல்கிறான்; விலகிச் செல்கிறான். குடத்திலிருந்து ஒவ்வொரு துளியாகத்தான் சொட்டினாலும் ஒருநாள் அது காலியாகிவிடும். அதேபோல் 'நாளை-நாளை' என்று தள்ளிப்போட்டு ஒருநாள் ஆயுள் முடிந்துபோகிறது.

நீ இன்னும் ஆத்மவிழிப்புப் பெறவில்லை. இருண்ட குகையினுள் ஓடுவதுபோல் வாழ்க்கை நடத்துகிறாய்.

வெளிச்சத்திற்காகவும், காற்றுக்காகவும் எங்காவது விரிசல், பிளவு இருக்குமா என்று தேடுகிறாய். வெளியேற வழியும் காண முயலுகிறாய்.

நீ விழிப்புடன் வாழ்க்கை நடத்துவதாக நினைக்கிறாய். ஆனால் அது உண்மையான விழிப்பன்று. விழிக்க வேண்டு மானால் நீ உள்முகமாகச் செல்ல வேண்டும். வெளிப்புறம் நோக்கிச் செல்பவன் தூக்கத்தில் நடப்பவன்போல் வாழ்க்கை நடத்துகிறான். இதனால் குகை நீண்டுகொண்டே போகிறது. எங்கும் விரிசல் தெரியவில்லை. சூரிய ஒளி கிடைப்பதில்லை. வெளிப்புற வாழ்வில் நடைபோடுபவன் மேன்மேலும் இருட்டில் பயணிக்கிறான். வெளிச்சம் உனக்கு உள்ளே இருக்கிறது. உள்ளே இரவும் பகலும் தீபம் எரிந்த வண்ணம் உள்ளது. நீ வேறு திசையில் எங்கே அலைகிறாய்?

நீ பார்த்தது எல்லாம் கனவில் தெரியும் காட்சிகள் போன்றவை. ஒன்றை மட்டும் நீ பார்க்காமல் இருந்துவிட்டாய். அது நீயேதான்! உன்னை நீ ஒருபோதும் பார்த்ததில்லை. நீ அனைத்தையும் பார்த்தாய். முழு உலகத்தையே பார்த்தாய். மற்றவர்களையும் நன்றாகப் பார்த்தாய். ஒன்றே ஒன்றை நீ பார்க்கவில்லை. அது உன்னுடைய சொரூபம்தான்.

ஆன்ம வீரர்கள் வெற்றுக் காட்சிகளைப் பார்ப்பதில்லை. அவர்கள் அழியாத (அவிநாசி), குறையாத ஆத்மாவைத்தான் பார்க்கிறார்கள். அப்படிப் பார்த்தவன் காட்சிகளில் தலையான காட்சியைக் கண்டவனாகிறான். பெற வேண்டியதைப் பெற்று விடுகிறான். சாரமானது அவன் கைக்கு வந்துவிடுகிறது. சக்கையை அவன் உதறித் தள்ளுகிறான்.

உனக்குள் அமிர்தம் நிறைந்திருக்கிறது. நீ எதைப் பெறத் துடிக்கிறாயோ அது உனக்குள்ளே மறைந்திருக்கிறது. நீ தேடி அலையும் செல்வம் உனக்குள்ளே குன்றாகக் குவிந்திருக்கிறது. உள்ளே சம்பத்து (செல்வம்), வெளியே விபத்து.

வெளியே சிக்கல்கள் வலையாகப் பின்னிக் கிடக்கின்றன. ஒவ்வொரு சிக்கலிலிருந்தும் பத்து சிக்கல்கள் புதிதாகத்

தோன்றுகின்றன. இவற்றை சமாளித்தபடியே செல்கையில் வாழ்க்கையின் கடைசி நாள் வந்துவிடுகிறது. சாவு வாசற்படியில் நிற்கிறது. அப்போது நீ எவ்வளவு கெஞ்சினாலும் சாவு உனக்கு அவகாசம் தராது. 'தியானம் செய்வதை இதுவரை தள்ளிப்போட்டு வந்தேன். இப்போது ஒரு முறையாவது செய்துவிடுகிறேன்' என்றால் சாவு காத்திருக்காது.

புத்தர், கிருஷ்ணர், இயேசுநாதர், கபீர்தாசர், குரு நானக் முதலிய ஞானிகள் உனக்குள் எல்லையற்ற செல்வம் குவிந்திருப்பதைத் தெரிவிக்கிறார்கள். கடவுளின் பேரரசு உனக்குள் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. வெளியுலகத்தில் செல்வம் நிறைய உள்ளவர்கள் மகிழ்ச்சியாக வாழ்வதே இல்லை.

கடவுளை வெளியில் தேடி அலைந்த எவனும் இதுவரை அந்த அனுபவத்தைப் பெற்றதில்லை. விதிவிலக்காக ஒருவனைக் கூட சொல்ல முடியாது. அதேபோல் இறை அனுபவம் பெற்ற எவனும் அதை உள்ளே தேடிப் பெற்றவனாகத்தான் இருப்பான். இதிலும் விதிவிலக்காக வெளியே தேடிப் பெற்றவன் எவனுமில்லை. அறிவியலில் விதிவிலக்குகள் நிறைய உண்டு. ஆன்மிகத்தில் ஒரு விதிவிலக்குகூட கிடையாது. ஆனாலும் நாம் இறைவனை உள்ளே காணாமல் வெளியில் எங்கெல்லாமோ தேடுகிறோம்.

'எவன் மனத்தைப் பிடிவாதமாக வற்புறுத்தி அடக்குகிறானோ அவன் அறிவிலி. அது அவனுக்கு எங்கே அடங்குகிறது? தன்னிலேயே லயித்துத் திளைக்கும் ஆன்மவீரனுக்கு மனத்தை அடக்குதல் எளிதான செயலாகும்.' **(சுலோகம் 217)**

**பி**டிவாதமாக நீ உன் மனத்தை அடக்குவாயானால் அப்போது அதை அடக்கி மடக்குவது எது? அதே மனம்தானே. மனம்தான் மனத்துடன் மோத வேண்டியிருக்கிறது. அடக்கினாலும் அடங்காவிட்டாலும் வெற்றி மனத்துக்குத்தானே.

நீ விலைமாதின் வீட்டுக்குப் புறப்படுகிறாய். சிறிது தூரம் சென்றபின் நீ வலுக்கட்டாயமாகக் கோயில் பக்கம் திரும்பிச் செல்கிறாய். அப்படி உன் பாதையை மாற்றியது எது? வேசை

வீட்டுக்கு முதலில் தூண்டிய மனம்தான் கோயிலுக்கு இழுத்துச்செல்கிறது. மனத்தில் எண்ணற்ற ஆசைகள் நிறைந்து கிடக்கின்றன. ஓர் ஆசை சிற்றின்பத்தை நோக்கி இழுத்தது. ஆனால் இன்னொரு ஆசை கோயிலுக்கு இட்டுச் சென்றதால் நீ மனத்தை வென்று விட்டதாக நினைக்கிறாய். அங்கும் மனம்தான் முந்திக்கொள்கிறது. முதலில் சிறிது தூரம் வேசியின் வீட்டிற்கு இட்டுச்சென்றதும் மனம்தான். இந்த இரண்டு விபரீதமான சூழ்நிலைகளிலும் வென்றது மனம்; தோற்றவன் நீ! வேசியின் வீட்டிற்குப் போகலாம் என்று மனம் தூண்டியதும் நீ கிளம்பிவிட்டாய். பாதி வழியில் மனம், ‘வேண்டாம், கோயிலுக்குப் போ’ என்றதும் திசையை மாற்றிக் கொண்டாய். ஜெயித்தது யார்?

நீ எது செய்தாலும், செய்கை அல்லது செயல் என்றதுமே மனம் விழித்துக்கொள்கிறது. நீ உனக்குள்ளே இறங்கிப் போகவேண்டுமானால், அதற்கு ஒரு வழிதான் உள்ளது. அதாவது, செயல்புரிதல் இன்மை. வேசியின் வீட்டுப் பக்கம் போகவேண்டாம்; கோயிலுக்குப் போகவேண்டாம். போதல் என்னும் நிலையே ஏற்படாவிடில், மனம் தோற்றுப் போகிறது. மனத்திற்கு ஏதாவது செயல்புரிய வேண்டுமென்று துடிப்பு. செயல்தான் மனத்திற்குத் தீனி. செயல் தொடங்கிவிட்டால் மனத்துக்குத்தான் வெற்றி.

மனம் எதற்கும் தயாராக உள்ளது. சினிமா பாட்டுப் பாடு அல்லது மீரா பஜன் பாடு உட்கார்ந்தபடி ராமநாப ஜபம் செய் அல்லது கெட்ட வார்த்தைகளால் திட்டு. மனம் எதையும் தடுக்காது.

சிலர் என்னிடம் புகார்போல் செய்கிறார்கள். “உங்களை வழிகாட்டச் சொன்னால் அமைதியாக ஓரிடத்தில் அமர்ந்திரு என்கிறீர்கள். ஏதாவது ஆதாரம் கொடுங்களேன். நாங்கள் ஜெபமாலை உருட்டவா? ராமநாம ஜபம் செய்யலாமா? காதோடு குருமந்திரம் சொல்லிக்கொடுங்கள்,” என்று கேட்டுக் கொள்கிறார்கள். சிலர் உபதேசம் கேட்டு என்னிடம் சந்நியாசம் பெற்றும் இவ்வாறு ஆதாரம் கேட்பது விநோதமாக உள்ளது.

உனக்கு ஆதாரம் தேவைப்படும்வரை மனத்தின்மீது உன் ஆதிக்கம் இருக்கும். அந்த ஆதாரம் மனத்துக்குத்தான் தேவை.

ஆத்மாவிற்கு எந்த ஊன்றுகோலும் தேவைப்படாது. மனத்திற்கு ஏதாவது உபத்திரவம் தேவை; பரபரப்பு தேவை; வேலை (occupation) தேவை. எதிலாவது மனம் சிக்கியபடி இருக்க விரும்புகிறது. ஜெபமாலை உருட்டினாலும் சரி; ரூபாய் நோட்டுகளை எண்ணினாலும் சரி; காமப் பேச்சுகளில் ஈடுபட்டாலும் சரி; ராமநாமம் ஜபித்தாலும் சரி—மனத்திற்கு ஏதாவது வேலை வேண்டும். எந்த வேலை கிடைத்தாலும் மனம் அதில் படகில் செல்வதுபோல் பயணிக்கும்.

வேலை என்னும் படகைக் கொடுக்காதே. மனம் காணாமல் போய்விடும். சும்மா உட்கார்ந்திரு. மனம் கெஞ்சும், தத்தளிக்கும். எப்போதும் மனத்திற்கு வேலை கொடுத்துப் பழக்கப்படுத்திவிட்ட நீ இப்போது சும்மாயிருந்தால் அது தாங்குமா? ஆனால் நீ அமைதியாக உட்கார்ந்துவிடு. 'இனி இப்படித்தான் இருப்பதாக நிச்சயித்துவிட்டேன். எந்த வேலையும் செய்யமாட்டேன். அடுத்த ஒரு மணி நேரம் உட்கார்ந்தபடியே இருப்பேன். படுத்தும் விடுவேன். என்னை காலியாக வைத்துக்கொள்வேன்' என்று மனத்துக்குத் தெரிவித்துவிடு.

ஆனால் அப்படியே தூங்கிவிடாதே! மனம் தூங்குமாறு ஆலோசனை தரும். 'ஏன் காலியாகக் கிடக்கிறாய்? குறைந்த பட்சம், தூங்கியாவது தொலை,' என்று அது தூண்டும்.

தூங்குவதும் ஒரு வேலைதான். அதற்கு முயற்சியும் ஏற்பாடும் தேவைப்படுகிறது. அடுத்து, தூங்கியதும் கனவு வருகிறது. மனத்தின் இயக்கம் ஆரம்பமாகிவிடுகிறது.

**ஒ**ரு மனிதன் ஒரு பூதத்தை சந்தோஷப்படுத்தினான். பூதம் சொன்னது: "உன்னை எனக்குப் பிடித்துவிட்டது. ஆகவே நீ சொல்லும் வேலைகளை நான் நிறைவேற்றித் தருகிறேன். இதனால் நீ ஆசைப்பட்டதெல்லாம் நிறைவேறும். ஒரு நிபந்தனை. எனக்கு இடைவிடாமல் வேலை தரவேண்டும். நடுவில் நிறுத்தக்கூடாது. இடைவெளி தந்தால் நான் உன்னை அமுக்கிக் கொன்றுவிடுவதைக் கடைசி வேலையாக எடுத்துக் கொள்வேன்."

அந்த மனிதன் தான் ஆபத்தில் மாட்டிக்கொள்வதை அறிந்திருக்கவில்லை. அவன் மனத்தில் நிறைவேறாத ஆசைகள்

நிறைய இருந்தன. பூதத்தின் மூலம் அவற்றை சாதிக்கும் வாய்ப்புக் கிடைத்ததென அவன் மகிழ்ந்தான். அவன் பூதத்திடம் தனக்கு அரண்மனை கட்டித்தரும்படி கேட்டான். அதற்கு ஒரு வருஷமாவது பிடிக்கும் என்றும் அதற்குப்பின் அடுத்த வேலை பற்றி யோசிக்கலாம் என்றும் அவன் நினைத்திருந்தான்.

ஆனால் சில மணி நேரத்திலேயே அரண்மனை எழும்பிவிட்டது. அரண்மனையில் தன்னுடன் மனைவியாக வாழ அழகிய பெண் வேண்டுமென அவன் கேட்டான். பூதம் சில நிமிடங்களிலேயே உலகில் தேடி பேரழகியான ஒருத்தியை அவன் முன் நிறுத்தியது. "என் கஜானாவை நிரப்பு," என்று கட்டளையிட்டான். சில நிமிடங்களில் கஜானா அறை பொற்காசுகளால் நிரம்பிவிட்டது.

இப்பொழுது அந்த மனிதன் பயந்துவிட்டான். பூதத்திற்கு வேலை தந்தாக வேண்டும் என்ற கட்டாயத்தால் அவன் மனத்தில் தோன்றிய கண்ட-கண்ட வேலைகளையெல்லாம் சொன்னான். பூதம் எல்லாவற்றையும் விரைந்து நிறைவேற்றியது. கொடுப்பதற்கு வேறு வேலை மனத்தில் தோன்றாததால் அவன் திகைத்தான். பூதம் அடுத்த வேலையாகத் தன்னைத்தான் கொல்லும் என்று நினைவு வந்தது. அவன் பூதத்தைச் சற்று காத்திருக்கும்படி சொல்லிவிட்டு, கிராமத்துக்கு வெளியே ஆசிரமத்தில் வசித்த ஒரு துறவியிடம் சென்று தன் பிரச்சினையைத் தெரிவித்து அழுதான்.

துறவிக்கு அவன்மேல் இரக்கம் உண்டானது. அவர் ஆன்மிக ஞானம் மட்டுமின்றி உலக ஞானமும் பெற்றிருந்தார். முள்ளை முள்ளால் எடுக்க வேண்டும் என்பதை அறிந்திருந்தார். அவர் அந்த மனிதனிடம், "எங்கிருந்தாவது ஏணி வாங்கி உன் மாளிகைக்குக் கொண்டு செல். பூதத்திற்கு வேலை கொடுக்க முடியாதபோதெல்லாம் நீ பூதத்தை அந்த ஏணியில் விடாமல் ஏறியும் இறங்கியும் பயிற்சி செய்யச் சொல்," என்று ஆலோசனை வழங்கினார்.

பாவம், பூதம் தன் எஜமானன் வேறு வேலை கொடுக்காமல் ஏணியில் ஏறி இறங்கும் வேலையே தந்ததால் சிறிது காலத்தில்

சலித்தும் களைத்தும் போய்விட்டது. ஆகவே ஒரு நாள் அது கண்ணுக்குத் தெரியாமல் நிரந்தரமாக மறைந்துவிட்டது.

மனம் ஒரு பூதம். அது விடாமல் வேலை கேட்கிறது. மனம் காலியாக இருந்தால் பிரச்சினை உண்டாகிறது. ஏதாவது செய் என்று மனம் தூண்டுகிறது. விடுமுறை நாளிலும் அது உன்னை ஓய்வெடுக்க விடுவதில்லை. அலுவலகம் அல்லது கடை வேலை இல்லாவிட்டாலும் நீ சும்மா உட்காருவதில்லை. நீ காரை சுத்தம் செய்கிறாய். வீட்டை ஒழுங்குபடுத்துகிறாய். பிக்னிக் செல்கிறாய். முன்பைவிட அதிகமாகக் களைத்துத் திரும்புகிறாய்.

மக்கள் அன்றாடம் உணர்வதைவிட அதிகமான களைப்பை விடுமுறை நாள்களில் உணர்கிறார்கள். அலுவலக நாளிலாவது குறிப்பிட்ட நேரம்தான் வேலையுள்ளது. விடுமுறை நாளில் வீட்டு வேலைகளிலும், வெளிக் கடமைகளிலும் அதிக உழைப்பு தேவைப்படுகிறது. காலியாக உட்கார்ந்திருக்க முடிவதில்லை. தியானம் பயின்றவனால்தான் காலியாக உட்கார முடியும். அத்தகையவன் வழக்கமான வேலைகளைச் செய்யும்போதுகூட ஓய்வாக, காலியாகவே உணர்வான். தியானம் செய்யத் தெரியாதவன் வேலையில்லாவிடிலும் பூதம் படிகளில் ஏறுவதும் இறங்குவதுமாக இருந்ததுபோல் எதையாவது உருட்டியபடி இருப்பான்.

பிடிவாதமாக மனத்தை அடக்க முயலுகிறவன் அறிவிலி. அவனுக்கு மனம் அடங்காது. பிடிவாதம் பிடிப்பது, தூண்டுவது, கட்டாயப்படுத்துவது, வன்முறையை நாடுவது, பட்டினி கிடப்பது, ஜபம்-தவம் செய்வது, தலைகீழாக நிற்பது, உடல் முழுதும் சாம்பல் பூசி உட்காருவது—இதெல்லாம் செய்வது ஏது? அதே மனம்தானே. மனத்தை பலவந்தமாக அடக்க முயலுவதால் முக்தி கிடைக்காமல் போய்விடுகிறது. பிறகு முக்திக்கான உபாயம் என்ன?

அதற்கு மனத்தை அடக்கியாக வேண்டியதில்லை. தனக்குள்ளேயே, ஆத்மரசத்திலேயே லயித்தால், மனம் தானாகவே அடங்கும்; முயற்சி செய்யாமலே அடங்கும்.

நீ கவனித்திருப்பாய். நீ ஆனந்தமாய் இருக்கும் நிமிடங்களில் மனம் தானாகவே அடங்கி, மறைந்துவிடுகிறது. ஆகாயத்தில் சந்திரனைப் பார்த்து ரசிக்கும்போது மனம் அடங்கி விடுகிறது. எண்ண அலைகள் எழுவதில்லை. மகிழ்ச்சியான நேரத்தில் சிந்தனைக்கு வாய்ப்பில்லை. துன்ப நேரத்தில்தான் எண்ணக் கொந்தளிப்பு உண்டாகிறது.

பாட்டுக் கேட்கிறோம். தலையாட்டுகிறோம். மயங்குகிறோம். உள்ளே போதைபோல் பரவுகிறது. அப்பொழுது எங்கே போனது மனசு? தானாகவே அது அப்போது இயக்கத்தை நிறுத்துகிறது.

என் தினசரி உரையைக் கேட்கப் பலர் வருகிறார்கள். எந்த வகையான தியானம் பொருத்தமெனத் தோன்றுகிறது என்று நான் அவர்களை விசாரிப்பதுண்டு. நான் பேசும் சமயம் அவர்கள் தியான உணர்வு பெறுவதாகச் சொல்கிறார்கள். காரணம் கேட்டதற்கு, "நீங்கள் பேசுவதை நாங்கள் கேட்கும் சமயம் எங்கள் மனத்தின் செயல்பாடு நின்றுபோகிறது. உங்கள் பேச்சோடு ஒன்றிவிடுகிறோம்," என்கிறார்கள்.

அவர்கள் சொல்வது சரி. அமைதியாகக் கேட்டால், நடுவில் வாதம் செய்யாவிடில், எனது எண்ண ஓட்டத்துடன் கைகோத்து என்னுடன் சேர்ந்து வந்தால், தடை போடாவிடில், ஒத்துழைப்புக் கொடுத்தால், நான் போகும் திசையிலேயே நடைபோட்டால்— மனத்தின் இயக்கம் நின்றுபோகிறது. என் உரையை ஆழ்ந்து கேட்கையில் மனம் எங்கே தொலைந்துபோனது? அந்த மனம் ஒழிந்த நிமிடங்களில் நீ ஆத்மாவில் நிலைகொள்கிறாய்.

வர்த்தமான மகாவீரர் கருத்துப்படி, ஆன்மிக உரையை ஒருவன் மனத்தை மறந்து, லயித்துக் கேட்டால் (சிரவணம்) அவனுக்கு மோட்ச வாசல் திறக்கும். இந்த லயித்துக் கேட்டலுக்கே மகாவீரர் முதலிடம் தருகிறார்.* பயிற்சி மூலம் சந்நியாசியாகி மனத்தை அடக்குவதற்கு அவர் இரண்டாமிடம்தான் தருகிறார். முழு லயிப்புடன் ஆன்மிக நிகழ்ச்சிகளைக் கேட்டவன் துறவியாக

* ஒன்பது வகையான பக்தி (நவதா பக்தி) முறைகளைக் கூறும் நாரத பக்தி சூத்திரமும் 'ச்ரவணம்' என்றுதான் கேட்டலுக்கு முதலிடம் கொடுத்துத் தொடங்குகிறது.

வேண்டியதில்லை. இந்த 'கேட்டல்' (சிரவணம்) முழுமையாக அமையாவிடில், அடுத்த கட்டமாகப் பயிற்சிகள் செய்ய வேண்டியது அவசியமாகிவிடும்.

குருவின் உரை கேட்டும் பயனடையாதவர்கள் மீது இரக்கப்படுகிறார். ஏனென்றால் தூய மனத்துடன் முழு நினைவுடன் ஆழ்ந்து உபதேசம் கேட்டாலேயே மோட்சம் கிடைத்துவிடும் என்று அவர் கருதுகிறார். நீ ஒரு சத்குருவின் உபதேசத்தைக் கேட்டால், இதயபூர்வமாகக் கேட்டால், பிற சிந்தனைகளை விலக்கிக் கவனத்தைக் குவித்துக் கேட்டால், அவ்வாறு உரையைக் கேட்கின்றபோதே நீ முக்தனாகி விடுவாய். அவ்வாறு ஆன்மிக உரையை லயித்துக் கேட்க முடியாவிடில், உன் மனம் குப்பைக்கூடையாக இருந்தால், சிரவண முறை உனக்குப் பயன் தராது. நீ ஆன்மிகப் பயிற்சிகளைத் தொடங்க வேண்டியதுதான்.

ஒரு வகுப்பறையில் 30 மாணவர்கள் எனில் நீ யாரை அதிகம் கெட்டிக் காரனென்று கருதுவாய்? பாடத்தைக் காதால் கேட்டதும் புரிந்துகொள்கிறவனை (கற்பூர புத்தி உடையவனைத்) தானே மேதாவியாகக் கருதுவாய். கரும்பலகையில் எழுதிக் காட்டி, வரி-வரியாகச் சொல்லித் தந்தபின் புரிந்துகொள்பவர்கள் இரண்டாம் தர மாணவர்கள். அப்படியும் புரிந்துகொள்ளாத மூன்றாம் தர மாணவர்கள் டியூஷன் (தனிப்பயிற்சி) வைத்துக்கொள்ள நேரிடுகிறது. எப்படியும் புரிந்துகொள்ளாமல் காப்பியடித்துத் தேர்வெழுதும் மாணவர்கள் போலிச் சாமியார்களைப் போன்றவர்கள்.

**ஒ**ரு காலத்தில் நான் பல்கலைக்கழக விரிவுரையாளராக இருந்தேன். தேர்வு சமயம் நான் கண்காணித்த அறையில் ஒரு மாணவன் மட்டும் எதுவும் எழுதாமலிருப்பதைக் கவனித்தேன். மேலும் அவன் சட்டை பையில் துண்டுக் காகிதங்கள் வைத்திருப்பது தெரிந்தது. நான் அருகில் சென்று மிரட்டினேன். அவன், "நான் அந்தத் துண்டுக் காகிதங்களை உபயோகிக்கவே இல்லை, சார். அதில் பதிலெல்லாம் இருக்கு. ஆனா எந்தக் கேள்விக்கு எது பதில்னு தெரியலை," என்றான் சோகமாக.

ரஷ்யாவில் இந்த பிரச்சினைக்குத் தீர்வு கண்டுவிட்டார்கள். அங்கு மாணவர்கள் தேர்வுக்கு பாடபுத்தகங்களைக் கொண்டுவரலாம். ஆனாலும் இந்தச் சலுகையும் கெட்டிக்கார மாணவர்களுக்கே உதவும். ஏனெனில் புத்தகத்தில் சரியான பக்கத்தைப் புரட்டினால்தான் விடை கிடைக்கும். பாடப் புத்தகங்களை வரி வரியாகப் படித்துவைத்திருந்தால்தான் இது சாத்தியப்படும்.

சிலர் எதையும் சட்டெனப் புரிந்துகொள்வார்கள். ஒரு சாடை காட்டினால்கூட போதும். புத்தரிடம் ஒருவன் வந்து, "சுவாமி, எனக்கு உபதேசம் செய்யுங்கள். ஆனால் சொற்கள் வேண்டாம். நான் நிறைய உபதேசங்களைக் காதால் கேட்டுவிட்டேன். பயனில்லை. மௌன உபதேசம் அளியுங்கள்," என்று வேண்டினான்.

புத்தர் புன்சிரிப்புடன் கண்களை மூடிக்கொண்டார். வந்தவனும் கண்களை மூடி அவரெதிரே அமர்ந்தான். ஒரு மணி நேரம் இருவரும் அப்படியே இருந்தார்கள். பிறகு அந்த மனிதன் எழுந்து புத்தரின் சரணங்களைத் தீண்டி, "சுவாமி, வழிகாட்டிவிட்டீர்கள், நன்றி," என்று கூறி, சென்றுவிட்டான்.

புத்தரின் பிரதம சீடன் ஆனந்தன் விளக்கம் கேட்டான். அதற்கு புத்தர், "சில குதிரைகளைச் சவுக்கால் அடித்தால்கூட ஓடாது. ஆனால் ஜாதிக் குதிரை சவுக்கின் நிழல் உயர்ந்தாலே பாய்ந்து ஓடும்," என்றார்.

ஆகவே பிடிவாதமாக ஒன்றை நிகழவைக்க முடியாது. சுபாவமாக, சகஜமாக, விசேஷமான முயற்சியின்றி மனம் அடங்க வேண்டும். தனக்குள் லயிக்கும் ஆன்மிக வீரனுக்கு மனம் சட்டென்று அடங்கிவிடும்.

அமைதியாக உட்காரு. அடக்குமுறை தேவையில்லை. மனம் வரும். தனது பழைய வலையை விரிக்கும். நீ அதனுடன் மோதாதே. அதை அகற்ற முயலாதே. விரோதிக்காதே. நீ சாட்சிபோல் மனத்தின் விஷமங்களைப் பார்த்தபடி இரு. அது காமம், பேராசை போன்றவற்றால் உன்னை மயக்க முயலும். நீ அதனுடன் சேர்ந்து செல்லாதே; சண்டையும் போடாதே.

இப்படிச் செய்தால் மனம் கொஞ்சம் கொஞ்சமாகத் தானாகவே தோற்கத் தொடங்கும். ஒரு கட்டத்தில் தானாகவே உறங்கிவிடும். தானாகவே மறைந்து போகும். இத்தகைய சாட்சி நிலையில் நீ உனக்குள் பிரவேசிப்பாய்; உன் ஆத்மாவில் களிப்பாய்.* சகஜமாக இருப்பாய். உன்னிடம் இறுக்கம் டென்ஷன் தென்படாது.

அடக்குமுறை எதிர்மறையானது (நெகடிவ்). அதில் மோதல் நிகழ்கிறது. அப்படி மனத்தைத் தற்காலிகமாகத்தான் அடக்கலாம். சுபாவமாக தன்னுள் இருக்கும் சுகத்தில் கடும் முயற்சியின்றி மூழ்க வேண்டும். இந்த சுகத்தை அறிந்த பிறகு உலகத்தின் எந்தக் கவர்ச்சியும் அவனிடம் எடுபடாது. கையில் வைரம் கிடைக்கப் பெற்றவன் கூழாங்கல்லுக்கு ஆசைப்படுவானா? அமிர்தம் பருகியவன் விஷத்தைக் கண்டு ஏமாறுவானா? பரம சௌந்தரியத்தை அறிந்தவன் அசுத்தம் நிறைந்த உடலழகை லட்சியம் செய்வானா? பரம பதத்தில் வீற்றிருப்பவன் சிறு-சிறு நாற்காலி பதவிகளுக்காகப் போராடுவானா? ஆத்ம சாம்ராஜ்ஜியத்தை வசமாக்கிக்கொண்டவன் அற்பப் பணத்திற்கு மதிப்பளிப்பானா?

'ஒருவன் உணர்வை (இறையுணர்வை) ஒப்புக்கொள்கிறான். இன்னொருவன் அப்படி எதுவும் கிடையாது என்கிறான். இந்த இரண்டையுமே ஒப்புக்கொள்ளாதவனே ஆரோக்கியமான மனம் உடையவன்' **(சுலோகம் 218)**

ஒருவன் கடவுள் உள்ளார் என்கிறான். இன்னொருவன் கடவுள் இல்லை என்கிறான். அஷ்டாவக்ரர் இரு வகையினரையுமே அறிவிலிகள் என்கிறார்! கடவுள் 'இருக்கிறார்' என்பதிலும் இல்லை; 'இல்லை' என்பதிலும் அவர் இல்லை. ஏற்பிலும் இல்லை, மறுப்பிலும் இல்லை. விரிந்து பரவியுள்ள அவர்

* Witness consciousness is a stress reduction technique that can be easily applied by anyone in any situation. It is a mental state whereby a person wilfully observes his own mind, emotions, and behaviour as if he is a bystander. He lets the distressing thoughts pass by without grabbing hold of them. You can't stop them from entering your mind but you don't have to let them drag you down.

சூனியத்தில் மட்டுமே நிறைந்திருக்கிறார்; மௌனத்தில்தான் நிறைந்திருக்கிறார். வாயால் சொல்ல முயன்றால் தோல்வி ஏற்படும். சத்தியத்தை வெளிப்படுத்தினால் அது சேதப்படும்.

ஞானி லாவோத்சுவும் சத்தியத்தைச் சொன்ன மாத்திரத் திலேயே அது சத்தியமாக இருக்காது; அசத்தியமாகிவிடும் என்று எச்சரிக்கிறார்.

ஒருவன் சொன்னான் 'உண்டு'. இன்னொருவன் சொன்னான் 'இல்லை'. இருவரும் பிளவுபடுகின்றனர். ஆத்திகமும் இல்லாமல், நாத்திகமும் இல்லாமல் இரண்டையும் கடந்து நிற்பவனை அஷ்டாவக்ரர் ஆரோக்கியமான மனமுடையவன் என்று பாராட்டுகிறார்.

ஆத்திகரும் நாத்திகரும் ஒருவரையொருவர் தாக்கக் கிளம்புகிறார்கள். கடவுள் உண்டு என்பதும், இல்லை என்பதும் மனத்தின் அறிவிப்புகள் மட்டுமேயாகும். இதனால் சாதகமாகவும் பாதகமாகவும் விவாதங்கள், சித்தாந்தங்கள், சம்பிரதாயங்கள், சாஸ்திரங்கள் தோன்றுகின்றன. சிக்கல் ஆரம்பமாகிறது. கடவுள் உண்டு என்பதற்கு ஆத்திகர் தர்க்கங்கள் திரட்ட வேண்டியுள்ளது. நாத்திகர் தன் கருத்தை வலியுறுத்தவும் தர்க்கங்கள் சேகரிக்கிறார். ஆனால் இருவராலும் இறுதி சத்தியம் இதுதான் என்று நிலைநிறுத்த முடியவில்லை. சில சமயம் தர்க்கங்கள் காரணமாக ஆத்திகர் நாத்திகராவதும், அவ்வாறே நாத்திகர் கடவுள் பக்தராவதும் உண்டு.

இன்றுவரை உலகில் யாரும் கடவுளை வரையறுக்க (define) முடிந்ததில்லை. கடவுள் இல்லையென்றும் அடித்துக்கூற முடிந்ததில்லை. ஆத்திகர், நாத்திகர் இருவரின் அறிவும் எல்லைக்கடங்கியவை.

ஒருவன் சொல்கிறான்: "எனக்கு இந்த பிரச்சினைகளில் ஆர்வம் இல்லை. உண்டு-இல்லை என்னும் விவாதத்துடன் எனக்கு சம்பந்தமில்லை. நான் இப்பக்கமோ, அப்பக்கமோ இல்லை. நான் எனக்குள் ஆழ்ந்திருக்கிறேன். அது போதும் எனக்கு." இவனை அஷ்டாவக்ரர் ஆரோக்கிய மனம் கொண்டவன் என்பார்.

'கெட்ட புத்தி உள்ளவனும் ஆத்மா. அத்துவைதம் என்றெல்லாம் உணர்ச்சியாகக் கூறுகிறான். ஆனால் மோகத்தின் காரணமாக உண்மையில் அறிந்திருப்பதில்லை. ஆகவே வாழ்க்கை முழுதும் சுகமின்றியே கழிக்கிறான்'. **(சுலோகம் 219)**

**பு**த்தியானது அபுத்தி, குபுத்தி என்று இருவகைப்படும். இவற்றை அறியாமை, கெட்ட புத்தி என்று கூறலாம். அறிவின்மை நிலையில் உள்ளவனுக்குப் பெரிய அளவில் ஆபத்தில்லை. அவனது புத்தி உறக்கத்தில் உள்ளது. அதை எழுப்ப முடியும். தனக்கு எதுவும் தெரியாது என்று அவன் அடக்கமாக இருப்பான். அறிவைத் தேட தயாராக இருப்பான்.

கெட்ட புத்தி உள்ளவன் தனக்குத் தெரியாததையும் தெரியுமென்று காட்டிக் கொள்வான். பண்டிதர்கள் எனப்படுவோரில் பலர் இப்படித்தான் உள்ளனர். 'நூல்கள் நிறையப் படித்தார்கள்தாம். ஆனால் பண்டிதர் எவரும் ஆகவில்லை' என்பார் கபீர்தாசர். அவர்களின் மூளையில் தகவல்கள் மட்டுமே திரட்டி வைக்கப்பட்டுள்ளன. சாஸ்திரங்களையும் தகவல்களையும் மட்டும் ஆதாரமாகக் கொண்டு அவர்கள் தங்களை ஞானிகளாக நினைத்துக் கொள்கிறார்கள். அவர்கள் நோயாளிகள். ஆரோக்கியமாக இருப்பதாகக் கருதுகிறார்கள்.

ஞானத்தை நோக்கிப் போவதற்கு முதலில் குபுத்தியிலிருந்து வெற்று மூளை நிலைக்குப் போகவேண்டும். ஆகவே என்னிடம் சீடராவதற்கு வருகிறவர்கள் தாங்கள் ஏற்கெனவே படித்த பாடங்களை மறந்துவிட வேண்டும்! ஞானம் என்று அவர்கள் தற்போது போர்த்தியிருக்கும் போர்வையைக் கழற்றிட வேண்டும். குழந்தைகள்போல் சுத்தமான மனதுடையவர்களாக ஆன பிறகுதான், புதிதாக ஆன்மிகப் பயணம் தொடங்க வேண்டும்.

கெட்ட புத்தி அகங்காரத்தின் உதவியுடன் நிற்கிறது. அகங்காரமோ தனக்குத் தெரியாத விஷயங்களும் இருக்கக்கூடும் என்று ஒருவனை ஒப்புக்கொள்ள விடுவதில்லை. எனக்குத் தெரியாதது வேறு யாருக்கும் தெரியார்து என்றே அவன் நினைக்கிறான்.

அபுத்தி நிலையில் நீ ஒன்றும் அறியாதவனாக மட்டும் உள்ளாய். இது இயற்கையே. இந்த நிலையிலிருந்து ஞானத்திற்குப் போவது எளிது. சிலர் அப்பாவியாக இருந்து ஒரே தாவலில் ஞானியாக மாறியிருக்கின்றனர். கெட்ட புத்தி (குபுத்தி)யிலிருந்து ஞான நிலைக்கு நேரடியான போவதற்கு வழியேதுமில்லை. மறுபடியும் குழந்தை போன்ற அப்பாவி நிலைக்குத் திரும்ப வேண்டும்.*

அகங்காரமான புத்தியுள்ளவனும் ஆத்மா பற்றி கற்பனை செய்கிறான், சிந்திக்கிறான், விவாதிக்கிறான். ஆனால் அதை அவன் அறிவதில்லை. அகங்காரம் தடுப்புவேலிபோல் அமைந்து பூரண ஞானம் பெற முடியாமல் போகிறது. இதனால் வாழ்க்கை முழுதும் அவன் சுகத்தை அனுபவிப்பதில்லை.

**நான் துன்பம் மட்டுமே சேர்க்க முடிந்தது**
**இன்பம் காற்றில் கரைந்தது கற்பூரமாய்**
**எல்லோரிடமும் நான் கேட்டலைகிறேன்**
**நான் என் ஒருவன் வாழ்ந்தானே**
**அந்த ஆள் யாரென்று**

நீ வாழ்க்கையின் முடிவில் ஒருநாள் இந்தக் கேள்வியை எழுப்புவாய். சரியான சமயத்தில் நீ விழிப்புப் பெறாவிடில் இந்த வரிகளே உன் வாழ்க்கையின் சாரமாக அமைந்துவிடும். வாழ்க்கையின் முடிவில் உனது சேகரிப்பு எதுவாக இருக்கும்? எது உன் கைவசம் உள்ளதோ அதைத்தானே சேகரிப்பாய். உன்னிடம் துன்பம்தானே மிஞ்சியிருக்கிறது. இருபது ஆண்டுகள் உன்னை ஒருவன் திட்டினான். அதை இன்னமும் மனத்தில் கொண்டுள்ளாய். எந்தத் துன்பத்தையும் நீ மறப்பதில்லை. காயத்தை ஆறவிடாமல் சொறிகிறாய்.

சுகம் உடனுக்குடன் மறைந்துவிடுகிறது. கற்பூரம்போல் எதுவும் மிஞ்சாமல் காணாமல் போகிறது. நீ வாழவே இல்லை. அப்படியானால் உன் இடத்தில் நீயாக வாழ்ந்தானே அவன் யார்? உண்மையான உன்னை மறைத்துவிட்டு, போலியான உன்னை வெளிப்படுத்தினாய்.

---

* Except ye be converted, and become as little children ye shall not enter into the Kingdom of Heaven. (The Bible)

வாழ்க்கையின் கடைசியில் புலம்பாமல் இப்பொழுதே விழித்துக்கொள். உன்னிடமுள்ள பொய்ம்மையை வெட்டி எறி. உன் அனுபவத்தால் அறியாதவற்றை உதறிவிடு. பழைய அறிவை, கடன் வாங்கிய அறிவை, விலக்கு. நீ எப்படி உள்ளாயோ அப்படியே உன்னை அறி. நீ அறிவிலியாக, முன்கோபக்காரனாக, மோசடி செய்பவனாக, திருடனாக என்றெல்லாம் நீ உள்ளபடியே நேர்மையாக ஏற்றுக்கொள்.

ஆனால் நீ ஊரை ஏமாற்றுகிறாய். திருட்டு புத்தி உள்ள நீ பிறர் பொருளுக்கு ஆசைப்படுவதில்லை என்கிறாய். காமம் மிகுந்தும் புலனடக்கம் பற்றி பேசுகிறாய். நீ பேராசைக்காரன். சிறு-சிறு தானம் செய்து வள்ளல்போல் நடிக்கிறாய். சுய அறிவின்றி, சாஸ்திரங்களிலிருந்து ஒப்பிக்கிறாய். இதனால் நீ ஞானியாகி விட்டதாக நினைக்கிறாய். கடவுளை நேரடியாக வழிபடாமல், உன் வீட்டிற்கு வந்து பூஜை செய்ய பூசாரியை நியமித்திருக்கிறாய்.

ஒருநாள் மரணம் உன் வீட்டுவாசலில் வந்து நிற்கும்போது நீ திகைப்படைவாய். இன்னும் வாழவேயில்லையே, அதற்குள் சாவு வந்து நிற்கிறதே என்று அதிர்ச்சியடைவாய். அப்படியானால் உனது இடத்தில் இதுவரை வாழ்ந்தவன் யார்?

நீ உன்னைப் பற்றிய உண்மையை வெளியிட்டால், உன்னிடம் மாற்றம் ஆரம்பமாகும். அவ்வாறு அறிவிப்பது சிரமமாக, துன்பமானதாக, அவமானமாக இருந்தாலும் நீ தயங்க வேண்டாம். நீ திருடனாக இருந்தால் அதை வெளியிட்டுவிடு. பிறகு உன் திருட்டு குணம் மறைந்துவிடும். நீ பொய் பேசுபவனாக இருந்தால், அதைக் கோயிலில் மக்கள் முன்னால் அறிவித்து, இனி உண்மையே பேசுவேன் என்று சபதம் செய். அதிலிருந்து உன்னால் பொய் பேச முடியாமல் போய்விடும். ஏனெனில் மக்கள் நீ கூறுவதையெல்லாம் மறைமொழி (gospel truth) என நம்புவது உனக்குத் தெரிகிறது.

'முக்தி ஆசை கொண்டவனுடைய புத்தி பற்றுக்கோடு இல்லாமல் நிற்காது. முக்தியை அடைந்துவிட்டவனின் புத்தி விருப்புகள் அற்றதாகவும், எதையும் சார்ந்திராததாகவும் அமையும்.' **(சுலோகம் 220)**

மனத்திற்கு ஏதாவது ஆதாரம் தேவை. அது எதையாவது சார்ந்துதான் நிற்கும். அதற்கு சுய பலம் கிடையாது. அது சக்தியைக் கடன்போல் பெறுகிறது. அதற்கு வேறொன்றின் சக்தி தேவைப்படுகிறது.

ஆகவே நீ எதையாவது சார்ந்து வாழ்ந்தால் நீ மனத்தை ஆதாரமாகக் கொண்டு வாழ்வதாகப் பொருள்படும். நீ எதையும் சார்ந்திராமல் வாழ முடிந்தால் அன்றிலிருந்து நீ மனத்தைக் கடந்தவனாவாய். சிலர் கடவுளை மட்டும் சார்ந்திருப்பதாகச் சொல்வார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் கோயில், பூஜை, யாகம், ஹோமம், பூசாரி, புரோகிதர், சாஸ்திரங்கள் ஆகியவற்றைத் தான் சார்ந்திருக்கிறார்கள். நீ கடவுளைக்கூட உன் தொழிலில் லாபம் காண்பதற்கு ஆதாரமாக அமையுமாறு வேண்டிக் கொள்கிறாய். அவ்வாறு கடவுளை வணங்குவதற்குக்கூட சோதிடரைச் சார்ந்து நல்ல நாள்கள், நல்ல நேரங்கள் என்று வகைப்படுத்தியிருக்கிறாய்.

நீ எல்லா ஆதாரங்களையும் கைவிட்டு, “நான் பலகீனமானவன், உதவுபவர் அற்றவன், ஆதாரம்போல் என்னைத் தாங்கி நிற்பவர் எவருமிலர். எல்லா ஆதாரங்களும் பொய் அல்லது மனத்தின் கற்பனை” என்று ஒப்புக்கொண்டால், கடவுள் உன்னைத் தாங்கிப் பிடிப்பார்.

இப்படி எதையும் சார்ந்திராமைதான் முக்தி எனப்படும். இனி ‘நான் ஊன்றுகோல் எதையும் நாடமாட்டேன்’ என்று சொல்பவன் முக்தனாகிறான்.

உன்னைத் தாங்குபவை விலகத் தொடங்கியதும் மனம் வீழ்ச்சியடையத் தொடங்குகிறது. மனம் முழுமையாக விழுந்ததும் உள்ளே கடவுள் மட்டுமே மிஞ்சுவார்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

> **ஓஷோ அவர்களே! ஞானி துடிப்பற்றவனாகி விடுவான் என்று ஒரு சமயம் நீங்கள் சொன்னீர்கள். இன்னொரு சமயம் நீங்கள் துடிப்பில்லாதவன் பிணத்திற்கு சமம் என்றீர்கள். பிறகு, துடிப்புகளற்ற ஞானி உயிரோட்டத்துடன் எப்படி இயங்க முடியும்?**

மூச்சுவிடும் வாழ்க்கையைத் தவிர, இன்னொரு வகையான உயிர்த் துடிப்புள்ள வாழ்க்கையும் உண்டு. அங்கே உயிர் உண்டு; ஆளுமைத் திமிர் மட்டும் கிடையாது. அங்கே 'நான்' உணர்வு இல்லை; கடவுள் இருக்கிறார். அங்கே இறந்தது அகங்காரத்தின் துடிப்பு. அதற்கப்புறம் ஆரம்பமாவதுதான் உண்மையான வாழ்க்கை.

ஆகவே ஞானி அகங்கார அடிப்படையில் இறந்தவனாகிறான். பிறகு முழுமையான உயிர் பெறுகிறான். கடவுள் நடத்திச் செல்லும் முறைப்படி வாழ்கிறான். அவன் வெற்று மூங்கில் குழல்போல் முதலில் இருந்தவன். அதைப் புல்லாங்குழலாக மாற்றிக் கடவுள் அவன் மூலம் ஒலிக்கிறார்.

இயேசுநாதர் இதற்குப் பொருத்தமான உதாரணமாக அமைகிறார். ஒருபுறம் அவர் சிலுவையில் அறையப்பட்டார். மறுபுறம் அவருக்கு நவஜீவனம் கிடைத்தது. ஒரு கை அவரைச் சிலுவையிலறைய ஆணையிட்டது. இன்னொரு கை அபயமளித்துப் புத்துயிர் தந்தது. எல்லா ஞானிகளின் சரித்திரமும் இதுவே.

ஞானியின் மனத்தில் ஆசை எதுவும் மிஞ்சியிருப்பதில்லை. இதனால்தான் அவர் துடிப்பின்றி, பரபரப்பின்றி அமைதியாக விளங்குகிறார். அவர் எங்கும் ஓடுவதில்லை. அவர் போய்ச்சேர வேண்டிய இடமில்லை. ஞானி மறைந்து_அவரது இடத்தைக் கடவுள் பிடித்துக்கொண்டு விடுகிறார். விதை மறைந்தது. செடி அதனிடத்தில் வளர்கிறது. விதையின் சாவு செடிக்கு வாழ்வு. ஞானி உருகி, மறைகிறார். கடவுள் தனக்குள் வர வழியமைக்கிறார்.

**தாயக்கட்டக் காய்கள் நாம்**
**கறுப்பு சில, வெள்ளை சில**
**பெரியவை சில, சிறியவை சில**
**இக்கட்டத்திலிருந்து அக்கட்டத்திற்கு**
**காலம் நம்மை நகர்த்துகிறது**
**எல்லார் குடுமியும் அதன் கையில்!**

**ஒரு காய் நடுவில் வெட்டுப்பட**
**இன்னொன்று வீட்டை அடைகிறது**
**ஒரு காய் நகைக்க ஒரு காய் அழும்**
**விளையாட்டு நடுவில் நிற்பதில்லை**
**உணவுமில்லை கிழிந்த ஆடை இக்கணம்**
**மறுகணம் அறுசுவை உணவு பட்டாடை**
**கட்டிய வீடுகளை எண்ணுதல் ஒரு காலம்**
**கட்டிய கோவணமும் இழத்தல் இன்னொரு காலம்**
**நாய் வாய் எலும்புத் துண்டைப்போல்**
**விடுவதுமில்லை வாழ்க்கையில் எதையும்**
**அனுபவிப்பதுமில்லை முழுமையாக**
**தாயக்கட்டைத் துணிவிரிப்பில்**
**தொடர்ந்து காய்கள் ஓடுகின்றன**
**ஒரு நாள் ஆட்டம் நிச்சயம் முடியும்**
**காய்கள் துணியில் கட்டப்படும்**

ஞானி இந்த ஆட்டத்தில் கலந்துகொள்வதில்லை. ஆகவே அவருக்கு வெற்றியோ, தோல்வியோ இல்லை. அவரது வாழ்க்கை காற்றில் பறக்கும் உலர்ந்த இலைபோல் சுதந்திரமானது. அந்த இலைபோல் திசையற்ற, ஆசையற்ற, போய்ச்சேர வேண்டிய இடமற்ற, திட்டங்களற்ற வாழ்க்கை அவருடையது. ஆகவே

சோகமோ, மகிழ்ச்சி வெறியோ அவரிடம் காண முடியாது. அவரிடம் நிறைவான அமைதியே காணப்படும்.

ஒரு காலத்தில் அகங்காரம் வாழ்க்கையை விதம் விதமாக வாழத் தூண்டியது. வெற்றி-தோல்வி மாறி-மாறி வந்தன. வாழ்வதற்குப் பெரிய திட்டங்கள் தயாரிக்கப்பட்டன. ஞானம் தோன்றியபின் அகங்காரம் செத்தது; சாம்பலானது. அகங்காரம் காட்டிய வெளிச்சம் அணைந்தது. பிறகு புதிய ஒளி, நிரந்தரமான ஒளி வாழ்க்கைக்கு வழிகாட்டியது.

இவ்வாறு ஞானி ஒரு விதத்தில் இறக்கிறான். இன்னொரு அர்த்தத்தில், ஞானி மட்டுமே உயிருடன் உள்ளவன். மற்ற எல்லோரும் செத்தவர்கள் போன்றவர்கள். கபீர்தாசர் உலகத்தை 'செத்தவர்களின் கிராமம்' என்கிறார்.

**இ**யேசுநாதர் ஏரிப்பக்கம் உலாவுகையில் ஒரு மீனவரைப் பார்த்தார். "எத்தனை காலம்தான் நீ மீன் பிடித்தபடியே இருப்பாய்? வேறு எதையும் பிடிக்கத் தொடங்க வேண்டாமா? என்னிடம் வா. என்னுடன் வா. நான் உனக்குப் பெரியதான வலை வீசுவதைச் சொல்லித் தருகிறேன். அதைக் கொண்டு மனிதர்களைக்கூட பிடித்துவிடலாம்." என்றார்.*

அந்த மீனவர் அப்பாவி. அவர் இயேசுநாதரின் கண்களை உற்றுக் கவனித்தார். அவை கருணையும் நேர்மையும் நிரம்பியவையாகத் தெரிந்தன. அவர் தன் கையிலிருந்த மீன்பிடி வலையை எறிந்துவிட்டு இயேசுவைப் பின்பற்றினார்.

அவர்கள் கிராமத்தைக் கடக்கும் முன்பே ஒருவன் ஓடிவந்தான். அவன் மீனவரைப் பார்த்து, "இந்த சமயம் பார்த்து எங்கே போகிறாய். உன் அப்பா செத்துப்போயிட்டாரு. வீட்டுக்குத் திரும்பு." என்று கூவினான்.

மீனவர் இயேசுவைப் பார்த்து, "மன்னியுங்கள், உங்களுடன் வருவதாகத் தான் இருந்தேன். அதற்குள் விதி இப்படிக் குறுக்கிடுகிறது. சில நாள் அல்லது ஒரு வாரம் எனக்கு அவகாசம்

---

* Follow me, and I will make you fishers of men. (The Bible)

கொடுங்கள். என் தந்தையின் இறுதிக் காரியங்களை முடித்துவிட்டு உங்களிடம் வந்து சேர்கிறேன்,'' என்று வேண்டினான்.

ஆனால் இயேசுநாதர் அனுமதிக்கவில்லை! ''இதைப் பெரிசு படுத்தாதே. கிராமத்தில் தினமும் பிணங்கள் விழுகின்றன. யாராவது எரித்துவிடுவார்கள். நீ உன் அப்பாவின் உடல் பற்றிக் கவலைப்படாமல் என் பின்னால் வா.'' என்று கூறிவிட்டார்.

ஆம் ஒரு விதத்தில் நீ ஏற்கெனவே இறந்துபோனவன்தான். உன் வாழ்க்கையில் என்ன அர்த்தம் இருக்கிறது? ஒன்றும் இல்லாத உன் வாழ்க்கை குறித்து ஆரவாரம் செய்கிறாய். தினமும் காலையில் விழிப்பு, குளித்து உடை, உணவு, அலுவலகம், மாலையில் வீடு திரும்பல், உணவு, தூங்குதல். மறு நாளும், ஒவ்வொரு நாளும் இப்படியே ஓடுகிறது.

இதில் வாழ்தல் என்பது எங்கே இருக்கிறது? செக்குமாடு போல் சுற்றிவருதல் வாழ்க்கையா? விலங்குகளும் இப்படித்தானே வாழ்கின்றன. செடிகள்-மரங்களும் இதேபோல் வாழ்ந்தாலும் அவற்றால் பயன் விளைகிறது. உன்னைப் போல் அவை வறண்ட வாழ்க்கை நடத்துவதில்லை. பசுமையான அவற்றில் பூக்கள் மலர்கின்றன. உன்னிடமிருந்து என்ன மலர்கிறது? அவற்றிலிருந்து நறுமணம் எழுகிறது. உன்னிடமிருந்து கெட்ட நாற்றம்தானே தோன்றுகிறது. உன்னிடமிருந்து கோபம், வெறுப்பு, வன்முறை ஆகியவைதானே எழுகின்றன. அன்பைப் பற்றி பேசுகிறாய். கலப்படமற்ற அன்பை வெளிக்காட்ட உனக்குத் தெரியுமா? கருணை பற்றி கட்டுரைகள் எழுதுகிறாய். அதை அனுபவத்தில் உணர்ந்திருக்கிறாயா? கடவுள் என்பதேகூட உனக்குக் காதில் விழும் வார்த்தை மட்டும்தானே. கடவுளுடன் உனக்கு பரிச்சயம் (அறிமுகம், பழக்கம்) உண்டா? இறை அனுபவத்தை நீ சந்தித் திருக்கிறாயா? நீ மூச்சுவிடுகிறாயே தவிர எங்கே வாழ்கிறாய்?

கண்ணுக்குத் தெரிகின்ற இந்த வாழ்க்கை அசலானது அன்று. இது ஞானத்தால் அழிந்தபின் இன்னொரு வாழ்க்கை பிறக்கிறது. இப்போது அது கண்ணுக்குத் தெரியவில்லை. அதுவே உண்மையான ஜீவனம்.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! உலகில் ஞானிகள் பலர் தோன்றியிருக்கின்றனர் புத்தர், மகாவீரர், நானக், ராமகிருஷ்ணர், ரமணர், இப்போது நீங்கள். உங்கள் யாருக்குமே குரு என்று ஒருவர் இருந்து வழிகாட்டவில்லையே. அவ்வாறு ஏன் ஏற்பட்டது?**

இவர்களுக்கு குரு இல்லை என்று நீ சொல்வது தவறு. கடவுளின் படைப்பு மொத்தமுமே இவர்களுக்கு குருவாக அமைந்தது என்று சொல்வதுதான் பொருந்தும். இந்த அளவுக்கு விசாலத் தன்மை பெற்றிராதவர்கள் ஒரு தனி மனிதரை குருவாக்கிக் கொள்கிறார்கள் எல்லா சன்னல்களையும் திறக்க முடியாவிடில், ஒன்றையாவது திறக்க முடிந்தால் போதும் என்னும் நிலைதான் இது. பிறகு கொஞ்சம்-கொஞ்சமாக முயன்று முடிந்த அளவிற்கு சன்னல்களைத் திறக்கலாம்.

மேலோட்டமாகப் பார்க்கையில், புத்தருக்கு குரு யாருமில்லை என்று நினைக்கிறோம். அவர் படைப்பு முழுவதையுமே குருவாகப் பார்த்தார். நதி-மலை, சந்திரன்-தாரகைகள், செடி கொடிகள், பறவைகள், விலங்குகள் அவருக்கு குருவாக அமைந்தன.

ஹஸன் என்றொரு சூஃபி சம்பிரதாயத் துறவி. அவர் இறக்கும் சமயம் சுற்றியிருந்தவர்களில் ஒருவர், "உங்கள் குரு யார்?" என்று வினவினார். ஹஸன் நேரான பதிலைத் தவிர்த்தார். "இந்த விஷயம் வேண்டாமே. சொன்னாலும் உங்களுக்குப் புரியாது. இறக்கும் தறுவாயில் உள்ளேன். என்னால் எதையும் விளக்கமாகச் சொல்ல முடியாது.

அவரது பதில் அங்கிருந்தவர்களின் ஆர்வத்தைக் கிளறிவிட்டது. "சாமி, நீங்க எப்படியும் புறப்பட்டு விட்டீங்க. இந்த பிரச்சினையை இப்படியே விட்டுவிட்டுப் போகாதீங்க. இந்த புதிருக்கான விடை தெரியாம நாங்க தவிப்போம். உங்களுக்கும் இன்னும் உயிர் கொஞ்சம் மிஞ்சியிருக்கு. சுருக்கமா சொன்னா போதும்," என்று கேட்டுக்கொண்டனர்.

ஹஸன் சம்மதித்தார். "நான் நதிக்கரையில் உட்கார்ந்திருந்தேன். ஒரு நாய் தாகத்துடன் வந்தது. நதியின் நீரில் அதற்கு இன்னொரு நாய் தெரிந்தது. பயந்து அது குரைத்தது. நீரில் தெரிந்த நாயும் குரைப்பதாகத் தோன்றியது. தாகத்தைப் போக்க நதியில் இறங்குவதைத் தவிர வேறு வழியில்லை. பல முறை பின்வாங்கி, நடுங்கியபடி, கடைசியில் அது நீரில் குதித்துவிட்டது. உடனே இரண்டாவது நாய் மறைந்துவிட்டது. அடிப்படையிலேயே அது இல்லையே. அது நாயின் நிழல் மட்டுமேதான்.

"நான் அந்த நாயை வணங்கினேன். அதுவே என் முதல் குரு! பிறகு எனக்கு நிறைய குரு கிடைத்தார்கள். எங்கெல்லாம் வாழ்க்கையில் நமக்கு பயமாக உள்ளதோ அங்கு உண்மையில் நமது நிழல்தான் பயமுறுத்துகிறது என்பதை அன்று தெரிந்துகொண்டேன். மேலும், பயத்தைப் பொருட்படுத்தாமல் தண்ணீரில் குதிக்கத் தூண்டும் அளவிற்கு நமக்குத் தாகம் இருக்க வேண்டும் என்று புரிந்தது" இவ்வாறு ஹஸன் விளக்கம் தந்தார்.

சிலர் என்னிடம், "நாங்கள் சந்நியாசம் பெற விரும்புகிறோம். ஆனால் பயமாக உள்ளது. பயம் நீங்கியதும் தீட்சை பெறுவோம்," என்கின்றனர். அப்படியானால் பிறகு பயம் ஏற்படாதா? பயம் வராத நேரம் என ஒன்றுண்டா? பயமிருந்தாலும் துறவறம் ஏற்கத்தான் செய்கிறார்கள். துறவியானவனுக்கு பயம் ஏற்படவில்லை என்றா நீ நினைக்கிறாய்? அவர்களும் உன்னைப் போன்ற மனிதர்களே ஆவர். அவர்களும் பயப்பட்டனர். ஆனால் துறவுத் தாகம் மிகுதியாக இருந்ததால் அவர்கள் பயத்தை ஒருபுறம் ஒதுக்கிவைத்தனர். அனுபவத்தால் (நாய் நீரில் குதித்ததால்) பயம் நீங்கியது. ஆனால் நீயோ, "பயம் நீங்கிய பிறகு துறவற அனுபவம் பெற்றுக் கொள்கிறேன்," என்கிறாய். இது சிரமமானது. நீ வைக்கும் நிபந்தனை பூர்த்தியாகாது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் நீச்சல் கற்க விரும்பினார். பக்கத்து வீட்டுக்காரர் ஒரு நீச்சல் வீரர். அவர், "நான் கற்றுத் தருகிறேன்," என்று கூறி நஸ்ருத்தீனை ஆற்றங்கரைக்கு அழைத்துச் சென்றார். படிகளில் பாசி படிந்திருந்ததால் நஸ்ருத்தீன் ஒரு படியில் வழுக்கி அங்கேயே விழுந்துவிட்டார். எழுந்ததும் வீட்டிற்கு ஓட்டம்

பிடித்தார்! "ஏன் ஓடினாய்?" என்று பயிற்சியாளர் நஸ்ருத்தீனின் வீட்டை அடைந்து கேட்டார்.

"நான் வரவில்லை. நீந்தக் கற்றுக்கொண்ட பிறகு நதிக்கு வருவேன். இன்று எடுத்த எடுப்பிலேயே நல்லவேளையாகப் படியிலேயே விழுந்துவிட்டேன். ஆற்றில் விழுந்திருந்தால் என் கதி என்ன ஆகியிருக்கும்! நீங்கள் காப்பாற்றுவீர்கள் என்பது என்ன நிச்சயம்?" என்று நஸ்ருத்தீன் வர மறுத்தார்.

மெத்தை-தலையணைகளை வைத்தா ஒருவன் நீந்தக் கற்றுக்கொள்ள முடியும்? படுக்கையில் நீச்சல் அடிப்பதுபோல் கை-கால் வீசிப் பயின்றால் ஆபத்தில்லை என்றும், வசதியாக இருப்பதாகவும் தோன்றும். எவ்வகையிலாவது ஆபத்தில்லாமல் எதையும் கற்க முடியுமா? ஆபத்துதான் அனுபவம் தருகிறது; பயிற்சியை முழுமையாக்குகிறது; சவால்தான் நமக்குள் மறைந்துள்ள சக்தியை வெளிப்படுத்துகிறது.

'நீச்சல் பயிலாமல் ஆற்றில் இறங்கமாட்டேன்' என்று நீ சொன்னால், ஒருகாலத்திலும் உன்னால் நீந்த முடியாது. நீச்சல் பயில்வதற்கு, அதைப் பற்றி ஒன்றும் தெரியாமலே, நதியில் தைரியமாக இறங்கத்தான் வேண்டும். நீந்தக் கற்றுத்தருபவரை நீ நம்ப வேண்டும். நீ நீரில் மூழ்கினால் அவர் காப்பாற்றுவாரா, மாட்டாரா என்பது எப்படித் தெரியும்? நீ மூழ்கினால்தானே அதைக் கண்டுபிடிக்க முடியும்! அவர் மற்ற பலரைக் காப்பாற்றியிருந்தாலும் உன்னையும் காப்பாற்றுவார் என்பது நிச்சயமில்லை. நீ மூழ்க வேண்டுமென்று அவர் சதித் திட்டம் வகுத்து, அதை நிறைவேற்ற உன்னைப் பயிற்சிக்கு அழைத்திருக்கவும் கூடும்.

உனக்கு பயமாக உள்ளது. எதிரே நதி தெரிகிறது. உன் பயிற்சியாளர் நீச்சல் வீரர். அவரைப் பற்றி பிறரிடமிருந்து நற்சான்றிதழ்கள் பெறலாம். அவர் மற்றவர்களுக்குக் கற்பிப்பதை நீ கரையிலிருந்து காணலாம். அவரிடம் பயிற்சி பெற்று நீந்துபவர்களையும் காணலாம்.

ஆனால் வாழ்க்கை நதி கண்ணுக்குத் தெரிவதில்லை. கடவுள் என்னும் கடல் கண்ணுக்குத் தெரிவதில்லை. பயிற்சியாளர் யாருமில்லை. பயிற்சியாளனும் பயில்பவனும் நீயே.

என்னிடம் தீட்சை பெறுவோரில் எத்தனை பேர் பிறவிப் பெருங்கடல் நீந்தி இறைவனடி சேர்வதற்குப் போகிறார்கள் என்பதையோ, எத்தனை பேர் போகமாட்டார்கள் என்பதையோ உன்னால் அறிய முடியாது. நீயே கடற்கரைக்குப் போனால்தான் அங்கு வருகின்றவர்களை அடையாளம் காணலாம். நமக்கு உள்ளே அறியாத ஒன்றை வெளியிலும் அறிய முடியாது.

நீந்துவதைக் கற்க முதலில் பயத்தை ஒரு மூலைக்குத் தள்ளிவிட வேண்டும். மேலும், நீச்சல் பயிற்சிக்கான தீவிர தாகம் எழுந்து தண்ணீரில் பாயவேண்டும். இதைத்தான்‌ அச்சமின்மை, அருள் தாகம், தணியாத வேட்கை—துறவி ஹஸன் நாயிடமிருந்து கற்றதாகச் சொன்னார்.

**து**றவி பாயஜீத் என்பவரிடம் சிலர் அவருடைய குரு யார் என விசாரித்தனர். ஒரே சொல்லில் பதில் சொல்லாமல் அவர் ஒரு சம்பவத்தை எடுத்துரைத்தார்:

“ஒருமுறை நான் ஒரு கிராமத்தின் வழியாகச் செல்ல நேர்ந்தது. ஒரு சிறுவன் கையில் எரியும் அகல்விளக்குடன் செல்வதைப் பார்த்தேன். உறவினர் கல்லறையில் விளக்கை வைப்பதற்குப் போவதாக எனக்குத் தோன்றியது. எனக்கு உபதேசம் செய்வது பிடிக்கும். அன்று நாள் முழுதும் பேசுவதற்கு ஆள் கிடைக்கவில்லை. என்னிடம் ஞானம் இல்லாதபோதிலும் யாருக்காவது ஞானவழி காட்டத் துடித்தேன்.

“அந்தப் பையன் வகையாக என்னிடம் மாட்டிக் கொண்டான். அவனை அருகில் அழைத்தேன். அவன் என்னை நெருங்கியதும் வாயால் ஊதி விளக்கை அணைத்துவிட்டேன். ‘மகனே, விளக்கின் மண்ணிலோ, எண்ணெயிலோ, திரியிலோ ஒளி இல்லை. அது எங்கே மறைந்துபோனது?’ என்று பெரிய ஞானக் கேள்வி என நினைத்தபடி கேட்டேன்.

"அதற்கு அந்தச் சிறுவன், 'காணாமல் போன ஒன்றைக் கண்டுபிடிக்க விளக்கேற்றிப் பார்ப்பதுதானே வழக்கம்,' என்று கூறியபடி அவன் நிஜார்பையிலிருந்து தீப்பெட்டியை எடுத்து, ஒரு குச்சியை உருவி, விளக்கை ஏற்றினான். என்னைப் பார்த்து அவன், "இப்பொழுது உங்கள் முறை. விளக்கிற்கு ஒளி எங்கேயிருந்து வந்தது?" என்று கேட்டான். மேலும் அவன், 'ஒளி எங்கே போனதோ அங்கிருந்தே திரும்பியது. அது வரும்போது எங்கிருந்து வந்ததெனத் தெரியவில்லை. அது போகும்போதும் எங்கே போய்ச் சேருகிறதோ, அறிகுறி ஏதுமில்லை," என்றான்.

"நான் அசந்துபோனேன். எனக்கு எதுவுமே தெரியாது, நான் ஞான சூனியம் என்பதை அந்தச் சிறுவன் எனக்கு உணர்த்தி விட்டான். ஒரு சிறுவனுக்குக்கூட எதுவும் கற்பிக்கும் தகுதி எனக்கில்லை என்பதை நான் தெரிந்துகொண்டேன். நான் அவனிடம் தோற்றேன். அன்றிலிருந்து நான் யாருக்கும் உபதேசிப்பதை, எந்தப் பயிற்சியும் கொடுப்பதைக் கைவிட்டேன். இனி எனக்கு ஏதாவது தெரியவந்தால்தான் பிறரிடம் அதை வெளிப்படுத்துவேன். அந்தச் சிறுவன் எனக்கு குருவாகி விட்டான்"—ப்ாய்ஜீத் கூறி முடித்தார்.

இவ்வாறு படைப்பு முற்றிலும் குருவைக் காண எத்தனை பேரால் முடியும்? அப்படிக் காண முடிந்தவர்களுக்குக் குறிப்பிட்ட ஒருவரை குருவாக்கிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. ஆனால் படைப்பில் உள்ள எல்லாமே எனக்கு குரு என்று போலியாகச் சொல்லக்கூடாது. ஒரு குருவைத் தவிர்ப்பதற்கான பொய்யாக அதைக் கூறக்கூடாது.

முயற்சி இருந்தால் ஒவ்வோர் இடத்திலும் நாம் ஏதேனும் கற்கலாம். கற்கும் கலை வசமானால் ஒவ்வோர் இடமும் கோயிலாகும். எந்த ஆன்மிக வழியில் போனாலும், தொடர்ந்து சென்றால், ஒரே முடிவிடத்தைச் சேரலாம். கற்கும் கலை வசமாகாவிடில், சீடனாக நடந்துகொள்வது தெரியாவிடில், கற்பதை ஏற்க மனம் சுதந்திரமாகவும் வெற்றிடமாகவும் இல்லாவிடில், நடுநிலைமையில் மனம் இல்லாவிடில், பழைய சித்தாந்தங்களின் சுமையால் சிந்தனை அமுக்கப்பட்டிருந்தால், உனக்கு புத்தர் அல்லது அஷ்டாவக்ரரே குருவாக அமைந்தாலும் பயனில்லை.

சுருக்கமாக—காண்பன எல்லாம் குருவாகப் பார். அல்லது அவ்வாறு பார்த்த புத்தர், மகாவீரர் போன்றவர்களை குருவாகக் கொள். இரண்டும் முடியவில்லையெனில் எந்த சன்னலையாவது திறந்துவை. சன்னல் மூலம் முழு ஆகாயமும் தெரியாமல் போகலாம். ஆனாலும் அந்தச் சிறிய காட்சி உன்னை மேலும் காணத் தூண்டுதலாக அமையும். சூரியனின் சில கிரணங்கள் உள்ளே வரும். காற்றின் சிறு அலை உள்ளே தவழும். பூக்களின் மணம் பரவும், வானில் பறக்கும் சில பறவைகள் கண்ணில் படலாம். உனக்கும் அவ்வாறு விசாலத்தில் சஞ்சரிக்க வேண்டுமென்ற தாகம் உண்டாகலாம்.

குரு என்பவர் செய்வதும் இதுவே. அவர் கடவுளின் ஒரு சன்னல். அந்த சன்னல் மூலம் கடவுளின் தோற்றத்தைக் காணும் வாய்ப்பைப் பெறுகிறாய். பிறகு படைப்பனைத்தும் பரமாத்மாவாகத் தெரியும். நீ எல்லா சன்னல்களையும், எல்லாக் கதவுகளையும் திறந்துவிடுவாய். அடுத்து, வீட்டிற்கு வெளியே, திறந்த வெளிக்கு, அண்டப் பெருவெளிக்கு வருவாய். பிறகு மொத்த ஆகாயமும் உனக்குத்தான் சொந்தம்.

## மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! எதில் சுவை உள்ளதோ அதை அனுபவித்துப் பார்த்துவிடச் சொல்கிறீர்கள். ஆனால் பொருள் வழி இன்பம் நம்மைக் குருடாக்கிவிடாதா?**

**சு**வை (ரசம்) எப்படி ஒருவரைக் குருடாக்கும்? உபநிடதங்கள் கடவுளை ரச ரூபமானவன் (ரஸோ வை ஸ:) என்கின்றன.

வெளிப்பொருள் எதுவும், அது பணமானாலும் பொருள்களானாலும், உன்னைக் குருடாக்காது. நீதான் கண்களை மூடியபடி உட்கார்ந்திருக்கிறாய்.

ஆனால் இதை ஒப்புக்கொள்ளும் துணிச்சல் உனக்கில்லை. நீ சாக்குத் தேடுகிறாய். காமம், பணம், வாழ்க்கைச் சிக்கல்களால் நீ குருடாகிவிட்டதாகச் சொல்கிறாய். ஆனால் உண்மை இதற்கு

எதிரானது. உனக்குப் பார்க்கத் தெரியவில்லை. ஆகவே வாழ்க்கைச் சிக்கல்களில் தெளிவின்றி இருக்கிறாய்; பணத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டுள்ளாய். காலப்போக்கில் பணம் தனது கவர்ச்சியை இழக்கிறது. இது உன் தவறுதான். பணம் ஒரு சட வஸ்து. ரசம் அதில் இல்லை.

திருமணமாகாத ஒருவன் தவமிருந்து கடவுளிடம் "ஒரு பேரழகியை எனக்கு மனைவியாக அனுப்பு" என்று வரம் வேண்டினான். கடவுள் வேடிக்கையாக, "அதற்குப் பதிலாகத் தூக்குக்கயிறு அனுப்பட்டுமா?" என்று கேட்டார். அதற்கு அந்த மனிதன், "பக்தன் கேட்ட வரத்தைத் தருவதுதான் கடவுளின் வழக்கம் என்று சாஸ்திரங்களில் சொல்லியிருப்பது பொய்யா? தூக்குக்கயிற்றை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வது?" என்று சீறினான்.

அந்த மனிதனுக்கு ஒரு பேரழகி மனைவியாக வந்தமைந்தாள். ஒரு வாரத்திலேயே அவனுக்கு அவள் சலித்துவிட்டாள். அவளது அழகு காரணமாக அக்கம் பக்கத்தில் பிரச்சினைகள் உருவாயின. தான் தனி மனிதனாக அமைதியாக வாழ்ந்த நாட்கள் அவனுக்கு நினைவில் வந்து வருத்தின.

மனிதன் விசித்திரமானவன். இழந்த பொருளும், கடந்த காலமும் பிறகு இனிமையாகத் தோன்றுகின்றன. கிடைக்காத ஒன்று கவர்ச்சிகரமாகத் தோன்றுகிறது. கிடைத்த பொருள் சற்றுப்பொறுத்து முள்ளாகக் குத்துகிறது. அவன் மறுபடியும் காட்டுக்குச் சென்று கடவுளை தியானித்தான். "இறைவா, என்னை மன்னியுங்கள். நான் தவறிழைத்துவிட்டேன். நான் ஒரு முட்டாள் என்பது உங்களுக்கு ஏற்கெனவே தெரியுமே. ஒரு வாள் கொடுங்கள். என் மனைவியைத் தீர்த்துக்கட்டுகிறேன். பிறகு முன்புபோல் அமைதியாக, தனியாக, மகிழ்ச்சியாக, கவலையின்றி வாழத் தொடங்குவேன்," என்று வேண்டிக்கொண்டான்.

கடவுள் மறுபடியும் வேடிக்கையாக, "வாள் எதற்கு? தூக்குக்கயிறே அனுப்புகிறேனே." என்றார். அவன் கோபத்துடன், "நீங்க ஏற்கெனவே அனுப்பியதே தூக்குக்கயிறுதான் இன்னுமா

டுங்க மனசு நிரம்பவில்லை? எனக்கு கூரான வாள் ஒன்று அனுப்பினால் போதும்,'' என்று அழுத்தமாகக் கூறினான்.

சட்டென்று அவன் கைக்கு ஒரு வாள் கிடைத்தது. அவன் தாமதிக்கவில்லை. உடனே அவன் வீடு திரும்பி மனைவியின் தலையை வெட்டிவிட்டான்! இனி ஆனந்தமாக வாழலாம் என நினைத்தான். ஆனால் அவன் கைதானான். அவனுக்குத் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டது. அவன் தூக்குமேடையில் ஏறியதும் பலமாகச் சிரித்தான். ஆச்சரியப்பட்ட அதிகாரிகளைப் பார்த்து அவன், "கடவுள் இரண்டு முறை தூக்குக்கயிறு அனுப்பட்டுமா என்று கேட்டார். அவரது கருத்து எனக்குப் புரியவில்லை. புரிந்திருந்தால், இத்தனை பிரச்சினைகளைத் தவிர்த்திருப்பேன்,'' என்றான்.

எதை விரும்பிக் கேட்டுப் பெறுகிறோமோ அதுவே தூக்குக்கயிறுபோல் ஆகிவிடுகிறது. 'யாருக்கு அவர் விரும்பியவள் மனைவியாகக் கிடைக்கவில்லையோ அவர் அதிர்ஷ்டம் செய்தவராவார்,' என்று ஆஸ்கார் வைல்ட்.* கூறுகிறார்.

உனக்கு எது கிடைக்கிறதோ அது சுவையிழக்கிறது. ஏழைக்குப் பணம் பெறுவதில் சுவையிருக்கலாம். பணக்காரனுக்கு ஒரு கட்டத்தில் பணம் திகட்டிப்போகிறது, பாரமாகிவிடுகிறது. புத்தரும் மகாவீரரும் செல்வ வசதிகளை ஏன் உதறிவிட்டுச் சென்றனர்? பணத்தில் ரசம் இல்லை, சுவை கிடைக்கவில்லை.

பதவி மோகம் உள்ளவர்களுக்கு பதவியில் சுவை தெரிகிறது. பதவியிலுள்ளவர்களோ இறங்க முடியாமல் தவிக்கிறார்கள். புலியிடமிருந்து தப்பிக்கப் புலிவாலைப் பிடித்துக் கொண்ட கதைதான்.

ரசம் எங்கே? அதை நீ அறிந்துள்ளாயா? கடவுள்தான் ருசியானவர். சுவைதான் அவர். அந்த ரசம் உன் இதயத்தின் கண்களைக்கூட திறந்துவிடும். பார்வையற்றவர்கள் ஒருவரையொருவர் பிடித்தபடி வரிசையாகப் பாதையில் செல்வதைப்போல்,

---

* **Oscar Wilde (1854-1900)** அயர்லாந்தைச் சேர்ந்த ஆங்கில நாடகாசிரியர், நாவலாசிரியர். குதர்க்கமான மொழிநடைக்குச் சொந்தக்காரர்.

பணத்தாசை, பதவியாசை முதலியவற்றால் குருடரானவர்கள் ஒருவரையொருவர் பின்பற்றியபடி செல்கிறார்கள்.

ஆனால் நீ முயன்று கண்களைத் திற. உன்னை யாரும் குருடாக்கவில்லை. கண்களைத் திறக்க விரும்பாமை நீ எடுத்த முடிவு. பிறரைக் குறைசொல்ல வேண்டாம்.

நீ முன்கோபி. ஆனால் உனக்குக் கோபமூட்டியதாக இன்னொருவனைப் பழிகூறுகிறாய். நீ அடிப்படையில் கோபக்காரனாக இல்லாவிடில், ஒருவன் உன்னை எவ்வளவு திட்டினாலும் அமைதியாக இருப்பாய். தண்ணீரில்லாத கிணற்றில் நீ வாளியை இறக்கி, கயிற்றை எவ்வளவு உலுக்கினாலும் வாளி காலியாகவே இருக்கும்.

மனத்தத்துவ அறிஞர்கள் கூறுவது—உனக்கு ஒருவர் கோபமூட்டிவிட்டாலும், நீ எப்போதும் கோபம் நிறைந்து விளங்குபவனாயின், நீ ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டு உன் கோபத்தை வெளிப்படுத்துவாய். கிணறு நிறைந்திருந்தால், வாளியைப் போடாமலே, அதிலிருந்து நீர் சிந்தும்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் சாந்தமாக அமர்ந்திருந்தார். அவர் மனைவி "ஏன் இப்படிப் பண்றீங்க? அநாவசியமா என் கோபத்தை ஏன் தூண்டறீங்க?" என்று கத்தினாள். நஸ்ருத்தீன் திகைத்துப் போனார். "அளந்து பேசு. நானா உனக்கு கோபமூட்டறேன்? நான் தனியா உக்காந்துக்கிட்டு ஹுக்கா பிடிச்சுக்கிட்டிருக்கேன். அதனால வாயைத் திறந்து நான் பேசக்கூட முடியாது. நான் உன் வழிக்கு எங்கே வந்தேன்?" என்று விசாரித்தார்.

சரியான சண்டைக்கோழியான மனைவி விடவில்லை. "அப்படி தனியாவும், வாயை மூடிக்கிட்டும், ஜாலியா ஹுக்கா பிடிச்சுக்கிட்டு இருக்கீங்களே. என்னைப் பிடிக்காம ஓரமா போயிட்டீங்க. வாயில கொழுக்கட்டை மாதிரி ஹுக்கா. நாலு வார்த்தை என்னோட பேசினா குறைஞ்சா போயிடும்? ஆனந்தமா குப்-குப்புது ஹுக்கா புகை விடறீங்களே. என்னைக் கண்டுக்கவே இல்லைன்னு என் மனசில இருந்து புகை கிளம்பறது தெரியலையா?" என்று மீண்டும் கத்தினாள்!

மனிதன் பேசினாலும் தப்பு, பேசாவிட்டாலும் தப்பு. எப்படியும் அவன் மாட்டிக்கொள்கிறான். மாட்டிவிட மக்கள் தயாராகக் காத்திருக்கின்றனர். உள்ளக் கொதிப்புடன் உள்ளனர். ஏதாவது சாக்கு தேவை. அதைத் தேடி அலைகிறார்கள். அப்படி சாக்குக் கிடைக்காதவர்களை ஓர் அறையில் அடைத்து வைத்தால் என்ன ஆகும்?

மனத்தத்துவ அறிஞர்கள் அப்படி ஒரு பரிசோதனை செய்தனர். கோபக்காரன் ஒருவனை அறையில் ஏழு நாளைக்குத் தனிமையில் ஓர் அறையில் தள்ளினர். சாப்பாடு வந்துவிடும். எல்லா வசதிகளும் தரப்பட்டன. ஆனால் யாரும் நெருங்குவதோ, பேசுவதோ இல்லை. அவன் தனக்கு எப்பொழுதெல்லாம் கோபம் வருகிறது என்று குறித்துக் கொள்ள டயரி தரப்பட்டது.

இந்த சூழ்நிலையில் யார் மீதும் கோபப்பட வாய்ப்பில்லை. ‘இன்று மாலை கோபம் வந்தது’ என்று அவன் எழுதுகிறான். காரணமும் குறிப்பிடுகிறான்.’ முப்பது ஆண்டுகளுக்கு முன் குறிப்பிட்ட ஒருவர் திட்டியது ஞாபகத்திற்கு வந்து இப்போது கோபம் மீண்டெழுகிறது’ என்று அவன் எழுதுகிறான்.

மற்றவகை ருசிகளையும் அனுபவித்துப் பார்த்துவிடுமாறு நான் சொன்னேன். அவைதாம் உன்னைக் குருடாக்குவது புரிய வரும். மாறாக, ஆத்மரசம் உண்மையானது. அது உன் புறக்கண்களை மூடுவதில்லை. அதேசமயம் உன் கண்களை அந்தர்முகமாகவும் திறக்கின்றன. ஆகவே நீ முன்பைவிடப் பரவலாகவும் ஆழமாகவும் உன் வாழ்க்கையைப் பார்க்கத் தொடங்குவாய்.

## நான்காம் கேள்வி

**ஓஷோ அவர்களே! மனத்தில் கேள்வி ஒன்றும் தோன்றவில்லை. பதில் எதற்கும் எதிர்பார்க்கவில்லை. எல்லாக் கேள்வி–பதில்கள், ஆன்மிகம், சந்நியாசம், புத்திசாலித்தனம், குரு மகிமை முதலிய எல்லாம் உளறலாகத் தோன்றுகின்றன. ஏனெனில் என்ன கற்றாலும், என்ன**

**செய்தாலும் நடப்பதெல்லாம் கடவுளின் விருப்பப்படியே என்று தெரிகிறது. ஆனாலும் மனத்துக்குள் ஏதோ ஒரு சங்கடம் குடைந்தெடுக்கிறது. அது என்ன என்று தெரியவில்லை.**

**அ**ந்த சங்கடமும் ஆண்டவனின் விருப்பத்தால்தான் தோன்றியிருக்கிறது. இவ்வளவு சிறிய விஷயத்தை நீ புரிந்துகொள்ளவில்லையா? சந்நியாசம், ஆன்மிகம், தியானம் ஆகிய பெரிய-பெரிய விஷயங்கள் உனக்கு உளறலாகத் தோன்றுகிறது. அவ்வளவு பெரிய ஞானியாகிவிட்ட உனக்கு மனச்சங்கடம் பற்றி மட்டும் புரியவில்லையா?

எல்லாம் கடவுளின் விருப்பப்படி நடைபெறுகின்றவெனில், இந்த சங்கடமும் அவரது விருப்பத்தின் காரணமாகத்தானே உண்டாகியிருக்கும். இதை ஒப்புக்கொள். இந்த சங்கடம் பற்றி ஏன் கவலைப்படுகிறாய். கடவுள் என்ன செய்விக்கிறாரோ அதன்படி நடைபெறட்டும். நடப்பதைப் பார்த்தபடி இரு.

நீ தியானம் செய்யத் தயங்குகிறாய். சந்நியாசியாக பயப்படுகிறாய். இதை மறைக்க, எல்லாம் உளறல் என்கிறாய்.

மனத்தின் சங்கடத்தை அகற்றவே சந்நியாசம் ஏற்கப்படுகிறது. மனச் சங்கடத்தைப் போக்கிக் கொள்வதற்கான உபாயம்தான் தியானம். மனமே இல்லாமல் போகச் செய்வதுதான் ஆன்மிகம். இவற்றைப் போய் நீ குப்பை என்கிறாய். சரி, உன் இஷ்டம், அப்படியானால் உன் மன சங்கடத்தைப் போக்கிக் கொள்ள வழியில்லை. மருந்தைக் குப்பை என்றால் வியாதியை எப்படிப் போக்கிக்கொள்வாய்? மருந்தை உபயோகித்துப் பார்த்தாயா? தியானம் செய்து பார்த்தாயா? ஆன்மிகத்தில் ஆழ இறங்கிய பின்பா பழிசொல்கிறாய்? சந்நியாசத்தைக் குறைகூறும் நீ அதில் அனுபவம் பெற்றிருக்கிறாயா?

குழந்தைத்தனமாகப் பேசாதே. அனுபவமின்றி எதுவும் சொல்லாதே. அனுபவமில்லாத ஒன்றைப் பற்றி அறிக்கைவிடாதே. வாயை மூடியபடி இரு. உன் அனுபவத்தின் எல்லைக்கு

அப்பாற்பட்ட ஒன்றை நீ வலியுறுத்தினால் அது உனக்குத் தூக்குக்கயிறாக அமையும்.

உன் சங்கடம் தீர நான் வழி ஏதும் சொன்னால் அதுவும் உனக்கு உளறலாகவே தோன்றும். ஏனெனில் நான் சொல்லும் உபாயம் நீ அற்பமாக நினைக்கும் ஆன்மிகம், தியானம் அல்லது சந்நியாசத்தின் கீழ்தான் அமையும்.

நீ பதில் எதிர்பார்க்கவில்லை என்று கூறுவதால், நான் பதிலளித்தாலும் நீ. நன்றி தெரிவிக்க தயாராக இல்லை, பிறகு நீ வழிகாட்டுதலை (guidance) எப்படிப் பெறுவாய்? நான் கூறும் பதில் வீணாகிவிடும். உன் வரையிலும் என் உபதேசம் வந்துசேராது. நீ இங்கே உட்கார்ந்திருந்தும் பயனில்லை. என் பேச்சைக் கவனித்திருந்தால் உன் வாழ்க்கை மாறியிருக்கும். மனத்திலுள்ள சங்கடம் தானாகவே நீங்கியிருக்கும். தியானம் கூடியிருக்கும். ஆன்மிக ரசம் கிடைத்திருக்கும். சந்நியாசம் உன்னைத் தழுவியிருக்கும். நீ விரும்பியவை என் பேச்சில் வந்தால் மட்டும் காதுகொடுத்துக் கேட்டிருப்பாய்.

மனம் ஒரு போக்கிரி! அதன் போக்கிரித்தனம் நுணுக்க மானது. அதுதான் கேட்க விரும்புவதை மட்டுமே காதில் போட்டுக்கொள்ளும். மற்றதை வேண்டுமென்றே தவிர்த்துவிடும்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் குடிகாரர். ஒருவர் அவரிடம், "நீ தினமும் திருக்குர்ரான் ஓதுகிறாய். அந்நூலில் மதுவுக்கு எதிராகக் கூறப்பட்டிருக்கிறதே," என்று நினைவூட்டினார். "ஆமாம், அப்படித்தான் எழுதப்பட்டுள்ளது. என்னால் இயன்ற அளவிற்குக் கடைப்பிடிக்கிறேன்,"என்றார். "கள் குடிப்பவன் நரகத்துக்குப் போவான் என்று திருக்குர்ரான் எச்சரிக்கிறதே," என்றதற்கு, நஸ்ருத்தீன், "நான் இப்போது அந்த எச்சரிக்கையில் பாதிவரை தான் வந்துசேர்ந்திருக்கிறேன். 'கள் குடிப்பவன்' என்பதுவரை வந்துள்ளேன். மீதி எச்சரிக்கைவரை போக இப்போது என்னிடம் சக்தி இல்லை. மெல்ல-மெல்ல முயலுவேன். ஆனால் இதுவரை வந்துள்ளதும் திருக்குர்ரானில்தானே உள்ளது. கள் குடிப்பவன் என்று அது சொல்கிறபடி நான் செய்வதால் நான் அந்தக்

கருத்துக்கு எதிராகப் போகவில்லை,'' என்று துடுக்காக வாதம் செய்தார்.

இதேபோல் அஷ்டாவக்ரர் கூறுவதற்கும் சிலர் மனம்போன போக்கில் அர்த்தம் செய்து கொள்ளுகின்றனர். ஓரிடத்தில் அவர் சொல்வது—சந்நியாசமோ, தியானமோ, ஆன்மிகமோ, சாஸ்திரமோ, குருவோ தேவையில்லை. இதைக் கேட்டு நீ துள்ளிக் குதிக்கிறாய். "இதைத்தான் நானும் எப்பொழுதும் சொல்லிவருகிறேன்,'' என்பாய். அப்படியானால் நீ அஷ்டாவக்ரரைப் புரிந்துகொள்ள வில்லை.

அஷ்டாவக்ரர் சொல்வது மிகவும் உயர்ந்த விஷயம். அவர் சொல்வதன் சாரம், மாடிவரை ஏறிவிட்டால் பிறகு ஏணி தேவைப்படாது என்பதுதான். நீயோ பாதாளத்தில் நிற்பவன். உனக்கு ஏணி மிகவும் அவசியம், ஒருநாள் அந்த ஏணி தேவைப்படாமல் போகும். அந்த அதிர்ஷ்ட நாள் என்றாவது வரும். ஆனால் ஏணியில் ஏறிச்சென்று பிறகே வரும். வேறு உபாயம் இல்லை.

நீ இன்னமும் தியானநிலைவரைகூட வந்துசேரவில்லை. ஆகவே அதையும் கடந்து செல்வது கற்பனை செய்ய முடியாதது. நீ தற்பொழுது சிந்தனைகளில் சிக்கிய நிலையில் உள்ளாய். எண்ணச் சலனமே இல்லாத நிலையில் தனியாக தியானம் தேவையில்லை என்பது அஷ்டாவக்ரரின் கருத்து. ஏனெனில் தியானம் என்பது சிந்தனையற்ற நிலைதான். அவரைப் பின்பற்றி நீயும் தியானம் வேண்டாம் என நினைக்கலாம். ஆனால் உன் மனத்தில் எண்ணங்களே எழாதபடி காலியாக வைத்துக்கொள்ள முடியுமா?

எண்ணச் சலனம் இல்லாவிடில் மனம் என்பதே இல்லாமல் போய்விடும். பிறகு அதில் சங்கடமும் எழாது. மூங்கில் இல்லை என்றால் புல்லாங்குழலும் இல்லை.

இவ்வளவு விளக்கம் கேட்டும் உன் பிரச்சினை தீரவில்லையாயின், மனத்தில் சங்கடம் நீடித்தால், நீ அவசியம் தியானம் பழக வேண்டும். நீ தியானத்தின் மூலம் ஒருநாள் மனசங்கடத்தைக் கடப்பாய். அவ்வாறு மனத்தைக் கடந்தபின், நீ

சிந்தனை என்ற நோயையும், தியானம் என்ற மருந்தையும் குப்பையில் எறிந்துவிடலாம். அப்போது அஷ்டாவக்ரர் தியானம் தேவையில்லை என்று சொன்னது எந்த சூழ்நிலையில் என்று புரியும்.

ஆன்மிக முன்னேற்றத்தில் இருவகைகள் காணப்படுகின்றன. ஒருவன் உபதேசம் கேட்டதுமே ஞானம் பெறுகிறான். கேட்பதிலும் அடைவதிலும் இடைவெளி இருக்காது. அத்தகைய கற்பூர புத்தி உள்ளவன் நேரடியாக சந்நியாசி ஆகிவிடுகிறான். அப்படி ஆக முடியாமல், மனத்தில் சங்கடத்தைத் தேக்கியுள்ளவன் படிப்படியாகத்தான் துறவியாக முடியும். கத்தியால் ஒரே வெட்டில் துண்டாக்க முடியாததை, கொஞ்சம்-கொஞ்சமாகத் தான் வெட்ட நேரிடும். இந்த படிப்படியான முயற்சியின் பெயர்தான் 'ஸாதனா'

நீ உன்னை ஆராய்ந்துபார். உன் மனத்தில் சங்கடம் நீடிப்பதால், உன்னைச் சிறிது சிறிதாகத்தான் செதுக்க வேண்டும். குரு, ஆன்மிகம், தியானம், சந்நியாசம் என்று கிரமப்படி தான் முன்னேற வேண்டும்.

தாமதிக்காதே. எதுவும் உறுதியில்லை. இன்று உள்ளாய், நாளை நீ இல்லாமல் போகலாம்.* காலத்தை நம்ப முடியாது. போன காலம் வராது. வரப்போவது வருமா என்று நிச்சயமில்லை. இப்போதுள்ள காலமே உன் வசத்தில் உள்ளது. சங்கடப்படு, தியானத்தில் இறங்கு, உலகில் அலைந்து திரி, சந்நியாசியாகு— எதுவானாலும் இக்கணமே உன் கையில் உள்ளது. இப்போது இல்லை என்றால் எப்போதும் இல்லை. நாளை யோசிப்போம், நாளை செய்வோம் என்று நினைக்காதே.

சீக்கிரமே நீ அடிவாங்குவாய். காலம் எல்லோரையும் அடித்து முன்னே செல்லச் செய்கிறது. சீக்கிரமே எல்லாவற்றையும் இழப்பாய். காலம் என்றும் எவரையும் லட்சியம் செய்வதில்லை. எல்லோருக்கும் இழப்பு உண்டாக்குகிறது. காலம் என்பது அரசாங்கத்தையோ, சட்டங்களையோ பொருட்படுத்துவதில்லை. காலம் என்ற கள்வன் உனக்கும் இழப்பு ஏற்படுத்தி வருகிறது; உனது வாழ்க்கையின் வேர்களை அறுத்துவருகிறது.

---

* நெருநல் உளனொருவன் இன்றில்லை (திருக்குறள்)

ஊர்வலம் விரைவிலேயே கடந்து சென்றுவிடும். பாதையில் தூசிதான் எழும்பித் தாழ்ந்து மிஞ்சும். சவப்பெட்டி விரைவில் தூக்கப்படும். அப்போது நீ சாவு, சவப்பெட்டி முதலியவை உளறல் என்று சொல்ல முடியாது.

காலம் உன்னை வெல்லும் முன்னால், வாய்ப்பு நழுவும் முன்னால், ஏதாவது நடவடிக்கை எடு. உனது ஜோல்னா பை காலியாக இருக்கவிடாதே.

உன்னால் நேரடியாக ஞானத்தில் இறங்க முடியுமானால் அவ்வாறே செய். அதுவே சுபம். நூற்றில் ஒருவருக்குத்தான் இந்த ஆற்றல் கிடைக்கிறது. மற்றவர்கள் தியானம் என்னும் முதல் கட்டத்திலிருந்து தொடங்க வேண்டும். ஆகவேதான் ஞான அடிப்படையிலான அஷ்டாவக்ரரின் சாஸ்திரம் பெரும்பான்மை யோரின் வழிகாட்டியாக அமையவில்லை. அது தெரிந்தெடுத்த சிலருக்கே புரியும். அது சராசரி மனிதர்களுக்கான நூலன்று. புத்தர், கிருஷ்ணர், இயேசுநாதர், ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் போன்றவர் களுக்கே புரிகின்ற நூல்; விரல்விட்டு எண்ணக்கூடியவர் களுக்கான நூல்.

வாழ்க்கைப் பற்றுகள் என்னும் வலையை நீயேதான் அறுக்க வேண்டும்; உன் திறமையைத்தான் நம்ப வேண்டும். அஷ்டாவக்ரரின் உபதேசம் கேட்டு நீ ஞானம் பெற்றால், மனசஞ்சலம் நீங்கினால், அது நன்மைக்கே. பிறகு உனக்கு சந்நியாசம் தேவைப்படாது. உன்னைச் சோதித்து பார்க்க உரைகல்லாக மனசங்கடத்தை வைத்துக்கொள். சங்கடம் நீங்காவிடில், நீ ஞானவழியில் செல்லாமல், தியான வழியை மேற்கொள்ள வேண்டும்.

நீ தியானத்தில் இறங்கினால், சிறிது காலம் சென்றபின், உன் மனத்தில் எண்ணங்கள் கொந்தளிப்பது நின்றுவிடும். பிறகு தியானம் தேவைப்படாது. காலில் தைத்த முள்ளை எடுக்க இன்னொரு முள்ளால் எடுத்தபின் இரண்டையும் எறிந்துவிடுவது போல்தான் இது. சங்கடம் என்ற முள்ளை தியானத்தால் நீக்கி, பிறகு தியானத்தையும் கடந்து, சந்நியாசியாகும் பக்குவம் பெறலாம்.

மனம் ஒழிந்த இடத்தில் ஆன்மிகம் என்னும் பூ மலர்கிறது; துறவறம் என்பதன் நறுமணம் பரவுகிறது.

## ஐந்தாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஒருமுறை நீங்கள் பலகீனமானவனுக்குக் கடவுள்தான் துணை [நிர்பல் கே பல் ர்ாம்] என்கிறீர்கள். இன்னொரு முறை பேசுகையில், கடவுளை கம்பீரமாக அரசன்போல் அணுகவேண்டுமே தவிர, பிச்சைக்காரன்போல் புலம்பியபடி அணுகக் கூடாது என்றீர்கள். இவை முரண்படவில்லையா?**

முரண்பாடென நீதான் நினைக்கிறாய். உன் பார்வைக் கோளாறுதான் இதற்கு காரணம். நீ ஒற்றுமையைத் தேடுவதற்குப் பதிலாக வேற்றுமையைத் தேடியிருக்கிறாய். ஆகவே உனக்கு எதிலும் முரண்பாடு தெரிகிறது. தேடுவது எதுவோ அதுதானே கிடைக்கும்.

திக்கற்றவனுக்கு தெய்வமே துணை என்பது பிச்சைக் காரனைக் குறிப்பிடவில்லை. வறுமையில் வாடுபவனுக்குக் கடவுள் கிடைப்பார் என்று அர்த்தமில்லை. வாழ்க்கையில் நாம் பலமென நினைப்பவையெல்லாம்—பண பலம், பதவி பலம், உடல் பலம் முதலியவை—அடிப்படையில் அகங்கார பலம்தான். அகங்காரம் நீங்கி நிர்பலம் ஆனவர்களுக்குக் கடவுள் அருள்வார். 'என்னிடம் எந்த பலமும் கிடையாது' என்று சரணடைபவனைக் கடவுள் கைதூக்கி விடுகிறார்.

பிறகுதான் உனக்கு முதல் முறையாக, நிஜமான பலம் கிடைக்கிறது.

உன் அகங்காரம்தான் உன்னைக் கொல்லுகிறது; உன் நெஞ்சின்மேல் பாராங்கல்போல் அழுத்துகிறது; கழுத்தில் தூக்குக்கயிறுபோல் இறுக்குகிறது. உன் அகங்காரத்தில் உண்மையான பலம் உண்டா? வெறும் டம்பம் உன்னிடம் உள்ளது. உன் அகங்காரத்தை வைத்து என்ன சாதித்துவிடுவாய்?

அலெக்சாந்தர், நெப்போலியன், செங்கிஸ்கான், தைமூர் முதலியவர்கள் அகங்காரத்தால் சாதித்தது என்ன? மரணம் என்ற சூறாவளி வீசி அவர்களையும் அவர்களின் வெற்றியையும் புரட்டிப்போட்டுச் சென்றுவிட்டது அவர்களின் அகங்கார பலூன் உடைந்துவிட்டது.

அகங்காரத்தின் அளவு அதிகமானால் அந்த பலூன் சீக்கிரமே உடைந்துவிடும். குழந்தைகளைத் தடுத்தாலும் அவர்கள் பலூனை ஊதியபடியே இருப்பர். அது தன் முழு அளவைக் கடந்ததும் பட்டென்று வெடித்துவிடும். உலகம் மகாவீரர்கள் என்று வர்ணித்தவர்கள் எல்லாம் அதிகபட்ச அளவு ஊதப்பட்ட அகங்கார பலூன்கள்தாம்.

கடவுளின் முன்னிலையில் நிற்கக்கூடிய தகுதி உள்ளவன் தனது ஆளுமையின் திமிரைக் கைவிட்டவனாக இருப்பான். பந்தில் பழைய காற்று நீங்கியபின் புதிய காற்று புகுவதுபோல், அகங்காரம் என்னும் பலம் நீங்கி மனிதன் மெலிந்தவன்போல் ஆனதும் கடவுளின் பலம் பிரவேசித்து அவனுக்குப் புதிய ஆளுமை தரும். இதுதான் 'நிர்பல் கே பல் ராம்' என்பதன் பொருள்.

ரவீந்திரநாத டாகுர் ஒரு கவிதையில் தமது படகுப் பயணம் ஒன்றை வர்ணிக்கிறார். பௌர்ணமி இரவு. கவிஞர் படகின் சிற்றறையில் மெழுகுவர்த்தியின் மங்கலான வெளிச்சத்தில் புத்தகம் படிக்கிறார். நள்ளிரவானதும் புத்தகத்தை மூடிவிட்டு மெழுகுவர்த்தியை அணைக்கிறார். உடனே திகைத்துப்போனார். குபீரென்று பௌர்ணமி நிலவின் ஒளி முழுமையாகப் படகில் எங்கும் பரவியது. வெளியே ஒளியின் பேரழகு பொழிந்த சமயம் இப்படி அறைக்குள் உட்கார்ந்து மெழுகுவர்த்தியை ஏற்றி இவ்வளவு நேரத்தை வீணாக்கினோமே என வருந்தினார்.

சிறு மெழுகுவர்த்தியின் காரணமாக நிலாவொளி உள்ளே வராமலிருந்துவிட்டது. மெழுகுவர்த்தி அணைந்ததும் நிலாவொளி பொங்கிவந்து சுற்றுப்புறத்தைக் குளிப்பாட்டியது. அந்த நேரம் தனக்கு யோகநேரமாக அமைந்தது என்கிறார் கவிஞர். மேலும், அகங்காரம் என்பது அம்மாதிரி மெழுகுவர்த்திதான் என்பதை

இந்நிகழ்ச்சியால் அறிந்தேன் என்கிறார். அது எரிகின்ற வரையிலும் கடவுளின் ஒளி வாசலிலேயே காத்துக்கிடக்கிறது. மெழுகுவர்த்தியை அணைத்ததும்—அகங்காரம் நீங்கியதும்— கடவுளின் பேரொளி உள்ளே பாய்ந்து பரவுகிறது. இதுதான் 'நிர்பல் கே பல் ராம்' என்பது.

அகங்கார பலம் நீங்கியதும் நீ ஏழையாகிவிடுவதில்லை. அப்போதுதான் நீ அரசன் போலாகிறாய். இதையே இயேசுநாதர் 'பணிவுடையோர் இறைவனால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். அவர்கள் நிலவுலகை உரிமையாகப் பெறுவார்கள்'* என்று கூறியிருக்கிறார். அவர்கள் பலகீனர்களாகத் தோன்றியபோதிலும் அதிர்ஷ்டசாலி மனிதர்கள்.

அகங்காரம் கேட்டுக்கொண்டே இருக்கும். எவ்வளவு கிடைத்தாலும் போதாது என்று சொல்லும். இப்படிப் பிச்சைக் காரனாகக் கடவுளை அணுகாதே. அரசனோ எதுவும் கேட்க மாட்டான்.

கேள்விகேட்ட உன் சிரமம் எனக்குப் புரிகிறது. என் கருத்துகளில் நீ முரண்பாடு காண்கிறாய். ஏனெனில் என் பேச்சை நீ அறிவின் துணைகொண்டு கேட்கிறாய். அறிவு எதிலும் முரண்பாட்டைக் காணும் தன்மையது. எதையும் துண்டுகளாகப் பிரிப்பதே புத்தியின் வழக்கமாகும். கண்ணாடிச் சில்லின் வழியே செல்லும் ஒளிக் கிரணம் பல வண்ணங்களாகப் பிரிவதுபோல், புத்தி வழியாக அறியப்படும் எதுவும் குறைந்தபட்சம் இரண்டாகப் பிரியும்.

அறிவின் மூலம் வாழ்க்கையைப் பார்த்தலும் புரிந்து கொள்ளுதலும் ஒரு வழி. இதைத் தவிர இன்னொரு வழியும் உண்டு. அதுவே இதயத்தின் மூலம், அன்பின் மூலம் வாழ்க்கையை அறிவது.

**வானிலை போலாம் சஞ்சல மனம்**
**எதிலும் நிலையாய் ஒட்டுவதில்லை**
**காலையில் ஒருவிதம்**

---

* Blessed are the meek, for they shall inherit the earth. (The Bible)

மாலையில் ஒருவிதம்
மழையும் பொழியும்
வெயிலும் காயும்

வாழ்க்கையின் அர்த்தம் என்ன
எவருக்கும் என்றும் தெரியாது
சொன்னாலும் துன்பம்
கேட்டாலும் துன்பம்

விடையில்லாத இந்தப் புதிர்
குழந்தைபோல் பழக்கம் ஆகிவிட
தர்க்கம் செய்வதைக் கைவிடு
உணர்வை மதித்து ஏற்றுக்கொள்

ஒவ்வொரு முற்றமும் நாடகமேடை
பொம்மலாட்டம் அங்கே நடக்கிறது
மூச்சுள்ள மக்கள் அனைவருமே
பொம்மைகளாக இயங்குகின்றனர்
அன்புக் கயிறு ஆட்டுவிக்கிறது

இதனை நீ நம்பாவிடிலும்
கூறாதிருக்க முடியாது என்னால்
பாசமும் அன்பும் இல்லாவிடில்
பாலை நிலமாகிடும் இந்த பூமி

அறிவை நம்ப முடியாது. அது ஒவ்வொரு சூழ்நிலையிலும் ஒவ்வொரு விதமாகப் பேசும். அறிவின் மூலம். எதையும் நிச்சயிக்க முடியாது. அறிவு ஓர் ஊர்சுற்றி. அது மாறிக் கொண்டேயிருக்கும். காலையில் ஒரு விதமாகவும், மாலையில் ஒருவிதமாகவும் செயல்படும். அது ஒவ்வொன்றிற்கும் பல அர்த்தம் எடுத்துக்கூறும். அந்த அர்த்தத்திலும் நிலையாக இருக்காது.

வாழ்க்கையை இதயம் அல்லது அன்பு மூலமாகவும் பார்க்கலாம். இதோ என் உரையைக் கேட்கிறாய். அறிவின் மூலம் உள்ளிழுத்தால், தினமும் கருத்து முரண்பாடு காண்பாய். அறிவையே ஆதாரமாகக் கொண்டு ஒவ்வொன்றையும் நீ அணுகினால், ஒரு கட்டத்தில் நீ மிகவும் குழம்பிப்போவாய். அன்பு வழியில் அணுகிப்பார். அன்பு வழியில் இரண்டானவை

ஒன்றாகிவிடும். அங்கு முரண்பாடுகள் மறைந்துவிடும். சுருதி சேர்ந்துவிடும்.

நான் ஒரே விஷயத்தைத்தான் கூறி வருகிறேன். அதை வெவ்வேறு விதமாகவும், வெவ்வேறு சொற்களாலும் சொல்கிறேன். பக்தி, ஞானம், யோகம், தியானம் என்ற வெவ்வேறு பெயர்களால் என் கருத்துகளால் விளக்குகிறேன். நீ அன்புடன் பேச்சைக் கேட்டால், நீ அவற்றில் உனக்குரிய ஒன்றைக் கேட்பாய். அப்போது உனக்குச் சரியான அர்த்தம் கிடைக்கும்.

ஆனால் நீ என் பேச்சை மூளையை உபயோகித்துக் கேட்கிறாய். ஆகவே எந்தக் கருத்துகள் முரண்படுகின்றன என்று கண்டுபிடிப்பதில் உன் கவனம் செல்கிறது. அவற்றிடையே பாலம் கட்ட, அவற்றை இணைக்க நீ முயல்வதில்லை. முரண்படும் கருத்துகளிடையேயும் ராமரின் சேது பாலம்போல் இணைக்கும் அம்சம் ஏதேனும் இருக்கும்.

இணைக்கும் சேதுவைத் தேடு. காலப்போக்கில் முரண்பாடுகள் தெரிவது நீங்கிவிடும். என் கருத்துகளிடையே தென்படும் வேற்றுமைகளிலும் ஓர் ஒற்றுமை இருப்பதைக் காண்பாய். என் பாடல்கள் வெவ்வேறு விதமாக ஒலிக்கும். ஆனால் அவற்றின் மையக் கருத்து ஒன்றேதான்.

என்னிடம் நீ காணும் வேற்றுமைகள் சொற்கள் வேறுபடுவதால் உண்டானவை. எனக்குள்ளே ஒரே ஒருவன்தான் இருக்கிறான். அவனே வெவ்வேறு வார்த்தைகள் மூலம் வெளிப்படுகிறான். நீ அமைதியாக உட்கார்ந்து தியானம் செய்தால் அந்த வார்த்தைகளை இணைக்கும் சேது பாலம் கண்ணில்படும்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! நாங்கள் மெய்ம்மறக்கும்படி ஒரு பஜன் சொல்லி, விளக்கம் கொடுங்கள்.**

**மெ**ய்ம்மறத்தலேதான் அதன் விளக்கமும் ஆகும். புரிந்து கொள்வது முக்கியமில்லை. வரி-வரியாக விளக்கம் கேட்டால், மொத்த அர்த்தம் சிதைந்துவிடும்.

கேள்வி கேட்ட சீடர் உணர்ச்சிமயமானவர். அவருக்கு தியானத்தைவிட (ஸ்மரணம்), பஜன் (ச்ரவணம்) பொருத்தமான ஆன்மிக வழியாக இருக்கும். பஜன் இசையில் மூழ்கு. அர்த்தம் புரிதல் முதலிய பிரச்சினைகளில் மாட்டிக்கொள்ளாதே. இசையில் மூழ்கத் தெரிந்தவன் அர்த்தம் பற்றி கவலைப்பட வேண்டாம். எனினும் உனக்காக பஜன் சொல்லி, ஆங்காங்கே அதன் சாரத்தையும் தருகிறேன்.

**தோழி, எனக்குச் சொல்லேன்**
**மனத்தைக் கவர்ந்தவனின் செய்தியை**

காதலி தோழியிடம் எப்பொழுதும் கேட்கும் செய்தி இதுதான். "காதலர் எங்கே இருக்கிறார்? முகவரி என்ன? அவர் எப்படி இருக்கிறார்? எங்கே ஒளிந்திருக்கிறார்? அவரை எங்கே தேடுவது? அவரைப் பற்றி ஏதேனும் தகவல் சொல்," என்று கெஞ்சுகிறாள்.

இதுதான் சத்சங்கம் (நல்லோர் உறவு) என்பது. நாலு பேர் அமர்ந்து கடவுளைப் பற்றி பேசுகிறார்கள், பாடுகிறார்கள். அந்த இடம் உடனே கோயிலாகிறது. செங்கல் கட்டடமான கோயிலானது சிலை இருக்கும் இடமே தவிர கடவுளின் இல்லம் இல்லை.

**அழுக்குப் பிடித்த என் தோஷ தேகம்**
**அதில் எவ்வித அலங்கரிப்புமில்லை**

காதலி (பக்தன்) தான் காதலனுக்குப் பொருத்தமான வளில்லை என்றே நினைக்கிறாள். தன்னிடம் குணமில்லை, தூய்மையில்லை. அதாவது, காதலியிடம் அகங்காரம் மிஞ்சி யிருப்பதில்லை. அகங்காரமுள்ளவன்தான் 'எனக்கு இத்தனை சாஸ்திரம் தெரியும். இவ்வளவு பூஜை செய்துள்ளேன். பாராயணம்-மந்திர ஜபம் நிறைவேற்றியுள்ளேன். எத்தனையோ முறை ஜபமாலை உருட்டியுள்ளேன்," என்று கணக்கு ஒப்புவிக்கிறான். பக்தனோ, "ஐயோ, நான் கடவுள் விஷயமாக ஒன்றுமே செய்யவில்லையே," என்று புலம்புகிறான்.

**காதல் பேச்சுகள் ஏதும் அறியேன்**
**நெஞ்சின் நடுக்கம் மட்டுமே உணர்வேன்**

கடவுள் என்னைச் சந்தித்தால் என்ன ஆகுமோ என்று காதலி நடுங்குகிறாள். அவரிடம் என்ன பேசுவது என்று திகைக்கிறாள். ஏனெனில் தனக்குக் காதல் (பக்தி) பற்றி எதுவும் தெரியாதே என நினைக்கிறாள். அகங்காரம் பிடித்த ஞானியோ தனக்குக் கடவுளைப் பற்றி எல்லாம் தெரியும் என்பான்.

**காதலன் உள்ளான் உள்ளத்து மாளிகையில்**
**நானோ வீட்டின் வெளியே வேலையாய் அலைகிறேன்**

கடவுள் தொலைவில் இல்லை என்பதை பக்தன் அறிந்துள்ளான். தன் உள்ளத்திற்குள்ளேதான் மறைந்து விளங்குகிறார். உயிரில், ஒவ்வொரு மூச்சிலும் அவர்தான் இருக்கிறார். ஆனால வெளிவேலைகளில் சிக்கிக் கிடக்கிறான். கடவுளை நினைக்க முடியாதபடி பரபரப்பாக வேலைகளில் ஈடுபடுகிறான்.

**ஒரு மணி நேரம் கூட**
**அவருடன் சேர்ந்திருந்ததில்லை**
**எனது நீண்ட இரவுப் பொழுதுகள்**
**எல்லாம் வீணாய்க் கழிந்தனவே**

**இ**யேசுநாதரின் வாழ்க்கையில் ஒரு சம்பவம். அவர் ஒரு வீட்டிற்கு விருந்தாளியாகச் சென்றார். அங்கே மேரி, மார்த்தா என்று இரு சகோதரிகள். மார்த்தா வேலைகளில் ஈடுபட்டாள். வீட்டை சுத்தப்படுத்தினாள். உணவு சமைத்தாள். மேரியோ இயேசுவின் அருகே அமர்ந்து அவருடைய கால்களை அமுக்கிப் பிடித்தபடி இருந்தாள்.

மார்த்தா மேரியைப் பல முறை கூப்பிட்டாள். "மேரி, சமையலறைக்கு வா. சேர்ந்து சமையல் செய். இயேசுவின் சீடர்களும் வரக்கூடும். அத்தனை பேருக்கும் சாப்பாடு போட வேண்டும்," என்றழைத்தாள். மேரியோ இயேசுவின் கால்களைப் பிடித்துவிட்டபடி ஒருவிதமான கிறக்கத்தில் இருந்தாள்.

இயேசு பதில் சொன்னார், "மார்த்தா, நீயே எல்லா ஏற்பாடும் செய். மேரி வரமாட்டாள். வேலைகளை நீ முடி. மேரியால் எந்த வேலையும் செய்ய முடியாது. அந்த அளவிற்கு அவள் என்னுள் அமிழ்ந்துபோனாள். அவள் தனக்கு விருப்பமானதைச்

செய்யட்டும். நீ உனக்குச் சரியெனத் தோன்றுவதைச் செய். நீங்கள் போட்ட கணக்குப்படி வாழுங்கள்,'' என்று கூறினார்.

மேரியும் மார்த்தாவும் கடவுளைப் பற்றிய இரு பார்வைகளாகும். ஒரு கண்ணோட்டப்படி—நாம் வெளியுலகில் உழல்கிறோம்; ஏற்பாடுகளில் ஈடுபட்டுள்ளோம்; பல வேலைகளில் ஒரேசமயத்தில் மும்முரமாக இருக்கிறோம்; இதெல்லாம் கடவுளை வரவேற்று உபசரிப்பதுடன் சம்பந்தப்பட்டவைதாம் என்கிறோம். ஆனால் இந்தப் பரபரப்பில் விருந்தாளியையே (கடவுளையே) மறந்துவிடுகிறோம். சடங்குகள் பிரதானமாகிவிடுகின்றன. மார்த்தா இயேசு அருகில் சிறிது நேரம்கூட உட்காரவில்லை. வீட்டு வேலைகளில் ஆழ்ந்துவிட்டாள். விருந்தாளியை வரவேற்பதற்காகச் செய்த வேலைகளில் ஆழ்ந்தவள் விருந்தாளியை மறந்துவிட்டாள்! இயேசு வந்தார், சென்றார். மார்த்தா பயன்பெறவில்லை. மேரியோ எந்த வேலையும் முக்கியமில்லை. இயேசுவை மெய்ம்மறந்து தரிசிப்பதும், அவருக்கு சேவை செய்வதும் போதும் என நினைத்தாள். இதனால் அவள் முழுமையான ஆன்மிக லாபம் பெற்றாள்.

பக்தன் சொல்லுகிறான்—நீ என் இதயத்தினுள் வீற்றிருப்பது தெரியும்தான். ஆனால் வெளியுலக வேலைகளில் ஆயுளைக் கழித்துவிட்டேன். அவ்வாறின்றி உன்னோடு தோழைமை கொண்டிருந்தால் எனது பொழுதுகள் காதலர்களின் இரவுபோல் இனிமையாகக் கழிந்திருக்கும்.

**என் காதலர் உறங்குகிறார்**
**ஏழாவது மேல் மாடியில்**
**ஏறப் படிக்கட்டு இல்லா நிலையில்**
**எப்படி அவரைச் சென்றடைவேன்**
**கடிதம் அனுப்பவும் வழியில்லை**

பக்தன் சொல்கிறான்—மிக உயரமான கட்டடத்தில் கடைசி மேல் மாடியில் பிரபு வசிக்கிறார், உறங்குகிறார். அங்கே போவதற்கு ஜீவாத்மாவிற்கு வழி புலப்படவில்லை. ஜீவாத்மா நிற்பது தரைத்தளத்தில்.

ஜீவன் என்பது 'நான்' என்னும் உணர்வு. எல்லைக்குள் கட்டப்பட்ட பரமாத்மாதான் ஜீவாத்மா. முற்றத்தில் தெரிவது கட்டுப்பட்ட வானம். சுவரில் படும் வெளிச்சம் கட்டுப்பட்ட சூரியன்.

ஜீவன் மாடிக்கு ஏற வேண்டுமானால் எல்லையை மீற வேண்டும். பானையை உடைக்க வேண்டும். அப்போது பானைக்குள் பிரதிபலிப்பான ஆகாயம் வெளியே பரவியுள்ள ஆகாயத்துடன் சேர இயலும்.

சேர்வதற்கு ஒரேவழி அழிதல் என்பதாகும். மனிதன் என்றும் கடவுளுடன் சேர்வதில்லை. கடவுள் இருந்தால் அங்கே தனியாக மனிதன் கிடையாது. மனிதன் ('நான்') இருந்தால் அங்கே கடவுள் இல்லை. கடவுளும் மனிதனும் ஒரேசமயத்தில் எதிரெதிரே நிற்க வாய்ப்பில்லை.

கபீர்தாசர் அறிவிக்கிறார்—'நான்' இருந்தவரையிலும் நீ இல்லாமல் போனாய். இப்போது நீ மட்டுமே உள்ளாய். 'நான்' இல்லை. கடவுள் தன்னிலிருந்து வேறுபட்டு வெளியிலிருப்பதாக நினைத்துத் தேடியவரையிலும் அவர் கிடைக்கவில்லை என்கிறார் கபீர். தேடி கிடைத்த பிறகு பார்த்தால் தேடிய நான் இல்லாமல் போனேன் என்கிறார்.

'காதல் சந்து குறுகலானது. அதில் இருவர் இருக்க இடமில்லை' என்றும் அவர் கூறுகிறார். ஒருவன் இன்னொருவனைச் சந்தித்தல், நண்பர்கள் இணைதல், கணவன்-மனைவி சேர்க்கை, தாய்-சிசு உறவு போன்று கடவுளுடன் சந்திப்பு நிகழ்வதில்லை. அந்தச் சந்திப்பு நதி கடலில் கலப்பது போன்றது. நதி தன் தனித்தன்மையை இழந்துதான், தானே காணாமல் போய்தான் கடலாகிறது.

'எப்படி அவரைச் சென்றடைவேன்?' என ஏங்குகிறாய். பஜனில் ஆழ்ந்து உன்னை மெய்ம்மறக்கும்போது இந்தக் கேள்விக்கான விடை கிடைத்துவிடும். பாடல் வரிகளுக்கான அர்த்தம் தேடுவது தேவையில்லை. அர்த்தம் கண்டுபிடிக்க வேண்டும் என்னும் எண்ணமே எழமுடியாத அளவிற்கு நீ பஜனில் மூழ்கிப்போ. துளிக்கூட மிஞ்சியிராதே.

ஆரம்ப நிலையில், பஜன் தொடங்கும் முன், 'நான்' உணர்வுடன் நீ இருப்பாய். பஜனில் மெய்ம்மறப்பாய். பஜன் முடிந்ததும் பழைய நிலைக்குத் திரும்புவாய். இப்படிச் சிறிது காலம் மெய்ம்மறப்பதும் நினைவுக்கு வருவதுமாக இருப்பாய். ஒரு கட்டத்தில் பஜன் முடிந்து போயும் நீ மெய்ம்மறந்த நிலையிலேயே (trance) நீடிப்பாய். பழைய நிலைக்குத் திரும்பமாட்டாய். அந்த நிலையில்—கடவுளின் முகவரி கிடைக்கிறது; கடிதம் அனுப்ப முடிகிறது; ஒரே தாவலில் உச்சிமாடியை அடைந்து கடவுளுடன் இணைகிறாய்.

பஜனில் மூழ்கியே இரு. உனக்குரிய வழிபாட்டு வழி அதுவே. ஒருநாள் சௌபாக்கியமான அந்த தினம் உதிக்கும்.

**உடலால் விலகித் தொலைவிலுள்ளாய்**
**ஆயினும் மனத்தின் அருகிலுள்ளாய்**
**கையால் நினதடி தொட முடியவில்லை**
**கண்ணால் எழில்முகம் காணவில்லை**

கடவுள் அருகில்தான் இருக்கிறார். பக்தனின் அன்பில் மறைந்திருக்கிறார். உள்ளே கடவுளை உணர்ந்துவிட்டால் வெளியிலும் அவர் எங்கும் தெரியத் தொடங்குவார். எல்லா இடங்களிலும் அவர் தவிர வேறு யாரும் இல்லை.

**ஒவ்வொரு முகமும் உனது முகம்**
**ஒவ்வொரு கண்ணாடியிலும்**
**உன் பிரதிபிம்பம்**
**கறுப்போ சிவப்போ**
**உடலின் நிறம்**
**அழுக்கு மனமோ தூயதோ**
**தங்கம், வெள்ளி, சந்தனமோ**
**குணசாலியோ, குணஹீனனோ**
**புனிதனோ, கொடும் பாவியோ**
**பிடித்தவனோ, பிடிக்காதவனோ**
**எந்த திசையைச் சேர்ந்தவனோ**
**ஒவ்வோர் உருவமும் உன்னதே'**

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

விஷய த்வீபினோ வீக்ஷ்ய சகிதா: சரணார்த்தின: |
விஷந்தி ஜடிதி க்ரோடம் நிரோதை காக்ன்ய ஸித்தயே ||
221

நிர்வாஸனம் ஹரிம் த்ருஷ்ட்வா தூஷ்ணீம் விஷய தந்தின: |
பலாயந்தே ந ஸக்தாஸ்தே ஸேவந்தே க்ருதசாடவ: || 222

ந முக்தி காரிகாம் தத்தே நிஸ்ஸங்கோ யுக்த மானஸ: |
பஸ்யன் ஸ்ருண்வன் ஸ்ப்ருஸன் ஜிக்ரன்னஸ் நாஸ்தே
யதா ஸுகம் || 223

வஸ்து ஸ்ரவண மாத்ரேண சுத்த புத்திர் நிராகுல: |
நைவ ஆசாரம் அநாசாரம் ஔதாஸ்யம் வா ப்ரபஸ்யதி || 224

யதா யத்கர்த்தும் ஆயாதி ததா தத்குருதே ரிஜு: |
சுபம் வாப்யசுபம் வாபி தஸ்ய சேஷ்டா ஹி பாலவத் || 225

ஸ்வாதந்த்ரயாத் சுகமாப்நோதி ஸ்வாதந்த்ரயாத் லபதே
பரம் |
ஸ்வாதந்த்ரயான் நிர்வ்ருத்திம் கச்சேத் ஸ்வாதந்த்ரயாத்
பரமம் பதம் || 226

‘சிற்றின்ப ஆசை என்னும் புலியைக் கண்டு பயந்த மனிதன் அடைக்கலம் தேடி விரைவாக மனக் கட்டுப்பாடு, மனத்தை ஒன்றில் மையப்படுத்துதல் ஆகியவை பெறுவதற்காக குகைவாசம் செய்கிறான்.’ **(சுலோகம் 221)**

வாழ்க்கை சிரமமானது. பல பிரச்சினைகள் எதுவும் தீர்வதாகத் தெரியவில்லை. மனிதன் சீக்கிரமே களைத்து விடுகிறான், தோற்றுப்போகிறான். புறமுதுகிட்டு ஓடுகிறான். அப்படி

ஓடுவதால் பிரச்சினைகள் சரியாவதில்லை. ஆனால் அவன் பிரச்சினைகளிலிருந்து வெகுதொலைவு சென்றுவிட்டதாக நினைக்கிறான். அவன் பிரச்சினைகளின் நடுவிலேயே வாழ்ந்து, அவற்றைத் தீர்க்க முயன்று, மனவளர்ச்சி பெறும் வாய்ப்பை இழந்துவிடுகிறான்.

ஒவ்வொருவன் மனத்திலும் ஓடிப்போகும் ஆசை மறைந்திருக்கிறது. அதன் பின்னணியில் பயம் ஒளிந்திருக்கிறது. எங்கே நாம் வெற்றி பெற முடியாதென அறிகிறோமோ அங்கிருந்து நம் மனம் ஓடிவிட விரும்புகிறது. நாம் ஓடுவதன் பின்னணியிலுள்ள பயத்தை மறைத்து அதற்கு ஒப்பனை செய்கிறாய். அதற்கு சந்நியாசம் என்னும் அழகான பெயரைச் சூட்டுகிறாய். அப்படி ஓடி சந்நியாசியானவருக்கு நாம் மரியாதை காட்டுகிறோம். அவர் காலைத் தொட்டு வணங்குகிறோம். மகாத்மா என்று போற்றுகிறோம். நம்மால் முடியாததை அவர் சாதித்துள்ளார் என்பதால்தான் இத்தனை மரியாதை. அதென்ன சாதனை. நம் மனத்தில் ஓடிப்போக வேண்டும் என்னும் விருப்பமிருந்தும் நம்மால் அவ்வாறு செய்ய முடியவில்லை. அதை அவர் செய்திருக்கிறாரே என்று பெருமூச்சுவிடுகிறோம்.

அப்படி ஓடிப்போனவர்கள் எதையும் சாதித்ததில்லை. ஒருவன் சாதனை புரிவதற்கு சவால்களை ஏற்று அவற்றின் மத்தியில் வாழ வேண்டும். வாழ்க்கையில் கஷ்டங்கள் நிறைந் திருப்பது உண்மையே. ஆனால அவை பயனோடு கூடியவை. கடுமையான பிரச்சினைகள் வலைபோல் பின்னிக்கிடக்கின்றன. அங்கேதான் அறைகூவல் உள்ளது. அந்தச் சிக்கல்கள் பற்றி தீர்க்கமாகச் சிந்தித்து அவற்றிற்குத் தீர்வுகாண முயலுகையில்தான் உனக்கு ஞானம் பிறக்கும். ஓடிப்போனால் உன்னிடம் மனவளர்ச்சி தோன்றாது.

இதனால்தான் குகைவாழ் சாமியார்களிடம் மேதைமை, படைப்பாற்றல், புதிய சிந்தனைகள், தேஜஸ் (புறத்தில் தெரியும் அக ஒளி) முதலியவை காணப்படுவதில்லை. கும்பமேலா சமயம் கூடுகின்ற அவர்களின் தோற்றம், உடை அல்லது நிர்வாணம், அலங்காரம், நடவடிக்கைகள் போன்றவை ஆன்மிகத்தின்

அடையாளங்கள் அல்ல. ஆன்மிகத்திற்கும் அவர்களுக்கும் நடுவில் பாலம் கட்ட முடியாத அளவு இடைவெளி அதிகம்.

நாமும் ஓடிப்போய் இந்த மாதிரி ஆகிவிடக்கூடிய அபாயம் இருப்பதை இந்த சுலோகத்தின் மூலம் அஷ்டாவக்ரர் எச்சரிக்கிறார். பொறுப்புகளைத் தட்டிக்கழித்து ஓடவே மனம் துடிக்கும். நாம் அதற்கு வாய்ப்புத் தரலாகாது. சாதாரண சீட்டு விளையாட்டில்கூட மனிதனுக்குத் தோல்வி பயம் உள்ளது. ஓர் ஆட்டத்தில் வெற்றிபெற முடியாதவன் ஏதாவது பொய் சொல்லி அங்கிருந்து ஓடிப்போகவே முயல்கிறான்.

தோற்கத் தயாரில்லாதவன் வெற்றியும் பெற முடியாது. தோல்வியின் மூலம்தான் நமக்கு வெற்றிக்கான சூத்திரம் (formula) கிடைக்கிறது. தோல்வி முள்களின் நடுவில்தான் வெற்றி மலரும் குலுங்குகிறது. ரோஜா முள்களிடம் பயந்து நீ ஓடிவிட்டால் உனக்கு ரோஜாப்பூவும் கிடைக்காது. முள் குத்தி வலி ஏற்படுவதிலிருந்து தப்பிவிட்ட போதிலும், ரோஜா மலரின் மென்மையையும் அனுபவிக்க முடியாமல் போகிறது.

உலகில் பெரும்பான்மையோர் துன்பப்படுகின்றனர். ஆகவே முள்கள் குத்தாத, துன்பம் அனுபவிக்காத சாமியார் அதிசயமாகத் தெரிகிறார். அமைதியே உருவானவர் என அவரை வணங்குகிறார்கள். இது ஒரு சாதனையா? முள்கள் படாமல் பார்த்துக் கொள்வது எதிர்மறையான (நெகடிவ்) நிகழ்ச்சி மட்டுமேயாகும். அவற்றின் நடுவே பூ தோன்றுவதுதான் உண்மையான சாதனை. சந்நியாசத்தில் உலகைத் துறப்பது மட்டும் போதாது. கடவுளும் அங்கே பிரசன்னமாக வேண்டும்.

உலக வாழ்க்கையில் நீடித்து, படிகளில் ஏறுவதுபோல், பிரச்சினைகளைக் கடந்து செல்பவனிடமே கடவுள் நெருங்கி வருகிறார். உலக வாழ்க்கை தணலில் நடப்பதுபோன்றது. நெருப்பில் காட்டினால்தானே தங்கம் தூய்மைப்பட்டு ஒளிவிடும்.* நெருப்பிலிருந்து தங்கம் தப்பித்து ஓடினால் அதை சந்நியாசி என்போமா?

* சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடும் (திருக்குறள்)

ஓடிப்போதல் சந்நியாசமன்று. புறமுதுகு காட்டுதல் சந்நியாசமன்று. உண்மையான சந்நியாசி சமூகத்திலேயே இருப்பான். ஆனால் அதனுடன் ஒட்டிக்கொள்ள மாட்டான் (in the world but not of the world).

நான் அளிக்கும் துறவுமுறை குறித்து சிலர் என்னிடமே புகார் செய்கிறார்கள். "நீங்கள் சந்நியாசம் அளிக்கிறீர்கள். அவ்வாறு ஏற்பவர்களை நீங்கள் உலகத்தைக் கைவிடச் சொல்வதில்லை," என்று குறைகூறுகிறார்கள்.

நான் சொல்வது—முன்பு அவர்கள் சம்சாரியாக இருந்தார்கள். துறவறம் ஏற்கவில்லை. அப்படியே அவர்கள் சமூகத்தைவிட்டு ஓடியிருந்தால் அவர்களை மன்னிக்கலாம். இனி ஓட வழியில்லை. சந்நியாசம் என்பதன் அர்த்தம் சமூகத்தைக் கைவிடல் அன்று. கோழையாக சமூகத்தைக் கைவிட்டு ஓடிப்போவதை தியாகம் செய்தல் என்று அர்த்தம். சந்நியாசியாகிவிட்டால் சமூகத்தில் நீடித்துப் போராட வேண்டும். சமூகம் என்னும் சமுத்திரத்தில் முன்பைவிட ஆழமாக மூழ்க வேண்டும். அப்போதுதான் நல்முத்துகள் கைக்குக் கிடைக்கும். மூழ்குவதற்குப் பயந்து ஓடுகின்றவனுக்குக் கரையில் கிடக்கும் சங்குகளும் சிப்பியும்தான் வசமாகும்.

சமூகத்தில் எதிர்ப்படும் ஒவ்வொரு பிரச்சினையும் சமாதி நிலையைச் சென்றடைவதற்கான ஏற்பாடாகும். பிரச்சினையைத் தவிர்க்காமல் அதன் வழியே சென்று முயன்றால் தீர்வு பெறலாம். பிரச்சினையின் வேறு பெயர்கள் வாய்ப்பு, பரீட்சை, உரைகல் என்பவையாகும். பரீட்சை எழுத பயப்பட்டு ஓடும் மாணவனை யாரும் பாராட்ட மாட்டார்கள்.

நமது வாழ்க்கை ஒரு பரீட்சை போன்றது. தேர்வு எழுதாமல் துறவறம் பூண்டு ஓடுகின்றவர்களுக்கு மதிப்புக் கொடுக்காதே. அவர்களை மதித்தால் உன் மனத்திலும் ஓடிப்போகலாம் என்னும் உணர்வு தேங்கும். உன்னால் முடியாவிடிலும் நீ யாராக மாற விரும்புகிறாயோ அவருக்குத்தான் மரியாதை தருவாய் என்பதை நினைவில் கொள். சாமியாராக ஓடிப்போகிறவர்களை நீ மதித்தால், உனக்குள்ளும் ஓர் ஓடிப்போகிறவன் உட்கார்ந்திருக்கிறான் என்று

பொருள். அதாவது, நீயும் கோழைபோல் எந்த நிமிடமும் ஓடிப்போகக் கூடியவன்தான். உன் கோழைத்தனம் பயத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளது.

இப்படி ஓடிப்போய் மலைக்குகைகளில் அடைக்கல மாகிறவர்களை ஒருவகை அகதிகள் எனலாம். அவர்கள் நமது இரக்கத்துக்கு உரியவர்கள். அவர்கள் வணங்கத் தக்கவர்களே அல்லர். இவர்களுக்கு வைத்தியம் பார்க்க வேண்டும். மறுபடியும் தைரியமூட்ட வேண்டும். இவர்களின் மனத்தில் மந்தநிலையில் உள்ள ஒளியைப் பெரிதாகத் தூண்ட வேண்டும். இவர்களை மறுபடியும் வாழ்க்கைத் தேர்வு நடைபெறும் இடத்திற்கு இழுத்துவர வேண்டும். 'ஓடாதே, போராடு' என்று இவர்களை முடுக்கிவிட வேண்டும்.

நீ அடிப்படையில் ஆத்ம உணர்வினன். அதை இழக்க வாய்ப்பில்லை. ஆத்ம உணர்வை அசௌகரியமான சூழ்நிலையில்தான் விழிக்கச்செய்ய முடியும். சுகமான சூழ்நிலையில் அவ்வுணர்வு தூங்கிவிடுகிறது. காட்டிற்குப் போனாய். அங்கே குழப்பம் எதுவும் கிடையாது. குகையில் உட்கார்ந்தாய். அங்கே எதுவும் உன் ஆசையைத் தூண்டாது. ஆசை உணர்வு மழுங்கிவிடும். ஆனால் அது அழிவதில்லை. விதையாகக் கிடைக்கிறது. ஒரு சூழ்நிலையில் ஆசை விதை எடுத்த எடுப்பிலேயே மரமாகிவிடுகிறது.

ஓடிப்போய் காட்டில் குகையில் வசித்தால்தான் சரியாக தியானம் செய்ய முடியுமென அவர்கள் நினைக்கிறார்கள். அந்த தியானம் மதிப்புக் குறைந்தது. ஆரவாரத்திலும் அசைந்து கொடுக்காத தியானமே உண்மையானது. கடைத்தெருவில்கூட தியானம் செய்யும் அளவிற்குப் பக்குவம் பெறவேண்டும். சுற்றிலும் சத்தமாக இருந்தாலும், உலகம் பரபரப்பாக இயங்கினாலும், உனக்குள் சலனம் ஏற்படக்கூடாது.

ஆசைகளென்ற புலி வெளியிலிருந்தாலாவது தப்பித்து ஓடலாம். அது உனக்குள்ளேயே இருந்து அல்லவா உறுமுகிறது. நீ உன்னிடமிருந்தே எப்படித் தப்பி ஓடுவாய்? உன் நிழலிலிருந்து விலகி நீ ஓடமுடியுமா? நீ எங்கே போனாலும் நிழலும் உன்னுடன்

சேர்ந்தே வரும். நீ வேகமாக ஓடினால் அதுவும் அதே வேகத்தில் வரும். நீ மரநிழலில் உட்கார்ந்தால் நிழல் காணாமல் போகிறது. ஆனால் அதுவும் உன்னுடன் சேர்ந்தே ஓய்வெடுக்கிறது. நீ மறுபடி வெயிலில் வந்ததும் அதுவும் கண்களில் தென்படும்.

நிழல் உன்னைத் தொட்டபடி இருப்பினும், அதன் பெரும்பகுதி வெளியில்தான் உள்ளது. ஆனால் ஆசை உனக்குள்ளேயே முழுவதுமாக இருக்கிறது. நீ ஆணாயின் பெண்ணிடமிருந்தோ, பெண்ணாயின் ஆணிடமிருந்தோ தப்பித்து ஓடலாம். ஆனால் காமம் என்ற உணர்விலிருந்து எப்படித் தப்பி ஓடுவாய்? சந்நியாசிகள் இதனால்தான் பெண்களைச் சந்திப்பதைத் தவிர்க்கின்றனர். விதையானது சிறிது தண்ணீர் பட்டாலும் செடியாக முளைப்பதைப்போல் சந்நியாசியின் அடக்கி வைக்கப்பட்ட காமம் சிறிது சாதகமான சூழ்நிலையிலும் பொங்கிவிடும். சம்சாரியே பரவாயில்லை என்று தோன்றும். இதே காரணத்தால் துறவிகள் பணத்தைக் கையால் தொடுவதில்லை. பணத்தை துக்கம் என்று கூறும் அவர்களே பணத்திடம் பயப்படுவது முரணாக இல்லையா? பெண்ணாவது உடல்-உயிர் உள்ளவள். பணம் காகிதம்தானே.

தன்னிடமிருந்து ஒருவன் ஓட முடியாதென்பதால், நீ உன்னை மாற்றிக்கொள். நீ விழிப்புப் பெறு. அப்படி ஞானம் பெற்றவன், 'பெண்ணிடம் அப்படி என்ன சிறப்பு இருக்கிறது?' என்று சொல்லமாட்டான். 'காமத்தில் என்ன இருக்கிறது?' என்றுதான் கேட்பான். இந்த நுணுக்கமான வேறுபாட்டை அறிந்துகொள். பெண்ணில், ஆணில், பணத்தில் என்ன இருக்கிறது என்று கேட்பவன் வெளியில் தேடுகிறான். காமத்தில், லோபத்தில் என்ன இருக்கிறது என்று கேட்பவன் உள்ளே தேடுகிறான். ஆகவே அவற்றில் ஒன்றுமில்லை என்பதைக் கண்டுகொண்டு அவற்றிலிருந்து முக்தி பெறுகிறான்.

**மு**ல்லா நஸ்ருத்தீனுக்கு வயதாகிவிட்டது. தலை வழுக்கையாகி விட்டது. மீண்டும் முடி வளர்வதற்கான மருந்து தேடி மிகவும் அலைந்தார். ஒரு சாமியார் கொடுத்த மூலிகைத் தைலத்தால் நாலு முடி தோன்றியது. ஆனால் நரைமுடி! அவர்

முடிதிருத்துபவரிடம் சென்றார். "முடி திருத்தச் சொல்கிறீர்களா அல்லது எண்ணிப்பார்க்கச் சொல்கிறீரா?" என்று அவர் கேட்டதும் நஸ்ருத்தீனுக்கு வெட்கமாகிவிட்டது. "இல்லை, வயதைக் குறைத்துக் காட்ட இந்த முடிகளைக் கறுப்பாக்கிவிடு." என்றார்.

வயதைக் குறைத்துக் காட்ட வேண்டும் என்னும் விருப்பத்தின் அடிப்படை காமம்தான். மரணம் வாசற்படியில் நின்றாலும் மோகம் குறைவதில்லை. யம தேவதை வாசற்கதவைத் தட்டும்போதும் காமதேவதையுடனான நட்பு நீங்குவதில்லை.

இருவகையான மனிதர்கள். சிலர் காமம் என்னும் சாக்கடையில் அழுந்தியுள்ளனர். சிலர் காமம் என்றாலே அஞ்சி ஓடுகின்றனர். இருவரும் கடவுளை அடைவதில்லை. விழிப்பவன் தான் ஞானம் என்னும் ஏணி வழியே கடவுளை அடைகிறான்.

ஆசை என்னும் புலியைக் கண்டு பயந்து ஓடி ஒளிந்து கொள்ள குகை தேடினால் உன் உள்ள குகைக்குள் நுழைந்துவிடு. மனத்தை அடக்கும் முயற்சியில் ஈடுபடாதே. வாழ்க்கை எதிலும் கட்டாயப்படுத்தலை ஏற்பதில்லை. வாழ்க்கை எளிமையையும் சகஜத் தன்மையையுமே எதிர்பார்க்கிறது.

கோபத்தை பலவந்தமாக அடக்கினால், புன்சிரிப்பால் கோபத்தை மறைத்தால், உள்ளே அது பொங்கிக் கொதித்தபடியே இருக்கும். பிரம்மசரியத்தைக் கட்டாயப்படுத்தினால் காம உணர்வு மனத்தின் மூலையில் ஒளிந்துகொண்டு, வெளிப்படுவதற்கான வாய்ப்பை எதிர்நோக்கியிருக்கும். பிறரை அடக்கியாள்வது மட்டுமே ஹிம்சையாகாது. நீ உன்னையே மனித சுபாவத்திற்கு எதிரான முறையில் பலவந்தமாகக் கட்டுப்படுத்துவதும் ஹிம்சைதான்.

**ஒ**ருநாள் இரவு தண்டவாளத்தைக் கடக்க முயன்ற ஒருவர் தெய்வாதீனமாகத் தப்பித்தார். ரெயில்வே நிர்வாகத்தின்மேல் வழக்குத் தொடர்ந்தார். ரெயில்வே சிக்னல் பணியாளர்தான் நிர்வாகத்தின் சார்பில் விசாரிக்கப்பட்டார். வழக்கில் நிர்வாகம் வென்றது. ஸ்டேஷன் மாஸ்டர் சிக்னல்மேனைத் தனியாக அழைத்துப் பாராட்டினார். "எதிர்த் தரப்பு வக்கீல் உன்னை

எத்தனை விதமாக ஒரே கேள்வியை மாற்றிக் கேட்டும் நீ பயப்படவில்லையே. நீ சிக்னல் விளக்கை காண்பித்து எத்தனையோ தடவை பலமாக ஆட்டியும், தண்டவாளத்தைக் கடந்தவர் கண்டு கொள்ளவே இல்லை என்ற ஒரே பதிலை உறுதியாகச் சொன்னாய், சபாஷ்," என்றார்.

அதற்கு அந்தப் பணியாளர், "அந்த வக்கீல் ஐயா கெட்டிக்காரத்தனமாகக் கேள்வி கேட்டார்தான். ஆனால் ஒரு முக்கியமான கேள்வியைக் கேட்கத் தவறிவிட்டார். கேட்டிருந்தால் நாம் மாட்டிக் கொண்டிருப்போம்," என்றார்.

"அது என்ன கேள்வி?" -ஸ்டேஷன் மாஸ்டர் ஆச்சரியத்துடன் வினவினார்.

"நீ சிக்னல் விளக்கை ஆட்டியபோது அதில் விளக்கு எரிந்துகொண்டிருந்ததா என்பதை வக்கீல் ஐயா கேட்காமல் விட்டுவிட்டார்!" என்று பணியாளர் பதில் கூறினார்.

எரிகின்ற திரியில்லாத விளக்கை அசைத்தால் பயனில்லை. மனத்தை வலுக்கட்டாயமாக அடக்குதல் திரியில்லா விளக்கை அசைப்பது போன்றதே. உள்ளே ஒன்றும் இல்லை. ஞான ஒளி மூண்டால் போதும். விளக்கை அசைக்க வேண்டியதில்லை.

வர்த்தமான மகாவீரரின் சிலையைப் பாருங்கள். முகத்தில் பரம சாந்தம் பரவியிருக்கிறது. அவர் புலனடக்கத்திலும் சிறந்து விளங்கினார். புலனடக்கம் காரணமாக அவர் சாந்தநிலையை அடைந்ததாக நமக்குத் தோன்றுகிறது. நமக்கும் அமைதி தேவை. அதற்கான முயற்சிகளில் இறங்குகிறோம். புலனடக்கம் சாந்திக்கு வழிவகுக்குமென நினைக்கிறோம்.

ஆனால் உண்மை இதற்கு மாறானது. முதலில் சாந்தம். பிறகு புலனடக்கம் வரும். சாந்தம் காரணமாக அமைகிறது. அதன் பலன் புலனடக்கம். இது வெளிப்படையாகத் தெரிவதால் இதுதான் அமைதிக்கு வழிவகுப்பதாக நினைக்கிறோம்.

நாம் கற்பனை செய்தால் மகாவீரர் காலால் பூச்சி நசுங்கக் கூடாது என்று மெதுவாக நடப்பார். இதே காரணத்தால் மெதுவாக உட்காருவார்; மற்றும் புரண்டு படுக்கமாட்டார். இவை

புலனடக்கத்தின் வெளிப்பாடுகள். அவர் உள்முகமாகப் பெற்ற ஞானம் நமக்குத் தெரிவதில்லை. ஆகவே நீயும் இதே நடவடிக்கைகளை மேற்கொண்டாலும் ஞானம் பெறுவது நிச்சயமில்லை.

மகாவீரருக்கு ஞானம் முதலில் உதித்தது. பிறகு அவருடைய நடவடிக்கைகள் மாறின. நீ வெளிப்புறத்தைப் பிடித்துக்கொண்டாய். வெளிப்பகுதியைப் பிடித்தால் உள்ளே போய்ச் சேரலாமென நினைக்கிறாய். ஆனால் புரட்சி முதலில் உள்ளே விளைகிறது. உட்புறம் முக்கியம். வெளிப்புறம் இரண்டாம் பட்சம்தான். ஒளி முதலில் மையத்தில் தோன்றுகிறது. பிறகு வெளிப்புறமாகப் பரவுகிறது. சாதாரண விளக்கிலும் இந்த வரிசையில்தான் நிகழ்கிறது. உள்மனம் முதலில் மாறுதல் பெறுகிறது. பிறகு வெளி நடத்தை மாறுபாடு அடைகிறது. இதனால் புலனடக்கம், பிற கட்டுப்பாடுகள் விரதங்கள் முதலியவை பின்தொடர்கின்றன.

ஆகவே எது காரணம்-எது காரியம் என்பதை நீ சரியாக அறிந்திருக்க வேண்டும். வரிசையை மாற்றினால் நீ வாழ்க்கை முழுதும் அலைய வேண்டியதுதான். குற்றவாளியைச் சங்கிலியால் கட்டிச் சிறையில் தள்ளுவதுபோல், மனத்தை வலுவாக அடக்கினாலும், 'நீ' என்பவன் சுதந்திரம் பெறுவது நிச்சயமில்லை.

உனக்குக்கூட கொஞ்சமாவது சுதந்திரம் இருக்கிறது. துறவிகளுக்கு சுதந்திரமே இல்லாதது வியப்பிற்குரியது. அவர்கள் எப்பொழுதும் நடத்தை விதிகளால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளனர். உண்மையில் அவர்கள் அல்லவா வாழ்க்கையின் அடிமைத் தனத்திலிருந்து தப்பியவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் தங்களைப் பின்பற்றுவோரின் எதிர்பார்ப்பை மீறி எதுவும் செய்ய முடியாது. சுதந்திரமாக அவர்கள் வெளியில் சென்று அவர்கள் யாரையும் சந்திக்க முடியாது. வித்தியாசமாகச் சிந்திக்கும் என்னைச் சந்திப்பதற்கு அவர்களுக்கு அனுமதி கிடைக்கவே கிடைக்காது.

பக்தர்கள் துறவிகளின் காலைத் தொட்டு வணங்கி அடிமைபோல் நடந்தாலும், அவர்கள் துறவிகளின் பேச்சையும்

நடத்தையும் உற்றுக் கவனித்து வருகிறார்கள். துறவிக்குரிய எல்லாக் கட்டுப்பாடுகளையும், விரதங்களையும் நாள்தோறும் பின்பற்றுகிறார்களா என்று மக்கள் கவனிக்கிறார்கள். மக்கள் துறவிகளுக்குச் சிறைபோல் அமைகிறார்கள். ஏற்கெனவே மன அடக்கம் என்னும் சிறையிலுள்ள துறவிகள் அடுத்து மக்களெனும் சிறையிலும் மாட்டிக்கொள்கிறார்கள். முதலில் ஆத்ம உணர்வைப் பெற்றுவிட்டால் பிறகு புலனடக்கம் இயற்கையாக அமைந்து எந்தச் சிறையும் இருக்காது.

மக்கள் குனிந்து பிரார்த்தனை செய்கிறார்கள். ஆனால் அவர்கள் குனிவது நன்றி உணர்வினால் அன்று. துக்கத்தின் சுமையால் குனிகிறார்கள். ஆகவே இந்த பிரார்த்தனைகளில் சூடு இல்லை, மலர்ச்சி இல்லை, மணம் இல்லை.

மக்களின் பிரார்த்தனை ஆனந்த உணர்வாக அமைவ தில்லை. அதில் ஆனந்தத்தின் விளைவான சமர்ப்பணமில்லை. பிரார்த்தனை சமயம் உடல் தாழ்ந்து வளைந்திருக்கலாம். ஆனால் மனம் திமிரால் நிமிர்ந்தே உள்ளது. மனத்தையும் பிரார்த்தனையில் கட்டாயப்படுத்தி வளைத்தால் ஒரு பலனும் விளையாது. ஆத்மா முதலில் விழிக்க வேண்டும்.

'ஆசைகள் அகன்ற ஆண்சிங்கம் போன்றவனைக் கண்டு ஆசைகள் யானைபோல் பெரிதாக இருப்பினும் பயந்து ஓடிவிடும். அல்லது அவை வலிமை குன்றி முகஸ்துதி செய்பவர்களைப் போல் சேவை புரியும்.' **(சுலோகம் 222)**

ஆசைகள் யானையளவு பெரிதாகத் தோன்றினாலும் அவை உண்மையில் பெரியவை அல்ல.

பசியால் வாடிய நரியொன்று தனது குகையிலிருந்து கிளம்பியது. சூரியன் உதித்த நேரம். நரியின் நிழல் பெரிதாகத் தெரிந்தது. அதைப் பார்த்த நரி இன்று ஓர் ஒட்டகம் கிடைத்தால்தான் பசியடங்கும் என நினைத்தது. ஒட்டகம் ஏதாவது கண்ணில் படுகிறதா என்று தேடியது. அப்படித் தென்பட்டாலும் அதைத் தன்னால் சாப்பிட முடியுமா என்று நரிக்கு உறைக்க வில்லை.

நண்பகலாகிவிட்டது. சூரியன் தலைக்கு மேலே வந்து விட்டது. நரி தன் நிழலை நோக்கியது. நிழல் மிகவும் சுருங்கித் தெரிந்தது. ஆகவே நரி தன் பசிக்கு எறும்புகள் கிடைத்தால்கூட போதும் என்ற நிலைக்கு வந்தது.

ஆசைகளும் இப்படிப்பட்டவைதான். கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆன கதைதான். பலூன் போன்றது ஆசை. பிரமிக்காமல் இருந்தால் சிறிது நேரத்தில் சுருங்கிவிடும்.

ஆசை என்பது பிரமை. அது பந்தயத்தில் ஓடுவது போன்றது. நடுவில் நிற்க முடியாத அளவிற்குத் தீவிரமாக இருக்கும். முயன்று நின்றுபார். ஆசையின் வேகம் குறைந்துவிடும். இது பற்றிச் சிந்தித்துப் பார். ஆசை கரைந்துவிடும்.

இவ்வாறு விழிப்புப் பெற்றால் மனம் தானாகவே உன் பின்னால் வரும். அதை அடக்க வேண்டுமென்ற நிலை எழாது. மனம் வளைந்து கொடுத்து அடிமைபோல் நமது கட்டளைப்படி செயல்படும்.

வகுப்பில் மாணவர்கள் குதித்துக் கும்மாளம் போடுகிறார்கள். வகுப்பறை முழுவதிலும் ஆரவாரம். ஆசிரியர் அறைக்குள் நுழைந்ததும் அறை நிசப்தமாகிவிடுகிறது. மாணவர்கள் நல்ல பிள்ளைகள்போல் புத்தகங்களை விரித்துப் படிக்கின்றனர்.

இன்னோர் இடத்தில் வேலைக்காரர்கள் பேசிக்கொண்டும், கத்தியும், சண்டை போட்டும் குழப்பம் உண்டாக்குகின்றனர். எஜமானர் வந்ததும் எல்லா சத்தமும் அடங்குகிறது. இதேபோல் மனத்தின் ஆசையும் கிளைகளாகப் பிரிந்து கட்டுப்பாடின்றித் திரிகின்றன. ஆத்மா ஓர் அதட்டல் போட்டால் அவை அடங்கி விடும். ஆனால் ஆசைகள் அகன்ற அந்த ஆண்சிங்கம் எப்படி உண்டாகும்? தூங்குகின்ற அந்த சிங்கம் எப்படிக் கண் திறக்கும்? எப்பொழுது கர்ஜனை செய்யும்? சிங்கநாதம் எப்பொழுது எதிரொலிக்கும்?

பயந்து துறவியாகிறவர்கள் சிங்கமாக முடியாது. அப்படி ஓடுவதால் அவர்கள் தங்களை பலகீனமானவர்கள் என ஒப்புக்கொண்டதாக அர்த்தம் ஒருவன் தன்னை எப்படி

மதிப்பிடுகிறானோ அப்படியே அவனது வாழ்க்கை அமைகிறது.[1] ஒருவன் தன்னை பலகீனன் என நினைத்துக்கொண்டால் மக்கள் உன்னைப் பற்றுகளைத் துறந்த வீரன் என்று மெச்சினாலும், குகையில் உட்கார்ந்திருக்கும் உன்னை உன் மனசாட்சி கோழை என்றே ஏசும்.

போராடு, போரிடு. அஞ்சாதே. இந்த உலகம் பிரம்மாண்டமாகத் தெரிந்தாலும் உன் ஆளுமையைவிட சிறியது. மனம் ராஜா இல்லை, உன் வேலைக்காரன். ஆசைகள் முதலில் பெரிதாகத் தோன்றினாலும் பிறகு நண்பகலில் நரியின் நிழல்போல் ஒடுங்கிவிடும். பகல்பொழுது வளர-வளர நிழல் சுருங்கி, மாலையில் மறைவதுபோல், அறிவு வளர-வளர, மனம் மேன் மேலும் பக்குவப்பட, ஆசை நிழல் சுருங்கிக்கொண்டே வந்து மறைந்துவிடும்.

உன்னுள்ளிருக்கும் ஆண்சிங்கத்தை எப்படி எழுப்புவது? முதல் கட்டமாக நீ உனக்குள் மறைந்திருக்கும் ஆத்மாவின் சிங்கத் தன்மையை ஒப்புக்கொள். 'நான்தான் எனக்குத் தலைவன்' என்று ஓர் அறிவிப்புச் செய்துபார். நீதான் உனக்கு எஜமானன் என்பது போல் வாழ்க்கை நடத்தத் தொடங்கு. மனத்துடன் மோதாதே. கண்டிப்பான கட்டளை பிறப்பித்தால் போதும்.[2]

தனக்குச் சவால்விட்ட ஒரு கழுதையுடன் ஒரு சிங்கம் மோதவில்லை. அது காரணம் சொன்னது: 'நான் அதன் சவாலை ஏற்றால் அதற்கு சமமாக நானும் கழுதைபோல் கருதப்படுவேன். அதைக் கொன்றால் அது பெரிய வீரமாகக் கருதப்படமாட்டாது. ஏதோ காரணத்தால் தற்செயலாக நான் தோற்றால், எங்கள் சிங்க இனத்திற்கே நான் மாபெரும் களங்கம் ஏற்படுத்தியவனாகி விடுவேன்.'

---

1. As a man thinketh so does he become.

2. **பேயாய் உழலும் சிறு மனமே!**
**பேணாய் என் சொல் இன்றுமுதல்**
**நீயாய் ஒன்றும் நாடாதே**
**நினது தலைவன் யானே காண்;**

**...........................................**

**உரைத்தேன் அடங்கி உய்யுதியால்** **-பாரதியார்**

மனமும் நமக்கு சவால்விடுகிறது. நாய் குரைத்தாலும் யானை அதைப் பொருட்படுத்தாமல் நடப்பதைப்போல் நாமும் மனத்தின் கூச்சல்-கூப்பாடை அலட்சியம் செய்துவிட வேண்டும். 'ஏ மனமே! நீ விடும் சவாலை நான் ஏற்கப்போவதில்லை. உன்னோடு மோதப் போவதில்லை. உன் பேச்சைக் கேட்டு நடக்கவும் போவதில்லை. நீ நாய்போல் குரைத்துக்கொண்டே இரு. எனக்கென்ன வந்தது?' என்று அதை அலட்சியம் செய்.

நீயே வியக்கும்படி சிலநாளில் மனம் குரைப்பதை நிறுத்திவிடும். கொஞ்சம் கொஞ்சமாக அதன் தொண்டை வறண்டுவிடும். அது குரைப்பதை நிறுத்தும் தருணம்தான் நீ உனக்குள் பிரவேசிக்கும் முகூர்த்த நேரமாகும். வெளியேயுள்ள குகைகள் மனத்தை நிரந்தரமாக அடக்க உதவா. வெளியே அடைக்கலம் தேடுவதில் அர்த்தமில்லை. ஆகவே மகாவீரர் 'அ-சரணன்' ஆகு என்றார். அசரணன் ஆனால்தான் ஆத்மசரணம் கிடைக்குமென்றார்.

'சந்தேகங்கள் நீங்கி, ஒரு மையத்தில் மனம் நிலை பெற்றவன் யமம்-நியமம்* முதலிய முக்தியளிக்கும் யோக வழியைப் பிடிவாதமாகப் பின்பற்றுவதில்லை. ஆனால் அவன் பார்த்தபடியே, கேட்டபடியே, ஸ்பரிசித்தபடியே, முகர்ந்தபடியே, சாப்பிட்டபடியே சுகமாக இருக்கிறான்.' **(சுலோகம் 223)**

எதில் சந்தேகம் நீங்குதல்? தான் சிங்க ஆளுமை பெற்றவனென்ற நம்பிக்கை, தான் ஆத்மவடிவினன் என்ற நம்பிக்கை, உள்ளுலகின் சுவையைச் சற்றாவது அறிதல், தியானம்-சமாதி மூலம் சிறிதாவது விழிப்புப் பெறுதல் முதலியவை ஒருவனை சந்தேகமற்றவனாக ஆக்கும்.

நமக்கு நம் மீதே சந்தேகம். 'நான் ஆத்மா. நான் மரணமில்லாதவன்' என்று வெளியே சொல்லிக்கொண்டாலும், உள்ளத்தின் ஆழத்தில் நம்புவதில்லை. நம்பத்தான் விரும்பு

---

* யமம்: கொல்லாமை, வாய்மை, களவாமை, வஞ்சமில்லாமை, இரக்கம் முதலிய பத்துக் கட்டுப்பாடுகள்.

நியமம்: தவம், கடவுள் விசுவாசம், மூத்தோர் வழிபாடு, அறநூல் படித்தல், கருவழிமின்மை, செபம், விரதம் முதலிய பத்துக் கடமைகள்.

கிறோம். ஏனெனில் மரணபயம் நமக்குள்ளது. ஆத்மா அமரத் தன்மை உடையது என்று சாஸ்திரத்தில் படிக்கும்போது ஆறுதலாக உள்ளது. அப்படித்தானிருக்கும் என்றும் நம்புகிறோம். ஆனால் நம் சந்தேகம் முழுமையாக நீங்கியபாடில்லை.

என் ஊரில் ஒருமுறை எனக்குத் தெரிந்த ஒருவர் வீட்டில் சாவு என்று கேள்விப்பட்டேன். வீட்டுக்காரரின் மனைவி இறந்திருந்தாள். கணவரின் துக்க வெளிப்பாடு பயங்கரமாக இருந்தது. எங்கள் ஊரிலேயே அறிவாளியான ஒருவர் கணவரிடம், "இந்த சாவு ஒரு முடிவில்லை. ஆத்மா அமரத்தன்மை கொண்டது," என்று தேற்றியது என் காதில் விழுந்தது. இந்த அறிவிப்பு என்னைப் பெரிதும் கவர்ந்தது.

சில மாதங்கள் கழித்து அந்த ஆறுதலளித்தவரின் மனைவி காலமானாள். நான் மிகுந்த எதிர்பார்ப்புடன் அவரது இல்லத்துக்குச் சென்றேன். அவர் சந்தோஷமாக இறுதிக் காரியங்களை நடத்திக்கொண்டிருப்பாரென நினைத்தேன். கஞ்சிரா வாசித்தபடி இருந்தால்கூட நான் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டேன். ஆனால் அவரோ சத்தம்போட்டு அழுதார். நான்தான் குறும்புக்கார னாயிற்றே. நான் அவரை அணுகி, தணிந்த குரலில், "அய்யா, கவலைப்படாதீங்க. இந்த சாவு ஒரு முடிவில்லை. ஆத்மாதான் அமரத் தன்மை கொண்டதாயிற்றே," என்று நினைவூட்டினேன். அவர் அழுவதை நிறுத்தி என்னை முறைத்தார். அந்த சூழ்நிலையில் கோபத்தை வெளிப்படுத்த முடியாதாகையால், "யாருக்குத் தெரியும்? செத்தால்தானே சிவலோகம் உண்டா என்பது தெரியும்," என்று முணுமுணுத்தார்.

சிறிது நேரத்தில் நான் முதலில் கூறிய மனைவியை இழந்தவரும் வந்தார். அவரும் அந்த அறிவாளியிடம், "ஏன் அழுகிறீர்கள்? ஆத்மா அழியாதது என்று நீங்கள்தானே சொன்னீர்கள்," என்று கூறியதும் என் காதில் விழுந்தது.

இப்படித்தான் பரஸ்பரம் துக்கம் விசாரித்தலும் ஆறுதல் கூறுதலும் கொடுக்கல்-வாங்கல்போல் நடைபெறுகிறது. நீ அவருக்கு அறிவுரை கூறுகிறாய். அவர் உனக்கு புத்திமதி வழங்குகிறார். உண்மை என்ன என்பது எனக்கும் தெரியாது,

உனக்கும் தெரியாது. இப்படியிருக்கலாம் என்று மக்கள் நினைக்கிறார்கள். அப்போதும், இப்படியிருக்க வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கிறோம்.

நமது நாட்டில் ஆத்மாவின் அமரத் தன்மைக் கொள்கை மிகப் பழங்காலத்திலிருந்தே நடைமுறையில் இருந்துவருகிறது. ஆயினும் நம் நாட்டைப்போல் கோழை நாடு உலகில் இல்லை. இது வியப்பூட்டும் விஷயமல்லவா. ஆத்மாவின் அமரத் தன்மையை நம்பும் நாடு கோழையாக இருக்கக்கூடாது. ஆனால் மேற்கு நாட்டினர் இங்கு வந்து தங்கள் ஆட்சியை நிலைநாட்டினார்கள். அவர்களோ ஆத்மாவை நம்பாதவர்கள். சிலர் நாத்திகர்களும்கூட. செத்தால் கதை முடிந்தது. பிறகு எதுவும் மிஞ்சுவதில்லை என்ற கொள்கையுடையவர்கள் இங்கு வந்து ஆத்மவாதிகளின் மீது ஆட்சிசெய்தனர். ஆத்மவாதிகள் தங்கள் வீட்டில் ஒளிந்துகொண்டு உபநிஷதங்கள் ஓதியபடி 'ஆத்மா அழியாதது' என்று கிளிப்பிள்ளைபோல் சொல்லிவந்தார்கள்.

ஆத்மா நிரந்தரமானது எனில் பிறகு பயம் ஏன்? அப்படி நம்புகின்றவனின் எல்லா பயமும் நீங்கியிருக்க வேண்டுமே. சாவு வந்தாலும் அவன் பயப்படமாட்டான். அவனை அடிமையாக்க முடியாது. அத்தகையவர்கள் வாழும் நாட்டை பிற தேசத்தினர் அடிமையாக்க முடியாது.

ஆத்மா அழியாதது என்று நாம் வீரமாகச் சொல்வதில்லை; முழுமையாகச் சொல்வதில்லை; அனுபவித்துச் சொல்வதில்லை. முணுமுணுக்க மட்டுமே செய்கிறோம். ஏனெனில் நாம் அடிப்படையில் கோழைகள். இது பற்றி தெரியாது என்று ஒப்புக்கொள்ளும் தைரியமும் நமக்கில்லை. நாம் பார்க்கின்ற வரையிலும், ஒருவன் இறந்தால் அதனுடன் அவன் கதை முடிந்து விடுகிறது. நமது கதையும் இப்படித்தான் இருக்கப்போகிறது. ஆகவே மனத்தின் ஒரு மூலையில் ஆத்மாவின் நிரந்தரத் தன்மை குறித்து நமக்கு சந்தேகம் உள்ளது. ஆகவே இக்கொள்கை நம் வாழ்க்கையில் புரட்சி ஏற்படும் அளவிற்கு பாதிப்பு உண்டாக்கவில்லை.

ஆகவே முதலில் சந்தேகமே இல்லாதவனாக ஆக வேண்டும். ஆத்மா நிரந்தரமானது என்பதை உபநிடதங்களில் படித்தோ, கிருஷ்ணர்-புத்தர்-மகாவீரர் போன்றவர்கள் கூறுவதைக் கேட்டோ, முடிவு செய்யக்கூடாது. உன் சுயசிந்தனை அல்லது அனுபவ அறிவின் விளைவாக அது அமைய வேண்டும். 'ஆமாம், ஆத்மா அழியாதது என்று எனக்கே தெரியும்' என்று நீயே கூறக்கூடிய நிலை உருவாக வேண்டும்.

வெளியே இருக்கும் பொருளைத் தேடுவதுதான் கஷ்டம். நிறைய அலைய வேண்டும். உனக்கு உள்ளே இருப்பதைத் தேடுவதில் என்ன சிரமம்? பிரச்சினை என்ன? நீ உள்ளே நுழைவதற்கான முயற்சி எடுக்கவில்லை என்பதுதான். ஒரு மணி நேரமாகவது நீ ஓய்வாக உட்காருவதில்லை. ஒரு மணி நேரமாவது மனத்தில் எண்ண அலைகள் எழாதபடி தடுக்க முடியவில்லை. தொடர்ந்து விறகு போட்டால் எரியும் அடுப்புப்போல் உன் மனமும் விடாமல் எரிகிறது. உன் மனமென்னும் சக்கரம் நிற்காமல் சுழன்றபடியே உள்ளது. சக்கரத்தின் அச்சாணியைக் காண முடியாதபடி சுழல்கிறது. அது உன் கண்ணில் பட்டால் ஓர் உண்மை உனக்கு விளங்கும். எதனை ஆதாரமாகக் கொண்டு சக்கரம் சுழல்கிறதோ, அந்தக் கடையாணி (axle pin) சுழல்வதில்லை.

ஆகவே ஒரு வண்டியில் சக்கரம் முதன்மையானதன்று. முக்கியமானது கடையாணி. சக்கரம் ஆயிரக் கணக்கான மைல் ஓடினாலும், கடையாணி அப்படியே இருக்கும். அதுதான் மையம். உள்புறம் உனக்குள்ளும் அச்சாணி போன்ற மையம் உள்ளது. அதன் மீது உன் வாழ்க்கைச் சக்கரம் சுழலுகிறது. சக்கரத்திலுள்ள ஆரங்களே உன் ஆசைகள். உள்ளே இருக்கும் அச்சாணி அசைவதில்லை. அதுதான் உன் ஆத்மா.

எப்பொழுதாவது கொஞ்சம் உட்காரேன். உனக்கென்று சிறிதாவது நேரம் ஒதுக்கிக்கொள். மற்றவர்களுக்காகவே எல்லா நேரத்தையும் செலவழிக்காதே. பணத்திற்காக, மனைவி-குழந்தைகளுக்காகச் செலவழிக்கும் நேரம் போக உனக்காகக் கொஞ்சம், மிச்சம் வை. ஒரு மணி நேரம் போதும். அந்த

நேரத்தில் கண்களை மூடி, உன் வாழ்க்கைச் சக்கரம் சுழல்வதை நிறுத்து. வேகத்தின் காரணமாக சக்கரம் தொடர்ந்து சுழன்றாலும் சில நிமிடங்களில் நின்றுபோகும்.

சில நிமிடங்களில் உன் கற்பனையில் அது மீண்டும் சுழலலாம்! பொறுமையிழக்காமல், ஒரு மணி நேரம் கண்களை மூடி, தொடர்ந்து முயன்றால் சிறிது காலத்திற்குப் பின் முழு வெற்றியும் பெறுவாய். ஒரு நாள் சக்கரத்தின் சுழற்சி நின்றுபோய் உன் கண்ணிற்குக் கடையாணி புலப்படும். அன்றைய தினம் நீ சந்தேகங்கள் நீங்கியவனாக ஆவாய். பிறகு எவ்வளவு வேகமாக வேண்டுமானாலும் சக்கரத்தைச் சுழற்று. பிறகு கடையாணி மறந்துபோகாது. இனி ஓடும் சக்கரத்திலும் அது உனக்குத் தென்படும். எங்கு வேண்டுமானாலும் ஓடு. உலகத்தையே சுற்றி வா. உனக்குள்ளே கடையாணி நிலையாக உள்ளது என்பது உனக்கு என்றும் நினைவிலிருக்கும்.

இந்தக் கடையாணி உதாரணத்தால் உனக்குள் கட்டுக்கோப்பு (integration) ஏற்படும். தனது கடையாணியைக் கண்டுகொள்ளாதவனின் மனம் பலவாறாகப் பிரிந்து வெவ்வேறு கட்டளைகளை அறிவிக்கும். மகாவீரர் 2500 ஆண்டுகள் முன்பே இந்த நிலையை பஹுசித்தவான் (பன்மனப்பான்மை) என்கிறார். மனத்தத்துவ இயலார் இதை polypsychic என்கிறார்கள். மனங்கள் பல. ஆத்மா ஒன்றுதான். அதை அறிந்துதான் மனிதன் தன் ஆளுமையுடன் ஒன்றியவனாகிறான்.

இத்தகையவனும் யம-நியமங்களைப் பின்பற்றுபவனாக இருக்கலாம். ஆனால் அவன் பிடிவாதமாக இவற்றை மேற்கொள்ளமாட்டான். அவை அவனுக்கு எளிதாக, இயல்பாக வந்துவிடும்.

கண் பார்வை உடையவன் கதவைத் திறந்து வாசல் வழியாக சுபாவமாக வெளியேறுவான். பிடிவாதமாகச் சுவரை உடைத்து வெளியேற முயலமாட்டான். பார்வையற்றவன்தான் பலரை வழி கேட்டும், தானும் தடியால் தட்டியபடியும் வாசலைக் கண்டுபிடிக்க முயல்வான். அதாவது ஞான விழிப்புப் பெற்றவன் சகஜமாக மேற்கொள்ளுகின்ற யம நியமங்களை, விரதங்களை,

ஞான விழிப்புப் பெறாதவன் பிடிவாதமாக முயன்றுதான் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது.

ஒருவன் கண்களை மூடி, மூக்கைப் பிடித்தபடி உட்கார்ந்திருக்கிறான். அவனிடம் விசாரித்தால் கடவுளைப் பற்றி சிந்திக்கிறேன் என்பான். அப்படி என்ன சிந்திப்பாய், கடவுள் சிந்தனைக்குரியவரா? அவர் பார்ப்பதற்கே உரியவர். அதற்கு உயர்ந்த ரகப் பார்வை தேவையாதலால் தரிசனம் என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறோம். சிந்தனை என்று சொல்வதில்லை. மேற்கு நாடுகளில் பயன்படும் 'ஃபிலாஸஃபி' சரியானதன்று. இந்திய ஃபிலாஸஃபி என்று இந்திய தரிசன இயலை கூறக்கூடாது. ஃபிலாஸஃபி என்றால் சிந்தனை என்று பொருள்படுகிறது. அது மனத்துடன், அறிவுடன் மட்டும் சம்பந்தப்பட்டது. தரிசனம் (தர்ஷன்) என்னும் சொல் பார்வை கிடைப்பதை, கண்கள் திறப்பதை, பார்ப்பவன் விழிப்புப் பெறுவதைக் குறிப்பிடுகிறது.

ஆம், தரிசன நிலையை அடையாத வரையிலும் ஒருவன் சிந்தனை நிலையில் தேங்கியிருக்கிறான். சிந்தனை இருக்கும்வரை புதுப்புது சந்தேகங்கள் தோன்றியபடி இருக்கும். இதனால் மனம் பல துண்டுகளாகப் பிளவுபடுவதால் நீ ஒருங்கிணைந்த (integrated) மனத்தவனாக இருக்க முடியாமல் போய்விடுகிறது. மனப்பக்குவம் பெற்றவன் வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை வழுக்கிச் செல்வதுபோல் சுலபமாக எதிர்கொள்கிறான். எதையும் சிரமப்படாமல் பார்த்தபடியே, கேட்டபடியே, ஸ்பரிசித்தபடியே, முகர்ந்தபடியே, சாப்பிட்டபடியே வாழ்க்கையை நகர்த்துகிறான்.

இதையே ஜென் சம்பிரதாயத் துறவி போகோஜு தனது யோகமுறை பற்றி கூறுகையில், "பசியெடுக்கும்போது சாப்பிடு கிறேன்; தூக்கம் வந்தால் தூங்குகிறேன்" என்று விசித்திரமாகச் சொன்னார். இதைக் கேட்டவர்கள், 'இது கூடவா யோகம்? நாம் எல்லோருமே யோகம் என்று சொல்லாமல் தினமும் இதைத் தானே செய்துவருகிறோம்' என்று குழம்பினார்கள்.

இதைக் கவனித்த ஜென் துறவி விளக்கம் தந்தார். "சாப்பிடும் சமயம் உன் கவனம் சாப்பாட்டில் இருப்பதில்லை.

சாப்பிடுவதுடன் வேறு பல நடவடிக்கைகளிலும் ஈடுபடுகிறாய். உன் மனத்தில் உன் கடை வியாபாரம் தொடர்ந்து நடக்கிறது; நீ கடைத்தெருவில் அங்குமிங்கும் அலைந்து பொருள்கள் வாங்குகிறாய்; யாருக்கோ லஞ்சம் கொடுப்பது பற்றி யோசிக்கிறாய். வாய் உணவை அரைத்தபடி இருக்கிறது. ஆனால் மனம் அங்கே இல்லை. அது பத்து திசைகளிலும் அலைவதுடன் எத்தனையோ திட்டங்கள் தயாரிப்பதில் ஈடுபட்டுள்ளது.

"உன் தூக்கமும் முழுமையானதன்று. அது கனவுகளால் ஆக்கிரமிக்கப்பட்டுள்ளது. கனவிலும் பரபரப்பாக, படபடப்பாக இருக்கிறாய்; உணர்ச்சிகளால் கொந்தளிக்கிறாய்; இதனால் சில சமயம் தூக்கத்தில் உளறுகிறாய்.

"ஆனால் நான் சாப்பிடும்போது சாப்பிட மட்டுமே செய்கிறேன். அதுவும் பசியெடுக்கும்போதுதான் சாப்பிடுகிறேன். நீயோ பசியெடுக்காவிட்டாலும் உணவு நேரம் என்றதும் சாப்பிட உட்கார்ந்து விடுகிறாய். நீ சாப்பிடுவதற்கும் பசிக்கும் சம்பந்த மில்லை. உனது வேலை நேரத்திற்கு ஏற்றபடி சாப்பிடுகிறாய். உண்ணாவிரத சமயம் பசியெடுத்தாலும் சாப்பிடுவதில்லை. இயற்கைக்கு இசைவாக நீ நடப்பதில்லை. சுருக்கமாக நீ தேவையில்லாதபோது சாப்பிடுகிறாய்; தேவையெழும்போது சாப்பிடுவதில்லை. சிலர் பசியெடுக்காதபோதும் சாப்பிடுவதுடன் அளவு மீறியும் சாப்பிடுகிறார்கள். இவர்கள் இரண்டு தவறுகள் செய்கிறார்கள்."

எனக்குத் தெரிந்த சாப்பாட்டு ராமன் ஒருவர் ஏதோ விசேஷ சமயம் ஒரு வீட்டில் விருந்து சாப்பிடப்போனார். வயிறு வெடிக்கக்கூடிய அளவிற்குச் சாப்பிட்டதால் அவரால் நடக்க முடியவில்லை. ஆகவே விருந்தளித்தவர் அவரை வண்டியில் ஏற்றி வீட்டிற்கு அனுப்பினார்கள். வீடு வந்ததும் கஷ்டப்பட்டு இறங்கிய அவரை மனைவி கைத்தாங்கலாக உள்ளே அழைத்துச் சென்றாள். அவள் அவரிடம், "இது ஒண்ணும் புதிய விஷயமில்லை. என் அப்பாவுக்கும் இப்படித்தான் வயிறாரச் சாப்பிட்டுப் பழக்கம். லேகிய உருண்டை இருக்கு. அதைச் சாப்பிட்டா, வயிறு சரியாகிவிடும். அதைக் கொண்டுவர்றேன்," என்றாள்.

அதற்கு அவர், "போடி பைத்தியமே. லேகிய உருண் டையைச் சாப்பிடும் அளவுக்கு வயித்தில இடமிருந்திருந்தா இன்னொரு லட்டு சாப்பிட்டிட்டு வந்திருப்பேனே. இந்த சமயத்தில் கோலியளவு லேகிய உருண்டைக்குக்கூட வயித்தில இடமில்லை," என்று தெரிவித்தார்.

எனது இன்னொரு நண்பருக்குத் திருமணமானது. சில நாள் கழித்து அவர் மனைவியுடன் மாமியார் வீட்டிற்குச் சென்றார். சாப்பிடும்போது தட்டில் பூரி பரிமாறினார்கள்.* சிறிய அளவிலான பூரிகள். ஆகவே ஒவ்வொரு பூரியையும் விள்ளாமல் வாயில் போட்டுக்கொண்டார். அவர் மனைவிக்கு வெட்கமாகிவிட்டது. அவள் கணவரை நோக்கி இரண்டு விரல்களால் சைகை செய்தாள். இங்கிதம் கருதி இரண்டு துண்டாகவாவது பிரித்து வாயில் போட்டுக்கொள்வதற்காகத்தான் அப்படி ஜாடை காட்டினாள். ஆனால் அந்த மனிதரோ இந்த குடும்பத்தில் இரண்டிரண்டு பூரிகளாகச் சாப்பிடுவது வழக்கம் என்று நினைத்து அவ்வாறே இரண்டு பூரிகள் சேர்த்துச் சாப்பிடத் தொடங்கினார். "எல்லோரும் இதைப் பார்த்துச் சிரித்தார்கள். எனக்கு அவமானமாகிவிட்டது," என்றார் நண்பர்.

போகோஜு சொல்கிறார் எப்பொழுது பசிக்கிறதோ அப்பொழுது சாப்பிடுகிறேன். அப்பொழுது சாப்பிட மட்டுமே செய்கிறேன். தூக்கம் வந்தால் தூங்கிவிடுகிறேன். அப்பொழுது தூங்குவதை மட்டுமே செய்கிறேன்.

இத்தகைய வாழ்வில் அடக்குமுறை கிடையாது. பலவந்தம் கிடையாது. சுய ஹிம்சை கிடையாது. கடுமையான தவமோ, விரதமோ கிடையாது. போகமோ, யோகமோ கிடையாது. அந்த வாழ்வு சரளமானது. சகஜமானது. இவ்வாறு வாழ்பவன் எல்லாக் கடமைகளையும் செய்தபடி இன்பமாக வாழ்கிறான். அவன் கடையாணியிலிருந்து (ஆத்ம மையத்திலிருந்து) பிறழ்வதில்லை. அவனது வாழ்க்கை சக்கரம் சுழல்கிறது. ஆனால் அவன் தனது மையத்திலேயே தங்கிவிடுகிறான்.

* இந்தி பேசும் மாநிலங்களில் சாதாரண நாட்களில் ரொட்டி (சப்பாத்தி)யும் விசேஷமான சூழ்நிலைகளில் பூரியும் தயாரித்தளிப்பது வழக்கம்.

அவன் எல்லாச் செயல்களையும் தெளிந்த அறிவுடன் செய்கிறான்; சுயநினைவுடன் செய்கிறான். பயந்து ஓடும் கோழை 'பெண்களைப் பார்க்காதே' என்று எச்சரிப்பான். ஞானியோ 'பெண்களைப் பார்க்கலாம். ஆனால் விருப்பு வெறுப்பின்றிப் பார்' என்பான்.

தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்ட ஒரு பிட்சு புத்தரிடம், "எனக்குப் பயணத்தில் வழிகாட்டிபோல் ஓர் உபதேசம் செய்யுங்கள். பல மாத யாத்திரை. நடுவில் திரும்பி உங்களிடம் ஆலோசனை பெற இயலாது," என்றார்.

அதற்கு புத்தர், "சரி, வழியில் பெண் யாராவது தென்பட்டால் அவளை ஏறெடுத்தும் பார்க்காதே. கண்களைத் தாழ்த்தியபடி நடைபோடு," என்று அறிவுரை கூறினார்.

அவர் அருகில் உட்கார்ந்திருந்த பிரதம சீடரான ஆனந்தன், "அது எப்படி சாத்தியப்படும், சுவாமி! பார்க்காமல் பெண் என்று எப்படித் தெரிந்துகொள்வது? அப்படிப் பார்த்தாகிவிட்டது என்றால், பிறகு கண்களைத் தாழ்த்திக் கொள்வதால் என்ன பிரயோஜனம்?" என்று கேட்டார்.

"சரி, பார்த்தாகிவிட்டது என்றால் தப்பில்லை. பெண்ணைத் தொடாமல் இருக்கலாம்," என்று புத்தர் திருத்தம் தெரிவித்தார்.

ஆனந்தன் விடுவதாக இல்லை. "சில சூழ்நிலைகளில் பெண்ணத் தொடாமலிருக்க முடியாது. பாதையில் ஒரு பெண் விழுந்து கிடக்க அப்போது நம்மைத் தவிர யாரும் அங்கே இல்லையெனில், அவளைத் தொட்டுத் தூக்குவதா, கூடாதா? நீங்கள் கருணாமூர்த்தியாயிற்றே, என்ன சொல்கிறீர்கள்?" என்று தொடர்ந்து கேட்டார்.

"உன் கேள்வி நியாயமானதுதான். அந்த சூழ்நிலையில் பிட்சு அவளைத் தொட்டுத் தூக்கலாம். ஆனால் உணர்ச்சி வசப்படாமலும், தான் ஒரு பிட்சு என்னும் சுயநினைவுடனும் அவளைத் தொட வேண்டும்," என்று விளக்கமளித்து, புத்தர் தொடர்ந்தார்:

"முக்கியமான விஷயம் சுயநினைப்புடன் இருப்பதுதான். இப்போது புறப்பட்ட பிட்சுவிடம் மனோபலம் சற்றுக் குறைவு. ஆகவே பெண்களைப் பார்க்கக்கூட வேண்டாமென எச்சரித்தேன். சற்றுக் கூடுதலான மனவுறுதியுள்ள பிட்சுவிடம், 'பெண்ணைப் பார்க்கலாம். தொடாதே' என்று கூறியிருப்பேன். முழுமையான மனவலிமை பெற்றவனுக்கு நான் எந்த அறிவுரையும் வழங்கமாட்டேன். 'பிட்சு என்னும் சுயநினைப்புடன் இரு' என்று மட்டும் சொல்வேன்."

மழை காலம் ஆரம்பம். நனைந்தபடி தெருவில் நடந்த ஒரு பிட்சுவை ஒரு விலைமாது அடுத்த நாலு மாதங்களும் தன் வீட்டில் தங்குமாறு வேண்டினாள். பிட்சு மடத்திற்குத் திரும்பி புத்தரிடம், "பிரபு, தங்கள் கட்டளைப்படி செய்கிறேன்," என்று தெரிவித்தார். "அவள் கேட்டுக்கொண்டபடி நீ தங்கலாம்," என்று புத்தர் அனுமதித்தார். மற்ற பிட்சுக்கள் அதிர்ச்சியடைந்தனர். மடத்தில் குழப்பம் மூண்டது. அவர்கள் புத்தரை தைரியமாக எதிர்த்தார்கள். "நீங்கள் சொல்வது தப்பு. பெண்களைப் பார்க்கவோ, தொடவோ கூடாது என்று எப்பொழுதும் நீங்கள் சொல்லி வருகிறீர்கள். இவளோ பெண்களில் மோசமான விலை மாதாயிற்றே," என்றனர்.

புத்தர் மறுத்துரைத்தார் "இந்த பிட்சு விலைமாதின் வீட்டில் தங்கினால் உண்மையில் அவள்தான் அஞ்சும்படி ஆகிவிடும். அவளிடம் இந்த பிட்சு பயப்பட காரணம் எதுவும் இருக்காது. நாலு மாதம் தங்கியபின் நாம் நிலைமையை ஆராய்வோம்," என்றா.

பிட்சு விலைமாதின் வீட்டில் தங்கினார். மற்ற பிட்சுக்கள் சும்மா இருக்கவில்லை. அக்கம்பக்கம் விசாரித்து, அவர்கள் புத்தரிடம் வந்து புகார் செய்தார்கள். "பிரபு, குடிமுழுகிப் போச்சு. ராத்திரி ரெண்டு மணிவரை அவள் நம் பிட்சு பார்க்கும்படி ஆடுகிறாளாம். பிட்சுவின் உணவுப் பழக்கங்களும் தாறுமாறாகிவிட்டனவாம். இருவரும் ஒரே அறையில் தூங்குகிறார்களாம்," என்று தினம் வந்து அலறினர். புத்தர் புன்முறுவல் உதிர்த்து, "நாலு மாதம் முடியட்டும்," என்று மட்டும் சொன்னார்.

நான்கு மாதங்கள் முடிந்து அந்த பிட்சு திரும்பினார். அவர் பின்னாலேயே விலைமாதும் வந்தாள்! பிட்சு எதுவும் பேசத் தொடங்கும் முன்பே அவள் புத்தரின் திருவடிகளில் வீழ்ந்தாள். "சுவாமி, எனக்கு பிட்சுணியாக தீட்சை அளியுங்கள். இந்த பிட்சுவை என் வீட்டிற்கு அனுப்பி எனது முக்திக்கான உபாயத்தைத் தெரிவித்துள்ளீர்கள் இவரை ஒழுக்கத்திலிருந்து பிறழவைக்க நான் எவ்வளவோ முயன்றேன். இவர் அபூர்வமானவர். 'என் நடனத்தைப் பாருங்கள்' என்று கூறியதற்கு மறுக்காமல் பார்த்தார். 'நானோ துறவி. நான் நடனம் பார்க்கலாகாது' என்று இவர் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. இவர் என்னை இன்னொரு மனிதப் பிறவி என்ற முறையில்தான் பார்த்துப் பழகினாரே தவிர, பெண் இனம் என்ற முறையில் பார்க்கவில்லை."

புத்தர் புன்முறுவலுடன் மற்ற சீடர்களைப் பார்த்தார். அவள் தொடர்ந்தாள்: "இந்த பிட்சுவின் உள்ளே தெய்விக ஒளி இருப்பது தெரிகிறது. இவர் அருகே நிற்கும்போது நான் ஒரு விலைமாது என்பதையே மறந்துவிடுகிறேன். இவர் முன்னிலையில் நான் வானில் பறப்பதைப்போல் உணர்கிறேன். நான் இவரைக் கீழே இறக்க முடியவில்லை. இவர் என்னை மேலே உயரும்படி செய்தார். இவரை என் வீட்டிற்கு அனுப்பி என் மீது அளப்பரிய கருணை காண்பித்துள்ளீர்கள். என் பழைய வாழ்க்கைக் கதை முடிந்துபோனது. என் பழைய உலகம் அழிந்துவிட்டது. இவரது உள்ளத்தில் ஏற்பட்டதுபோன்ற விழிப்பு எனக்கும் உண்டாகாவிடில், அதுவரை என் வாழ்க்கை பயனற்றதாக இருக்கும். இவரது உள்ளத்தில் எரியும் ஒளிவிளக்கு என் உள்ளத்திலும் எரிய வேண்டும்." என்று கெஞ்சினாள்.

புத்தர் மற்ற சீடர்களைப் பார்த்தார். "இப்பொழுது என்ன சொல்கிறீர்கள்? தினமும் வம்புச் செய்தி சேகரித்துவந்தீர்களே. கொஞ்சம் பொறுத்திருங்கள் என்று நான் முதலிலேயே சொன்னேனே. இந்த பிட்சுவின் மீது எனக்கு நம்பிக்கை. காரணம் இவனுக்கு ஞான விழிப்பு உண்டாகிவிட்டது. அது ஒன்றுதான் உண்மையான தேவை. விழிப்புத் தோன்றிவிட்டால் பிறகு எந்த

சூழ்நிலையாலும் பாதிக்கப்படாமல் ஒருவன் வாழ முடியும்." என்று முடித்தார்.

அஷ்டாவக்ரரின் கண்ணோட்டமும் இதுவே விழிப்புப் பெற்று பார், கேள், சாப்பிடு, தூங்கு, உலகில் வாழ், சுகமாக இரு. ஓடாதே. போகத்தில் விழாதே. தியாகத்தில் மயங்காதே. இத்தகைய விழிப்பினால் நீ சித்த புருஷன் ஆகிறாய். ஓடினால் கற்பனை உன்னைத் துரத்தும். விழிப்புப் பெற்றால் பிறகு கற்பனை மிஞ்சியிருக்காது.

**உன்னை நோக்கினேன் உதயத்திலிருந்து**
**மாலையாகியும் மனம் நிரம்பவில்லை**
**வெயிலில் ஆடி அசைந்தபடி**
**நிழல்போல் ஒன்று படியில் ஏறுது**
**உன்னை நான் சற்றே தொட்டேன்**
**ஈரப் பனித்துளியின் மென்மை உணர்ந்தேன்**
**நீ ஒரு குளிர்ந்த ஏரியெனில்**
**அதைத் தொட்டுச் செல்லும் படகு நான்**

நீ ஊரைவிட்டு எங்கோ போய் உட்கார்ந்துவிட்டாய். ஆனால் அங்கும் புதிய-புதிய கற்பனைகள் தோன்றி உன்னை வதைக்கும். நீ எந்தப் பெண்ணை (மனைவியை) விட்டுவந்தாயோ அவளே உன் கற்பனைக் கண்ணில் தெரிவாள். வேறு என்ன செய்வாய்? யாரைவிட்டு நீ ஓடுகிறாயோ அவள்தான் பின்தொடர்வாள்.

அவள் கற்பனையில் பின்தொடர்வதால் நிழல்போல் தெரிவாள். நீ கற்பனையில் அவளைத் தொடுவாய். முனிவர்கள்-அப்சரசுகளின் தொடர்பு பற்றிக் கதைகள் படித்திருப்பாய். தேவமாதர்கள் எங்கேயிருந்து வருவார்கள்? அப்படி யாரும் கிடையாதே! வீட்டில் விட்டுவிட்டு ஓடிவந்தபின் சாதாரணப் பெண்ணாகிய உன் மனைவி இப்போது கற்பனையில் அப்சரசாக வருகிறாள்! நீ அக்கம்பக்கத்தில் ஆசைப்பட்ட சாதாரணப் பெண்களும் அப்சரசுகளாக உன் கற்பனையில் வந்து சீண்டுகின்றனர். எந்தப் பெண்களைவிட்டு ஓடி வந்தாயோ அவர்கள் இப்போது உன் கற்பனையால் மெருகு பெற்று உன் மனத்தில் நிழலாடுகிறார்கள்.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: "கலப்படமற்ற முழு சத்தியத்தைக் காதால் கேட்ட மாத்திரத்தில் தூய அறிவும், சலனமற்ற ஆரோக்கியமான மனமும் பெறுகின்ற மனிதன் ஒழுக்க முறைகளை, ஒழுக்க மீறல்களை, ஒழுக்கம் பற்றிய சிந்தனையைப் புறக்கணித்தலை, இந்த மூன்றில் எதையும் மேற்கொள்ளுவதில்லை." **(சுலோகம் 224)**

ஒருவனது அறிவு தெளிவாக இருந்து, மனத்தில் சஞ்சல அலைகள் எழாமல் இருக்கும் பட்சத்தில், சத்தியத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே அவனுடைய வேலை முடிந்துவிடும். எதுவும் செய்வதற்கு மிஞ்சியிருக்காது.

அவனது உள்ளம் ஆரோக்கியமாக இருக்கும். ஆகவே சத்தியத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே அவன் முக்திநிலையை நெருங்கிவிடுகிறான். கட்டுப்பாடுகள், பத்தியங்கள், ஹடயோகம் முதலிய முயற்சிகள், நியமங்கள், விரதங்கள் ஆகியவை மூலமாக அல்லாமல் ஞானத்தில் மூலம் முக்திநிலை அடைபவன் வாழ்வில் ஒழுக்கம்-கட்டுப்பாடின்மை-இரண்டையும் குறித்த உதாசீனம் ஆகியவை இருக்காது.

மூன்று நிலைகள். ஒழுக்கக் கட்டுப்பாடுகளால் (ஆசாரங்களால்) நிறைந்து விளங்குபவனை யோகி என்கிறோம். சிற்றின்பங்களிலேயே மூழ்கி, புலனடக்கம் அற்றவனை போகி என்கிறோம். இந்த இருவருக்கும் மேலான நிலையில் உள்ளவனை உதாசீனன் என்கிறோம்.* அவன் ஒழுக்கம்-கட்டுப்பாடின்மை இரண்டையும் கடந்து பற்றற்றவனாக இருப்பான். அஷ்டாவக்ரர் இதற்கும் மேற்பட்ட நிலை உதாசீனத்தையும் கடந்த நிலை உண்டு என்கிறார். இது அபூர்வமான உச்சநிலை.

கட்டுப்பாடுகளை மீறி வாழ்வது தவறு. அதை அனுபவிப்பவன் ஒருவன் (போகி). ஆச்சாரங்களைச் சரிவரக் கடைப்பிடிப்பவன் இன்னொருவன் (யோகி). இருவரும் வாழ்க்கையைப் பாதிப்பாதியாகத் தேர்ந்தெடுத்தவர்களாக

---

* பகவத்கீதையிலும் சில இடங்களில் இச்சொல் வருகிறது. சாதக பாதகம் செய்யாமல் ஒதுங்கியிருப்பவன், ஒரு பட்சத்தையும் சாராமல் இருப்பவன், சத்துவ-ரஜ-தாமச குணவசப்படாதவன் என்றெல்லாம் பொருள் கூறப்படுகிறது.

உள்ளனர். முழு சத்தியம் இருவர் கைக்கும் கிடைக்க வாய்ப்பில்லை. இதைக் கவனித்து உதாசீனன் போகம்-யோகம் இரண்டையும் கைவிடுகிறான். ஆனால் அவனுக்கும் சத்தியம் முழுமையாக வசப்படுவதில்லை. உதாசீனம் (ஒதுக்குதல்) ஓர் எதிர்மறையான கண்ணோட்டமாகும். அவன் பிரவாகத்தில் கலந்துகொள்ளாமல் கரையிலேயே உட்கார்ந்திருக்கிறான்.

நான்காவது நிலை ஒன்றும் உண்டு. ஆச்சாரங்களோ, ஆச்சாரமின்மையோ, உதாசீனமோ இல்லாத உயர்ந்த நிலை அது. அந்த நிலையை அடைந்தவன் விதிமுறைகளின்படி வாழ்வே னென்றோ, கட்டுப்பாடின்றி வாழ்வேனென்றோ முடிவு செய்வதில்லை. துறவிகளுக்கும் கட்டுப்பாடுகள் உண்டு. துறவி நல்லதே செய்வேன் என்று முடிவெடுக்கிறார். சராசரி மனிதன் கெட்டதுசெய்யத் தயங்குவதில்லை. அதுபற்றி அவன் பெருமையடித்துக் கொள்வதும் உண்டு.

நீ சிறைக்குப் போய் கைதிகளிடம் பேசிப்பார். அவர்கள் தாங்கள் செய்த குற்றத்தைப் பல மடங்காக மிகைப்படுத்திக் கூறுவார்கள். இந்த விஷயத்தில் கைதிகள் மிகுந்த அகங்காரத்துடன் விளங்குவார்கள். ஒரு கைதி தான் இருவரைக் கொன்றால் இன்னொருவன் தான் நாலு பேரைக் கொன்றேன் என்று கர்வமாகக் கூறுவான். ஒருவன் லட்ச ரூபாய் திருடியதாகச் சொன்னால், இன்னொருவன், 'இதென்ன பிரமாதம்? நான் கோடி-கோடியாகத் திருடியிருக்கிறேன்' என்று மார்தட்டுவான்.

ஒரு சிறை அறைக்குள் ஒரு புதிய கைதி அடைக்கப் பட்டான். உள்ளே இன்னொரு கைதி நடுநாயகமாக அமர்ந் திருந்தான். அவன் புதியவனிடம், "உனக்கு எத்தனை வருஷம் சிறை தண்டனை?" என்று விசாரித்தான். புதியவன் இரண்டாண்டுகள் என்றான். பழைய கைதி அட்டகாசமாகச் சிரித்தான். "அப்படியானால் நீ கதவுக்குப் பக்கத்திலுள்ள பகுதியிலேயே இருந்துவிடு. நீ சீக்கிரமே விடுதலையடைந்து விடுவாய். நீ அற்பக்கைதி. நான் 14 ஆண்டுகள் சிறையிலிருக்க வேண்டிய பெரிய கைதி. ஆகவே இந்த அறையின் பெரும்பான்மையான பகுதி எனக்குத்தான் சொந்தம்," என்றான்.

சிறையில் கைதிகள் தங்களது பாவச் செயல்களை மிகைப்படுத்திக் கூறுகிறார்கள். வெளியுலகில் சிலர் தாங்கள் தானமாகத் தரும் தொகையை மிகைப்படுத்திக் கூறுவது போல்தான் இதுவும்.

ஒருவர் தன் மனைவியுடன் என்னைச் சந்திக்க வந்தார். மனைவி தன் கணவர் பெரிய அளவில் தானம் செய்தவர் என்று பெருமையாகக் கூறினாள். அவர் இதுவரை எவ்வளவு தானம் செய்திருக்கிறார் என்று கேட்டேன். "ஒரு லட்சம் ரூபாய் இருக்கும்," என்று மனைவி அழுத்தமாகச் சொன்னாள், உடனே கணவர் சீறினார். "ஏன் குறைச்சு சொல்றே? நான் டயரியில எல்லா தானமும் குறிச்சுவச்சிருக்கேன். இதுவரை லட்சத்து பத்தாயிரம் ரூபாய் தந்திருக்கேன் ஞாபகம் வச்சுக்கோ," என்று அவர் மிரட்டினார்.

மனிதன் நல்லது செய்ததையும் அகங்காரத்துடன் அறிவிக்கிறான். தீமை செய்திருந்தாலும் அதை கர்வத்துடன் அறிவிக்கிறான். சுபம் என்றாலும் அதில் ஒரு பிடிப்பு. அசுபம் என்றாலும் அதில் ஒரு பிடிப்பு. இந்த இரண்டையம் கடந்து உதாசீனர்களாகச் சிறுபான்மையோர் உள்ளனர். நல்லது-கெட்டதையும் தவிர்த்து அவர்கள் தனித்தன்மையுடன் உள்ளனர்.

அஷ்டாவக்ரரின் பார்வையில் இவற்றையெல்லாம் கடந்த உயரிய மனநிலை ஒன்றும் உண்டு. உதாசீனம் என்பது எதிர்மறையானது. வாழ்க்கை என்பது கொண்டாட்டம். அதில் பங்கு கொள்ளாமல் இருப்பது பாராட்டுக்குரியதன்று. மனிதர்கள் குறித்து விரக்தி இருந்தாலும் சுற்றிலும் மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன பறவைகள் இன்னொலி எழுப்புகின்றன. எங்கும் ரம்மியமான சூழ்நிலை. இதைக் கவனித்தாவது உதாசீனன் மூலையில் உட்காராமல் எழுந்து பாடலாமே, ஆடலாமே.

ஒவ்வொரு நிமிடமும் அனுபவித்து வாழ்க்கை நடத்து. நன்மை செய்யப்போகிறேன் என்றோ, தீயது செய்வேன். என்றோ முடிவுகட்டாதே. கடவுள் உன் மூலம் செயல்படட்டும். அவரது இஷ்டமே பிரதானம், 'அவர் என் மூலம் செய்விப்பதற்கு என்னை முழுமையாக அவர் வசம் விட்டுவிடுகிறேன்.' என்று மனத்தில்

உறுதிகொள். கடவுளுடன் இத்தகைய இணக்கமான சமரச நிலையே அஷ்டாவக்ரர் கூறும் நான்காவதான சர்வோச்ச நிலை.

'ஆன்மவீரன் சுபமான அல்லது அசுபமான எச்செயல் புரியவேண்டியுள்ளதோ அதை இயல்பாகச் செய்கிறான். ஏனெனில் அவன் குழந்தைபோல் மாசின்றி உள்ளான்.' **(சுலோகம் 225)**

அவன் சுயமாகத் தேர்ந்தெடுத்துச் செயல்படுவதில்லை. கடவுள் தன் மூலமாக எதைச் செய்விக்கிறாரோ அதைச் செய்கிறான். அச்செயல் உலகக் கண்ணோட்டத்தில் நல்லதாகவோ, தீயதாகவோ இருக்கலாம்.

இதைத்தான் கிருஷ்ணர் அர்ஜுனனிடம் தெரிவிக்கிறார்: "போர் அவசியம் என்பது கடவுளின் இஷ்டமானதால் நீ போரிட வேண்டும். போரிடுவதை அசுபம், ஹிம்சை, பாவம் என்று குறுக்கிட்டுச் சொல்ல நீ யார்? நீ கருவி அல்லது காரணம் மட்டுமே ஆவாய். உன்னை எதிர்த்து நிற்பவர்கள் ஏற்கெனவே கொல்லப்பட்டவர்கள்தாம். அதாவது, இன்னும் சிறிது நேரத்தில் இவர்கள் இறந்துபோனவர்களாக இருப்பார்கள். அவர்களின் இறப்பு உன் அம்புகளின் மூலமா அல்லது வேறொருவரின் அம்புகளின் மூலமா என்பது முக்கியமில்லை. நீ இவர்களைக் கொல்லப்போகின்றவன் என்று நினைத்துக்கொள்ளாதே. நீ உன்னை கர்த்தா நிலையில் வைத்துப் பார்க்காதே."

இது சரிதான். நல்லது-தீயது என்று முடிவுசெய்ய நீ யார்? உன் அனுபவத்திலேயே நீ நன்மை செய்ய அது தீங்காய் முடிந்ததையும், கெடுதல் செய்ய நினைத்து அது நன்மையாய் முடிந்ததையும் அறிந்திருப்பாய்.

சீனநாட்டுக் கதை. நான்காயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நிகழ்ச்சி. யாரோ ஒருவனுக்கு பயங்கரத் தலைவலி. பல்லாண்டுகளாகத் தொடர் தலைவலி. அவனுடைய எதிரி ஒருவன் ஒளிந்திருந்து அம்பு செலுத்தினான். உடனே ஓடிவிட்டான். கூரான அம்பு குறி தவறிக் காலில் தைத்தது. உடனே தலைவலி மாயமாய் மறைந்துவிட்டது! அம்பைப் பிடுங்கி எறிந்தபின் அந்த நோயாளி தீவிரமாக யோசித்தான். இந்த

நிகழ்ச்சியைப் பலருடன் பங்குகொண்டான். இதன் விளைவாகத் தோன்றியதுதான் அக்யூபங்க்சர் சிகிச்சை (தொடு சிகிச்சை) முறை. வலி தலையில் உணரப்பட்டாலும் கோளாறு உண்மையில் காலில் இருந்தது. எதனாலோ காலில் மின்னோட்டம் தடைப்பட்டுப் போயிருந்தது. அதன் பாதிப்பு தலையில் பிரதிபலிப்பானது. தலை வைத்தியம் எவ்வளவோ செய்தும் பயனற்றுப்போனது. தற்செயலாகக் காலில் பாய்ந்த அம்பு மின்னோட்டத்தில் உண்டான தடையை நீக்கி மின்பிரவாகத்தைச் சீர்ப்படுத்தியது.

அக்யூபங்க்சர் வினோதமான சிகிச்சை முறை. உன் இடதுகையில் வலி என்றால் வலக்கையில் சிகிச்சை செய்யப்படும். தலையில் வலி என்றால் கால் கட்டைவிரலில் வைத்தியம் நடக்கும். சிகிச்சை முறையும் எளிமையானது. சிகிச்சை செய்யும் பகுதியில் ஓர் ஊசி மட்டும் செருகப்படும். அந்த ஊசி உயிரோட்டம் தடைப்பட்டிருந்த இடத்தைச் சரிசெய்யும். அடைப்பை நீக்கி உயிர்பிரவாகம் தொடரச்செய்யும் அல்லது அதன் திசையை மாற்றும்.

ஆனால் அம்பெய்தவன் கெட்ட எண்ணத்துடன், கொலை நோக்கத்துடன்தான் அவ்வாறு செய்தான். விளைவு? ஒரு மனிதனின் தலைவலி நீங்கியது மட்டுமல்லாமல், 4000 ஆண்டுகளாக கோடிக் கணக்கான மக்கள் அக்யூபங்க்சரினால் ஆரோக்கியமடைந்திருக்கின்றனர். இவர்கள் அடைந்த நன்மைக்கு காரணம் அம்பு எய்த மனிதன்தானே. ஆனால் அவனது நோக்கம் கெட்டதாக இருந்தது. அவன் செய்ய நினைத்த கெடுதல் நன்மையாக மாறிவிட்டது.

இதேபோல் நீ நல்லது செய்ய நினைத்து அது சில சமயம் கெடுதலாக மாறுகிறது. உன் நல்ல முயற்சி குழப்பமயமாகி விடுகிறது. தந்தை தன் மகன் நல்லவனாக விளங்க வேண்டும் என்பதற்கான முயற்சிகள் எடுக்கிறார். அந்த முயற்சிகளின் காரணமாகவே மகன் கெட்டுப்போவதுண்டு. சுப ஆரம்பம் என்பது அபாயகரமாக முடிவதுண்டு.

காந்திஜியைப் போன்ற நல்ல தகப்பனாரைப் பெறுவது கடினம். அவர் மகன்களில் மூத்தவரான ஹரிலால் காந்தி தந்தை

தன்னை இன்னொரு மகாத்மாவைப்போல் ஆக்குவதற்கான முயற்சி எடுத்ததால்தான் கெட்டுப்போனார்! ஒருவன் தான் மகாத்மா ஆவதற்கு பிரயத்தனப்பட்டால் அதை யாரும் ஆட்சேபிக்கப் போவதில்லை. ஆனால் மற்ற யாரையும் மகாத்மா ஆக்க விரும்பி அவன் மீது கடுமையான கட்டுப்பாடுகளைத் திணிக்க ஒருவனுக்கு அதிகாரமில்லை.

இதனால்தான் ஹரிலாலை வலுக்கட்டாயமாகத் தன்னைப் போல் மகாத்மா ஆக்க காந்திஜி மேற்கொண்ட கடுமையான அணுகுமுறை விபரீதமான விளைவை உண்டாக்கிவிட்டது. காந்திஜியின் கட்டளையை மீறாத இந்திய மக்களிடையே ஹரிலால் ஒருவர் மட்டும் அவரை எதிர்த்து அவமதித்தார். தந்தை சொன்னதைப் பின்பற்றாமல் போயிருந்தால்கூட பரவாயில்லை. ஆனால் வேண்டுமென்றே அவர் சொன்னதற்கு நேர் எதிரான செயல்கள் புரிந்து ஹரிலால் தந்தையைப் பழிவாங்கினார்.

ஹரிலாலின் பழி வாங்கும் வெறி அவரையே அடியோடு நாசமாக்கிவிட்டது. ஹரிலால் குடிகாரர் ஆனார். விலை மாதர்களுடன் தொடர்பு கொண்டார். முஸ்லிமாக மதம் மாறினார். காந்திஜி இந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றே என்று கூறியதை இப்படிப் பின்பற்றி மதம் மாறியதாகத் தந்தையை ஹரிலால் நேரடியாகத் தாக்கினார். பெயரையும் அப்துல்லா என மாற்றிக்கொண்டார். இதனால் காந்திஜி அதிர்ச்சியடைந்தார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டு ஹரிதாஸ் பலமாகச் சிரித்தாராம். "அதிர்ச்சியா? காந்திஜிதானே இந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்று என்றவர். தினமும் பிரார்த்தனையில் 'ஈஸ்வர் அல்லா தேரே நாம்' என்று பாடுகிறவராயிற்றே. அப்படியும் அதிர்ச்சி அடைந்தார் என்றால் அவரது இந்து-முஸ்லிம் ஒற்றுமைப் பேச்சும் முயற்சியும் போலிதானே. நான் முஸ்லிம் ஆனதால் அவருக்கு என்ன நஷ்டம்? அப்படியானால் அவரது இந்து-முஸ்லிம் வாதம் வெற்று அரசியல்வாதம்தானா? அதில் அவருக்கு ஆழமான ஈடுபாடு கிடையாதா?' என்றெல்லாம் ஹரிலால் பத்திரிகைகளில் தந்தையைச் சாடினார். (இவர் 60 வயதில் பிப்ரவரி 1948இல் ஒரு மருத்துவமனையில் அநாதையாக இறந்தார்.)

மகானுக்கு இப்படி ஒரு மகன்! ஆனால் மகனின் சீரழிவிற்கு மகானே காரணம்.* காந்திஜி மகனை நல்லவனாக வளர நடவடிக்கைகள் எடுத்தார். இன்னொருவரின் தூண்டுதலால் ஒருவன் நல்லவனாகிவிடுவதில்லை. பொதுவாக, நல்ல தந்தையின் பிள்ளைகள் கெட்டுப்போகிறார்கள். ஏனெனில் நாற்புறத்திலிருந்தும் அவனது கழுத்தை நெரிக்கும் முயற்சி நடக்கிறது. 'நல்லவனாகு' என்று அழுத்தம் தரப்படுகிறது. ஆனால் சுதந்திரமான சூழ்நிலைதான் ஒருவன் நல்லவனாவதற்கு ஏற்றது.

நீ நல்லது செய். அது கெடுதலாக முடிகிறது. நீ கெட்டது செய். சில சமயம் நல்லது விளைகிறது. உன் செயல்களின் இறுதி முடிவு என்ன என்று உனக்கே தெரியாது. எல்லாப் பொறுப்பையும் கடவுளிடம் தள்ளிவிடு.

இப்பொழுது நல்லதாகத் தெரியும் செயல் மிக விரைவிலேயே கேடு விளைவிக்கக்கூடும். ஏனெனில் உலகம் ஒவ்வொரு கணமும் மாறிய வண்ணம் உள்ளது. ஒரு போக்கிரி கிணற்றில் விழுந்துவிட்டான். நீ தூக்கிக் காப்பாற்றுகிறாய். அவன் ஊர் திரும்பி ஏதாவது அக்கிரமம் செய்கிறான். அந்த அக்கிரமத்திற்கு நீயும் பொறுப்பா என்று நிர்ணயிப்பது கடினம்.

மதத் தலைவர்கள் சிலர், 'கிணற்றில் விழுந்தவனைக் காப்பாற்றாதே. அவன் தனது கர்மபலனை அனுபவித்துப் பாவமூட்டையின் சுமையைக் குறைத்துக்கொள்கிறான். நீ குறுக்கிட்டு அவனது தலைவிதியில் குழப்பம் ஏற்படுத்தாதே.' என்று தடுக்கிறார்கள்.

ஆனால் இது கொடூரமான கண்ணோட்டம் ஆயிற்றே. இப்படிச் செய்வது மனிதத் தன்மையிலிருந்து பெரிய சரிவாயிற்றே.

---

* Harilal (aged 22 in 1910) who had taken part in the passive resistance movement and sentenced to prison terms thrice, had been nurturing deep in his heart that he had been consistently denied any formal education all these years.... suddenly disappeared... Harilal lost all moorings and became a drunkand, associating with prostitutes. In February 1948 he died a derelict in a hospital because of tuberculosis. (The Hindu 2.4.1996)

இந்த தர்மசங்கடமான (தர்மம்-அதர்மம் புரியாத) நிலையில் என்ன செய்வது? அஷ்டாவக்ரர் ஒரு வழி சொல்கிறார்.

கடவுள் எந்த சமயம் எதை உன் மூலம் செய்விக்கிறாரோ அது நடைபெறவிடு. நீ கர்த்தாவாக ஆகாதே. 'நான் கருவி மட்டுமே' என்று உனக்குள் அடிக்கடிக் கூறிக்கொள். 'நான் இதைச் செய்வேன், இதைச் செய்யமாட்டேன்' என்று ஆணவமாக முன்கூட்டியே திட்டமிடாதே. செயல்களை இது சரி-அது தவறு என்று தரம் பிரிக்காதே. எதைக் குறித்தும் இறுதி முடிவுசெய்ய முடியாதபடி உலகம் ரகசியம் நிறைந்ததாக இருக்கிறது.

குழந்தைகள் பொறுப்புகளை எடுத்துக்கொள்வதில்லை. அவை தம்மைச் சுற்றிலும் நிகழ்வதை அப்படியே நடைபெற உதவுகின்றன. ஆன்மிக வீரனின் செய்கையும் இவ்வாறே அமையும். குழந்தைகள் இயல்பாகவும் செயல்புரிகின்றன. அவர்கள் எந்தச் சுமையும் உணர்வதில்லை. நல்லது செய்வதாக நினைத்துத் திமிரோ, கெடுதல் செய்வதாக நினைத்து வருத்தமோ அவர்களிடம் காணப்படுவதில்லை. சிறுவயதில் அகங்கார உணர்வு இருப்பதில்லை. அவர்கள் கடந்த காலம் மற்றும் எதிர்காலம் பற்றி நினைப்பதில்லை. தாயுடன் சண்டைபோட்டு ஓடும் குழந்தை சில நிமிடங்களிலேயே திரும்பி, தாயின் மடியில் வந்துவிழுகிறது. அதாவது, ஒவ்வொரு கணத்தையும் அது முழுமையாக அனுபவிக்கிறது.

'ஆன்ம வீரன் சுதந்திரத்தால் சுகம் பெறுகிறான்; சுதந்திரம் மூலம் உன்னதத்துள் உன்னதத்தைப் பெறுகிறான்; சுதந்திரத்தால் நிரந்தர சுகநிலையை அடைகிறான்; சுதந்திரத்தால் பரம பதவியை (விண்ணரசில் உயர் இடத்தை) அலங்கரிக்கிறான்.' **(சுலோகம் 226)**

அடிமை வாழ்க்கையில் சுகத்திற்கு எங்கே இடம்? அந்த அடிமைநிலை பிறரால் உண்டானதாகவோ, தானே தன் மீது சுமத்திக்கொண்டதாகவோ இருக்கலாம். அடிமை நிலை துன்பமயமானது. உனக்குப் பிறர் சங்கிலிகளை மாட்டினார்களோ, அல்லது நீயே மாட்டிக்கொண்டாயோ, இரண்டிற்கும் ஒரு வித்தியாசமும் கிடையாது. உன் இறக்கைகளை பிறர்

வெட்டினாலும் நீயே உதிர்த்துவிட்டாலும் வித்தியாசம் கிடையாது. அடிமைநிலை என்பதே துன்பம்தான். ஏனெனில் அது எல்லைக்குள் அடங்கியிருக்கிறது. ஆனால் எல்லையற்ற நிலைதான் சுகம் தரும் நிலை.

ஆகவே அஷ்டாவக்ரர் உலகில் ஒரு சுகம்தான் உண்டு என்றும் அது சுதந்திரநிலையில் சாத்தியம் என்றும் கூறுகிறார். யம-நியமம், ஜபம்-தவம், யோகப் பயிற்சிகள் ஆகியவையும் நம்மைக் கட்டுப்படுத்துவதால் அவற்றையும் கடந்து சென்றால்தான் சுதந்திரநிலை வாய்க்கும்.

இது பாதி சுதந்திரநிலை. எதிர்மறையான (நெகடிவ்) அம்சத்தைக் குறிப்பிடுகிறது. எதிலிருந்தெல்லாம் விடுதலை பெற வேண்டுமென்று பட்டியலிடுகிறது. எந்தவிதமான சுதந்திரம் என்பது அடுத்த பாதி. அது ஞான சுதந்திரம் ஆகும். கட்டுப்பாடு களிலிருந்து விடுதலை என்பது எதிர்மறை சுதந்திரம். ஞானம், விழிப்பு, சாட்சி மனப்பான்மை பெற்றால் அது பூரண சுதந்திரம், ஆக்கபூர்வமான (பாசிடிவ்) சுதந்திரமாகும்.

எதிர்மறையான சுதந்திரத்தைப் பெறுவது ஓரளவு எளிது. விரதம், ஜபம், தவம், யோகம் முதலியவை அதற்கு உதவுகின்றன. நேர்மறையான சுதந்திரம்தான் உண்மையானது, முழுமையானது. இப்போது இரண்டு பிரிவுகள் எதிலிருந்து விடுதலை, எதற்காக விடுதலை-என்று உள்ளமை தெளிவாகிறது. இந்த இரண்டும் இணைந்தால், உனக்குள் ஆன்மப் புரட்சி நிகழும்.

இந்த முழு சுதந்திர நிலையில் பரமஞானம் பிறக்கிறது. அதன் பிறகு அறிவதற்கு ஒன்றும் மிஞ்சியிருப்பதில்லை. அந்த ஞானம் ஆத்மாவை நேருக்கு நேர் சந்திப்பது போன்றது. அப்போது எல்லாக் கட்டுப்பாடுகளும் நீங்கி, உன் உள்ளொளி சுதந்திரமாக பிரகாசிக்கிறது. பரம ஞான நிலை உண்டாகிறது. 'பரம்' என்றால் அதைக் கடந்து இனி எதுவுமில்லை என்று அர்த்தம்; சர்வோச்சநிலை (apex), கடைசிக் கட்டம் என்று அர்த்தம். அதற்கப்பால் பெறுவதற்கு ஒன்றுமில்லை, அறிவதற்கு ஒன்றுமில்லை. பரமஞானம் கிடைக்காத வரையில் வாழ்க்கைச் சக்கரம் சுழன்றுகொண்டே இருக்கும்.

இந்த முழு சுதந்திரநிலையில் சாதகன் நிர்வாணத்தில் பிரவேசிக்கிறான். அப்போது சுயத்திலிருந்தும் (தன்னிடமிருந்தும்) தனக்கு விடுதலை கிடைக்கிறது. அகங்காரம் எரிந்து அணைந்து போகிறது. மெழுகுவர்த்தி அணைகிறது; சூரிய ஒளி வெளிப் படுகிறது. சாதகன் அந்த ஒளியில் கலந்து, அந்த ஒளியாகவே மாறுகிறான். இந்த சுப வேளையில் உபநிஷதம் கூறும் அஹம் ப்ரஹ்மாஸ்மி (நான் கடவுள்), தத்வமஸி (அது நீயேதான், நீதான் அது) என்னும் உணர்வு சாதகனின் ஆளுமையில் பரவுகிறது.

இந்த நிலையே பரமபதம். இந்த நிலையில் சாதகன் தன்னுள் மறைந்து நிற்கும் பரமாத்மாவை ஒளிவிடச் செய்கிறான். தனக்குள் இருக்கும் விலை காணமுடியாத ஆன்மிகச் செல்வத்தை அடையாளம் காண்கிறான்.

சடங்குவழி மற்றும் நடத்தைவிதிக் கட்டுப்பாடுகளிலிருந்து விடுபடுவதுதான் சுதந்திரமென மக்கள் நினைக்கிறார்கள். அது போதாது. இதனால் சொந்த வாழ்க்கையிலும் சமூகத்திலும் குழப்பம் அதிகரிக்கும். இதற்கு மேலும் போகவேண்டும். உள்ளொளியைப் பெறவேண்டும்.

மற்றவர்கள் மூலம் கிடைத்த ஒளியை (ஞானத்தைக்) கைவிடு. ஏனெனில் அதனால் உனது சுயமான பிரகாசம் வெளிப்படுவது தடைப்படுகிறது. அதற்காக, வெளியிலிருந்து பெற்ற ஒளியை (ஞானத்தை) அணைத்துவிட்டுச் சும்மா உட்கார்ந்துவிடாதே. அப்படிச் செய்தால் கைவசமிருக்கும் கொஞ்ச நஞ்ச ஒளியும் நீங்கிவிடும்.

சுயமாக ஞானம் பிறக்காத வரையிலும், வேறு வழியின்றி, வெளியிலிருந்து கிடைக்கும் ஞானத்தைப் பின்பற்றத்தான் வேண்டும். இல்லாவிடில் நீ ஆன்மிகப் பாதையில் திசை தெரியாமல் அலைவாய்.

உனக்குள்ளே ஞானம் உதித்த பிறகு, வெளி ஞானத்திற்கு மதிப்புத் தரவேண்டிய அவசியமில்லை. அதனால் நீ குற்றவாளியாகி விடமாட்டாய். கடவுள் உனக்குள் இறங்கி பிரவாகிப்பதுபோல் உணர்வாய். நீ சொல்லுவாய்: ‘இறைவா உன்

விருப்பப்படியே நடக்கட்டும்.* உனக்கு ஆரம்பமும் தெரியும், முடிவும் தெரியும். எனக்கோ ஆதி-அந்தம் தெரியாது. வாழ்க்கைக் கதையின் ஓர் அத்தியாயம்தான் என் கைக்கு வந்தது. அதை வைத்து முழுக்கதையை என்னால் ஊகிக்க முடியாது; முடிவெடுக்க முடியாது. உனக்குத்தான் எல்லாம் முழுமையாகத் தெரியும். அந்த முழுமையின் அடிப்படையில் நீ என் மூலம் என்ன செய்விக்கிறாயோ அது சுபமாகத்தான் இருக்கும். உலகம் அச்செயலை அசுபம் என்று வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும்.'

இப்படி ஆழமான நம்பிக்கை ஏற்பட்டு, படைப்பு சக்தியின் முன் நீ சமர்ப்பணமானால், வாழ்க்கையில் புரட்சி தோன்றும். அதைத்தான் ஆன்மிகம் என்கிறோம். ஆன்மிகம் சாஸ்திர நூல்களில் இல்லை. ஆன்மிகம் உன் சுபாவத்தை, உன் ஆளுமையை, சுருக்கமாக, உன்னையே அறிந்துகொள்வதாகும். உன் சுபாவத்தை அடைவதற்கான வழிமுறையே சுதந்திரம் எனப்படுவது.

உங்களைக் கட்டிப்போடாதீர்கள். முன்னேறிக் கொண்டே செல்லுங்கள். புத்தர் தன் சீடர்களிடம் 'சரைவேதி, சரைவேதி' (நட, நடந்துகொண்டே இரு) என்று சொன்னார்.

போய்ச் சேர வேண்டிய இடம் வரும்வரை தொடர்ந்து நட. நடுவில் சற்று ஓய்வெடுத்தாலும், இரவு ஓய்வுக்குப் பின் காலையில் பயணத்தைத் தொடரு.

**ஹரி ஓம் தத்ஸத்!**

---

* Thy will be done in earth, as it is in heaven (The Bible)

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! 'செய்பவன் நானல்லன்' [அகர்த்தா] என்னும் நிலையை அடையுமாறு உபதேசிக்கிறீர்கள். ஆனால் எதைப் பற்றியாவது முடிவெடுக்கும் சமயம் கர்த்தா [நான்] உணர்வு மீண்டும் தலைதூக்குகிறது. பிறகு அகர்த்தா ஆவது எப்படி? தன்னுணர்வைப் போக்கிக்கொள்வது எப்படி? எடுக்கும் முடிவு கர்த்தாவுடையதா, அகர்த்தாவுடையதா என்று எப்படிக் கண்டுபிடிப்பது? நான் கடவுளின் புல்லாங்குழல் ஆவது எப்படி?**

**நீ** அகர்த்தா ஆக முடியாது. அதற்காக நீ நடவடிக்கை எடுக்க முடியாது. நீ எது செய்தாலும் அப்பொழுதே நீ கர்த்தாவாகி விடுகிறாய். உன்னை அழித்துக்கொள்ள முயன்றாலும் அங்கும் நீ கர்த்தாவாகத்தான் இருப்பாய். சிலர் அகங்காரத்தைக் கட்டுப்படுத்திவிட்டதாகத் தங்களைக் காட்டிக்கொள்ள தங்களை 'அடியேன்' என்று குறிப்பிடுவார்கள். அந்த அறிவிப்பும் 'நான்' என்பதிலிருந்துதான் வெளிப்படுகிறது.

யாரும் அகர்த்தா ஆக முடியாது. செயல் புரிதல் என்பதே உடனுக்குடன் கர்த்தாவைப் படைத்துவிடுகிறது. எனவே உன் கேள்வி அடிப்படையிலேயே தவறு. அது சுட்டிக்காட்டும் திசையும் தவறு.

கர்த்தா என்பவன் (செயல் புரிபவன்) எப்படி உருவாகிறான் என்பதைப் புரிந்துகொண்டால் படிப்படியாக கர்த்தா உணர்வு

தானாகவே மறைந்துபோகும். எதுவும் தனியாகச் செய்ய வேண்டியிராது.

'நான் கடவுளின் புல்லாங்குழல் ஆவது எப்படி?' என்று கேட்டாய்.

நீ எதுவாகவும் ஆகவேண்டியதில்லை. நீ ஏற்கெனவே கடவுளின் அல்லது ஆத்மாவின் புல்லாங்குழலாகத்தான் உள்ளாய். நீ கேட்ட கேள்வியை 'அவன்' உள்ளேயிருந்து கேட்கிறான். 'அவன்'தான் உன் மூலமாகப் பேசுகிறான். ஒரு கணம்கூட நீ அவனைவிட்டுப் பிரிந்திருக்க வாய்ப்பில்லை. நீ செய்ததாக நினைத்த பாவம், புண்ணியம் எல்லாம் அவன்தான் உன் மூலம் செய்வித்தான். நீ திருடனாக இருந்தபோதும் சரி, பிறகு துறவியான பிறகும் சரி, அவன்தான் உனக்குள் இருந்து வந்திருக்கிறான்.

'நான் அவனுடைய புல்லாங்குழலாக எப்படி ஆவேன்?' என்னும் கேள்வி உனது தெளிவின்மையைக் காட்டுகிறது. நாம் அவனிடமிருந்து விலகியிருப்பதாக நினைப்பதே பிரமை. நீ ஏற்கெனவே கடவுளின் குழல்தான் என்பதை நீ நினைவில் வைத்தாலே போதும்.

முடிவு எடுப்பது யார் என்று கேட்டாய். எல்லா முடிவுகளும் 'அவன்' எடுப்பதே. அதை அடையாளம் கண்டுகொள்வதில்லை என்பது முட்டாள்தனம். நடந்தவை-நடைபெறுபவை-நடக்கப் போகின்றவை எல்லாம் அவன் கையில்தான். நீதான் நடுவில் குறுக்கிடுகிறாய். கடலில் எழும் அலைகளில் எந்த அலையாவது கடலோடு எப்படி ஒன்றியிருக்கிறது என்றா நீ ஆராய்கிறாய்?

அலையைக் கடலிலிருந்து பிரித்துக் கூறுவதில்லை. அது அழுக்காய் இருந்தால் கடல் அழுக்கு; அதில் பொருட்கள் மிதந்தால் கடலில் மிதக்கின்றன; அது படகைக் கவிழ்த்தால் கடலில் கவிழ்ந்தது இப்படி அலை செய்வதையெல்லாம் கடல் செய்வதாகத்தான் கூறுவது வழக்கம்.

விசாலமான ஆன்மக் கடலில் நாம் அலைகளாக உள்ளோம். நாம் எப்படி ஒன்றிணைவது என்று கேட்காதே.

ஏனெனில் நாம்தான் பிரியவே இல்லையே. எந்த முடிவு நம் முடையது; எந்த முடிவை 'அவன்' எடுக்கிறான் என்று கேட்காதே. எல்லாமும் அவனெடுத்த முடிவேதாம். இந்தக் கண்ணோட்டம் தான் நம்மை சமர்ப்பண உணர்விற்கு இட்டுச்செல்லும்.

கடவுளின் புல்லாங்குழலாக ஏற்கெனவே உள்ள நீ, புல்லாங்குழலாக ஆவது எப்படி என்று கேட்பது, நாற்புறமும் சூழ்ந்த நீரின் நடுவில் நிற்கும் ஒருவன் தனக்குத் தாகமாயிருக்கிறது என்று சொல்வது போலாகும்.

கேள்வியே தவறாக இருந்தால், சரியான பதில் கிடைக்க வாய்ப்பில்லை. ஆனாலும் உன் கேள்வியைக் கேட்டு மதத் தலைவர்கள் சிலர் தாங்கள் வழிகாட்டுகிறோம் என்று கூறுவார்கள். அவர்களிடம் எச்சரிக்கையாக இரு. நீ கடவுளின் புல்லாங்குழல் ஆவதற்கு அவர்கள் சில உபாயங்கள் சொல்வார்கள். அவை உன்னை மீண்டும் விரதம் முதலிய சடங்குகளிலேயே கொண்டுதள்ளும்.

உன் கேள்வி தவறென ஏன் கூறுகிறேன்? காரணம். இருப்பவர் கடவுள் ஒருவர் மட்டுமே. நீ என்று தனியாக ஒருவன் இல்லை. நீ எப்பொழுதுமே இருந்தவனில்லை. நீ இருப்பதாக நீ நினைத்துக்கொள்வது மனமயக்கமாகும். பிறகு நீ எப்படித் தனியாகக் கடவுளின் புல்லாங்குழல் ஆக முடியும்?

**ஜென்** துறவி போகோஜூ இரவு தூங்கி, காலையில் விழித்ததும் தன் சீடன் ஒருவனை அழைத்து, "நேற்றிரவு ஒரு கனவு கண்டேன். அதற்கு உன்னால் விளக்கம் தரமுடியுமா?" என வினவினார். அவர் உண்மையிலேயே கனவு கண்டாரா என்பது தெரியாது.

சிஷ்யன் சொன்னான்: "பொறுங்கள், நான் தண்ணீர் கொண்டுவருகிறேன். நீங்கள் முகம்-கை-கால் கழுவிக்கொள்ள வசதியாக இருக்கும்," என்றான். அவ்வாறே வாளியில் நீரெடுத்து வந்து குருவைத் துடைத்துவிட்டான்.

குரு, "என்னப்பா, நான் கனவு விளக்கம் சொல் என்றால் நீ ஏன் கழுவிவிடுகிறாய்?" என்று கேட்டார்.

"சுவாமி! இதுதான் கனவின் விளக்கம். கனவு என்பது இல்லாத ஒன்றைத்தானே குறிப்பிடுகிறது. 'இல்லை'யை விளக்க முடியுமா?" என்றான் சீடன்.

குரு மகிழ்ந்தார். தன் மகிழ்ச்சியை வெளியிட்டு அவர், "உன் கருத்து சரி. நீ கனவிற்கு, இல்லாத ஒன்றிற்கு, விளக்கம் கூற முயன்றிருந்தால், உன்னைக் காதைப் பிடித்து வெளியேற்றி இருப்பேன்," என்றார்.

பிறகு இன்னொரு சீடன் அப்பக்கமாக வந்தான். அவனிடமும் போகோஜூ, "நேற்றிரவு ஒரு கனவு கண்டேன். அதை உன்னால் விளக்க முடியுமா?" என்று கேட்டார்.

சீடன் சூழ்நிலையைக் கவனித்தான். வாளி-செம்பு-துவாலையைக் கண்டான். குருவின் முகம் துடைத்துவிடப் பட்டிருப்பதையும் பார்த்தான். அவன், "சுவாமி! சற்றுப் பொறுங்கள். நான் ஒரு கோப்பை தேநீர் கொண்டுவருகிறேன்," என்று கூறிப் போய்விட்டான். பிறகு அவன் கொண்டுவந்த தேநீரைக் குடித்தபின் குரு, "கனவைப் பற்றி கூற ஆரம்பித்தால் நீ தேநீர் குடிக்கவைக்கிறாயே. இதற்கென்ன விளக்கம்?" என்று கேட்டார்.

அதற்குச் சீடன், "சுவாமி! கை-கால்-முகம் கழுவியாகி விட்டது. இந்தத் தேநீரை அருந்துங்கள். தூக்கத்திலிருந்து முழு விழிப்புப் பெறுங்கள். காலைப் பொழுதாகிவிட்டது. கனவு முடிந்துபோனது. இரவில் நடந்ததை காலையில் யார் பொருட்படுத்துவார்கள்? விளக்கம் கேட்பதால் என்ன பயன்? நீங்களே 'கனவு' என்றுதான் சொல்லுகிறீர்கள். நிஜத்தில் இல்லாததுதானே கனவு? சத்தியத்தை விளக்க சாத்தியமுண்டு. கனவுக்கு என்ன அர்த்தம் இருக்க முடியும்?"

நீ கடவுளிடமிருந்து பிரிந்தவன்போல் ஒரு கனவு காண்கிறாய். அவரோடு எப்படி இணைவது என்று கேட்கிறாய். நான் சொல்வது இதுதான் விழி, முகம் கழுவு, தேநீர் குடி. நீ என்றும் கடவுளைவிட்டுப் பிரிந்தவனில்லை. அப்படி ஒரு பிரமையை வளர்த்துக் கொண்டுவிட்டாய். எல்லா முடிவுகளையும் எடுப்பது அவரே. இதை உணர்வது உனக்குள் புரட்சியைத் தூண்டும். இந்த உணர்வை உனக்குள் நுழைக்க விரும்புகிறேன்.

மதத் தலைவர்கள் கூறுவதென்ன? நல்லவையெல்லாம் கடவுளுடையவை; தீயதெல்லாம் உன்னுடையவை என்கின்றனர். அப்படி என்ன கஞ்சத்தனம்? கொடுப்பதை முழுமையாகக் கொடுத்துவிட்டால் என்ன? நல்லதும் தீயதும் கலந்ததுதானே மனிதப் படைப்பு. மொத்தத்தில் அவன் தெய்வம்-மனிதன்-மிருகத்தின் கலப்புத்தானே. பிறகு ஏன் பாதி-பாதிக் கணக்கு?

நீயும் தவறு செய்கிறாய். உன் மூலம் கெடுதல் நிகழ்ந்தால் கடவுளுக்குத் தள்ளிவிடுகிறாய். நீ திருடினால் உனக்குக் கடவுள் ஏழைமையைக் கொடுத்ததால் நீ திருட நேர்ந்தது என்பாய். நீ தான தருமம் செய்தால் அதை உன் கணக்கில் சேர்த்துக் கொள்வாய். உனது நல்ல உள்ளம் காரணமாகத் தானம் கொடுத்ததாகத் தம்பட்டம் அடித்துக் கொள்வாய். உன்னை தானவீரன் என நினைப்பாய்.

உன் வாழ்க்கையில் நிகழும் எல்லா நல்லது-கெட்டதுகளுக்கும் நீதான் பொறுப்பு. அல்லது அனைத்திற்கும் கடவுள்தான் பொறுப்பு. பாதி-பாதி என்பது கிடையாது.

எல்லாம் உன் செயல் என்று கூறுபவரும் ஞானி. எல்லாம் 'அவன்' செயல் என்று கூறுபவரும் ஞானி. கொஞ்சம் உன்னுடையது, கொஞ்சம் அவனுடையது என்பவர் அஞ்ஞானி. மகாவீரர் எல்லாம் உன் செயல் என்கிறார். அஷ்டாவக்ரர் எல்லாம் அவன் செயல் என்பார். இருவர் சொல்வதும் உண்மை. ஏனெனில் அதில் முழுமை உள்ளது. வெட்டித் துண்டாக்கிக் கணக்குப் போடவில்லை. உழைப்பைப் பிரித்துக்கொள்ளவில்லை.

மகாவீரர் முழுமனிதனை எடுத்துக்கொள்கிறார். மனிதனிடம் கெட்டதும் உள்ளது, நல்லதும் உள்ளது. அவை ஒன்றையொன்று நேர்செய்து விடுகின்றன. மைனஸ்-பிளஸ் ஒன்றையொன்று இல்லாததாக ஆக்கிவிடுவதுபோல்தான் இதுவும். இதனால் நீ 'சூன்யம்' ஆகிவிடுகிறாய். அப்படி சூன்யமாவதுதான் தியானம். இதுதான் புல்லாங்குழல் ஆவது என்பதும். ஆனால் மகாவீரரின் மொழியில் புல்லாங்குழல் ஆவது என்பதற்கு இடமில்லை. அவரது மொழியில் 'பரமாத்மா' என்னும் சொல்கூட வருவதில்லை. நீ சூன்யம் ஆனாய் என்பதும், தியானி ஆனாய் என்பதும் ஒன்றே.

அஷ்டாவக்ரரின் நோக்கில் நீ நல்லது-கெட்டது இரண்டையுமே கடவுளின் செயலாக, கடவுளின் பொறுப்பில் விடுகிறாய். இந்த விதத்தில் நீ சூன்யம் ஆகிறாய். எப்படிப் பார்த்தாலும், பாகப்பிரிவினை செய்யாமல், முழுமையாகப் பார்த்தால் எல்லாமும் சூன்யம்தான்.

ஒரு விசித்திரம் என்னவென்றால், வாழ்க்கையில் நல்லதும் கெட்டதும் சம விகிதத்தில் அமைந்துவிடுகின்றன. தராசும் அவ்வாறே காட்டும். அவை ஒன்றையொன்று நேர்செய்து விடுகின்றன. வாழ்க்கையின் கடைசி நாளில் ஒப்பிட்டால் நீ அதுவரை செய்த நல்லதும் கெட்டதும் சமமாகவே இருக்கும். மரம் பூமிக்கு மேலும் வேர் கீழும் இருப்பதுபோல்தான் இது. மரம் எத்துணை உயரமாக வளர்கிறதோ அந்த அளவிற்கு வேர்கள் கீழே இறங்கும். மரம் நூறடி உயரமும் வேர் ஐந்தடி ஆழமும் என்று அமைய வாய்ப்பில்லை.

சிந்தனையாளர் நீத்ஸே கூறுகிறார்: 'சுவர்க்கத்திற்கு எழும்ப விரும்புகின்றவன் தன் பாதத்தை நரகத்தில் அழுத்த வேண்டும். சுவர்க்கத்திற்குச் செல்ல, நரகத்தில் வேரை ஊன்ற வேண்டும்.'

நீ வாழ்க்கையில் செய்யும் நல்லதன் அளவும் கெட்டதன் அளவும் சமமாகவே இருக்கும். நீ செய்த கெடுதல்கள் உனக்கு நினைவில்லை அல்லது அவற்றை மறைக்கிறாய். நீ செய்த நல்லவையே உனக்கு நினைவிலுள்ளது. அதனால் இரண்டின் அளவும் சமம் என்பது உனக்குத் தெரியவில்லை. உலகில் எல்லாமே சமமான விகிதத்தில் நடைபெறுகின்றன. ஏற்ற இறக்கமில்லாத (balancing) இந்தநிலை உலகம் சிதறி ஓடாமல், பிளவுபடாமல் காக்கிறது.

மகாவீரர் சொல்கிறார்: 'நீ நல்லது-கெட்டது இரண்டையும் ஏற்றுக்கொள். அவை உன்னுடையவைதாம். காரணம், கடவுள் என்று தனியாக இல்லை. நீ பிறர்மீது உன் நல்லது-கெட்டதைச் சுமத்திவிட உபாயம் கிடையாது. இருப்பவன் நீ மட்டுமே. நல்லது-கெட்டது சமமாகிவிடுவதால் சூன்ய நிலை உருவாகிறது. எதுவும் கையில் மிஞ்சுவதில்லை. இதுவே நிர்வாண நிலையும் ஆகும்.'

அஷ்டாவக்ரர் சொல்வது இதைவிட எளிமையான வழி. அவர் நல்லது-கெட்டது இரண்டையும் கடவுளிடம் தள்ளிவிடு என்கிறார். மகாவீரர் காட்டும் வழி சிக்கலானது. நமது சுமையை அதிகமாக்குகிறது. அஷ்டாவக்ரரின் வழி நமது சுமையைக் கடவுளிடம் தள்ளிவிட்டு பாரமின்றி இருக்கச் சொல்கிறது. அஷ்டாவக்ரரின் வழி தடைகளற்ற நேர்ப்பாதைபோல் உள்ளது. நீ சொல்ல வேண்டியது: 'இறைவா! எல்லா முடிவுகளும் நீ எடுப்பவைதாம். நானும் உன்னுடையவனே. ஆகவே என் முடிவுகளும் அடிப்படையில் உன் முடிவாகத்தான் இருக்க முடியும். நான் என் மீதே உரிமை கோர முடியாத நிலையில் என் மூலம் எடுக்கப்படும் முடிவுகள் என்னுடையவையாக எப்படி இருக்க முடியும்? நீ பிறப்புக் கொடுத்தாய்; இறப்பும் கொடுக்கவுள்ளாய். என் வாழ்க்கையே உன் கையில். பிறப்பிற்கும் இறப்பிற்கும் நடுவில் நிகழ்பவை மட்டும் என்னுடையவையாக எப்படி இருக்க முடியும்?'

நீ உன் முயற்சியால் பிறக்கவில்லை. நீ ஒரு குதி குதித்துப் பிறந்துவிடவில்லை. நீ பிறந்துவிட்டதைத் திடீரென உணர்கிறாய். சாவு வந்துவிட்டதையும் திடீரென உணர்வாய். வாழ்க்கை இந்த இரண்டின் நடுவிலுள்ளது. அதை ஒரு கயிறாக நினைத்தால் அதன் ஆரம்பமும் நுனியும் உன் கையில் இல்லை. ஆகவே நடுவிலுள்ளதும் உனதாக இருக்க முடியாது. 'எல்லாம் அவன் கையில்' என்கிறார் அஷ்டாவக்ரர். இதை அறிபவன் சூன்யமாகிவிடுகிறான். சூனிய நிலையில் சமர்ப்பணமாகிறான். பரமஞான நிலை உருவாகிறது கர்த்தா (செய்பவன் நான்) மனப்பான்மை நீங்கிவிடுகிறது.

மகாவீரரின் கருத்துப்படி நீயே எல்லாம், நீயே கடவுள் என்னும்போது அகங்காரம் நீங்குகிறது. அஷ்டாவக்ரர் கருத்துப்படி நீ சூன்யமாகி, கடவுள்தான் எல்லாம் செய்கிறார் என்பதாலும் அகங்காரம் நீங்குகிறது.* அகங்காரத்தைப் போக்கிக்கொள்ள வேறு வழியில்லை.

---

* தன் செயலெண்ணித் தவிப்பது தீர்ந்திங்கு
நின்செயல் செய்து நிறைவு பெறும்வணம் (பாரதியார்)

முடிவெடுப்பது யார் என்பதை அடையாளம் காண்பது பற்றி என்னிடம் கேட்காதே. அடையாளம் காண்பவன் என்று பிரிந்துநின்றால் உன் பின்னால் அகங்காரம் இயங்கும். அகங்காரம் 'இது உன்னுடையது-அது கடவுளுடையது' என்று வகைப் படுத்தும்.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! சூன்யத்தை ஏற்றுக் கொண்ட பிறகு சொற்கள் எதற்காக? உபதேசம் பெறுவது எதற்காக? சமர்ப்பண மாகிவிட்டால் அதற்கு எதிரானவை குறித்தும் ஏன் விளக்க வேண்டும்? வாழ்க்கைத் தேடலை அரைகுறையாகக் கைவிட்டுத் துறவறம் மேற்கொள்வது புறமுதுகு காட்டுவது போன்றதல்லவா? அது கோழைத்தனம் அன்றோ?**

**சொ**ல்லிலும் சூன்யம் உண்டு. பேசுவதில் எவ்வளவு யதார்த்தம் உண்டோ அதே அளவு யதார்த்தம் மௌனத்திலும் உண்டு. விதையில் எத்துணை சத்தியமுண்டோ அந்த அளவு சத்தியம் மலர்ந்த பூவிலும் உண்டு. பூவும் பேசுகிறது. நிறம்-மணம் மூலம் பேசுகிறது; வண்ணத்துப்பூச்சிகளையும், தேனீக்களையும், மனிதர்களையும் நிறம்-மணத்தின் மூலம் பேசி அருகில் அழைக்கிறது. விதை மௌனம், பூ பேச்சு. விதை இருந்தால் போதும், பூ வேண்டாம் என்பதா? எனவே சூனியம் இருந்தால் சொல்லும் இருக்கலாம். பூவில் விதையின் அம்சம்போல், சொல்லோசையில் சூனியம் மறைந்துள்ளது; சூனியத்திலிருந்து சொல் பிறக்கிறது.

சூன்யமும் நமது; சொல்லும் நமது. மௌனமும் நமது; சொல்லோசையும் நமது. வாழ்க்கை என்பது முரண்பாடுகளின் கலவை. ஆனால் மனிதன் எதையாவது தேர்ந்தெடுத்தபடி உள்ளான். சொல்லையோ, சூன்யத்தையோ ஏதாவது ஒன்றை எடுத்துக்கொள்கிறான். சூன்யத்தை எடுத்துக்கொண்டால் சொற்களிடம் பயப்படுகிறான். சிலர் இடைவெளி விடாமல் பேசிக்கொண்டே இருப்பார்கள். சிலர் மௌன விரதம்

மேற்கொண்டதுபோல் வாய் திறக்கமாட்டார்கள். இந்த இரு அணுகுமுறைகளும் தவறு. இரண்டும் வெவ்வேறு வகைப் பிடிவாதம் ஆகும்.

நான் எதையும் வற்புறுத்துவதில்லை. எப்பொழுது கடவுளுக்கு எது விருப்பமோ அப்படியே விட்டுவிடுகிறேன். அவர் தூண்டினால் பேசுகிறேன். அவர் தடுத்தால் மௌனம் சாதிக்கிறேன்.

உபதேசம் பெறுவது எதற்காக என்று கேட்டாய். உபதேசம் என்பது தரப்பட்டுப் பெறப்படுவதில்லை. உபதேசம் என்பது நிகழ்கிறது. சமண மத நூல்களில் 'மகாவீரர் மொழிந்தார்' என்னும் வாக்கியம் காணக் கிடைக்காது. அவரிடமிருந்து சுயமாகவே அறவுரைகள் பெருகி ஓடியதாகவே சொல்லப்பட்டிருக்கும். அவரது அந்த இயக்கம் சூரியனிலிருந்து ஒளி பாய்வதைப்போல், பூவிலிருந்து நறுமணம் பரவுவதுபோல் இருக்கும்.

பூ தனது நறுமணம் பரவுவதை எப்படித் தடுத்து நிறுத்த முடியும்? சூரியன் தன் ஒளி பரவுவதை எப்படித் தடுக்க முடியும்? உள்ளே ஆன்ம தீபம் எரிந்தால், வெளியிலும் அதன் ஒளி தெரியும். ஆன்ம வெள்ளம் சில சமயம் மௌனத்தின் வழியே கசியும்; சில சமயம் சொற்களின் வழியாகக் கசியும்.

சொற்பொழிவும் உபதேசமும் வெவ்வேறானவை. நீ சொற்பொழிவு செய்கையில் நீ முயற்சி எடுத்துப் பேசுகிறாய். நீ பிடிவாதமாக உன் கருத்துகளை இன்னொருவன் மீது சுமத்த முயலுகிறாய். சொற்பொழிவில் முயற்சி, உழைப்பு, களைப்பு உண்டு. அதைக் கேட்பவன் உன் கருத்துடன் ஒத்துப்போகாவிடில் வருத்தமும் ஏமாற்றமும் உண்டாகிறது. ஒத்துப்போனால் நீ சந்தோஷப்படுகிறாய். சொற்பொழிவில் வெற்றி-தோல்வி உண்டு; இன்பம்-துன்பம் உண்டு.

உபதேசத்தில் வெற்றியோ, தோல்வியோ கிடையாது. உள்ளே திரண்டெழும் கருத்துகளே வெளிப்படுத்தப்படுகின்றன. உள்ளே சுரந்த ஊற்றே வெளியே அருவியாகக் கொட்டுகிறது. அதை ஒருவன் பருகினானெனில் சரிதான்; ஒருவன் பருகா விட்டால் அது அவன் இஷ்டம், அவனது தலைவிதி.

உபதேசம் இயற்கையான வெளிப்பாடாகும். சிலர் உபதேசம் என்ற பெயரில் ஆதேசம் (கட்டளை) பிறப்பிப்பார்கள். ஆதேசம் என்றால் 'நான் என்ன சொல்கிறேனோ அதன்படியே செய்' என்று மிரட்டுவதுபோலாகும்.

உபதேசம் என்றால், 'எனக்கு என்ன நேர்ந்ததோ அதைப் பிரித்து வழங்குகிறேன்; உங்களுடன் பகிர்ந்துகொள்கிறேன். சரியெனப்பட்டால் ஏற்றுச்செய். பொருந்தாவிடில் தூக்கி எறி. நான் சொல்வது உனக்குப் பயன்படுமானால் சரி; இல்லாவிடில் நான் சொன்னதை மறந்துவிடு. சொல்கின்றபடி செய்யத்தான் வேண்டும் என்ற கட்டளைக் குரல் உபதேச மொழியில் கேட்பதில்லை.

'பறவைகள் பாடுகின்றன. கேட்பதாயின் கேள். பூக்கள் மலர்ந்துள்ளன. பார்ப்பதாயின் பார். இரவில் சந்திரன் உதிக்கிறது. பார்க்கலாமா என்று கேட்க என் பக்கம் திரும்பாதே. விரும்பினால் யார் கட்டளைக்கும் காத்திராமல் நிலவைப் பார். பார்ப்பவன் அதிர்ஷ்டசாலி. பார்க்காவிடில் அவன் தலைவிதி. உலகிலுள்ள யாரும் பார்க்காவிடிலும் நிலவு அமுத ஒளி பொழிவதை நிறுத்தப் போவதில்லை. உபதேசமும் அப்படித்தான். யாரையும் எதிர்பாராமல் நிரந்தரமாகப் பொங்கி வழிகிறது.'

'உபதேசம்' என்னும் சொல்லிற்கு நேரடி அர்த்தம் (literal meaning) என்ன என்று ஆராய்ந்துபார். ஏனெனில் சமஸ்கிருதச் சொற்கள் சாதாரணமானவை அல்ல. சமஸ்கிருதம் ஞானிகளின் சிந்தனை அருவியால் நிரம்பி வளம்பெற்ற மொழி. ஒவ்வொரு சொல்லும் பரவலானதும் ஆழமானதுமான அர்த்தம் கொண்டது.

'உபதேசம்' என்பதில் விகுதியான தேசம் நிலப்பரப்பை (space) சுட்டுகிறது. விரிவு, பரிமாணம் என்னும் பொருள் தருகிறது. 'உபதேசம்' என்றால் அந்த விஸ்தாரமான பரப்பின் பரவெளியின் அருகில் நாம் இருத்தல் என்று பொருள்படும்.

இதேபோல் உபநிஷதம் என்றால், யாருக்கு (ஆன்ம அனுபவம்) நிகழ்ந்ததோ அவர் அருகில் நாம் அமர்தல் என்பதாகும்.

உபவாசம் என்றால், நமக்குள்ளே இருப்பவன் அருகில் (மானசீகமாக) நாம் வசித்தல் என்பதாகும். உனக்குள்ளே இருக்கிறதே ஆத்மா, அதனை நெருங்கியிருத்தல் உபவாசமாகும்.

உண்ணாவிரதத்தை உபவாசம் என்று நினைக்காதே. பட்டினி கிடந்து சாவது உபவாசமன்று. சிலர் விஷயத்தில், ஆத்ம உணர்வு நிரம்பிப் பொங்குவதால் அவர்களுக்குச் சாப்பாட்டு நினைவு எழுவதில்லை. சாப்பிடாமல் இருந்தால் அதையும் உபவாசமாகக் கொள்ளலாம். ஏனெனில் ஆத்மாவின் அருகில் இருக்கும் உணர்வுதான் அப்போது மேலோங்கி நிற்கிறது.

உண்ணாவிரதம் உபவாசமன்று. உண்ணாவிரத சமயம் பலவந்தமாக நம்மைக் கட்டுப்படுத்திச் சாப்பிடாமல் இருக்கிறோம். ஆனால் தினமும் சாப்பாட்டு நேரத்தின்போது உணவு ஞாபகம் வரும். உண்ணாவிரதம் இருக்கும் சமயத்திலோ எப்பொழுதும் சாப்பாட்டு நினைவே மனத்தை ஆக்கிரமிக்கும். இரண்டு வேளையும் சாப்பிட்டால்கூட தப்பில்லை. மீதி நேரம் நீ ஆத்மாவின் நினைவில் வசித்தால் அது போதும். அதுவே உபவாசம்.

உபவாசம்=உடல் நினைவு நீங்கி ஆத்மாவின் அருகில் வசித்தல்

உபநிஷதம்=தன்னை மறந்து குருவின் அருகிலிருப்பதை உணர்தல்

உபதேசம்=யாரின் உள்ளத்துள் பரவெளி (ஆன்ம தேசம்) நிறுவப்பட்டதோ அவரது அருகில் இருத்தல். மகாவீரர், புத்தர், கிருஷ்ணர், அஷ்டாவக்ரர், இயேசுநாதர் ஆகியோர் உள்ளத்தில் பரவெளியை உணர்ந்தவர்கள். அவர்களின் மகா ஆகாயத்திலிருந்து விழும் அறவுரைகளில் சிலவற்றையாவது பருகுதல் உபதேசம் பெறுதலாகும்.

உபதேசம் எல்லோருக்குமாக ஆனதன்று. தீட்சை பெற்றவர்களுக்குத்தான் உபதேசம் பொருந்தும். இந்த ஆசிரமத்துக்கு வருபவர்களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்தி ஏன் தடைபோடுகிறேன் என்று பலர் கேட்கிறார்கள். நான் இங்கே மக்கள் கூட்டம் கூடுவதை விரும்பவில்லை. என்னுள் ஸ்தாபிதம் ஆகியுள்ள ஆன்மப் பரவெளியின் அருகாமையில் வசிக்க விரும்புபவர்களை மட்டுமே நான் வரவேற்கிறேன். அந்தப் பரவெளியுடன் ஓர் அங்கமாக இணைய விரும்புகிறவர்களையே

வரவேற்கிறேன். இந்த இடத்தைக் கடைத்தெருவாக ஆக்குவதில் எனக்கு இஷ்டமில்லை. வேடிக்கை பார்க்க வருபவர்களை நான் இங்கு திரட்ட விரும்பவில்லை. சினிமா பார்க்கச் செல்பவர்களைப் போல், இந்த ஆசிரமத்தில் என்னதான் நடக்கிறது பார்க்கலாமே என்று வருபவர்களுக்கு இங்கே அனுமதியில்லை. இப்படிப் பொழுதுபோக்காக விரும்புபவர்களுக்குத்தான் நிறையத் தடைகள் விதித்துள்ளேன். ஆன்மத் தாகம் உள்ளவர்களைத் தடுப்பதில்லை.

உபதேசம் என்பதற்கு என்னுள் நிலைநாட்டப்பட்டுள்ள மகாதேசத்தில் நீயும் பங்குதாரர் ஆகிவிடு என்று அர்த்தம். ஆகவேதான் நான் இங்கு உரையாற்றுகிறேன். ஞானி பேசாவிடில் உபநிடதம், கீதை, அஷ்டாவக்ர மகாகீதை, பைபிள், தம்மபதம் முதலியவை தோன்றியிருக்க முடியாது. ஞானி பேசியிராவிடில் உன் நிலை என்னவாக ஆகியிருக்கும்? நீ காட்டுவாசியாகவே நீடித்திருப்பாய். நீ முழுமனிதனாக ஆகியிருக்கமாட்டாய். ஞானிகளின் பேச்சை நீ மேலோட்டமாகக் கேட்டுவந்தேகூட நாகரிகத்தில் நீ இவ்வளவு முன்னேறிவந்துள்ளாய். நீ அறியாமலே முன்னேறியுள்ளாய். உன் முன்னேற்றத்தை நீ சரியாக உணரக்கூட இல்லை. காடுகளைக் கடந்து வெகுதொலைவு வந்துவிட்டாய். விலங்கு வாழ்க்கையைக் கடந்து வெகுதொலைவு வந்துவிட்டாய். இத்தனைக்கும் ஞானிகளின் உபதேசங்களை நீ சரியாகக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. அவற்றைக் கவனமாகக் கேட்டு உள்வாங்கியிருந்தால், நீ தெய்வமானிடனாக ஆகியிருப்பாய்; கடவுளை நெருங்கியிருப்பாய்.

உபதேசம் செய்வது மட்டும்தான் என் கையில் உள்ளது. அதை கிரகித்துக்கொள்வது உன் கையில்தான் இருக்கிறது. 'உபதேசம் எதற்காக?' என்று கேட்கும் உன் ஆழ்மனத்தில் 'நான் ஏன் உபதேசத்தை ஏற்க வேண்டும்?' என்ற கேள்விதான் உள்ளது. ஆகவே அப்படிக் கேட்கும் நீ இங்கு வராமலே இருந்துவிடலாம். நான் உன்னைக் கூப்பிடவில்லையே. நீயாகத்தானே இங்கு வந்தாய்? இன்னொருவரின் அடிபணிந்து உபதேசம் கேட்பது உன் அகங்காரத்துக்கு ஏற்புடையதாக இல்லை என்பதுதான் விஷயம். அதை மறைக்க, 'உபதேசம் பெறுவது எதற்காக?' என்று மடக்குகிறாய்.

என் கடமை முடிந்தது. கடவுள் என்னிடம் 'நான் உனக்கு அருளியதை நீ வெளிப்படுத்தாமல் மறைத்துவிட்டாய்,'' என்று குறை கூற முடியாது. நீதான் எடுத்துக்கொள்ளவில்லை. அது உனக்கும் கடவுளுக்கும் இடையேயான பிரச்சினை. அதற்கும் எனக்கும் சம்பந்தமில்லை. நீ உபதேசம் பெற்றாக வேண்டும் என்று நான் கட்டளையிடவில்லை. அதுபோல் நீயும் நான் ஏன் உபதேசம் செய்கிறேன் என்று கேட்காதே.

சமர்ப்பணமாகிவிட்டால் அதற்கு எதிரானவற்றை ஏன் விளக்க வேண்டும் என்று கேட்டாய். ஆனால் அப்பொழுதுதான் சமர்ப்பணம் என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம். ஒளி என்றால் என்ன என்று ஒருவர் கேட்டால், நீ இருட்டின்மையே ஒளி என்றுதானே சொல்லுவாய். வாழ்க்கை என்றால் என்ன என்று கேட்டால், நீ சாகாமல் இருப்பதே வாழ்க்கை என்பாய். தியானம் என்றால் என்ன என்று கேட்டால் நீ, சாஸ்திரங்கள் கூறுவதுபோல் எண்ணச் சலனமின்மையே தியானம் என்பாய். சத்தியத்தை அறிய அசத்தியத்தையும் அடையாளம் கண்டுகொள்ள வேண்டும். எந்தப் பாதைகளில் போகக்கூடாது என்று தெரிந்தால் அதிகம் அலையாமல், சரியான பாதையில் செல்ல முடியும். அதுபோல், சமர்ப்பணத்திற்கு எதிரானது எது என்று அறிந்தால், அடுத்து அதைத் தவிர்த்தால் சமர்ப்பணம் நிகழ்ந்துவிடும்.

எடிஸன்* ஒரு பரிசோதனையில் ஈடுபட்டிருந்தார். அதில் அவர் 700 முறை தோல்வி கண்டார். இதிலேயே மூன்று ஆண்டுகள் ஓடிவிட்டன. பரிசோதனைக்கூடத்தின் ஊழியர்கள் தத்தளித்தனர். அவருக்குப் பைத்தியம் பிடித்துள்ளதா என்று குழம்பினர். தினமும் தோல்வி கண்டாலும் மறுநாள் புத்துணர்ச்சியுடன் எடிசன் பரிசோதனையைத் தொடர ஆஜராகிவிடுவார்.

ஒருநாள் ஊழியர்கள் அவரை முற்றுகையிட்டனர். "ஐயா, எதற்கும் எல்லை உண்டு. எழுநூறு முறை தோற்றோம்.

* **Thomas Alva Edison (1847-1931)** மின் விளக்கு, கிராமபோன், சினிமா முதலிய 2000க்கு மேற்பட்ட கண்டுபிடிப்புகள் செய்தவர். எடிசனின் இறுதி ஊர்வலம் துவங்கியபோது மாலை 6.59க்கு ஒரு நிமிடம் அமெரிக்கா முழுதும் மின்சாரம் நிறுத்தப்பட்டது. யாருக்கு வரும் இப்படிச் சாவு?

மேற்கொண்டு இந்த ஆராய்ச்சி எவ்வளவு காலம் நீடிக்கும்? நமக்கு வேறு வேலை இல்லையா? வாழ்க்கை முழுதும் இந்த பரிசோதனையேதானா?" என்று குமுறினர்.

எடிசன் விளக்கினார்: "நாம் 700 முறை தோற்றதால்தான் அவை அனைத்தும் தவறான வழிமுறைகள் என்பதை நாம் அறிந்துகொள்ள முடிந்தது. ஆகவே சரியான வழிமுறையை நாம் நெருங்கிவருகிறோம் என நாம் நம்பலாம். எத்தனை தவறான வழிமுறைகள் இருக்க முடியும்? ஆயிரம் என வைத்துக்கொண்டால் 700ஐக் கடந்துவிட்டோம். இன்னும் 299 முறை சோதனை செய்ய வேண்டும். பிறகு சரியான வழி கிடைத்துவிடும். அந்த 299க்குள்ளேயே நடுவில் சரியான வழிமுறை அகப்படலாம். நாம் தினம்-தினம் அந்தச் சரியான விடையைத்தான் நெருங்கிவருகிறோம். தப்பு எது என்று தெரியாமல் சரி எது என்பதைக் கண்டுபிடிக்க முடியாது."*

தனது வீட்டிற்கு வந்துசேர்வதற்கு முன்பாகப் பல வீடுகளைக் கடக்க வேண்டியுள்ளது. சத்குரு கிடைப்பதற்கு முன்னால் போலிச் சாமியார்கள் பலரிடம் அலைய நேரிடுகிறது. இது இயற்கைதான். இதில் தவறேதும் இல்லை. இருட்டில் தட்டுத் தடுமாறிய பிறகுதான் வெளிச்சத்தை வந்தடைகிறோம்.

ஆகவே நான் எதிரான அம்சங்களை விளக்கிக் கூறுகிறேன். எது தவறென்பதைச் சுட்டிக்காட்டுகிறேன். இதன் மூலம் எது சரி என்பதை நான் தெரியப்படுத்த விரும்புகிறேன். எது சரியென்பதை நேரடியாகக் கூற உபாயமில்லை. 'இது-இது இல்லை' என்று ஒவ்வொரு அசத்தியத்தையும் கடந்தபின், எது மிஞ்சுகிறதோ அதுவே உண்மை என்று குரு சுட்டிக் காட்டுவார். இதுதான் உண்மை, இதுதான் சரி என்று விரலால் தொட்டுச் சட்டென்று விடைகூற முடியாது. இந்த அணுகுமுறையை உபநிடதங்கள் 'நேதி-நேதி' (not this, not this) முறை என்கின்றன.

---

* மேதைமை என்பது ஒரு சதவிகிதம் அகத்தூண்டுதல்; தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் வியர்வை சிந்தல் என்று எடிசன் கூறியது அவருக்கே நன்கு பொருந்தி வருகிறது. Genius is one per cent inspiration and ninety-nine per cent perspiration.

சாரமற்றது எது என்று தெரிந்தால் சாரமுள்ளது தெரிந்துவிடும். உலகைப் புரிந்துகொண்டால் மோட்சத்தின் கதவு திறக்கும். பண மோகம், ஆண்/பெண் மையல், பதவி, சமூக அந்தஸ்து எல்லாம் அனுபவித்தபின் கையில் மிஞ்சுவது சாம்பல். சுகம் தருவது இது இல்லை-இது இல்லை என்று வாழ்க்கையை முழுதாகப் புரிந்துகொண்டால், உலகத்திலிருந்து பெற்றதெல்லாம் வீண் எனத் தெரிந்தால், அப்போது மிஞ்சுவதுதான் நிர்வாண நிலை.

'வாழ்க்கைத் தேடலைப் பாதியில் கைவிட்டு துறவியாவது புறமுதுகு காட்டுவதற்கு சமம் அல்லவா? கோழைத்தனம் அல்லவா?' என்றும் கேட்டாய்.

வாழ்க்கை நடத்தி வருகையில் பாதியில் குடும்பத்தைத் துறந்து துறவறம் மேற்கொள்ளக்கூடாது என்று நான் தினமுமே கூறுகிறேன். அப்படிச் செய்வது கோழைத்தனம்தான். என் சீடர்களிடம் நான் வாழ்க்கையை நடுவில் உடைக்காதீர்கள் என்றுதான் சொல்லி வருகிறேன். 'வாழ்க்கையைத் தொடருங்கள். அதனுடன் சந்நியாசத்தையும் கொஞ்சம் கொஞ்சமாக உள்வாங்குங்கள்' என்று ஆலோசனை தருகிறேன். உன் வாழ்க்கைக் கடமைகளைத் தொடர்ந்து செய். சந்நியாசப் பயிற்சியையும் மேற்கொள். ஏனெனில் திடீரென உலகம் வெறுத்துப்போனால், மாற்றாகத் துறவுக்கும் தயாரிப்பு இல்லையெனில், தற்கொலை செய்துகொள்வாய்.

மேற்கத்திய நாடுகளில் அதிக எண்ணிக்கையில் தற்கொலை நிகழ்கிறது. கிழக்கத்திய நாடுகளில் தற்கொலை குறைவு. காரணம், சந்நியாச வாய்ப்பு. மேற்கே ஒருவன் வாழ்க்கையில் முழுத் தோல்வியடைந்து, வாழ்க்கை சாரமற்றது என்று அறிந்தால், தன்னை அழித்துக்கொள்வதைத் தவிர, வேறு வழி அறிந்திருக்கவில்லை. வாழ்க்கையில் வேறு என்ன இருக்கிறது செய்வதற்கு என்று அவன் நினைப்பான்.

இதே சூழ்நிலையில் கிழக்கு நாட்டு மனிதன் தற்கொலை செய்துகொள்வதில்லை. உலக வாழ்க்கை வாழ்வது வீண் என்று அவன் நினைத்தால் சந்நியாசம் மேற்கொள்ளுகிறான். உலக

வாழ்வுக்கு மாற்றாகத் துறவறம் அமைகிறது. மேற்கு நாடுகளில் இந்த மாற்று இல்லை. துறவறத்தின் செய்தி பரவினால்தான் அங்கு தற்கொலைகள் நிகழ்வது குறையும்.

மேற்கு நாடுகளில் அறிஞர்களும்கூட தற்கொலை செய்து கொண்டுள்ளனர். கிழக்கே எந்தப் பேரறிஞரும் தற்கொலைக்கு முயன்றதில்லை. புத்தர், மகாவீரர், கிருஷ்ணர், நாகார்ஜுனர், சங்கரர், ராமானுஜர், நிம்பார்க்கர், வல்லபாச்சாரியார், கபீர்தாசர், குரு நானக் என்றெல்லாம் இந்தியாவில் பிறந்த ஞானிகளில் எவரும் தற்கொலை செய்துகொண்டதில்லை. ஒருவரும் பைத்தியமான தில்லை. மேற்கே அறிஞர்கள் பலர் சிந்தனையின் எல்லைவரை அடைந்தபின், தியானம், துறவறம் பற்றி அறிந்திராததால், மன அமைதியிழந்து மூளைக் கோளாறுக்கு ஆளாகியுள்ளனர்.

சமூகத்தில் வாழ்ந்துகொண்டே பற்றற்ற தன்மையை வளர்த்துக்கொள். பக்குவமடைவதற்கு முன்னரே வீட்டைத் துறந்து வெளியேறாதே. சரி, நீ பக்குவம் பெற்றுவிட்டாய் என்பதை எப்படி அறிவது? என்றோ ஒருநாள் அது திடீரென நிகழும். எதிர்காலத்தில் தீப்பிடிக்கலாம் என்பதால் நிகழ்காலத்திலேயே கிணறு வெட்டுவதை ஆரம்பித்துவிட வேண்டும்.

உலகக் கடமைகள் நடைபெறட்டும். இன்னொரு புறம் மனம் துறவறத்துக்கும் பழகட்டும். இவற்றினிடையே விரோதம் இல்லை. சந்நியாசமும் கடவுளுடையது; சம்சாரமும் கடவுளுடையது; எல்லாம் கடவுளுடையது. சந்நியாசம் உலக வாழ்க்கைக்கு எதிரானது அன்று.

'வாழ்க்கையைப் பாதியில்விட்டு துறவறத்தில் புகுவது கோழைத்தனம்தானே?' என்று கேட்டாய். அதைத்தான் நானும் சொல்லிவருகிறேன். ஆகவே என்னிடம் இந்தக் கேள்வி கேட்பது பொருந்தாது. சங்கராச்சாரியர்களிடம் கேட்கலாம்; சமண முனிவர்களிடம் கேட்கலாம். நான் நிகழ்த்திய புரட்சி இதுதான். சந்நியாசம் சம்சாரத்துடன் சேர்ந்து நடைபெற முடியும் என்பதுதான் நான் போதிக்கும் கொள்கை. கோயிலையும் உன் கடையையும் அருகருகே கொண்டு வருவதற்கான முயற்சி செய்கிறேன். பக்தியும் வாழ்க்கை உபாயமும் பிரிந்திருக்க வேண்டியதில்லை.

சந்நியாசத்திலும் ஒரு தற்கொலை நிகழ்கிறது. அதுதான் உன் அகங்காரத்தின் அழிவு. அதை நல்லதான தற்கொலை எனலாம். சாதாரணமான தற்கொலையில் உடலுடன் மனம் அழிவதால் அகங்காரம் நீங்கிவிட்டதாக நினைக்கலாம். ஆனால் மறுபிறவி எடுத்ததும் அகங்காரமும் மறுபடி சேர்ந்துவருகிறது. துறவறத்தில் அகங்காரம் அழிந்தபின் (தன்னுணர்வின் தற்கொலை நிகழ்ந்தபின்) துறவி கடவுளுடன் கலந்துவிடுவதால் மறுபிறப்பு இல்லை.

சந்நியாசம் ஏற்பது கோழைத்தனம் அல்லவா என்று கேட்பவரின் ஆழ்மனத்தில் சந்நியாசம் குறித்துத் தயக்கம் இருப்பது தெரிகிறது. நீ காவி உடை அணிந்து மலை குகைக்கு ஓடிப்போனால்தான் கோழைத்தனம். எனது சந்நியாச முறைப்படி, துறவி ஆன பிறகும் சமூகத்தில் நீடிப்பதற்கு வீரம் வேண்டும்.

ஒருவர் என்னிடம் வந்து, "நான் துறவியாக விரும்புகிறேன். ஆனால் என்னிடம் சில கெட்ட பழக்கங்கள் உள்ளன," என்று வருத்தப்பட்டார். மற்ற ஆசிரமங்களில் எல்லா கெட்ட பழக்கங்களையும் கைவிட்ட பிறகு வந்தால்தான் தீட்சை தருவார்கள். ஆனால் இதனால் அடிமனத்திலுள்ள ஆசை நீங்கிவிடாது. எனது முறையில் சந்நியாசத்தில் தீவிர ஆர்வம் இருந்தால் போதும். தீட்சை பெற்று, காவி உடை தரித்து, மாலை அணிந்தபின் மிக விரைவிலேயே கெட்ட பழக்கங்கள் தாமாக நீங்கிவிடும். மற்றவர் முன்னிலையில் இந்த புதிய தோற்றமும், தனிமையில் உன் மனசாட்சியும் உன்னைக் கெட்ட பழக்கங்களைத் தொடராதபடி செய்துவிடும்.

ஓர் இளைஞன் என்னிடம் வந்து துறவறம் ஏற்றான். அவன் 15 நாள் கழித்து மனைவியுடன் வந்து அவளையும் துறவியாக்குமாறு கேட்டுக்கொண்டான். காரணம் கேட்டபோது, அவன், "நாங்கள் ரயிலில் சென்றபோது சிலர் என்னைப் பிடித்துக்கொண்டு, 'யாருடைய மனைவியை அபகரித்துக் கொண்டு போகிறாய்?' என்று மிரட்டினர். 'என் மனைவி' என்று சொன்னதற்கு, 'சாமியாருக்கு ஏது மனைவி?' என்று அதட்டினர்," என்றான்.

நான் அவளுக்கும் தீட்சையளித்தேன். ஒரு வாரம் கழித்து அவர்கள் சிறிய வயதினனான மகனை அழைத்துவந்தனர். அவனுக்கும் சந்நியாசம் தர வேண்டினர். என்ன ஆனது என்று கேட்டேன். "ரயிலில் சிலர் எங்கள் இருவரையும் பிடித்துக் கொண்டு, 'இந்தச் சிறுவன் யார்? எங்கேயிருந்து இவனைக் கடத்தி வருகிறீர்கள்?' என்று மிரட்டினர். 'எங்கள் மகன்' என்று சொன்னதற்கு, 'சாமியாருக்கு ஏது பிள்ளை-குட்டி?' என்று அதட்டினர்" என்றான்.

மற்ற ஆசிரமங்களில் சந்நியாசம் குறித்துப் பழைய, பரம்பரையான கண்ணோட்டம் நிலவுகிறது. எனது முறையில், நீ கணவனாக, மனைவியாக, தாயாக, தந்தையாக நீடிக்கலாம். கடமைகளைத் தொடர்ந்து செய்யலாம். ஆனால் கடமைகளில் அகங்காரமின்றியும், உறவுகளில் பற்றின்றியும் இருக்க வேண்டும். ஆகவே எனது முறை சந்நியாசத்தில் கோழைத்தனத்திற்கு இடமில்லை; வழக்கத்தைவிட அதிகமான மனத்திடம் வேண்டும்.

சந்நியாசியாவது கோழைத்தனம் என்று பொதுவாக நான் சொல்வேன் என்று எதிர்பார்க்கிறாய். அதை உனக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, சந்நியாசம் ஏற்பதைத் தவிர்க்கப் பார்க்கிறாய். நான் சொல்வது வேறு. சந்நியாசத்தை நான் கோழைத்தனம் என்று கூறமாட்டேன். சந்நியாசம் ஏற்றபின் சமூகத்திலிருந்து ஓடிப்போவதைத்தான் கோழைத்தனம் என்கிறேன். நீ சம்சாரியாக இருந்து பார்த்துவிட்டாய். அடுத்து, அதனுடன் சந்நியாசியாகவும் ஆகி சமூகத்திலேயே இருந்துபார். அப்பொழுதுதான் எத்தனைப் போராட்டங்கள், எத்தனை சவால்கள் எதிர்ப்படுகின்றன என்று தெரியும். அவற்றை ஆன்மிக வீரனால்தான் சமாளிக்க முடியும்.

மனம் பக்குவப்பட்ட பிறகு துறவியாகலாம் என நினைக்கிறாய். ஆனால் மனம் பக்குவப்படுவதற்குள் சாவு வந்துவிடும். ஏனெனில் இறக்கும் வரையிலும்கூட தான் சந்நியாசத்துக்குப் பக்குவப்பட்டுவிட்டடதாக மனிதன் நினைப்பதில்லை. சாகும்வரையிலும் ஆசைகள் நம்மைத் துரத்துகின்றன; கனவுகள் நம்மை ஆக்கிரமிக்கின்றன. நமது கற்பனை புதிய திட்டங்களை தயாரிக்கிறது. இன்னும் எதையோ

செய்துகாட்ட வேண்டும், எதுவாகவோ ஆக வேண்டும் என்கிற துடிப்பு தணிவதில்லை.

**சிதறின என் எல்லா முத்துகளும்**

**காலையும் மாலையும் என் ஆசைகள்**
**மூச்சு என்னும் பட்டுக் கயிற்றில்**
**தினமும் கோத்த முத்து மாலையைக்**
**கோத்து முடியும் முன்னரே**
**காலம் தனது குரூரக் கையால்**
**பிய்த்து எங்கும் எறிந்தது**

**வெறியுடன் வந்த வேகக் காற்று**
**மெல்லிய கிளையை உடைத்தெறிந்தது**
**அதுதான் அப்பாவிப் பறவைகளின்**
**இரவு இல்லமாய் விளங்கியது**

**இரவு மேலும் இருள்மயமானது**
**விளக்கு நடுங்கி அணைவதாய் இருந்தது**
**கண்களின் முன்னால்-நாற்புறமும்**
**திரண்டு வந்தது கும்மிருட்டு**

ஆனால் மரணவேளையில் எதற்கும் நேரம் இருக்காது. முத்துமாலை பிரிந்து சிதறும். கனவுகளின் மாலை உடைந்து சிதறும். நாற்புறமும் இருள் சூழ்ந்து கொள்ளும்.

**ஒ**ரு பெண்மணி 70 வயதானவள் சந்நியாசம் ஏற்க விரும்பினாள். பல முறை வந்தாள், பேசினாள், அடுத்த முறை வருகையில் சந்நியாசம் ஏற்பதாகச் சொல்லிக் காலம் தாழ்த்தினாள். ஒருநாள் அவள் விபத்தில் சிக்கிக்கொண்டாள். பிழைக்கமாட்டாள் என்று டாக்டர்கள் கூறினர். அவள் மயக்கம் சற்றுத் தெளிந்ததும் ஒரு சிறுவனை என்னிடம் விரட்டினாள். இறப்பதற்கு முன்னராவது சந்நியாசம் ஏற்க விரும்புவதாக சுவாமிஜியிடம் சொல் என்று செய்தி அனுப்பினாள்.

அவன் கிளம்பியபோது அவளது மூச்சு நின்றுவிட்டது. நான் சிறுவனிடம், "உயிருடன் இருக்கையில் அவள் துறவியாக முடியவில்லை. பரவாயில்லை. நான் தரும் மாலையை அவளுக்கு அணிவித்துவிடு. புதுப்பெயர் எழுதிய இந்தத் தாளை அவளது

நெஞ்சின் மேல் வை. காஷாயத் துணியால் உடலை மூடி எரிக்கச் சொன்னதாகக் கூறு.'' என்று அவனை அனுப்பிவைத்தேன்.

இதையேதான் உங்களுக்கும் உதாரணமாகச் சொல்கிறேன். சந்நியாசத்தில் விருப்பம் இருந்தால் உயிருடன் உள்ளபோதே துறவியாகி விடவும். இறந்தபின் காவி வஸ்திரம் போர்த்தினாலும் வித்தியாசம் ஒன்றுமில்லை நீ முழுமையான விழிப்புடன், சுயநினைப்புடன் துறவறத்தில் இறங்கினால்தான் அது மதிப்புடையதாகும்.

சந்நியாசம் ஏற்க முடியாவிட்டால் உன்னை நீ கோழை என்று ஒப்புக்கொள். இதனால் எதிர்காலத்திலாவது நீ சந்நியாசியாக வாய்ப்புண்டு. ஏனெனில் யாருமே கோழையாக நீடிக்க விரும்புவதில்லை. ஆனால், 'கோழைதான் துறவியாவான். நான் வீரன். ஆகவே நான் சந்நியாசம் ஏற்கவில்லை' என்று நீ கூறினால் நீ என்றும் சம்சாரியாகவே இருப்பாய்.

## மூன்றாவது கேள்வி

**'அன்பார்ந்த ஓஷோ அவர்களே! நீங்கள் வாழ்க்கையில் எப்பொழுதாவது தப்பு—தவறு செய்ததுண்டா?**

**எ**ன் வாழ்க்கையில் 'நான்' என்னும் உணர்வு மேலோங்கியிருந்தபோது நான் செய்ததெல்லாமே தப்புதான். 'நான்' என்பது நீங்கியபின் தப்பு நிகழ வழியில்லாமல் போனது. 'நான்' உணர்வு இருப்பதுதான் ஒரே தவறாகும். 'நான்' உணர்வு அகன்றபின் தவறு செய்கின்றவனும் மிஞ்சியிருப்பதில்லை. தவறு செய்பவன் இல்லாத நிலையில் தவறு எப்படி நிகழ முடியும்? பிறகு எல்லாம் சரியாக நடந்தது. ஏனெனில் மிஞ்சியிருப்பவன் கடவுள் மட்டுமே.

'நீ' என்பவன் இருக்கும்வரை தவறுகள் நிகழும். 'நீ' நீங்கினால் தவறுக்கும் வாய்ப்பில்லை. 'நீ' இருக்கும்வரை எது சரியானதென்று தோன்றுகிறதோ அது கடைசியில் தவறெனத் தெரியவரும். 'நீ' என்பவன் இல்லாதபோது, நீ தவறென்று நினைத்தது கடைசியில் சரியானதெனத் தெரியவரும். கடவுள் நம்

மூலம் செய்விப்பது சரியானதாக இருக்கும். 'நான் செய்தேன்' என்று திமிருடன் நினைப்பவன் செய்தது தவறாக முடியும். இந்தத் திமிர் மட்டுமே நாம் செய்யும் தவறு. வேறேதும் தவறு கிடையாது.

**உடல் தளர்ந்து போனது**
**மனத்தின் கனவுகள் தகர்ந்தன**
**ஊர் முழுதும் என்னுடன் பகை**
**யார் மடியில் அடைக்கலமாகிக்**
**கண்ணீரை நான் சிந்துவேன்?**
**கால்களில் மிகவும்தடுமாற்றம்**
**பழக்கமற்ற பாதை இது**
**எனினும் தொடர்ந்து நடக்கிறேன்**
**நீ என்னுடன் சேர்ந்துவந்தால்**
**கால் கொப்புளமும் வலிக்காது**
**நீ மீண்டும் எனக்குக் கிடைத்தால்**
**கண்ணில் மையாய்த் தீட்டுவேன்**

கடவுள் கிடைத்துவிட்டால், ஆன்மிகப் பயணத்தால் உண்டான கொப்புளங்களும் பூ மலர்ந்ததுபோலிருக்கும். 'நீ' என்பவன் உள்ளவரையிலும் உன் வாழ்க்கையில் பூ மலராது; முள்ளே மிஞ்சும். முள் குத்துவதுபோல், நீ செய்வதெல்லாம் தவறாகவே முடியும்.

என் கணிப்பில், மனிதனிடம் ஒரு தவறுதான் உள்ளது. அதற்கு ஒரு திருத்தும் வழிதான் உள்ளது. நான் உன் வாழ்க்கையின் கணிதத்தை நேராக்கவும் எளிமையாக்கவும் முயல்கிறேன். மதத் தலைவர்கள் உன்னிடம் ஏராளமான குறைகள் இருப்பதாகவும், எல்லாவற்றையும் சரிசெய்ய வேண்டும். என்றும் கூறுவார்கள். ஆனால் ஒவ்வொன்றாக நீக்க முடியும். சினம், காமம், பேராசை, மோகம் போன்றவற்றில் ஒன்றைக் கைவிட்டால் இன்னொன்று மேலோங்கும். சுற்றி-சுற்றி வர நேரிடும். இப்படி ஒவ்வொன்றாகச் சமாளிப்பதற்கு ஆயுள் போதாது.

நாம் வேறுவிதமாக, ஆழமாக யோசிக்க வேண்டும். அடிப்படைத் தவறைக் கண்டுபிடிக்க வேண்டும்;.வேரை வெட்ட வேண்டும். இலைகளை ஒவ்வொன்றாகப் பறித்துப்போட்டால், நமது நேரமும் உழைப்பும்தான் வீணாகும். மரம் அப்படியே இருக்கும்.

மேலும், அதில் புதிய இலைகள் துளிர்க்கும். அவை முன்பைவிட அடர்த்தியாகவும் வளரும்.

வேரை வெட்ட வேண்டும். அகங்காரம் என்பதுதான் அந்த வேர். காமம், பேராசை, கர்வம், மோகம், பொறாமை முதலியவை இந்த வேரிலிருந்துதான் தோன்றுகின்றன. இலை-கிளைகள் கண்ணுக்குத் தெரிவதைப்போல் இக்குறைகளும் வெளியில் தெரிகின்றன. வேரைப்போல் அகங்காரமும் மனம் என்னும் பூமியின் ஆழத்தில் உள்ளது. மரத்தை வெட்டுவது சுலபம். வேரை அடியோடு நீக்குவது சிரமம். சிறிது மிஞ்சினாலும் மீண்டும் மரம் முளைத்துவிடும். அகங்காரமும் அதுபோல் மனத்தினுள் ஆழமாகவும் பரவலாகவும் உள்ளது.

அகங்காரம் நமக்குள் மறைந்திருப்பதும் நமக்குத் தெரியவில்லை. சிறுவர் கதைகளில் வரும் அரக்கனை எவ்வளவு முயன்றாலும் கொல்ல முடிவதில்லை. பிறகுதான் அவன் உயிர் வேறிடத்தில் ஏதோ பறவைக்குள் மறைந்திருப்பது தெரிய வருகிறது. அகங்காரம் நமக்குள் மறைந்து நம்மைத் தவறாக இயக்குவதை சத்குரு சுட்டிக்காட்டிய பிறகுதான் அறிகிறோம். அந்தப் பறவையின் கழுத்தை நெரித்தால் அரக்கன் இறப்பதைப் போல், அகங்காரத்தை அழித்தால், நம்மிடமுள்ள அரக்க குணங்களும் மறைந்துவிடும்.

முன்பு என்னிடம் அகங்காரம் இருந்தது. நான் ஏராளமான தவறுகள் செய்தேன். இப்போது 'நான்' என்னும் உணர்வு நீங்கி விட்டது. இனி நான் தவறு செய்ய வாய்ப்பில்லை. வேரை வேரோடு, அடியோடு அகற்றியாகிவிட்டது. இனி செடி முளைத்து மரமாகாது.

## நான்காவது கேள்வி

**ஓஷோ அவர்களே! கபீர்தாசர் ஒரு பாட்டில் 'அன்புப் பாதை குறுகலானது இருவர் அதில் செல்ல முடியாது' என்கிறார். ஆனால் உண்மையில் அன்பு என்பது விசாலமான பாதையாக, ராஜபாட்டையாக, அல்லவா இருக்க வேண்டும். அதில் அனைவருக்கும் இடமிருக்க வேண்டும் அல்லவா?**

நீ கூறிய இரண்டிற்கும் அர்த்தம் ஒன்றேதான். 'இரண்டு' (துவைதம்) என்பது இல்லாத இடத்தில் அனைத்துக்கும் இடமுண்டு. 'ஒன்று' என்பது ஆன்மிகத்தில் அனைத்தையும் குறிக்கும். சாதாரணப் பாதையின் விஷயம் வேறு. இரண்டு பேர் சேர்ந்து செல்ல முடியாத சந்துப் பாதையில் பலர் செல்ல முடியவே முடியாது. ஆன்மிகப் பாதையில் இரண்டு ஒன்றானால் அது எல்லோரையும் குறிப்பிடுவதுபோலாகும்.

கபீர்தாசர் சொல்லும் இருவர் நீயும் கடவுளுமாகும். அதாவது, நானும் கடவுளும் வெவ்வேறு என்ற சிந்தனை. அவற்றில் ஒன்று நீங்க வேண்டும். இவ்வாறு ஒன்றுதான் மிஞ்சினால், அதுவே அனைத்தும் என்பதை அறிந்துகொள்வாய். இங்கே இழத்தல் என்பது பெறுதலில் முடிகிறது. தன்னை இழத்தல் என்பது அனைத்துமாக ஆகிவிடுதலில் முடிகிறது. நீர்த்துளி கடலில் விழும்போது, அது தான் அழிந்துவிட்டதாக முதலில் நினைக்கும். பிறகு தான் கடலாக ஆகிவிட்டதை உணரும்.

## ஐந்தாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! கடவுள் இன்ப ரசமய மானவர் என சுலோகம் [ரஸோ வை ஸ:] கூறுகிறது. இது கிருஷ்ண பக்தி மார்க்கத் திற்குப் பொருந்தும். அஷ்டாவக்ரரின் மார்க் கத்தில் இக்கண்ணோட்டத்திற்கு இடமுண்டா?**

நீ கூறிய சுலோகம் மார்க்கங்களைக் குறிப்பிடுவதன்று. அது பரம சத்தியமான ஓர் அறிவிப்பு ஆகும். இந்த அறிவிப்பிற்கும் கிருஷ்ணர், மகாவீரர், அஷ்டாவக்ரர், ஜரதுஸ்தரர் ஆகிய பாதை போட்டவர்களுக்கும் சம்பந்தம் கிடையாது. இந்த அறிவிப்பு போய்ச்சேருமிடத்தின் இயல்பைத்தான் காட்டுகிறது. இதுவே ஒரு பாதையன்று. That என்பதைச் சுட்டிக்காட்டும் சைகை மட்டுமேயாகும்.

கடவுள் ரசமயமானவர் என்பது கிருஷ்ணரின் மார்க்கத்திற்குப் பொருந்தும் என நீ நினைப்பது தவறு. கிருஷ்ணர் புல்லாங்குழல் இசைத்து கோபியருடன் நடனமாடியதால் அவர் ரசமயமானவர் என நீ நினைக்கிறாய். சுலோகம் சொல்வது அந்த ரசம் இல்லை.

அஷ்டாவக்ரரிடம் புல்லாங்குழல் இல்லை. அவருக்கு நடனமாடத் தெரியாது. உடல் கோணலான அவரைக் காண கோபிகைகள் என்ன, கோபர்களும் (இடைச் சிறுவர்களும்) வரமாட்டார்கள். ஆகவே அவரது மார்க்கத்தில் ரசம் (இன்சுவை) கிடையாது என்று நீ முடிவுகட்டிவிட்டாய்.

புல்லாங்குழல் ஊதப்பட்டு கோபிகைகள் ஆடும் நடனம் ராஸலீலா எனப்படுகிறது. அதற்கும் சுலோகம் கூறும் ரசத்திற்கும் சம்பந்தமில்லை நீ ராஸலீலா அர்த்தம் எடுத்துக் கொண்டால் பிறகு புத்தரின் கதி என்ன? அவர் அப்பாவியாகக் கண்களை மூடிக்கொண்டு மரத்தடியில் உட்கார்ந்திருக்கிறார். அதில் ரசம் எங்கே இருக்கிறது. மகாவீரர் மயில் கிரீடம் தரிக்காமலும், புல்லாங்குழல் ஏந்தாமலும், ஆடையின்றிக் காட்சி தருகிறார். இதில் ரசம் எங்கே? இயேசுநாதர் சிலுவையில் அறையப்பட்டுத் தொங்குகிறார். இக்காட்சியில் இன்பச்சுவை எங்குள்ளது?

இயேசுநாதர் குறிப்பிடுகின்ற விண்ணரசு, புத்தர் கூறும் நிர்வாணம் (சூன்யம்), மகாவீரர் உபதேசிக்கும் கைவல்யம் (மோட்சம்) ஆகியவையும் கடவுளின் ரசம் என்பதன் கீழ் அடங்குகின்றன. பரம முக்தி என்பதுதான் அந்த ரசம். மதத் தலைவர்கள் கூறுவதுபோல் முக்தி என்பது அமைதியான, சோகமான நிலை அன்று. ஆடலும் பாடலும் நிறைந்த உற்சாகமான திருவிழா சூழ்நிலையே முக்தி என்பது.

உடம்பு ஆடினால்தான் நடனம் என்று நினைக்காதே. வெளியே அமைதியாகத் தெரிந்தாலும் ஆனந்த நடனம் உள்ளே நிகழ்ந்துகொண்டிருக்கும் கிருஷ்ணரும் மீராபாயும் வெளிப் படையாக நடனமாடினார்கள். புத்தரும் மகாவீரரும் இதயத்தில் களிப்பை உணர்ந்தார்கள். அதை அவர்கள் வெளிப்படுத்த வில்லை.

ஆகவே மார்க்கம் வேறு, ரசம் வேறு. யார் எந்த வழியாக வந்தாலும் சரி—அது பதஞ்சலியின் யோக மார்க்கமாயினும் சரி, அஷ்டாவக்ரரின் ஞான மார்க்கமாயினும் சரி—இறுதியில் சேர்வது ரசநிலை. அதுவே பரம அமிர்தமான, பரம ஆனந்தமான நிலை.

## ஆறாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! இதுவே எனது வாழ்க்கை. இதுவே எனது வணக்கம். உங்கள் பெயர் கேட்ட மாத்திரமே என் தலை தானே தாழ்கிறது. இதுபற்றி உங்கள் மதிப்பீடு என்ன?**

சரிதான். இது சுபமான உணர்வுதான். இது அப்படியே கடவுளை நோக்கிச் சொல்வதாக அமையட்டும். இது அழகான கருத்து. மகாசுகம் தரும் கருத்து. பணிவுப் பண்பு வந்துவிட்டதால் எல்லாப் பண்புகளும் வந்துவிட்டதாக அர்த்தம். தலைவணங்கக் கற்றுக்கொண்டால் எல்லாவற்றையும் கற்றுக்கொண்டுவிட்ட மாதிரிதான்.

**ராமா, உனது திருப்பெயரை**
**என்றும் என் குரல் ஒலித்திடுக**
**நீ விரும்பி அனுப்பும் எதையுமே**
**கஷ்டமோ நஷ்டமோ**
**இதயம் அதைச் சமாளிக்கட்டும்**
**துன்பத்திலிருந்து விடுதலை கேட்கவில்லை**
**அதைத் தாங்கும் சக்தியே வேண்டுகிறேன்**

**கெட்ட காலமும் உன் அருளே-அது**
**உன்னை தியானிக்கச் செய்வதால்**
**காலனுக்கும் அஞ்சிடேன்**
**நீதான் அவனை அனுப்புவதால்**
**கருமியாக இருக்கமாட்டேன்**
**உயிரை முழுதாய் வழங்கிடுவேன்**

அப்படியே ஆகட்டும். இது கவிதை ரசம். இது உன் இதய ரசமாக மாறட்டும். சிலரது கவிதை படித்து உன் மனம் துள்ளுகிறது. ஆனால் கவிஞனை நேரில் சந்தித்தால் திகைப்பு உண்டாகிறது. அவன் சாதாரண மனிதனைவிடத் தரம் தாழ்ந்தவனாகக்கூட இருக்கக்கூடும். இந்த அதிர்ஷ்டம் கெட்டவனால் எப்படி அபூர்வமான கவிதை படைக்க முடிந்தது? ஏதோ தெய்வ சக்தியால் உந்தப்பட்டு அவனது கற்பனை விண்ணில் பாய்கிறது.

கற்பனை கவிதை வரிகளாக மாறியபின் கவிஞன் மீண்டும் தரையில் சாதாரண மனிதனாகக் காலூன்றுகிறான்.[1]

கவிஞனும் கவிதையும் வெவ்வேறு. கவிஞனின் கவிதையில் கடவுள் எழுந்தருள்வார். ஆனால் கவிஞனின் உடலிலிருந்து கள் வாசனை வீசும். அவனது கவிதை உபநிடத வாக்கியங்களை வெல்லக்கூடும். ஆனால் அவனது வாழ்க்கை சோபையின்றி வெளிறிக் கிடக்கும்; மலர்ச்சிக்கு இடமின்றி வாடிக் கிடக்கும்.

வேத-உபநிடதங்களை இயற்றிய கவிஞர்களாகிய முனிவர்களின் வாழ்க்கைக்கும் வாக்குக்கும் வித்தியாசம் இருந்ததில்லை. கவிஞன் தன் அனுபவத்தைப் பல மடங்கு மிகையாகச் சொல்கிறான். முனிவர் தன் அனுபவத்தைச் சுருக்கிச் சொல்கிறார். அவரது இறை அனுபவத்தைச் சொல்லச் சொற்கள் கிடைப்பதில்லை. வாழ்க்கை என்பது மாகடல். அதிலிருந்து சில துளிகளைத்தான் பருக எடுத்துத் தர முடியும்.

## ஏழாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! என் உள்ளே ஊன்றப்பட்டிருக்கும் விதை எப்பொழுது துளிர்க்கும்? உங்கள் பேச்சைக் காதால் மட்டுமின்றி நான் உள்ளத்தாலும் எப்பொழுதிலிருந்து கேட்பேன்? நீங்கள் எப்பொழுதும் என்னை வெல்பவராக விளங்குங்கள்.**

**இ**து சரியான பேச்சு. சீடன் குருவை வெல்ல விரும்புவது இயற்கை. ஆனால் அவ்வாறு வெல்லாமல் இருப்பதுதான் உனக்கு நன்மை தரும். அவ்வாறு நீ குருவை வென்றால் அடிப்படையில் அது தோல்வியாக இருக்கும்.

புனிதர் அகஸ்டினின் ஒரு பிரார்த்தனை பின்வருமாறு:[2] இறைவா! உன்னை நான் வெல்லக்கூடாது. இதைக் கவனத்தில்

---

1 The poet's eye, in a fine frenzy rolling
Doth glance from heaven to earth,
from earth to heaven (Shakespeare)

2 St. Augustine (354-430) ஆப்பிரிக்காவில் கிறிஸ்தவத்தைப் பரப்பியவர். இவரது புகழ்பெற்ற படைப்பு Confessions.

வைக்கவும். நீயே வெல்ல வேண்டும். இதற்காக நான் வெல்ல முயலமாட்டேன் என்பதில்லை. நான் முயலத்தான் செய்வேன். ஆனால் மறந்தும் நான் வெற்றிபெற விடாதே. நான் தோல்வி கண்டு நீயே வெல். நான் உன்னை எதிர்த்துப் போராடுவேன். உன்னைத் தோற்கடிக்க வழிகள் தேடுவேன். ஆனால் நீ என் மீது இரக்கம் கொள்ளாதே.

**காபா* செல் காசி செல்**
**கங்கையில் அமிழ்ந்து நீராடு**
**உள்ளக் கோயில் அழுக்காயின்**
**எல்லாச் சடங்கும் வீண் முயற்சி**

**இத்திசையிலிருந்து அத்திசைவரை**
**எங்கும் அன்பே பரவியுள்ளது**
**எங்கும் ஒரே கோலாகலம்**
**எங்கும் சந்தைத் திருவிழா**

**இங்கே யாரும் யாருக்கும் நிழலில்லை**
**நானும் தனியாய் அந்நியனாய் உள்ளேன்**
**எனது கையை நீ பிடித்துக்கொண்டால்**
**சகல சுவர்க்கமும் என் உள்ளங்கையில்**

சீடன் ஆவது என்பதன் அர்த்தம் குருவின் கையில் தனது கையை (தன்னை) ஒப்படைத்தலாகும். குருவின் கையினுள் கடவுளின் கை மறைந்து நிற்கிறது என்னும் நம்பிக்கைதான் இதன் அடிப்படையாகும். சீடனுக்கு எடுத்த எடுப்பில் நேரடியாக இறைக் காட்சி கிடைத்து விடாது. அவன் எதிரில் குரு மட்டுமே தெரிகிறார். அவரை ஜன்னலாக பாவித்தால் அவர் மூலம் இறைக் காட்சி ஒரு துளி திடீரெனத் தெரிகிறது. அப்போது சீடன் குருவின் முன் சமர்ப்பணமாகிறான். எனினும் இதைத் தடுக்க அகங்காரம் போராடுகிறது; கடைசி மூச்சுவரை எதிர்க்கிறது.

உள்ளத்தில் அழுக்கு தேங்கியிருக்கும்வரை, உள்ளம் மாசடைந்து கிடக்கும்வரை அகங்காரம் அங்கேயே வசிக்கிறது. நீ இல்லாமல்போக வேண்டும், சூன்யமாக வேண்டும். அதில்தான் உன் வெற்றி அடங்கியிருக்கிறது.

---

* Kaabah மெக்காவிலுள்ள முதன்மையான இஸ்லாமிய புனிதத் தலம். இதன் திசை நோக்கியே உலகெங்கும் முஸ்லிம்கள் பிரார்த்தனை செய்கின்றனர்.

மனத்தினுள் விதைக்கப்பட்ட ஆன்மிக விதை எப்பொழுது செடியாக வளரும் என்று கேட்டாய். பொறுமையாக எதிர்பார்த்திரு. அவசரப்படாதே அவசரப்பட்டால் உனது கற்பனை உனக்குள் ஆன்மிகச் செடி வளர்ந்துவிட்டதைப் போன்று பிரமை உண்டாக்கும். கற்பனைச் செடியில் உன் மனம் ஈடுபட்டால் நிஜ மரம் தோன்றாது.

நாம் ஒருவரை எதிர்பார்த்து வீட்டில் காத்திருக்கிறோம். வாசற்புறத்தில் சிறிது சலசலப்புக் கேட்டாலும், காற்று கதவை அசைத்தாலும், விருந்தாளி வந்துவிட்டதாகவே கற்பனை செய்கிறோம். கற்பனையின் சக்தி மகத்தானது.

எதிர்பார்ப்பும் பொறுமையும் பிரார்த்தனையில் கலந்துள்ளது. நமது பிரார்த்தனை எப்படி இருக்க வேண்டும்? 'இறைவா, நீ என்னை அணுக விரும்பும்போது என்னிடம் வா. அதற்கு நெடுங்காலமாகும் என்றால் நான் காத்திருக்கத் தயாராக உள்ளேன். ஏனெனில் நீ சரியான நேரத்தைத் தேர்ந்தெடுத்துதான் வருவாய். நீ வரும் நேரத்தை நான் எப்படி முடிவு செய்ய முடியும்? அதற்கு நான் யார்? எது பொருத்தமான நேரமென்று எனக்கு எப்படித் தெரிய முடியும்? உன் விருப்பமே நிறைவேறுவதாக.

'நான் காத்திருப்பேன். களைத்துப்போக மாட்டேன். தோற்றுவிடமாட்டேன். துக்கிக்கமாட்டேன். எதிர்பார்ப்பைக் கைவிடமாட்டேன். தினமும் எழுந்ததும் இன்று நீ வருவாய் என எதிர்பார்ப்பேன்.'

இவ்வளவு கனமாக, தீவிரமாக பிரார்த்தனை அமைந்தால் இறைவன் உன்னிடம் வந்துசேர அதிக நேரம் பிடிக்காது.

**விரகப் பிரிவு முடிவுறும் நேரம்**
**முற்றத்து வெயில் பொன்னிறமானது**
**வசந்தம் வருகின்ற நேரமிது**
**ஆன்ம வாழ்க்கை மலரும் நேரமிது.**

**ஹரி ஓம் தத்ஸத்!**